# நெய்தல் நிலம் காட்டும் சமுதாயம் (சங்கப் பாடல்கள்)

மதுரை காமராசர் பல்கலைக்கழக முனைவர் (Ph.D.)
பட்டத்திற்காக அளிக்கப்பெறும் ஆய்வேடு


ஆய்வாளர்
வி. கார்த்திகாயினி, எம்.ஏ., எம்.பில்.,
பதிவு எண்: P4973/2017(பகுதி நேரம்)

மேற்பார்வையாளர்
முனைவர் வீ. கோபால், எம்,ஏ., எம்.பில்., பிஎச்.டி.,
இணைப் பேராசிரியர்,
தமிழ் உயராய்வு மையம்,
யாதவர் கல்லூரி(தன்னாட்சி),
மதுரை- 625 014.






தமிழியற்புலம்,
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்,
மதுரை - 625 021.


மார்ச் - 2020

**முனைவர் வீ. கோபால், எம்,ஏ.(த.), எம்.பில்., பிஎச்.டி.,**
(மேற்பார்வையாளர்),
இணைப் பேராசிரியர்,
தமிழ் உயராய்வு மையம்,
யாதவர் கல்லூரி (தன்னாட்சி),
கோவிந்தராசன் வளாகம்,
மதுரை - 625 014.

# மேற்பார்வையாளர் சான்றிதழ்

**நெய்தல் நிலம் காட்டும் சமுதாயம் (சங்கப் பாடல்கள்)** என்னும் தலைப்பில் **திருமதி வி. கார்த்திகாயினி** அவர்கள் செய்துள்ள இவ்ஆய்வானது, மதுரை காமராசர் பல்கலைக்கழகத்தில் முனைவர் பட்டத்திற்காக, மதுரை யாதவர் கல்லூரித் தமிழ் உயராய்வு மையத்தில் பகுதிநேரமாக அவரால் தன்னியலாகச் செய்யப்பெற்றது என்றும் இவ்வாய்வின் மீது ஆய்வாளருக்கு வேறு எந்தப்பட்டமும் அளிக்கப்பெறவில்லை என்றும் சான்றளிக்கின்றேன்.

இடம்: மதுரை-14 **(முனைவர் வீ. கோபால்)**
தேதி: மேற்பார்வையாளர்

**வி. கார்த்திகாயினி, எம்.ஏ., எம்.பில்.,**
பகுதி நேர ஆய்வாளர்,
பதிவு எண்: P4973/2017.
தமிழ் உயராய்வு மையம்,
யாதவர் கல்லூரி (தன்னாட்சி),
மதுரை-625 014.

# ஆய்வாளர் உறுதிமொழி

**நெய்தல் நிலம் காட்டும் சமுதாயம் (சங்கப் பாடல்கள்)** என்னும் தலைப்பில் மதுரை காமராசர் பல்கலைக்கழகத்தின் முனைவர் பட்டத்திற்காக, மதுரை யாதவர் கல்லூரித் தமிழ் உயராய்வு மையத்தில் பகுதிநேரமாகச் செய்யப்பெற்றுள்ள இவ்ஆய்வு என்சொந்த முயற்சியால் உருவானதே ஆகும். இதற்குமுன் இவ்ஆய்வு வேறு எந்த ஆராய்ச்சிப் பட்டத்திற்கும் அளிக்கப் பெறவில்லை என்று உறுதியளிக்கின்றேன்.

இடம்: மதுரை-14 **(வி. கார்த்திகாயினி)**
தேதி: ஆய்வாளர்

உறுதிக் கையொப்பம்
(மேற்பார்வையாளர்)

**முனைவர் வீ. கோபால், எம்,ஏ.(து.), எம்.பில்., பிஎச்.டி.,**
இணைப் பேராசிரியர்,
தமிழ் உயராய்வு மையம்,
யாதவர் கல்லூரி (தன்னாட்சி),
கோவிந்தராசன் வளாகம்,
மதுரை- 625 014.

# நன்றியுரை

**நெய்தல் நிலம் காட்டும் சமுதாயம் (சங்கப் பாடல்கள்)** என்னும் தலைப்பில் ஆய்வு மேற்கொள்ள அனுமதி வழங்கிய மதுரை காமராசர் பல்கலைக்கழகத்திற்கு என் நன்றி உரியது.

மதுரை யாதவர் கல்லூரித் தமிழ் உயராய்வு மையத்தில் முனைவர் பட்ட ஆய்வாளராகச் சேர்ந்து பயிலுவதற்கு வாய்ப்பளித்த கல்லூரி முதல்வர் **முனைவர் வீ. சம்பத்** அவர்களுக்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

என் ஆய்விற்கு ஆக்கமும் ஊக்கமும் நல்கி, ஆய்வு செய்வதற்குத் தூண்டுகோலாய் விளங்கிய யாதவர் கல்லூரித் தமிழ் உயராய்வு மையத்தின் தலைவர் **முனைவர் வீ. மோகன்** அவர்களுக்கு என் நன்றியை உரித்தாக்குகின்றேன்.

பல்வேறு பணிகளுக்கிடையேயும் எனக்கு ஆய்வுக்கான களத்தை அமைத்துக் கொடுத்து ஆய்வுக்குரிய நெறிமுறைகளை விளக்கி, ஆய்வில் அவ்வப்போது எழுந்த ஐயங்களை இன்முகத்தோடு தெளிவுறுத்தி, என் ஆய்வுப்படிகளைச் செப்பம் செய்தும், ஆய்வு நிறைவுற எல்லா வகையிலும் துணை நின்ற என் ஆய்வு நெறியாளர் **முனைவர் வீ. கோபால்** அவர்களுக்கு என்றென்றும் நன்றிக்கடப்பாடுடையேன்.

ஆய்வு நெறிமுறைகளையும், இலக்கிய அறிவையும் புகட்டிய என் அறிவுக்குத் துணை நின்ற பேராசிரியர்கள் **முனைவர் க. முத்துக்கிருஷ்ணன், முனைவர் இரா. சுப்பையா, முனைவர் இரா. பேபி கிருஷ்ணம்மாள், முனைவர் ஆ.த. பரந்தாமன், முனைவர் எ. பால்சாமி, முனைவர் மா. நடராசன், முனைவர் அ. திலகராஜ், முனைவர் எஸ். மைதிலி, முனைவர் கே. முத்து மாரியம்மாள்** ஆகியோருக்கும் ஏனைய தமிழ்த்துறைப் பேராசிரியர்களுக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்விற்குத் தேவையான பல நூல்களை வேண்டிய போதெல்லாம் இன்முகத்துடன் கொடுத்துதவிய யாதவர் கல்லூரி நூலகர் திரு. க. செந்தில்குமார், நூலக உதவியாளர் திருமதி க. கலா ஆகியோர்க்கும் என் நன்றி என்றும் உரியது.

என் கல்விப் பயணத்திலும், வாழ்க்கைப் பயணத்திலும் துணைநின்று எல்லாவற்றிற்கும் முழுமுதற் காரணமாக விளங்குகின்ற என் தந்தை **திரு. பா. விஜயராஜன்** அவர்களுக்கும் தாய் **திருமதி வி. உமாமகேஸ்வரி** அவர்களுக்கும் நான் என்றென்றும் நன்றிக்கடன் பட்டுள்ளேன்.

என் கல்வி வளர்ச்சியில் பெரிதும் நாட்டம் கொண்டு ஆக்கமும் ஊக்கமும் நல்கி வரும் கணவர் **திரு. லெ. ராஜேஷ்** அவர்களுக்கும், சகோதரர்கள் **திரு. வி. மோகனசுந்தரம், திரு. ஜெ. பாலமுருகன், திரு. ரா. சரவணன், திரு. சு.க. அருண், திரு. ரா. விக்னேஷ்,** சகோதரிகள் **ஜோ. ராஜலெட்சுமி, பி. காயத்ரி** அவர்களுக்கும் என் மனமார்ந்த நன்றி.

இவ்வாய்வு முழுமைபெற பல்லாற்றானும் உதவி புரிந்த நண்பர்களுக்கும் உறவினர்களுக்கும் என்றென்றும் என் நன்றி உரியது.

இவ்ஆய்வேட்டை நன்முறையில் தட்டச்சுச் செய்து கட்டமைத்துக் கொடுத்த மதுரை **அழகர் கணினி மைய** உரிமையாளர் **திரு மா. மாடக்கோன்** அவர்களுக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

**வி. கார்த்திகாயினி**

# சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| உ.ஆ. | – | உரையாசிரியர் |
| க.ஆ. | – | கட்டுரை ஆசிரியர் |
| கழக வெளியீடு | – | திருநெல்வேலி தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் |
| குறள். | – | திருக்குறள் |
| தொ.ஆ. | – | தொகுப்பாசிரியர் |
| நூ. | – | நூற்பா |
| ப. | – | பக்கம் |
| பக். | – | பக்கங்கள் |
| ப.ஆ. | – | பதிப்பாசிரியர் |
| மு.ஆ. | – | முதன்மை ஆசிரியர் |
| மு.பதி.ஆ. | – | முதன்மைப் பதிப்பாசிரியர் |
| மொ.பெ.ஆ. | – | மொழிபெயர்ப்பு ஆசிரியர் |
| மேலது. | – | மேலே சொல்லப்பட்ட நூல் |
| Ed. | – | Editor |
| P. | – | Page |
| PP. | – | Pages |
| Vol. | – | Volume |

## பொருளடக்கம்

# ஆய்வு அறிமுகம்

ஆய்வுத் தலைப்பு

ஆய்வு நோக்கம்

ஆய்வுப்பயன்

ஆய்வின் எல்லை

முன் ஆய்வுகள்

சான்றாதாரங்கள்

- முதன்மைச் சான்றாதாரங்கள்
- துணைமைச் சான்றாதாரங்கள்

ஆய்வு அணுகுமுறைகள்

இயல் பகுப்புகள்

- இயல் விளக்கங்கள்
- துணைநூற்பட்டியல்

# ஆய்வு அறிமுகம்

தமிழ் இலக்கியங்களில் காலப் பழமையானவை சங்க இலக்கியங்கள். அவற்றைப் பண்டைய இலக்கிய அறிஞர்கள் பாட்டு, தொகை எனப் பாகுபாடு செய்துள்ளனர். அவை, பத்துப்பாட்டு, எட்டுத்தொகை என்ற பதினெட்டு நூல்களாகும். பழந்தமிழ் இலக்கியமாகிய சங்க இலக்கியங்கள் அக இலக்கியம் (அகம்), புற இலக்கியம் (புறம்) என இரு பகுப்புடையன. இவ்விலக்கியங்களின் வழியாகப் பண்டையக் காலத் தமிழர்களின் காதல், வீரம், மானம், கொடை, ஒப்புரவு, வலிமை, வறுமை, ஒழுக்கம், சமூகச்சூழல், அரசியல், அறநோக்கு, புகழ், வாழ்க்கை முறைகள் ஆகியவற்றை அறியலாம். இத்தகைய சங்க இலக்கியத்தில் நெய்தல் நிலம் காட்டும் சமுதாயம், பண்பாடு, மக்களின் வாழ்க்கை முறைகளை எடுத்துக் கூறுவதாக இவ்வாய்வேடு அமைகின்றது.

## ஆய்வுத் தலைப்பு

நெய்தல் நிலம் காட்டும் சமுதாயம் (சங்கப் பாடல்கள்) என்னும் தலைப்பில் இவ்வாய்வு அமைந்துள்ளது.

## ஆய்வுநோக்கம்

பழந்தமிழர் வாழ்க்கை நிலைகளையும், பண்பாட்டையும், அக்கால வரலாற்றுப் போக்கையும், சமுதாய நிலையையும் எடுத்துக்காட்டும் ஆதாரங்களில் சங்க இலக்கியங்கள் முதன்மையான இடத்தை வகிக்கின்றன. சங்ககாலத் தமிழ் மக்கள் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்ற ஐவகை இயற்கைப் பிரிவுகளோடு ஒன்றுபட்டு வாழ்க்கை நடத்தியுள்ளனர். இவற்றில் கடலையும், கடற்கரைச் சூழலையும் மையமாகக் கொண்டு வாழ்பவர்கள் நெய்தல் நில மக்கள். இவர்கள் கடலில் கிடைக்கும் உப்பு, மீன் போன்றவற்றையே முக்கிய வாழ்வு ஆதாரமாகக் கொண்டு வாழ்ந்து வந்தனர். மீன் வளம் நாடி கடலிலே திமில் ஏறிச் செல்வது பெரும்பாலும் ஆடவர் தொழில் ஆதலின் அவர் குறித்த பொழுதில் திரும்பாத போது, 'இரங்கலும் இரங்கல் நிமித்தமும்' ஆக எழும் பேச்சும் இந்நிலத்துக்கு இயல்பாயின. இத்தகைய நெய்தல் திணையில் வாழும் மக்களின் சமுதாயம் குறித்த கருத்துக்களை வெளிப்படுத்துவதே இவ்ஆய்வின் நோக்கமாகும்.

## ஆய்வுப் பயன்

நெய்தல் நில மக்களின் சமுதாயம், பண்பாடு, வாழ்க்கை முறைகள், தொழில்கள் பற்றிய செய்திகளை அறிவதற்கு இவ்அய்வு பயன்படும்.

## ஆய்வின் எல்லை

சங்க இலக்கியங்களான எட்டுத்தொகையும், பத்துப்பாட்டும் இவ்ஆய்வின் எல்லையாகும். சங்க இலக்கியப் பாடல்கள் 2381 என்று மு. வரதராசன், வ.சுப. மாணிக்கம் குறிப்பிடுகின்றனர். இவற்றுள் நெய்தல் திணையில் அமைந்த அகப்பாடல்கள் 347 மட்டும் இவ்ஆய்வில் எடுத்துக்கொள்ளப் பெற்றுள்ளது.

## முன் ஆய்வுகள்

தமிழ் இலக்கிய ஆய்வுகளுக்கு சைவசிந்தாந்த நூற்பதிப்புக்கழக நூல்கள் அதிகளவில் பயன்பெறுகின்றன. இந்த வகையில் அந்நிறுவனம் வெளியிட்டுள்ள குறுந்தொகை(1952), ஐங்குறுநூறு (1961), பரிபாடல்(2008), பத்துப்பாட்டு(பகுதி-I, II) (1990), பதிற்றுப்பத்து (1952), கலித்தொகை(1943), நற்றிணை நானூறு (1952), அகநானூறு(1944) ஆகிய நூல்கள் முன்ஆய்வுகளாக இடம்பெறுகின்றன.

மதுரை செந்தமிழ்க் கல்லூரியில் ஜோ. பிரின்ஸ், பன்முகநோக்கில் பண்டைத்தமிழரின் கடல் வாழ்வியல் வரலாற்று ஆய்வு (2008), செந்தமிழ்க் கல்லூரியில் கா. காளீஸ்வரி, சங்க இலக்கியத்தில் தலைவி-தோழியின் உறவுநிலை(2010), செந்தமிழ்க் கல்லூரியில் க. புகழேந்தி, தமிழில் நெய்தல் நில நாவல்கள்(2010), ஏ.பி.சி. மகாலெட்சுமி மகளிர் கல்லூரியில் ப. சண்முகராணி, சங்க இலக்கியம் உணர்த்தும் வாழ்வியல் சிந்தனைகள் (2011), செந்தமிழ்க் கல்லூரியில் க. இராமநாதன், நெய்தல் திணை மக்களின் வாழ்வியல் பண்பாட்டுக் கட்டமைப்பு(2012), மதுரை காமராசர் பல்கலைக்கழகத்தில் பு. மதிக்குமார், இராமநாதபுரம் கடற்கரைப்பகுதி மீனவர்களின் வாழ்வியல் சடங்குகளும் நம்பிக்கைகளும் (2012), அய்ய நாடார் ஜானகி அம்மாள் கல்லூரியில் பா. சாந்தி, சங்க இலக்கியத்தில் தொழில்கள்(2013), மதுரை காமராசர் பல்கலைக்கழகத்தில் ஆ. ஆரோக்கிய மேரி, சங்க அக இலக்கியங்களில் பாத்திரங்களின் மன உணர்வுகள் (2014), மதுரை தியாகராசர் கல்லூரியில் பி. பாலசுப்பிரமணியன், தமிழ் இலக்கியங்களில் நெய்தல் நில வாழ்வியலும் சமூக உறவுகளும்(2015), செந்தமிழ்க் கல்லூரியில் கு. வாணிஜமுனா, சங்க இலக்கிய முல்லை நில மக்களின் வாழ்வியல் நெறிகளும் பண்பாட்டுக் கூறுகளும் (2015) ஆகிய

தலைப்பில் ஆய்வுகள் செய்துள்ளனர். இவை போன்ற ஆய்வுகள் முன் ஆய்வுகளாக அமைகின்றன.

இந்த வரிசையில், நெய்தல் நில மக்கள் வாழ்வியல், பண்பாட்டுச் செய்திகள், தொழில்கள், வாழ்வியல் அறங்களைக் கண்டறிவதாக இவ்ஆய்வு அமைகின்றது.

**சான்றாதாரங்கள்**

**முதன்மைச் சான்றாதாரங்கள்**

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தாரால் வெளியிடப்பட்ட எட்டுத்தொகை நூல்களும், பத்துப்பாட்டு நூல்களும் இவ்ஆய்விற்கு முதன்மைச் சான்றாதாரங்களாக அமைந்துள்ளன.

**துணைமைச் சான்றாதாரங்கள்**

தமிழக வரலாற்றினை எடுத்தியம்பும் நூல்கள், பழந்தமிழர் சமுதாயப் பண்பாடு குறித்த நூல்கள், நெய்தல் நிலம் குறித்த ஆய்வு நூல்கள், நெய்தல் திணை பற்றிய நூல்கள், ஆய்வுக் கட்டுரைகள், ஆய்வேடுகள், இதழ்கள், இணையத்தில் இடம் பெற்றுள்ள கட்டுரைகள் ஆகியன இவ்ஆய்விற்குத் துணைமைச் சான்றாதராரங்களாக எடுத்துக் கொள்ளப்படுகின்றன.

## ஆய்வு அணுகுமுறைகள்

நெய்தல் திணை மக்களின் சமுதாயம் சார்ந்து இவ்வாய்வு அமைவதால் சமுதாயவியல் அணுகுமுறை முதன்மையாகக் கொள்ளப்படுகிறது. நெய்தல் நில மக்களின் வாழ்வியல் கூறுகளைப் பகுத்து ஆராய்வதால் பகுப்பாய்வு அணுகுமுறையும், பண்பாட்டு நிகழ்வுகளை விளக்குவதற்கு ஏற்ப விளக்கமுறை அணுகுமுறையும் மேற்கொள்ளப்படுகின்றன.

## இயல் பகுப்புகள்

நெய்தல் நிலம் காட்டும் சமுதாயம் (சங்கப்பாடல்கள்) என்னும் இவ்ஆய்வு, ஆய்வு அறிமுகம், ஆய்வு முடிவுரை நீங்கலாகப் பின்வரும் ஐந்து இயல்களாகப் பகுக்கப் பெற்றுள்ளது. அவை,

1. நெய்தல் நிலம்
2. நெய்தல் நில மக்களும் தொழில்களும்

3. நெய்தற் சமுதாயம்

4. நெய்தல் நிலத்து வாணிகம்

5. வாழ்வியல் அறங்கள்

என்பனவாகும்.

**இயல் விளக்கங்கள்**

**ஆய்வு அறிமுகம்** என்னும் பகுதியில் ஆய்வுத் தலைப்பு, ஆய்வு நோக்கம், ஆய்வுப்பயன், ஆய்வு எல்லை, சான்றாதாரங்கள் (முதன்மைச் சான்றாதாரங்கள், துணைமைச் சான்றாதாரங்கள்), ஆய்வு அணுகுமுறைகள், இயல் பகுப்புகள், இயல் விளக்கங்கள் ஆகிய செய்திகள் இடம்பெற்றுள்ளன.

**நெய்தல் நிலம்** என்னும் முதல் இயலினுள் சங்ககாலம், சங்க இலக்கியங்கள், பத்துப்பாட்டு, எட்டுத்தொகை, சங்க இலக்கியங்களின் சிறப்பியல்புகள், திணை - விளக்கம், ஐந்திணை, முப்பொருள் விளக்கம், நெய்தல் திணையுள் முப்பொருள், முதற்பொருள், நானிலம், நெய்தல் நிலம் - பெயர்க்காரணம், பெரும்பொழுது - ஆறு காலம், சிறுபொழுது - எற்பாடு, கருப்பொருள், நெய்தலுக்குரிய கருப்பொருள்கள், தெய்வம், மக்கள், தலைமக்கள், உணவு, மா (விலங்கு), மலர்கள், பறவைகள், ஊர், நீர், பறை, யாழ், செவ்வழிப் பண், தொழில்கள், உரிப்பொருள், நெய்தல் திணைக்குரிய உரிப்பொருள், திணைமயக்கம், முதற்பொருள் மயக்கம், நெய்தல் திணைப் பாடல்களில் முதற்பொருள் மயக்கம், நெய்தலுள் மருதம், நெய்தலுள் பாலை, கருப்பொருள் மயக்கம், நெய்தல் திணைப் பாடல்களில் கருப்பொருள் மயக்கம், நெய்தலுள் குறிஞ்சி, நெய்தலுள் முல்லை, நெய்தலுள் மருதம், உரிப்பொருள் மயக்கம், நெய்தலில் குறிஞ்சி, நெய்தலில் முல்லை, நெய்தலில் மருதம் பற்றிய செய்திகள் காணப்பெறுகின்றன.

**நெய்தல் நில மக்களும் தொழில்களும்** என்னும் இரண்டாவது இயலில், மனித இனத்தின் தோற்றம், சங்காலத் தமிழ் மக்கள், குறிஞ்சி நில மக்கள், முல்லை நில மக்கள், மருத நில மக்கள், பாலை நில மக்கள், நெய்தல் நில மக்கள், நெய்தல் நில ஆடவர், உமணர்கள், சங்க இலக்கியத்தில் பரதவர், பரதர், பரதவர் பெயர்க்காரணம், பரதவர் குறுநில மன்னர், பரதவர் நாகவகுப்பினர், பரவர் - பட்டினவர், சாதுவன் கடல் வாணிகன், பாணர் செம்படவர், பாணரும் மீன்பிடித்தலும், புராணமும் பரதவரும், பெரியன், தழும்பன், திதியன், தித்தன்வெளியன், திமிலர், திமிலோன், திரையன், நுளையர், அரையர், மத்தி, மூவன், சங்ககால மகளிர், நெய்தல் நில மகளிர், நுளைமகள்,

பரதவர் மகள், தொழில், பழந்தமிழர் தொழில்கள், நெய்தல் நில மக்களின் தொழில்கள், மீன்பிடித்தல், இரவில் மீன்பிடித்தல், கழிகளில் மீன்பிடித்தல், குலத்தொழில் பழக்குதல், சுறாமீன் வேட்டம், மீன்பிடிக்கருவிகள், வலை, பெரிய வலை, தூண்டில், விசைத் தூண்டில், எறியுளி, மரக்கலக்கட்டுமானம், மரக்கல வகைகள், அம்பி, கலம், திமில், தோணி, நாவாய், ப/றி, புணை, வங்கம், கலம் பழுது பார்த்தல், உப்பு விளைவித்தலும் விற்றலும், சங்கு, சங்கெடுத்தல், சங்குவளை செய்தல், பவளம் குளித்தல், முத்துக் குளித்தல், நெய்தல் நில மகளிர் தொழில்கள், உப்பு விற்றல், மீன் உணக்கல், மீன் விற்றல், மீன் பிடித்தலில் மகளிர் பற்றிய செய்திகள் ஆகியன எடுத்துரைக்கப்படுகின்றன.

**நெய்தற் சமுதாயம்** என்னும் மூன்றாவது இயலில், சமுதாயம் - வரையறை, மக்கள் கூடிய அமைப்பு, சங்ககாலத் தமிழ்ச்சமூகத்தின் அடிப்படை, தமிழ்ச் சமூகத்தின் தோற்றம், தொன்மையான குடிகள், தொல்காப்பியர் காலச் சமூகப் பிரிவுகள், அரசர், அந்தணர், வாணிகர், வேளாளர், அடியோர், வினைவலர், உணவின் சிறப்பு, நெய்தல் நிலத்தார் உணவு, மது வகைகள், கள்ளில் களிப்பு, நெய்தல் நில மகளிர் விருந்தோம்பல், நெய்தல் நிலத்தார் ஆடைகள், தழை, துகில், நெய்தல் நிலத்தார் அணிகலன்கள், இழை, வளை, தொடி, பிற அணிகள், நெய்தல் நிலத்தார் ஒப்பனை, ஐம்பால், ஒப்பனையில் மலர்கள், நெய்தல் நில வாழிடங்கள், சீறூர், மூதூர், பாக்கம், பட்டினம், பரதவர் குடில்கள், நெய்தல் நிலத்தார் திருமணம், பொருள் கொடுத்து மணத்தல், சேவை மணம், மடல் மணம், நெய்தல் நிலக் கடவுள், நெய்தல் நிலச் சடங்குகள், நெய்தல் நிலத்தார் நம்பிக்கைகள், மரங்களை வழிபடல், மீன் படகு - பாதுகாப்பு, நிமித்தம் பார்த்தல், ஆழியிழைத்தல், நெய்தல் நிலத்தார் பழக்கவழக்கங்கள், காக்கைக்குச் சோறுபடைத்தல், ஊர்க்காவல், நெய்தல் நில விழாக்கள், விழா-சொற்பொருள் விளக்கம், கொடியேற்றம், இசை, கூத்து, அலங்கரித்தல், முந்நீர் விழா, கடலாடு விழா, புதுப்புனல் விழா, இந்திரவிழா, உணவுவகை, நெய்தல் நிலத்தார் விளையாட்டுக்கள், அலவன் ஆட்டம், ஊசல் விளையாட்டு, எண்ணி விளையாடல், நீர் விளையாட்டு, சிற்றில் இழைத்தல், தாயக்கட்டம் ஆடல், விலங்கு மோதல் விளையாட்டுப் பற்றிய செய்திகள் கூறப்பெற்றுள்ளன.

**நெய்தல் நிலத்து வாணிகம்** என்னும் நான்காவது இயலில், வாணிகம், நெய்தல் நிலத்து வாணிகம், வாணிகத்தின் வகைகள், உள்நாட்டு வாணிகம், தரை வாணிகம், எட்டிப்பட்டம், கடல் வாணிகம், கரையோர வாணிகம், நடுக்கடல் வாணிகம், தமிழகம்

அயல் நாட்டுடன் கொண்ட வாணிகத் தொடர்புகள், ஏற்றுமதிப் பொருள்கள், இறக்குமதிப் பொருள்கள், துறைமுகங்கள், எயிற்பட்டினத் துறைமுகம், காவிரிப்பூம் பட்டினத் துறைமுகம், கொற்கைத் துறைமுகம், தொண்டித் துறைமுகம், தொண்டி (சேரநாடு), முசிறித் துறைமுகம், கலங்கரை விளக்கம், பண்டக சாலைகள், வரி விதித்தல்(உல்கு), வாணிகப் புலவர்கள் பற்றிய செய்திகள் அமைந்துள்ளன.

**வாழ்வியல் அறங்கள்** என்னும் ஐந்தாவது இயலில், அகவாழ்வு, அன்பும் அகமும், களவு வாழ்க்கை, கற்பு வாழ்க்கை, நெய்தல் நில வாழ்வியல், தலைவி துன்பமுறக் காரணங்கள், முந்நீர் வழக்கம், அகமாந்தர்கள், களவில் இடம்பெறும் மாந்தர்கள், கற்பில் இடம்பெறும் மாந்தர்கள், அறம் என்னும் சொல், இலக்கியத்தில் அறம், தலைவன், நெஞ்சுக்குச் சொல்லுதலும் நெய்தலும், தலைவி, கற்பின் செல்வி, தலைவியின் இரங்கல் கூறும் நெய்தல், நலனழிதல், பிரிவுத்துயர், தலைவி ஆற்றாமை, தலைவி தோழியை ஆற்றுவித்தல், தோழி, தோழி-சொல்லாராய்ச்சி, தோழியின் இரங்கல் கூறும் நெய்தல், அறத்தொடு நிற்றல், நொதுமலர் வரைவில் அறத்தொடு நிற்றல், உடன்போக்கு, தோழியும் உடன்போக்கும், செலவழுங்குவித்தல், செலவழுங்குவித்தலில் தோழியின் பங்கு, ஆற்றுவித்தல், குன்றம் காட்டி ஆற்றுவித்தல், அலரில் ஆற்றுவித்தல், வாயில் மறுத்தல், நெய்தல் திணையில் வாயில் மறுத்தல், வாயில் நேர்தல், நற்றாய், செவிலி, பாங்கன், பரத்தை, பாணன், கண்டோர், தேர்ப்பாகன் குறித்த செய்திகள் விளக்கப்பெற்றுள்ளன.

**ஆய்வு முடிவுரை** என்னும் பகுதியில் இந்த ஆய்வில் இயல் தோறும் கண்டறிந்த முடிபுகள் ஆய்வு முடிவுரையாகத் தொகுத்து அளிக்கப்பட்டுள்ளன.

**துணைநூற்பட்டியல்**

இவ்ஆய்விற்குப் பயன்பட்ட முதன்மை நூல்கள், துணைமை நூல்கள், திறனாய்வு நூல்கள், ஆய்வேடுகள், கட்டுரைகள், ஆய்வுக்கோவைகள், அகராதிகள், இதழ்கள், மலர்கள், ஆங்கில நூல்கள் ஆகியவை அகர வரிசையில் முறையே நிரல்படத் தொகுத்துத் தரப்பெற்றுள்ளன.

தற்கால நெய்தல் நில மக்களின் வாழ்க்கை முறை குறித்த நேர்காணல், புகைப்படங்கள் பின்னிணைப்பாகக் கொடுக்கப்பட்டுள்ளன.

# இயல் ஒன்று
# நெய்தல் நிலம்

சங்க காலம்

சங்க இலக்கியங்கள்

பத்துப்பாட்டு

எட்டுத்தொகை

சங்க இலக்கியங்களின் சிறப்பியல்புகள்

திணை - விளக்கம்

ஐந்திணை

முப்பொருள் விளக்கம்

நெய்தல் திணையுள் முப்பொருள்

முதற்பொருள்

நானிலம்

நெய்தல் நிலம் - பெயர்க்காரணம்

பெரும்பொழுது - ஆறுகாலம்

சிறுபொழுது - ஏற்பாடு

கருப்பொருள்

நெய்தலுக்குரிய கருப்பொருள்கள்

தெய்வம்

மக்கள்

தலைமக்கள்

உணவு

மா(விலங்கு)

மலர்கள்

மரங்கள்

# இயல் - 1
# நெய்தல் நிலம்

பழந்தமிழகத்தின் நால்வகை நிலங்களில் ஒன்று நெய்தல் நிலமாகும். அங்கு வாழ்ந்த பரதவர்கள் தமிழ்ச் சமூகத்தின் தொன்மையான குடிகளாவர். கடற்கரைப் பாக்கங்களிலும், பட்டினங்களிலும் வசித்த நெய்தல் நில மக்கள் பரதவர் என்றும், பட்டினவர் என்றும் அழைக்கப்பெற்றனர். கடலில் மீன்பிடிப்பதும், முத்துக்குளிப்பதும், கடல் நீரில் உப்பு விளைவித்தலும் அவர்களின் முதன்மையான தொழில்களாக விளங்கின. பெருமணல் நிலப்பகுதியான நெய்தலில் நாகரிக வளர்ச்சியை எடுத்துக் காட்டும் வகையில் கடற்கரை ஓரத்தே துறைமுகம் அமைத்து மரக்கலம் ஓட்டிக் கடல் கடந்து சென்று வாணிகம் புரிந்தனர்.

ஐந்திணை மக்களில் வாழிடம் சார்ந்த துன்பத்தை எதிர்கொள்பவர்கள் நெய்தல் நிலப் பரதவர்களேயாவர். ஏனெனில் அவர்கள் எதிர்கொள்ளும் கடலானது ஆபத்து மிகுந்தது. இத்தகைய காரணங்களினால் தான் நெய்தலின் உரிப்பொருளாக இரக்க உணர்வு(இரங்கலும் இரங்கல் நிமித்தமும்) விளங்கியது எனலாம். சங்க இலக்கியங்கள் குறிப்பிடும் நெய்தல் நிலச் சிறப்புக்களையும், நெய்தல் நில மக்களின் வாழ்க்கை முறைகளையும் விளக்குவதாக இவ்வியல் அமைகிறது.

### சங்க காலம்

சங்க காலம், சங்கம் வைத்துத் தமிழ் மொழியை ஆராய்ந்த காலத்தைக் குறிப்பிடுவதாகும். தமிழ்ப் புலவர்கள் கூடித் தமிழாராயும் பேரவை ஒன்றைப் பாண்டிய மன்னர்கள் தலை நகரில் அமைத்துப் போற்றினர். மன்னர்களும் சிறந்த புலவர்களாக விளங்கினார். சங்க காலத்தில் முச்சங்கங்கள் வரலாற்றையும் நக்கீரனாரின் இறையனார் களவியல் உரையின் வாயிலாக அறிய முடிகிறது. முதற்சங்கம் கடல் கொண்ட மதுரையில் நிறுவப்பட்டது. இச்சங்கம் 4440 ஆண்டுகள் இருந்தது. இதனைத் தொடர்ந்து கடல் கொண்ட கபாடபுரத்தில் இரண்டாம் சங்கமான இடைச்சங்கம் நிறுவப்பட்டு 3700 ஆண்டுகள் இருந்தது. மூன்றாம் சங்கம் கூடல் என்று வழங்கிய மதுரையில் நிறுவப்பட்டு 1850 ஆண்டுகள் இருந்தது, பாண்டிய மன்னர்கள் சங்கம் அமைத்துத் தமிழருக்கு இணையில்லாத தொண்டு செய்துள்ளனர். இச்சங்கங்களில் அகத்தியர், சிவபெருமான், நக்கீரர், முருகவேள், தொல்காப்பியர் எனப் பல்லாயிரக்கணக்கான தெய்வப் புலவர்கள் இருந்து தமிழ் மொழியில் இலக்கியங்களைப்

படைத்துள்ளனர். இச்சங்கங்களில் இருந்து பாடப்பட்ட நூற்களே சங்க இலக்கியங்களாகப் போற்றப்படுகின்றன. சங்க காலத்தில் இலக்கண நூற்களும், இலக்கிய நூற்களும் எழுதப்பட்டன. எழுதப்பட்ட நூற்களில் பல நூற்கள் காலத்தால் அழிந்தன.மீதமுள்ள நூற்களில் இலக்கண நூலான தொல்காப்பியமும், இலக்கிய நூற்களில் பத்துப்பாட்டும், எட்டுத்தொகையுமே நமக்குக் கிடைத்துள்ளன. கிடைக்கப்பட்ட நூற்களின் வழிச்சங்க காலத்தைத் தமிழர்களின் பொற்காலமாகக் கருதலாம்.

**சங்க இலக்கியங்கள்**

சங்க இலக்கியங்கள் முற்காலத் தமிழக மூவேந்தர்களான சேர, சோழ, பாண்டியர் காலத்தில் தோன்றியவையாகும். சங்க இலக்கியங்கள் கி.மு 3 முதல் கி.பி 3 ஆம் நூற்றாண்டுகளுக்கு உட்பட்ட காலத்தில் எழுதப்பட்டதாகும்.

**பத்துப்பாட்டு**

பாடப்படுவது பாட்டு ஆகும். பத்துப்பாட்டு நூற்கள் பத்துப் புலவர்களால் பத்துப் பாட்டுடைத் தலைவர்களைப் புகழ்ந்து பாடியவையாகும். பத்துப்பாட்டு நூற்களாவன: திருமுருகாற்றுப்படை, பொருநராற்றுப்படை, சிறுபாணாற்றுப்படை, பெரும்பாணாற்றுப்படை, முல்லைப்பாட்டு, மதுரைக்காஞ்சி, நெடுநல்வாடை, குறிஞ்சிப்பாட்டு, பட்டினப்பாலை, மலைபடுகடாம் என்பவை ஆகும். பத்துப்பாட்டு நூற்களின் வரிசையைக் குறிக்கும் பழம் பாடல்,

**"முருகு பொருநாறு பாண் இரண்டு முல்லை**
**பெருகு வளமதுரைக் காஞ்சி - மருவினிய**
**கோலநெடு நல்வாடை கோல்குறிஞ்சி பட்டினப்**
**பாலை கடாத்தொடும் பத்து"**[1]

என்பதாகும்.

பத்துப்பாட்டினுள் முல்லைப்பாட்டு, குறிஞ்சிப்பாட்டு, பட்டினப்பாலை, நெடுநல்வாடை என்பன அகத்திணை சார்ந்தவை. ஐந்து ஆற்றுப்படை நூல்களும் புறத்திணை சார்ந்தவை (அரசர்கள் தலைவர்கள் பற்றியவை). மதுரைக்காஞ்சி நிலையாமையைக் கூறுவது. "மதுரைக் காஞ்சியை நிலையாமை கூறும் காஞ்சித்

---

1. தமிழண்ணல், புதியநோக்கில் தமிழ் இலக்கிய வரலாறு, ப.125.

திணையுள்ளும் நெடுநல்வாடையைச் சுட்டி ஒருவர் பெயர் கூறுவதால் புறத்திணையுள்ளும் அடக்கும் மரபு பிற்கால உரையாசிரியர்களால் ஏற்படுத்தப்பட்டது."[2] என்று மௌனகுரு கூறுகிறார்.

**எட்டுத்தொகை**

சங்க இலக்கியப் பாடல்கள் ஒரே காலத்தில், ஒரே புலவரால் பாடப்பட்டவை அன்று. மாறாக வெவ்வேறு காலத்தில், வெவ்வேறு புலவர்களால் பல்வேறு இடங்களில் பாடப்பட்டவை ஆகும். இவ்வாறு பாடப்பட்ட பாடல்களைப் பாதுகாக்கும் நோக்கில், அவற்றைத் திரட்டி ஒரு வரைமுறைப்படுத்தி, அடி வரையறை, பொருள் சிறப்பையும் ஆராய்ந்து எட்டு நூற்களாகத் தொகுத்தனர். அவ்வாறு தொகுத்த நூற்களே எட்டுத்தொகை எனப் போற்றப்படுகிறது.

எட்டுத்தொகை நூற்களாவன: நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, பதிற்றுப்பத்து, பரிபாடல், கலித்தொகை, அகநானூறு, புறநானூறு ஆகியவை ஆகும். இவற்றைப் பழம் பாடல் ஒன்று.

**"நற்றிணை நல்லகுறுந்தொகை ஐங்குறுநூறு**
**ஒத்த பதிற்றுப்பத்து ஓங்கு பரிபாடல்**
**கற்றறிந்தார் ஏத்தும் கலியொடு அகம்புறமென்று**
**இத்திறத்த எட்டுத் தொகை"**[3]

என்று தொகுத்துக் கூறுகிறது. எட்டுத்தொகையுள் நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, அகநானூறு, கலித்தொகை அகத்திணை பற்றியவை. பதிற்றுப்பத்துச்சேர மன்னர்கள் பற்றியது. புறநானூறு எல்லா மன்னர்களையும் பற்றியது. பரிபாடல் அகமும் புறமும் கலந்தவை.

**சங்க இலக்கியங்களின் சிறப்பியல்புகள்**

சங்க இலக்கியங்களான பத்துப்பாட்டும், எட்டுத்தொகையும் 'திணை இலக்கியம்' என்னும் தனிவகையின. பத்துப்பாட்டு 8552 அடிகளையும், எட்டுத்தொகை 2426 தனி நிலைச் செய்யுள்களையும் கொண்டவை. ஏறத்தாழ 461 புலவர்கள் இப்பாடல்களை

---

2. சி. மௌனகுரு, பண்டைத்தமிழர் வரலாறும், இலக்கியமும், ப.35.
3. தமிழண்ணல், புதிய நோக்கில் தமிழ் இலக்கிய வரலாறு, ப.119.

எழுதியுள்ளனர், சங்க காலத்தில் வாழ்ந்த மக்கள் அனைவரும் தங்கள் வாழ்க்கையின் இலட்சியங்களாகக் காதலையும், வீரத்தையும் கருதினர். ஆகவே தான் சங்க இலக்கியங்களை அகம், புறம் என்று இரு வகையாகப் பிரித்தனர். காதலைப் பற்றிப் பாடும் பாடல்களை, 'அகம்' என்றும். காதல் தவிர, பிற செய்திகளைப் பாடும் பாடல்களைப் 'புறம்' என்றும் கூறுவர்.

**திணை - விளக்கம்**

திணை என்ற சொல் தமிழ் மொழியில் பற்பல பொருண்மைகளில் வழங்கி வருவதைக் காணலாம்.

"திணை என்றால் நிலம், குலம், இடம், வீடு, ஒழுக்கம், உயர்திணை, அஃறிணை எனப்பல பொருள்படும்"[4] என்று தமிழ் அகராதி உரைக்கிறது.

திணை என்ற சொல்லிற்குப் பொருள் கூற வந்த சூடாமணி நிகண்டு, "நிலம், குலம், ஒழுக்கம் என்ற பொருளையும், பூமி, சாதி, ஆசாரம்"[5] என்று முறையே அதற்கான விளக்கத்தையும் கொடுக்கிறது.

சங்க இலக்கியத்திலும் திணை என்ற சொல் பலவாறு பயின்று வந்துள்ளது.

**"மண் திணிந்த நிலனும்**

**நிலனேந்திய விசும்பும்"**[6]

என்னும் புறநானூற்று அடிகளால் திண், திணி, திணை என உருவாகும் சொல் வடிவை அறியலாம். திணை என்ற சொல்லிற்கு விளக்கம் தந்த மாங்குடி மருதனார், பாண்டிய நாடு ஐவகை நிலமும் ஒருசேர அமையப் பெற்ற சிறப்புடைத்து என்பதை,

**"நெய்தல் சான்ற வளம்பல பயின்றாங்கு**

**ஐம்பால் திணையும் கவினி அமைவர"**[7]

என்ற மதுரைக்காஞ்சிப் பாடல் அடிகளால் சுட்டுகிறார்.

---

4. ஆ. சண்முகம் பிள்ளை (தொ.ஆ.), தமிழ் அகராதி, ப.571.
5. ஆறுமுகநாவலர்(உ.ஆ.),சூடாமணி நிகண்டு (பதினொன்றாம்தொகுதி), ப.229.
6. ஔவை சு.துரைசாமிப்பிள்ளை(உ.ஆ.), புறநானூறு, ப.4.
7. பொ.வே. சோமசுந்தரனார்(உ.ஆ.), மதுரைக்காஞ்சி, ப.120.

முதலில் நிலம் என்ற இடத்தைக் குறித்த 'திணை' என்ற சொல் பின்னர் அந்நிலத்தில் பிறந்த குடியினரை; குலத்தினரைக் குறிக்கலாயிற்று,

**"வசை இல் வான்திணைப் புரையோர் கடும்பொடு**

**விருந்துண் டெஞ்சிய மிச்சில் பெருந்தகை"**[8]

என்ற பாடல்அடிகளில் திணை என்பதற்குக் 'குற்றமில்லாத உயர்ந்த குடியில் பிறந்த உயர்ந்தோர்' என்று குறிஞ்சிப்பாட்டு விளக்கம் தருகிறது.

**"ஓம்பா வள்ளற் படர்ந்திகும் எனினே**

**மேம்பட வெறுத்த அவன் தொல்திணை மூதூர்"**[9]

என்ற மலைபடுகடாம் பாடல் அடிகளுக்குப் 'பழமையையுடைய உயர்ந்த ஒழுக்கத்தை உடைய ஊர்' என்று திணைக்கு ஒழுக்கம் என்ற பொருளைச் சுட்டி நிற்கின்றது.

நிலத்தைக் குறித்த 'திணை' என்ற இச்சொல் நிலத்திலிருந்த மக்களையும், மக்களல்லாத பிற பொருள்களையும் சுட்டியது. பின் காலவளர்ச்சியில் குடியிருப்பில் உள்ள மக்களின் ஒழுகலாறுகளைக் குறிப்பதாகவும் மாறியது.

தொல்காப்பியத்தில் 'திணை' என்ற இச்சொல் இலக்கணக் கலைச் சொல்லாகப் பெரிதும் பயன்படுகிறது.

**"உயர்திணை என்மனார் மக்கள் சுட்டே**

**அஃறிணை என்மனார் அவரல பிறவே"**[10]

எனனும் தொல்காப்பிய நூற்பாவில், அறிவு ஒழுக்கங்களால் சிறந்த மக்களைச் சுட்டும் சொற்கள் உயர்திணை என்றும், மக்களல்லாத அனைத்தையும் சுட்டும் சொற்கள் அஃறிணை என்றும் பாகுபடுத்தப்படுகிறது. இச்சொல் பொருளதிகாரத்தில்,

**"அகத்திணை மருங்கின் அரில்தப உணர்ந்தோர்**

**புறத்திணை இலக்கணம் திறப்படக் கிளப்பின்"**[11]

8. நச்சினார்க்கினியர்(உ.ஆ.), குறிஞ்சிப்பாட்டு, ப.477.
9. எம். நாராயணவேலுப் பிள்ளை (உ.ஆ.), பத்துப்பாட்டு, ப.226.
10. சேனாவரையர்(உ.ஆ.), தொல்காப்பியம், சொல்லதிகாரம், ப.3.
11. இளம்பூரணர்(உ.ஆ.), தொல்காப்பியம், பொருளதிகாரம், ப.73.

என்ற நூற்பாவில் உள்ள 'திணை' என்ற சொல் செய்யுளை வகைப்படுத்திக் கூறுகிறது.

**"கைக்கிளை முதலாப் பெருந்திணை இறுவாய்**

**முற்படக் கிளந்த எழுதிணை என்ப"**[12]

என்னும் போது அகத்திணையின் உள்வகைகள் ஏழும் கூடத் திணை எனவே பாகுபாடு செய்யப்படுதலைக் குறிப்பதாயிற்று. இவ்வாறாகத் திணை என்ற சொல் இலக்கணக் கலைச் சொல்லாகவும், இலக்கியக் கலைச் சொல்லாகவும் தொல்காப்பியத்தில் சுட்டுகின்ற முறை காணப்படுகின்றது.

**ஐந்திணை**

அகப்பொருள் இலக்கணத்தில் முதன்மையானதும், சிறப்பானதும் ஐந்திணையே ஆகும். அது 'அன்பின் ஐந்திணை' என்றே அழைக்கப்படும். சிறிதும் குறைவில்லாமல் தூய்மையான அன்பில் தோய்வதே அகன் ஐந்திணை எனப்பெறும் அன்பின் ஐந்திணை ஆகும். அதனால் தான் தொல்காப்பியர்.

**"மக்கள் நுதலிய அகன் ஐந்திணையும்**

**சுட்டி ஒருவர் பெயர்கொளப் பெறாஅர்"**[13]

என்ற சிறப்பிக்கிறார். ஐந்திணை மக்கள் வாழ்க்கையில் நிகழ்கின்ற இயல்பான ஒழுக்கத்தைச் சுட்டுகிறது. நாற்கவிராச நம்பியும் ஐந்திணையை,

**"ஐந்திணை உடையது அன்புடைக் காமம்"**[14]

என்கிறார். ஒருவர் மனக்குறிப்பை ஒருவர் அறிந்த பின் மலர்வது ஐந்திணை ஆகும்.

இவை குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை போன்ற ஐந்து பெயர்களில் வழங்கப்படுகிறது. ஐந்திணை தலைவன், தலைவி இருவரது மனம் ஒத்த அன்பை மையமாக வைத்து வகுக்கப்பட்ட இலக்கணங்கள். அக வாழ்க்கையில் நிகழும் செயல்பாடுகளை (ஒழுக்கங்களை) ஐந்து பெரும் பிரிவுகளில் அடக்கி, அவற்றுக்கு நில

---

12. ஆ. சிவலிங்கனார்(பதி.ஆ.), பொருளதிகாரம், அகத்திணையியல் உரைவளம், ப.1.

13. ச.சோமசுந்தரபாரதியார்(உ.ஆ.), தொல்காப்பியம் பொருட்படலப் புத்துரை (தொகுதி-2), ப.149.

14. நாற்கவிராசர் நம்பி, அகப்பொருள் விளக்கம், ப.3.

அடிப்படையில் குறிஞ்சி போன்ற பெயர்களை அமைத்தனர், அவ்வாறு வகுக்கப்பட்ட ஐந்திணைகளுக்கும் அடிப்படையாக அமையும் பொருள்களை முதற்பொருள், கருப்பொருள், உரிப்பொருள் என மூவகைப்படுத்துவர். இதனால் திணை என்பது பொருள் கூறுகளின் முதல், கரு, உரி எனும் முக்கூறுகளின் அடிப்படையில் குறியீடாக இடம் பெறுவதையும் காணலாம். அதாவது நிலத்திற்கான பெயர் இலக்கியத்திற்கும் பொருந்துவதான இலக்கியப் பொருள் கூறுகளின்(முதல்,கரு,உரி) அமைப்பையும் தெளிவாகத் தெரிந்து கொள்ள முடிகின்றது.

திணை இலக்கியம் குறித்து அறிஞர்களிடையே பலவித கருத்தாக்கங்கள் நிலவி வருகின்றன. "திணை இலக்கியம் நில அடிப்படை உடையது. நிலமும், பருவமும், பொழுதுகளும், இயற்கையும் அவற்றைப் பின்னணியாகக் கொண்ட மனித வாழ்வும் இயைபுபடப் புனையப்படுவதே திணை இலக்கியமாகும். நிலச்சாயலும், அதில் வாழும் உயிரினச் சாயலும் ஒவியமாகப் படிந்து கிடப்பதே திணை இலக்கியமாகும்"[15] என்ற தமிழண்ணலின் கருத்து நிலமும், உயிரும் சேர்ந்த நிலையே என்பதாக அமைகின்றது.

"திணை என்ற சொல் ஐந்திணையை மட்டுமே சுட்டி நிற்கவில்லை. மாறாக, குலம், நிலம், ஒழுக்கம் ஆகிய முன்றும் இணைந்து நிற்கும் தன்மையேயும் திணை எனக் கருதப்பட்டுள்ளது தெளிவாகின்றது. இங்கே குலம் என்பது நிலத்திற்குரிய மக்கள் எனப் பொருள்படும். இதனால் மக்களின் வாழ்வியல் - வாழ்வியலோடு தொடர்புடைய நிலப்பகுதி - வாழ்வியலும் - நிலச்சூழலும் இணைவதால் வெளிப்படும் நெறிமுறைகள் - நெறிமுறைகளை வகுக்கின்ற எண்ணப்போக்கு ஆகிய அனைத்தையும் உள்ளடக்கியதாகத் 'திணை' கருதப்பட்டது என்பது தெளிவாகும்"[16] என்கிறார் நெடுஞ்செழியன்.

இலக்கியச் சான்றுகளிலிருந்தும், பல அறிஞர்களின் கருத்துக்களிலிருந்தும் 'திணை' என்பது நிலம், குலம், ஒழுக்கம் ஆகிய முப்பொருள்களையும் தரும் என்பது புலனாகின்றது. இருப்பினும் 'திணை' என்பது பெரும்பான்மை நிலத்தையும், சிறுபான்மை ஒழுக்கத்தையும் குறிப்பதாகக் கொள்ளலாம். காரணம் நிலமில்லாமல் மக்கள் வாழ்க்கையும், செயல்களும் நடைபெறாது. மக்களின் உயிரோட்டமே நிலத்தில் தான் படிந்து கிடக்கிறது. அத்தகைய நிலத்தைப் பொறுத்தே மக்களின் ஒழுக்கம் அமைவதால்

---

15. தமிழண்ணல், சங்க இலக்கிய ஒப்பீடு, ப.109.

16. க. நெடுஞ்செழியன்,சங்க இலக்கியக் கோட்பாடுகளும் சமய வடிவங்களும், ப.97.

மக்கள் வாழ்வு வளம் பெறுவதற்குத் திணையாகிய இந்நிலமே அடிப்படை எனக் கொள்ளலாம்.

## முப்பொருள் விளக்கம்

அகப்பொருளுக்குரிய திணைகள், அத்திணைகளுள் நிலம் உடையவை, நிலமற்றவை எனப்பாகுபடுத்தி முப்பொருள்களைப் பற்றி இலக்கணம் வரையறுக்கிறார் தொல்காப்பியர்.

"இவ்வுலகத்துப் பொருள்களை உறுப்பினாலும், தொழிலினாலும், பண்பினாலும் பாகுபடுத்தி நோக்கினால் அவை எல்லையற்று விரிந்து ஒருவித வரம்பினுள் அடங்காது போய்விடும். இவற்றை ஒரு வரையறைக்குள் அடக்கிப் பேசுகின்றார் தொல்காப்பியர். அவர் உலக வழக்கிலும் செய்யுள் வழக்கிலும் பயின்று வரும் பொருள்களை மூவகையாகப் பிரித்துப் பேசுகிறார்"[17] என்கிறார் ந.சுப்புரெட்டியார்.

**தொல்காப்பியர்**

**"முதல் கரு உரிப்பொருள் என்ற மூன்றே**

**நுவலுங் காலை முறை சிறந்தனவே**

**பாடலுட் பயின்றவை நாடுங்காலை"**[18]

எனத் தமது நூற்பாவில் குறிப்பிடுகிறார். இதனையே இளம்பூரணர்,

"சான்றோர் செய்யுளகத்துப் பயின்ற பொருளைஆராயுங்காலத்து, முதற்பொருள் எனவும், கருப்பொருள் எனவும், உரிப்பொருள் எனவும் சொல்லப்பட்ட, மூன்று பொருண்மையுமே அவை சொல்லுங் காலத்து முறைமையாற் சிறந்தன"[19] என்கிறார்.

நச்சினார்க்கினியர், "புலனெறி வழக்கிடைப் பயின்ற பொருள்களை ஆராயுங்காலத்து, முதல், கரு, உரிப்பொருளும் என்ற மூன்றேயாம். அவை தாம் செய்யுள் செய்யும்பொழுது ஒன்று ஒன்றனிற் சிறந்து விடுதலுடையது"[20] என்று கூறுகிறார்.

---

17. ந. சுப்புரெட்டியார், தொல்காப்பியம் காட்டும் வாழ்க்கை,ப.15.
18. மு. அருணாச்சலம் பிள்ளை, அகத்திணையியல் உரைவளம், ப.50.
19. இளம்பூரணர்(உ.ஆ.), தொல்காப்பியம்,பொருளதிகாரம், ப.8.
20. மு. அருணாசலம் பிள்ளை, அகத்திணையியல் உரைவளம், ப.51.

'புலவர் செய்யுளில் வந்து பயிலும் வழக்குகளை ஆராயுங்காலத்து முதற்பொருள், கருப்பொருள், உரிப்பொருளென வகுத்த மூன்றுமே முறையே ஒன்றினொன்று சிறந்தனவாம்''[21] என்கிறார் அருணாசலம் பிள்ளை.

அகத்திணைப் பாடல்களின் கருத்தைச் செறிவாகவும், நிறைவாகவும் சங்கப் புலவர்கள் பாடுவதற்கு உறுதுணையாக விளங்குவது முதல், கரு, உரிப்பொருள்கள் ஆகும். அன்பின் ஐந்திணை என்று அழைக்கப்படுகின்ற உயர் ஒழுக்கமாகிய உரிப்பொருளைக் கூறுவதற்கு முதல் மற்றும் கருப்பொருளாகிய பின்புலம் புலவர்களுக்குத் தேவையாயிற்று. இதனால் ஐந்திணை ஒழுக்கங்களுக்குப் பின்புலமாக முதல், கரு, உரிப்பொருள்கள் இன்றியமையாதனவாக விளங்குகின்றன.

**நெய்தல் திணையுள் முப்பொருள்**

ஐந்திணைகளில் ஒன்றாகத் திகழக்கூடிய நெய்தல் திணையில் உள்ள பாடல்களைத் தொகுத்து அவற்றால் அமைந்த முதற்பொருள், கருப்பொருள், உரிப்பொருள் மூன்றையும் வகுத்து ஒவ்வொன்றையும் தனித்தனியாக நிறுத்தி இங்கு விளக்கப்படுகின்றன.

**முதற்பொருள்**

**முதற்பொருள் நிலம், காலம் என இருவகைப்படும் என்பதனை,**

**"முதலெனப்படுவது ஆயிரு வகைத்தே''**[22]

**"முதலெனப்படுவது நிலம்பொழு திரண்டின்**
**இயல்பென மொழிப இயல்புணர்ந் தோரே''**[23]

என்று கூறுகிறார் தொல்காப்பியர். வாழ்க்கை சார்ந்த எல்லா நிகழ்வுகளுக்கும் நிலமும்(இடம்), காலமும்(பொழுது) அடிப்படையாக விளங்குவதால் அவை முதற்பொருள்களாகக் கொள்ளப்பட்டுள்ளன.

''ஆங்கிலத்தில் இவற்றை முறையே 'space' என்றும் 'Time' என்றும் குறிப்பிடுவர். இவை இரண்டும் உலகத் தோற்றத்தைப் பற்றிய கருத்துக்களையும், இப்பூமண்டலத்தின்

---

21. மு. அருணாசலம் பிள்ளை, அகத்திணையியல் உரைவளம், ப.52.
22. ச.வே. சுப்பிரமணியன்(உ.ஆ.), தொல்காப்பியம், ப.358.
23. ஆ. சிவலிங்கனார்(பதி.ஆ.), தொல்காப்பியம், பொருளதிகாரம், ப.41.

இயக்கத்தையும் விளக்குவதற்கு மிகவும் முக்கியமானவை. இவை இரண்டினையும் தொடர்புப்படுத்தி ஐன்ஸ்டைன் என்ற உலகப் புகழ் பெற்ற அறிவியல் மேதை 'ஒப்பு நோக்குக் கொள்கை' (Theory of Relativity) என்ற புதிய கொள்கையைக் காட்டியுள்ளார்"[24] என்று உரைக்கிறார் ந.சுப்புரெட்டியார்.

நிலம், பொழுது ஆகிய இரண்டையும் புவியியற் நோக்கில் கட்டமைத்து அவற்றை இலக்கியங்களோடு ஒப்பிட்டு ஆராய வழி அமைத்துக் கொடுத்திருக்கின்றனர் முன்னோர்கள் என அறிய முடிகிறது.

"முதற்பொருளில் காலமும், இடமும் முக்கியமான கூறுகள், இடமானது புவியமைப்பு என்பதோடு மன அமைப்பு (Mental Landscape) என்றும், காலத்தை ஒரு நாளின் பகுதி, ஆண்டின் பகுதியென்றெல்லாம் பாகுபடுத்தாமல் வரலாற்றுக் காலம் என்று விரிவு செய்யலாம்"[25] என்று ஐயப்பப்பணிக்கர் கூறுகிறார்.

'இதனடிப்படையில் படைப்புத் தோன்றும் புவியமைப்பு, படைப்பாளனின் மனஅமைப்பு, வரலாற்றுக் காலத்தில் படைப்பின் நிலை போன்றவை அடிப்படைக் கூறுகளாக முதற்பொருளாகக் கொள்ளலாம்"[26] என்கிறார் ஜவஹர்.

நிலமும், பொழுதும் முதற்பொருளாகச் சுட்டுவதன் நிலப்பின்னணியில் காலம் மிகுந்த முக்கியத்துவம் பெறுகிறது. தட்பவெட்ப நிலை நிலத்தின் சூழல்களை மாற்றும் திறன் வாய்ந்தது. எனவே நிலத்தைக் காலத்தோடு இயைத்துக் கூறுவது இலக்கிய மரபாகும். நிலத்தைப் புனையும் போது பருவமும் உடனியைந்து நிற்கும். ஒன்றை விட்டு ஒன்றைத் தனியே புனைவது இயலாது. இதனை நன்குணர்ந்த தமிழ்ச் சான்றோர் நிலத்தையும், பொழுதையும் முதற்பொருள் என்று கூறினர். இவ்வாறாக ஒரு செயல் இனிதே நடைபெறுவதற்கு இடமும், காலமும் இன்றியமையாதவை ஆகும்.

**நானிலம்**

நில அமைப்பினை நம் முன்னோர் நானிலமாகக் கண்டனர்.

**"மாயோன் மேய காடுறை உலகமும்**
**சேயோன் மேய மைவரை உலகமும்**

24. ந. சுப்புரெட்டியார், தொல்காப்பியம் காட்டும் வாழ்க்கை, ப.16.
25. சா. சிவமணி, சங்க அகத்திணைக் கோட்பாட்டு நோக்கில் தமிழ் மலையாள நெய்தல் நில நாவல்கள், ப.41.
26. ஜவஹர், திணைக்கோட்பாடும் தமிழ்க்கவிதையியலும், ப.65.

**வேந்தன் மேய தீம்புனல் உலகமும்**

**வருணன் மேய பெருமணல் உலகமும்**

**முல்லை குறிஞ்சி மருதம் நெய்தலெனச்**

**சொல்லிய முறையாற் சொல்லவும் படுமே”**[27]

கண்ணன் விரும்புகின்ற காடும் காடு சார்ந்த இடம் முல்லை என்றும், முருகன் விரும்புகின்ற மலையும் மலை சார்ந்த இடம் குறிஞ்சி என்றும், இந்திரன் விரும்புகின்ற மிகுதியான நீரையுடைய வயலும் வயல் சார்ந்த இடம் மருதம் என்றும், வருணன் விரும்புகின்ற மிகுதியான மணலையுடைய கடலும் கடல் சார்ந்த இடம் நெய்தல் என்றும் அழைக்கபெறுகின்றன. மேற்கூறிய நால்வகை நிலங்களைப் பற்றிய சூத்திரத்தில் தொல்காப்பியர் ‘உலகம்’ என்ற சொல்லை ஒவ்வொரு நிலத்திற்கும் பயன்படுத்துகிறார். “உலகம் என்ற சொல் பயன்படுத்தப்படுவது ஒவ்வொரு பகுதியும் தன்னளவில் மற்ற பகுதிகளுடன் மாறுபட்டது என்பதை உணர்த்துகின்றது. இந்நிலப்பகுதிகளின் வேறுபாடுகள் மிகவும் அதிகமாக இருத்தலின் இவை தம்முள் தாமே உலகமாயின”[28] என்ற சிவத்தம்பியின் கருத்து இந்நூற்பாவிற்குப் பொருத்தமாய் அமைகின்றது. இவ்வாறு முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் என்று நான்கு நிலத்தை மட்டுமே தொல்காப்பியர் கூறியதிலிருந்து பாலைக்கு எனத் தனிநிலத்தை வரையறுக்கவில்லை என்பதை உணரலாம்.

**“நடுவண் ஐந்திணை நடுவண தொழியப்**

**படுதிரை வையம் பாத்திய பண்பே”**[29]

என்று தொல்காப்பியம் பாலையை நீக்கி நானிலமாகக் கொள்கிறது. பாலையைக் “கலப்பு நிலம்”[30] என்கிறார் மு. இராகவையங்கார். “பாலைக்கு நிலமின்மையின் ‘நானிலம்’ என்கிறது”[31] திருச்சிற்றம்பலக்கோவை. தொல்காப்பியம் பாலைக்கு நிலம் உண்டென்றோ. அதன் பெயர் பாலை என்றோ அகத்திணையியலில் எந்த இடத்திலும்

---

27. இளம்பூரணர்(உ.ஆ.), தொல்காப்பியம், பொருளதிகாரம் ,ப.9.
28. கா. சிவத்தம்பி, திணைக்கோட்பாட்டின் சமூக அடிப்படைகள், பக். 37 - 38.
29. ச.சாம்பசிவனார்(பதி.ஆ.), தொல்காப்பியர் பொருட்படலப்புத்துரை(தொகுதி-2), ப.12.
30. மு. இராகவையங்கார், தொல்காப்பியம் பொருளதிகார ஆராய்ச்சி, ப.25.
31. மாணிக்கவாசகர், திருச்சிற்றம்பலக்கோவை, ப.3.

குறிப்பிடவில்லை. அதற்கு உரை எழுதிய உரையாசிரியர்களும் பாலையும் நிலப்பாகுபாட்டில் உண்டென்று உறுதியாகக் கூறவில்லை. பின்னர் தோன்றிய சிலப்பதிகாரம் திரிநிலம் உண்டென்று குறிப்பாகச் சொல்லிச் செல்கிறது.

**"முல்லையும் குறிஞ்சியும் முறைமையின் திரிந்து**

**நல்லியல்பு இழந்து நடுங்கு துயருறுத்துப்**

**பாலை என்பதோர் படிவம் கொள்ளும்"**[32]

என்று முல்லையும், குறிஞ்சியும் மாறுகின்ற நிலமாகப் பாலை அறியப்பட்டுள்ளது. பாலை என்பது நிலமன்று. எனினும் கோடை காலத்தில் ஏற்படும் பருவகால மாற்றம் காரணமாக உண்டாகும் நிலம் என்பது இதனால் உணரப்படுகிறது. "பாலை என்பதற்கு நிலம் இன்றேனும். வேனிற்காலம் பற்றி வருதலின் அக்காலத்துத் தளிரும், சினையும் வாடுதலின்றி நிற்பது பாலை என்பதோர் மரம் உண்டாகலின். அச்சிறப்பு நோக்கிப் பாலை என்று குறிப்பிட்டார்"[33] என்று இளம்பூரணர் பாலை நிலத்திற்கான பெயர் விளக்கத்தைத் தம் உரையில் குறிக்கிறார். இதிலிருந்து மழையின்மையால் வறட்சி ஏற்பட எந்நிலமும் பாலையாகலாம் என்ற பொருள் கிடைக்கிறது. இதனைப் பின்பற்றியே பின்னர் வந்த இலக்கண ஆசிரியர்களும் நானிலத்துடன் பாலை என்ற தனிநிலத்தையும் சேர்த்துக் கொண்டனர் எனலாம்.

**நெய்தல் நிலம் - பெயர்க்காரணம்**

கடலும் கடல் சார்ந்த இடமும் நெய்தல் நிலமாகும். குறிஞ்சி, முல்லை, பாலை, மருதம், நெய்தல் என்ற இப்பகுதிகள் அவ்வந் நிலங்களில் மிகுதியாய்க் காணப்படும் பூக்களால் பெயர் பெற்றன என்பர் ஒரு சாரார்: மற்றொரு சாரார் புணர்தல், இருத்தல், பிரிதல், ஊடல், இரங்கல் என்ற ஒழுக்கத்தால் பெயர் பெற்றன என்கின்றனர். நிலங்கள் பூக்களினால் பெயர் பெறாமல் ஒழுக்கங்களினால் பெயர் பெற்றன என்று கூறுவது பொருத்தமற்றதாய்த்தோன்றுகிறது.

"நச்சினார்க்கினியர் போன்றோர் கூறியவாறு ஒழுக்கமே பெயர் வைப்பிற்கு அடிப்படை என்று கொண்டால் குறிஞ்சி மக்கள் மட்டும் தான் புணர்வர்; முல்லை நில மக்கள் மட்டும் தான் இருப்பர்; மருத மக்கள் மட்டும் தான் ஊடுவர், நெய்தல் மக்கள்

---

32. ந.மு. வேங்கடசாமி நாட்டார்(உ.ஆ.), சிலப்பதிகாரம், பக்.64-66.
33. மு. அருணாசலம் பிள்ளை, தொல்காப்பியம் அகத்திணையியல் உரைவளம், ப.70.

மட்டும்தான் இரங்குவர், பாலை மக்கள் மட்டும்தான் பிரிவர் என்றாகும்."[34] இதனால் ஒழுக்கத்தினாலே நிலம் பெயர் பெற்றது என்பது தவறான கருத்து.

"முல்லை,குறிஞ்சி,நெய்தல்,மருதம் இவை அவை மலரும் நிலத்தின் பெயருமாம்"[35] என்று அபிதான சிந்தாமணி கூறுகின்றது. தனிநாயக அடிகள் தம் தமிழ்த்தூது என்ற நூலில், "தொல்காப்பியர் காலத்திற்குப் பன்னூற்றாண்டுகட்கு முற்பட்டத் தமிழ் மக்கள் மலைநாட்டிற்குக் குறிஞ்சி நிலம் எனப் பெயரிட்டார்கள். காந்தள், வேங்கை, ஆரம், அகில் என்ற இவற்றில் ஒன்றின் பெயரால் அதனைக் குறித்தனர். குறிஞ்சிப்பூவே சிறப்புப் பூவாதலால், குறிஞ்சியென மலையையும் மலை சார்ந்த இடத்தையும் குறித்தார்கள், அவ்வாறே பிற நிலங்கட்கும் முல்லை, பாலை, மருதம், நெய்தல் எனப் பெயர் வைத்ததற்கும் சிறந்த காரணங்கள் உள்ளன[36] என்று பூக்களினால் நிலம் பெயர் பெற்றதனை விளக்குகிறார்.

"பல்வேறு மலர்கள் ஒரு நிலத்திற் காணப்படுமாயினும், அந்நிலத்தில் சிறப்பாக மிகுதியாகக் காணப்படுவது எப்பூவோ. அப்பூவாலேதான் பெயர் பெற்றுள்ளது. எனவே ஒழுக்கங்களும் நிலங்களும் பூக்களாற்றான் பெயர் பெற்றன என்பது ஒருதலை"[37] என்று முத்துகண்ணப்பனும்,"குறிஞ்சி முதலிய அகத்தின் ஐந்துறைகளுக்கும், வெட்சி, வஞ்சி, உழிஞையாகிய புறத்துறை ஐந்தினுக்கும் பூவின் பெயர்களையே இட்டனர். இதனால் தமிழர் நாகரிகம் ஒரு பூ நாகரிகம் கலை நாகரிகம் என்றாகிறது. வாழ்வினை அழகும், மணமும் உடையதாகக் கண்டனர். பொருளிலக்கணம் போல இவ்வகைப் பூக்காட்சியும் உலகில் புதிது; தமிழர்க்கேயுரியது"[38] என்று கோவிந்தசாமியும் தொல்காப்பியரின் இக்கவிதை (திணை) மரபை எண்ணி வியக்கின்றனர். அவ்வாறே அகத்தியலிங்கமும், "திணைகளை உருவாக்கி அவற்றுக்கும் பூக்களின் பெயரைக் கொடுத்து அவற்றை முதன்மையாக்கி நின்றது, தமிழ் இலக்கியத்தில் காணப்படுகின்ற ஒரு தனி இலக்கிய அல்லது கவிதை மரபாகும்"[39] என்கிறார்.

---

34. க.ப. அறவாணன், அற்றைநாட் காதலும் வீரமும், ப.95.
35. சிங்கார வேலு முதலியார், அபிதான சிந்தாமணி, ப.1180.
36. தனிநாயக அடிகள், தமிழ்த்தூது, பக்.54-55.
37. தி. முத்து கண்ணப்பன், சங்க இலக்கியத்தில் நெய்தல் நிலம், பக்.19-20.
38. மு. கோவிந்தசாமி, தமிழர் இனவரலாறு, ப.77.
39. ச.அகத்தியலிங்கம், தொல்காப்பியம் உருவாக்கம், ப.146.

இராகவையங்கார், 'முற்கூறிய ஐந்து நிலங்களும் குறிஞ்சி முதலாகப் பெயர் பெற்றதன் காரணம் யாது என நாம் ஆராய்ந்தால் இப்பெயர்கள் மரம் அல்லது பூ வகைகளுக்கு உரியன என்றும், முல்லை முதலியவற்றின் மிகுதி அல்லது சிறப்புப் பற்றி அந்நிலங்கட்குப் பெயர்கள் வழங்கலாயின என்பதும் எளிதில் புலப்படும்"[40] என்று விளக்கியுள்ளார். மலர்களைக் குறியீடாகக் கொள்ளும் வழக்கம் பண்டைத் தமிழரைப் போலவே ஐரோப்பியரும் கொண்டிருந்தனர். "இங்ஙனமே ஐரோப்பியரும், பண்டும், இன்றும் 'லில்லி' (Lily) என்ற வெள்ளையல்லி மலரைக் கற்புக் குறியாக வழங்கி வருகின்றனர். இதுபோலவே, அன்புடை இருவர் பிரியுங்கால், அப்பிரிவைக் குறிக்க 'Forget-me-not' என்ற பூவைக் கொடுத்தலும், துக்க மிகுதியை 'Weeping willow'என்ற பூவால் குறித்தலும் ஐரோப்பிய நாட்டு வழக்கம்"[41] என்று ஐரோப்பியரின் மலர்ப் பயன்பாட்டை விளக்கிக் கூறித் தமிழரின் திணைக்குறியீடும் இம்மலர்களினாலேயே அமைந்தது என்று உறுதிப்படக் கூறுகிறார்.

"இவற்றுள் கடலும் கடல் சார்ந்த இடமும் நெய்தல் எனப் பெறும். இந்நிலப் பகுதியிலே நெய்தல் மலர் மிகுந்திருப்பது கொண்டு இப்பெயர் வந்ததென்பர்"[42] என்று கலைக்களஞ்சியமும் குறிப்பிடுகிறது.

நெய்தல் நிலத்தில் தாழை, புன்னை, ஞாழல், செருந்தி, அடும்பு போன்ற எண்ணற்ற பூக்கள் உள்ளனவெனினும், அங்கு மிகுதியாக, சிறப்பாக, ஏனைய நிலங்களிற் காணப்படுவதினும் அதிகமாக நெய்தற் பூவே காணப்படுகிறது. கண்காணும் இடம் எல்லாம் நெய்தல் மலர்கள் பூத்துக் குலுங்குவதாக இலக்கியங்கள் கூறுகின்றன. ஆதலின் நெய்தற் பூவின் சிறப்பினாலேயே அந்நிலம் நெய்தல் என்ற பெயர் பெற்றது. .

இரா.செகதீசன் என்பவர், "நெய்தல் நிலம் கடல், புணரி, முந்நீர், பௌவம், துறை,கானல், கழி போன்ற சொற்களால் உணர்த்தப்படுகின்றது. கடல், புணரி, முந்நீர், பௌவம் ஆகிய சொற்கள் பரந்து நீர் கொண்ட பெருங்கடலைக் குறிக்கின்றன. துறை என்பது கடற்கரையை ஒட்டியமையும் பகுதியைக் குறிக்கிறது. கானல் என்பது கடற்கரைச் சோலையையும், கழி என்பது உப்பு விளையும் நிலத்தையும் குறிக்கின்றன"[43]

---

40. மு. இராகவையங்கார், தொல்காப்பியப் பொருளதிகார ஆராய்ச்சி, பக்.24-25.
41. மேலது, ப.25.
42. பெரியசாமிதூரன்(பதி.ஆ), கலைக்களஞ்சியம்(தொகுதி-6), ப.539.
43. இரா. செகதீசன், தொல்காப்பியப் பொருளதிகார வழி அகநானூறு - ஓர் ஆய்வு, ப.135.

என்கிறார். இவ்வாறு நெய்தல் நிலமும் அவற்றைச் சார்ந்த பகுதிகளும் பல பெயர்களால் அழைக்கப்படுகின்றது எனலாம்.

**பெரும்பொழுது - ஆறுகாலம்**

தொல்காப்பியத்தில் நெய்தல் திணைக்குரிய பெரும்பொழுதுகள் பற்றிச் சுட்டப்படவில்லை என்றாலும் அதன்பின் வந்த இலக்கண நூல்களும், உரைகளும் ஆறுபொழுதுகள் எனப் பேசுகின்றன.

**"காரே கூதிர் முன்பனி பின்பனி**

**சீரிள வேனில் வேனி லென்றாங்**

**கிருமூன்று திறத்தது தெரிபெரும் பொழுதே"**[44]

என்று அகப்பொருள் விளக்கம் எடுத்துரைக்கின்றது. இவ்வாறு பொழுதுமே நெய்தலுக்குரிய பெரும்பொழுதாகும் என்பதை,

**"மருதம் நெய்தலென் றிவையிரண்டிற்கும்**

**உரிய பெரும்பொழு திருமூன் றும்மே"**[45]

எனக் குறிப்பிடுவதனால் அறியமுடிகின்றது. நெய்தலுக்குரிய பெரும் பொழுதுகள் பற்றி உரையாசிரியர்கள் கூறும்போது அகப்பொருள் விளக்கம், இலக்கண விளக்கம் போன்ற இலக்கண நூல்களைப் பின்பற்றியே ஆறுபொழுது என்பர். "பருவம் வரைந்தோதாமையின் அறுவகைப் பருவமும் கொள்ளப்படும். இது நெய்தற்கும் ஒக்கும்"[46] என்பார் இளம்பூரணர். இவ்வாறுபொழுதுகளும் முதற்பொருளான நிலத்தைச் சார்ந்தே தோன்றுகின்றன. இவை பற்றி மு.வரதராசன் குறிப்பிடும் பொழுது, "இதுகாறும் நிலம் பற்றிய குறிப்புக்கள் கண்டோம். இனி அம்முதற் பொருளையே சார்ந்த பொழுது பற்றிய குறிப்புக்கள் சில காணலாம்"[47] என்பதால் நிலம் முதற்பொருளில் முதல் பொருள் என்பதனை உணரமுடிகின்றது.

---

44. எம். சுந்தரேசம் பிள்ளை (பதி.ஆ.), அகப்பொருள் விளக்கம், ப.11.
45. மேலது, ப.15.
46. இளம்பூரணர்(உ.ஆ.), தொல்காப்பியம், அகத்திணையியல் உரை, ப.11.
47. மு. வரதராசன், சங்க இலக்கியத்தில் இயற்கை, ப.243.

முன்பனிக் காலத்தை வெளிப்படுத்தும்பொழுது மரம், செடி, கொடிகள் மலர்கின்றதன் வாயிலாகப் புலவர்கள் வெளிப்படுத்துகின்றனர். இவ்வாறு மலரும் கருப்பொருள்கள் காலம் காட்டும் கருப்பொருள்கள் என்றே கூறலாம். "முன்பனிக் காலத்தில் கருவிளையும், கரும்பும் பூக்கின்றன. பிடவும், பகன்றையும் பிணிவிடுகின்றன. தோன்றியும், கோடலும் பூத்துத் தோன்றுகின்றன. பயறும், உழுந்தும் பழுத்துக் காயைச் சிந்துகின்றன. அவரை முகையவிழ்கின்றது. இவற்றை எல்லாம் பழந்தமிழ்ப் புலவர் கண்டறிந்து தத்தம் பாடல்களில் ஆங்காங்கே முன்பனிக் காலத்திற்கு உரியவனவாகச் சொல்லி இருப்பது பாராட்டத்தக்கது"[48] என முன்பனிக் காலம் பற்றிக் கூறுகிறார் அ.சிதம்பரநாதன். இவ்வாறு ஆறுவகை காலத்தின் சிறப்புக்களையும், தன்மையையும் இலக்கண அறிஞர் குறிப்பிடுவர்.

**சிறு பொழுது - எற்பாடு**

நெய்தலுக்குரிய பெரும்பொழுது பற்றிக் குறிப்பிடவில்லை என்றாலும் சிறுபொழுது பற்றித் தொல்காப்பியம் கூறுகிறது.

**"எற்பாடு,**
**நெய்தல் ஆதல் மெய்பெறத் தோன்றும்"**[49]

என்பதால் அறியலாம். எற்பாடு எனத் தொல்காப்பியம் குறிப்பிடுகின்றதையே பின் வந்த இலக்கண நூல்களான இறையனார் அகப்பொருள், களவியல்காரிகை, மாறனகப்பொருள், தொன்னூல் விளக்கம், முத்து வீரியம், சுவாமிநாதம் ஆகியவையும் நெய்தலுக்குரிய சிறுபொழுது எற்பாடு என்றே குறிப்பிடுகின்றன.

**"எற்பாடு நெய்தலுக் குரிய தாகும்"**[50]

என்கிறது முத்துவீரியம். நம்பியகப் பொருள், இலக்கண விளக்கம் போன்ற இலக்கண நூல்கள் 'வெய்யோன்பாடு' என்கின்றன.

**"வெய்யோன்பாடு நெய்தற் குரித்தே"**[51]

என்கிறது அகப்பொருள் விளக்கம்.

48. அ. சிதம்பரநாதன், முன்பனிகாலம், ப.3.
49. ஆ. சிவலிங்கனார் (பதி.ஆ.), அகத்திணையியல் உரைவளம், ப.65.
50. கு. சுந்தரமூர்த்தி(பதி.ஆ.), முத்துவீரியம், ப.219.
51. கா.ர. கோவிந்தராச முதலியார்(உ.ஆ.), அகப்பொருள் விளக்கம், ப.18.

‘எற்பாடு’ என்பது எந்த நேரத்திற்குரிய சிறுபொழுதைக் குறிக்கும் என்பது பற்றி உரையாசிரியர்களும், இலக்கண அறிஞர்களும் குறிப்பிடும் பொழுது பிற்பகலையே எற்பாடு எனக் குறிப்பிடுவர். "எற்பாடாவது பகற்பொழுதின் பிற்கூறு"[52] என்பார் இளம்பூரணர்.

"கதிரவன் மறைபொழுதைக் குறித்தலே மரபு. சேரநாட்டார் பிற்பகலைப் ‘படுஞாயிறு’(படிஞாயிறு) என்றே வழங்குவர்"[53] எனக் க.ப. அறவாணன் குறிப்பிடுவதனாலும் அறியலாம். பா. ஆனந்தக்குமார் குறிப்பிடும் பொழுது. "ஞாயிறு மறையும் அந்திப் பொழுது (எற்பாடு) நெய்தல் திணையின் முதற்பொருள்"[54] என்பார்.

எற்பாடு என்னும் சிறுபொழுது பெரும்பொழுதாகிய ஆறுகாலத்தின் பிற்பகலுக்கும், மாலைக் காலத்திற்கும் பொருந்தி வரும். இக்காலப்பகுதியில் கடற்கரைச் சூழலில் தலைவன். தலைவி சேர்ந்து மகிழ்ந்திருந்து பிறகு பிரியும் காலமாக இருப்பதால் வருந்தி இரங்கும் பொழுதாக எற்பாடு உள்ளது. "நெய்தல் நிலத்தின் கடற்கரையில் பகற்புணர்வு மிகுதி, கடற்சோலைகளில் தலைவன், தலைவியோடு உரையாடிப் பிரியுங்காலம் இன்று மாலை எனப்படும் எற்பாடாதலின் தலைவியின் உள்ளம் இரங்குதல்என்னும் உணர்ச்சியை மிகுவிக்கின்றது"[55] என்பார் தமிழண்ணல், எற்பாடு பொழுதின் நேரமாகப் பிற்பகல் 2 மணி முதல் மாலை 6 மணி வரை.

**கருப்பொருள்**

முதற்பொருளான நிலத்திலும், பொழுதினும் கரு கொள்கின்ற பொருள்கள் கருப்பொருள்கள் ஆகும். "கருப்பொருளே உரிப் பொருளுக்கு அடிக்கல். உரிப்பொருள், கருப்பொருள் மேல் கட்டப்பட்ட கட்டிடம்"[56] என்பார் அறவாணன். இதனால் உரிப்பொருள் சிறக்கக் கருப்பொருள் அடிப்படையாக அமைகின்றது.

முதற்பொருளாகிய நிலமும், காலமும் பற்றித் தோன்றியியங்கும் இயற்கை, செயற்கைப் பொருள்கள் அனைத்தும் கருப்பொருள்கள் எனப்பட்டன. "கரு என்பதற்கு

---

52. இளம்பூரணர்(உ.ஆ.), தொல்காப்பியம், பொருளதிகாரம் ,ப.12.
53. க.ப. அறவாணன், அற்றைநாட் காதலும் வீரமும், ப.103.
54. பா. ஆனந்தக்குமார், தற்காலத் தமிழ்க் கவிதைகளில் நெய்தல், ப.193.
55. தமிழண்ணல், சங்க மரபு, ப.26.
56. க.ப. அறவாணன், அற்றைநாட் காதலும் வீரமும், பக்.97-98.

கருப்பம், முட்டைக்கரு, உடம்பு, குழந்தை, குட்டி, உட்பொருள், அடிப்படை என்று பலவகையில் பொருள் படும் படி"[57] தமிழ் அகராதி விளக்குகின்றது. ஓர் உயிர் உருவாவதற்குக் கரு எத்தனை முக்கியமோ அதனைப் போன்று மக்களின் வாழ்க்கை உருவாவதற்குக் கருப்பொருள்கள் முதன்மையானதாக அமைகின்றன. மக்களின் ஒழுக்கலாறுகள் நடைபெறுவதற்கு அடிப்படைக் காரணமாக அமைவதால் கருப்பொருள் என்று பெயர் பெற்றது.

"கருப்பொருளாவது இடத்திலும், காலத்தினும் தோன்றும் பொருள்"[58] என்னும் இளம்பூரணரின் கருத்துப்படிக் கருப்பொருள் என்பது நிலம், அந்நிலத்திற்கான பெரும்பான்மையாக நிலவும் காலநிலை ஆகியவற்றால் தோன்றும் என்பது விளங்கும்.

**"தெய்வம் உணாவே மாமரம் புள்பறை**
**செய்தி யாழின் பகுதியொடு தொகைஇ**
**அவ்வகை பிறவும் கருவென மொழிப"**[59]

என்ற நூற்பாவில் தெய்வம், உணவு, மா, மரம், புள், பறை, தொழில், யாழ் என்னும் எண்வகைக் கருப்பொருள்களைத் தொல்காப்பியர் கூறுகின்றார். தொல்காப்பியரை அடுத்து வந்த இலக்கண நூல்கள் கருப்பொருள் பற்றிப் பின்வருமாறு உரைக்கின்றன.

**"தெய்வம் செல்வர் சேர்குடி புள்விலங்கு**
**பூநீர் ஊர் மரம் உணாப்பறை யாழ்பண்**
**தொழில் எனக் கரு ஈர் எழு வகைத்தே"**[60]

என்று தொன்னூல் விளக்கமும்,

**"ஆரணங் குயர்ந்தோர் அல்லோர் புள் விலங்கு**
**ஊர் நீர் பூ மரம் உணாப்பறை யாழ் பண்**
**தொழில் எனக் கரூவீரெழு வகைத்தாகும்"**[61]

என்று நம்பியகப்பொருளும் கூறுகின்றன. தமிழ்நெறி விளக்கம்,

57. நா. கதிர்வேற்பிள்ளை, தமிழ்ப்பேரகராதி, ப.749.
58. மு. அருணாசலம் பிள்ளை, தொல்காப்பியம் பொருளதிகாரம் அகத்திணையியல் உரைவளம், ப.155.
59. ஆ. சிவலிங்கனார் (பதி.ஆ.), அகத்திணையியல் உரைவளம், ப.155.
60. ஜி. மெக்கென்ஜிகாபன்(உ.ஆ.), தொன்னூல் விளக்கம், ப.121.
61. கா.ர. கோவிந்தராச முதலியார்(உ.ஆ.), நம்பி அகப்பொருள் விளக்கம், ப.19.

**"தெய்வம் மானிடம் செய்தி உணவொடு**

**எய்திய இசை விலங்கு இன்னபிறவும்**

**பொய்தீர் கருவெனப் புகன்றனர் கொளலே"**[62]

என்று கருப்பொருள் குறித்து விளக்கமளிக்கிறது.

தொல்காப்பியர், 'அவ்வகை பிறவும்' எனக் கூறிச் செல்வதைப் பின்வந்த இலக்கண ஆசிரியர்கள் உயர்ந்தோர். அல்லோர், பூ, ஊர், நீர், பண் ஆகியவற்றையும் சேர்த்துக் கொண்டனர். இவற்றிலிருந்து 1.தெய்வம், 2.உயர்ந்தோர், 3.தாழ்ந்தோர், 4. பறவை, 5. விலங்கு, 6.ஊர், 7.நீர், 8.மரம், 9.பூ, 10.உணவு, 11.பறை, 12.யாழ், 13.பண், 14.தொழில் என்ற பதினான்கும் கருப்பொருளாக அமைகின்றன.

**நெய்தலுக்குரிய கருப்பொருள்கள்**

"நெய்தல் திணையின் முதல் பொருளாகிய கடற்கரை நிலத்தில் காணும் மரம், செடி, கொடி வகைகள், வாழும் பறவை இனங்கள், கழி, கடல் வாழ் உயிரினங்கள், மக்கள் ஆகியவை கருப்பொருளில் அடங்கும்"[63] என்று முத்துகண்ணப்பன் குறிப்பிடுகின்றார்.

| | | | |
|---|---|---|---|
| 1. | தெய்வம் | : | வருணன் |
| 2. | தலைமக்கள் | : | சேர்ப்பன்,புலம்பன்,பரத்தி, நுளைச்சி,துறைவன்,கொண்கன் |
| 3. | நிலமக்கள் | : | நுளையர், நுளைச்சியர், பரதர், பரத்தியர் |
| 4. | உணவு | : | மீன்,உப்பு ஆகியவற்றை விற்றுப்பெறும் பிறநிலப் பொருள்கள் |
| 5. | விலங்கு | : | சுறாமீன் |
| 6. | பூ | : | நெய்தல், தாழை, அடும்பு |
| 7. | மரம் | : | புன்னை, ஞாழல், பெண்ணை |
| 8. | பறவை | : | கடற்காக்கை |
| 9. | ஊர் | : | பட்டினம்,பாக்கம் |
| 10. | நீர் | : | கடல்நீர் |
| 11. | பறை | : | மீன் கோட் பறை |
| 12. | யாழ் | : | விளரியாழ் |

62. உ.வே. சாமிநாத ஐயர்(உ.ஆ.), தமிழ்நெறி விளக்கம், ப.23.
63. தி. முத்துகண்ணப்பன், சங்க இலக்கியத்தில் நெய்தல் நிலம், ப.2.

13. பண் : செவ்வழிப்பண்

14. தொழில் : மீன் பிடித்தல், உணக்கல்(மீனுலர்த்தல்) உப்பு விளைவித்தல் அவை விற்றல்

**தெய்வம்**

முதற்பொருளில் தோன்றி முதலில் வைத்துப் பேசப்படும் கருப்பொருள் தெய்வம் ஆகும். நெய்தல் நிலத்திற்கு உரிய தெய்வம் வருணன் என்பர். பெருமணல் உலகம் என நெய்தல் நிலத்தை அடையாளப்படுத்தி, வருணனைக் கடவுளாக முன் வைக்கிறார் தொல்காப்பியர். தொல்காப்பியத்தின் பின் தோன்றிய இலக்கண நூல்கள் அனைத்தும் தொல்காப்பியத்தைப் பின்பற்றியே 'வருணன்' என்றே குறிப்பிடுகின்றன. ஆனால் மாறனகப்பொருள் மட்டும் குலநிதிகேள்வன் எனச் சுட்டுகிறது.

வருணன் என்றால் நீர் எனப் பொருள்படும். கடலும் கடல் சார்ந்த மக்களின் தேவைகளைப் பூர்த்தி செய்யும் நீரை தெய்வமாக வழிபட்டிருக்கிறார்கள் பண்டையத் தமிழ் மக்கள். "நீர் தெய்வத்தைப் பற்றி மற்றொன்றும் நிர்ணயிக்க வேண்டியுள்ளது. சிந்துவெளி நாகரிகத்திலேயே நீரைத் தெய்வமாகப் போற்றினார்கள் என்பதைத் திட்டவட்டமாக 'ஜான் மார்ஷல்' என்பார் கூறுகிறார்"[64] என அ.மு. பரமசிவானந்தம் எடுத்துக்காட்டுகிறார்.

'சொல்லிய முறையால் சொல்லவும் படுமே' எனத் தொல்காப்பியர் சுட்டியிருப்பதனால் தொல்காப்பியர்க்கு முன்னரே கடல்நீரை வருணனாக வழிபட்டிருக்கலாம். "வார்ந்து (நீண்டு) சென்று கொண்டேயிருக்கிறது கரை, வார்ந்து கண்கொளாக் காட்சியாக இலங்குகின்றது கடல் வண்ணம். வார் வண்ணத்தோடு இலங்கும் அதனை வார்வண்ணன் என்று அவர் பாராட்டினார். கடலும், கடல் சார்ந்த இடமும் தம் உறைவிடமாகக் கொண்டு வாழும் மக்கள் வார்வண்ணனையே தம் பேச்சுவழக்கில் வார்ணன் என்றும்,வருணன் என்றும் வழங்கிய வழக்குத் தொல்காப்பியர் காலத்திற்கு முன்பே இலக்கியத்தில் இடம்பெற்று விட்டதெனலாம். அதனை அறிந்திருந்த தொல்காப்பியர் கடலுறை தெய்வத்தை, 'வருணன் மேய பெருமணல் உலகம்' என்று நெய்தல் நிலத்தோடு இயைபுபடுத்திப் பாராட்டுவராயினர்"[65] என

64. அ.மு. பரமசிவானந்தம், வரலாற்றுக்குமுன் வடக்கும் தெற்கும், ப.101.
65. மொ.அ. துரை அரங்கசாமி,தொல்காப்பிய நெறி, ப.162.

மொ.அ.துரைஅரங்கசாமி குறிப்பிடுவதனால் வருணதெய்வத்தின் தோற்றம் பற்றி அறிய முடிகின்றது.

வருணன் பற்றியக் குறிப்புக்கள் சங்க இலக்கியங்களில் குறிப்பாக நெய்தல் பாடல்களில் இல்லை என்றே கூறலாம். "சங்க இலக்கியங்களில் எந்த ஒன்றிலும் வருணனைப் பற்றிய குறிப்பேதும் இடம்பெறவில்லை என்பது கவனிக்கத்தக்கது"[66] என்ற ஆ.தனஞ்செயன் கூற்றால் இதை உறுதி செய்யலாம்.

சங்க இலக்கிய நெய்தல் பாடல்களில் அணங்கு, கடவுள், வரையரமகளிர், சூருடை(அச்சம் தரும் தெய்வம்), அணங்கோ, தொன்றுறைகடவுள், தெய்வத்து, கணம்கெழு கடவுள், புகார்த்தெய்வம், நெடியோன். இருபெருந்தெய்வம், நேமியான், சடைகரந்தான், ஆதிரையான் போன்ற தெய்வக் குறிப்புக்கள் உள்ளன. இங்கு, அணங்கு என்பது கடலில் ஏற்படும் சுனாமி போன்ற இயற்கைச் சீற்றத்தால் ஏற்படும் அச்சம் எனலாம். இதைப் பற்றி ஆ.தனஞ்செயன் குறிப்பிடும் பொழுது, "பொதுவாகத் தாக்கித் துன்புறுத்தும் இயல்பினதாகக் கூறப்படும் அணங்கு, சங்க இலக்கியங்களில் பல இடங்களில் குறிப்பிடப்படுகிறது. அணங்கு என்பது ஓர் அமானுஷ்யமான சக்தி: விலங்கு சாராத இயற்கை இறந்த ஆற்றல், அது கடல், மலை, காடு, ஆறு ஏனைய நீர்நிலைகளில் உறைவது என்றும், தீண்டித் துன்புறுத்தும் ஆவியாகவும் பண்டைக் காலத்தில் நம்பப்பட்டது"[67] என்றும் கூறுகிறார். எனவே பண்டைய தமிழ் மக்கள் கடல் சார்ந்த நீர்நிலைகளையே வருணனாக வழிபட்டிருக்கின்றனர் எனலாம்.

**மக்கள்**

மனிதன் கூட்டமாகச் சேர்ந்து ஓரிடத்தில் வாழ்வதால் மக்கள் என அழைக்கப்படுவர். "இனி மக்கள் என்போர் பண்டுதொட்டு ஒருங்கிருந்து கூடி வாழும் இயல்பினராய்ப் போதருகின்றார். இவர் எக்காலத்தும் ஒருவர் ஒருவரையறியாமல் தன்னந் தனியாராய் வாழ்ந்திலர்"[68] என மக்கள் பற்றி மறைமலையடிகள் குறிப்பிடுவார்.

பரதர், பரத்தியர், நுளையர், சேர்ப்பன், பரதவர், புலம்பன், பரத்தி, நுளைச்சி, கொண்கன், துறைவன், அளவர், அளத்தியர், வலைஞர், ஈழர் என்று நெய்தல் நில

---

66. ஆ. தனஞ்செயன், சங்க இலக்கியமும் பண்பாட்டுச் சூழலியலும், ப.67.
67. மேலது, ப.68.
68. மறைமலையடிகள், திருக்குறள் ஆராய்ச்சி, ப.45.

மக்கள் பெயராக இலக்கணங்கள் கூறுகின்றன. சங்க நெய்தல் பாடல்கள் கூறும்பொழுது புலம்பன், வலைவர், பரதவர், அண்டர், விலைஞர், புலத்தி, உமணர், உழாஉழவர் போன்ற மக்கள் பெயரைக் குறிப்பிடுகின்றன.

நெய்தல் மக்கள் நிலப் பெயராலும், தொழில் பெயராலும் அழைக்கப்படுவர்."நான்கு நில மக்களும் அவர்கள் வாழும் நிலத்தாலும் (வெற்பன், கானவன், ஊரினன், பரதவன்), தொழிலாலும்(வேட்டுவன், உழவன்) பெயர் குறிப்பிடப்பட்டனர்"[69] என்பார் தமிழண்ணல்.

**தலைமக்கள்**

நெய்தல் நிலத் தலைமகன் பெயர்களாகத் துறைவன், கொண்கன், சேர்ப்பன் என இலக்கண நூல்களும், கொண்க, துறைவ, சேர்ப்ப, புலம்பன் போன்றவற்றை இலக்கியங்களும் குறிப்பிடுகின்றன. இப்பெயர்களில் நெய்தல் நிலத் தலைவன் அழைக்கப்படுகிறான்.

நெய்தல் நிலத் தலைமகள் பெயராக நுளைச்சி, பரத்தி என இலக்கணங்கள் சுட்டுகின்றன. ஐங்குறுநூறு, குறுந்தொகை, அகநானூறு, கலித்தொகை ஆகிய அக நூல்களில் பரதவர்மகள், நுளைமகள், பரதவ மகளிர் எனக் குறிப்பிடுகின்றன.

**உணவு**

கடலும் கடல் சார்ந்த நிலப்பகுதியில் கிடைக்கும் உணவுப் பொருள்களாக மீன், மீன் விலைபொருள், உப்பு விலைபொருள் போன்றவைகளையே இலக்கண நூல்கள் கூறுகின்றன. சங்க இலக்கியங்கள் நெய்தல்சார் உணவுப் பொருள்களாக மீன், வெண்ணெல் போன்றவற்றைச் சுட்டினாலும் மீனின் வகையினையே மிகுதியாகக் கூறுகின்றன. இனமீன், இறால், ஆரல்மீன், அயிரைமீன், வயச்சுறா, கோட்டுமீன், எறிசுறா, கோள்மீன் போன்றவை ஆகும். இதனுடன் திணை, கள் போன்றவைகளையும் குறிப்பிடுகின்றன.

**மா(விலங்கு)**

நெய்தல் நில விலங்கினங்களாகச் சுறா, முதலை என இறையனார் அகப்பொருளுரையும், கராம் எனத் தமிழ்நெறி விளக்கமும், திமிலம் என வீரசோழியமும்

---

69. தமிழண்ணல், தொல்காப்பியரின் இலக்கியக் கொள்கைகள்(இரண்டாம் பாகம்), ப.110.

குறிப்பிடுகின்றன. சங்க இலக்கியங்கள் நெய்தல் விலங்கினங்களாகக் குறிப்பிடும் பொழுது வளை (சங்கு), கெடிறு (கெழிறு), அரவு, அலவன் (நண்டு), கொழுமீன், சேயிறா, முதலை, நீர்நாய், யாமை, கழிசுறா, எகினம்(நாய்), அத்திரி(கோவேறு கழுதை), பன்றி போன்ற விலங்கினங்களைச் சுட்டுகின்றன.

கடலில் வாழும் மீனினங்களில் சுறா முதன்மையானது. இது பெரும்பாலும் கடலில் தான் காணப்படும். ஆறுகளிலும், கழிகளிலும் சிற்சில சமயங்களில் காணப்படுவதும் உண்டு. இவை ஏனைய மீனினங்களை அடக்கிப் பிடித்துத் தின்றே வாழும் இயல்பினது. சுறா மீன்களைப் பற்றிக் குறிப்பிடும் பொழுது, "சுறாக்கள் கடல்நீரில் வாழ்வன, பெரிய உருவத்தினைக் கொண்டவை, கொடிய பற்களையுடையவை. கொடுமை மிக்கன, உணவில் பெருவேட்கை உடையன"[70] என்று ஆங்கில அகராதிக் கூறுகின்றது.

சுறா மீன்கள் மிகக் கொடுமை வாழ்ந்தவை. மீனவர்களை அவை பெருந்துன்பத்துக்கு ஆளாக்கும். அவற்றின் வாள்போன்ற கொம்பு வீச்சினால் அவர்கள் உடல் ஊனமுறுவதுண்டு, புண்பட்ட மீனவர்கள், பன்னெடு நாள்கள் மீன் வேட்டைக்குப் போக இயலாமல் வீட்டில் இருந்து வருந்துவார்கள். சுறாக்கள் கழிகளைக் கடந்து தேர் இழுத்துச் செல்லும் குதிரைகளையும். கோவேறு கழுதைகளையும் பற்களால் கடித்தும், வாள் போன்ற கொம்புகளால் வீசியும் புண்படுத்தி மிகவும் துன்புறுத்தும் என்பதை,

**"கழிச்சுறா எறிந்த புண்தாள் அத்திரி**
**நெடுநீர் இருங்கழிப் பரிமெலிந்து அசை இ"**[71]

என்று அகநானூற்றுப் பாடல் அடிகள் கூறுகின்றன.

இறா என்பது கடலிலும், கழிகளிலும், ஆறு, ஏரி, குளம் போன்ற நன்னீர் நிலைகளிலும் வாழும் சிறிய மீனினமாகும். இலக்கியங்களில் இறா எனவும், இறவு எனவும் வழங்கப்படுகிறது. கடலில் ஆழமில்லாத கரைப் பகுதிகளில் இறாக்கள் கூட்டமாக இயங்கும். இப்படிக் கூட்டமாக இருப்பதனை 'மாப்பு' என்று வழங்குவர். இறா மீன் மிகுதியாகக் கிடைக்கும் காலங்களில் விற்றது போக எஞ்சியவற்றை மீனவ மகளிர் உலர்த்தி வற்றாக்கி விற்பதும் உண்டு. ஆகவே கடலில் இறாமீன்கள் சிலசில காலங்களிலேயே பெருகிக் காணப்படுவதும் உண்டு.

---

70. Henry Watson Fowler(Au.), Oxford Concise Dictionary of Current English (Fifth Edn.), p.1169.
71. ந.மு. வேங்கடசாமி நாட்டார்(உ.ஆ.), களிற்றியானை நிரை, ப.277.

நெய்தல் நில விலங்குகளுள் நண்டும் ஒன்றாகும். நண்டு என்னும் சொல் தொல்காப்பியத்தில் கையாளப்பட்டுள்ளது. செவியுணர்வு ஒழிந்த நான்குணர்வும் உள்ள உயிரினங்களைக் கூறும்பொழுது தொல்காப்பியர்,

**"நண்டும் தும்பியும் நான்கறி வினவே"**[72]

என்கிறார். நண்டுகள் கடற்கரையிலும், கழிகரையிலும் வளையமைத்து வாழ்வன. கரையை அடுத்து நீருக்குள்ளே வாழ்கின்ற நண்டுகளும் உள்ளன. அவை பெரும்பாலும் நிலத்தில் இயங்குவதில்லை, நெய்தல் திணையில் குறிப்பிடப்படுவனவெல்லாம் கடற்கரையிலும், கழிக்கரையிலும் வாழும் நண்டுகளேயாகும்.

"நண்டுக்குப் பக்கவாட்டில், பக்கத்துக்கு ஐந்தாகப் பத்துக்கால்கள் உண்டு. முதலில் உள்ள இருபக்கக் கால்களும் சற்றுப் பருமை உள்ளதாகவும், வலுவுள்ளனவாகவும், நுனியில் வலிய இடுக்கி போன்ற கொடுக்கினையுடையவன வாகவும் இருக்கும்"[73] என்று கூறுகிறார் தி.முத்து கண்ணப்பன்.

இலக்கியங்களில் சுறாமீன், இறாமீன்களைத் தவிர அயிரை, அயிலை, ஆரை, கெடிறு போன்ற சிறு மீன்களும் குறிப்பிடப்பட்டுள்ளன. அவை பெரும்பாலும் கழிகளில் வாழ்வன. இவை தவிர சங்கு, சிப்பி போன்ற நீர் வாழ் உயிரினங்கள் பற்றிய செய்திகளும் கூறப்படுகின்றன. முத்து, பலகறை என வழங்கும் சோழி போன்ற கடல்படு பொருள்களும், நீர் நாயும் காணப்படுகின்றன.

நீர் வாழ் உயிரினங்களைத் தவிர உமண், பகடு, குதிரை, கோவேறு கழுதை, அத்திரி, நாய், பன்றி, ஆடு, அரவு போன்ற தரை வாழ் உயிரினங்களும் பல இடங்களில் பயின்று வந்துள்ளன.

**மலர்கள்**

வெள்ளிதழ், கைதை, நெய்தல், முண்டகம், அடும்பு, புன்னை போன்ற பூக்கள் நெய்தல் நிலப்பகுதியில் காணப்படும் மலர்களாகும். சங்க இலக்கியங்கள் நெய்தல், முண்டகம், செருந்தி, ஆம்பல், கைதை, பகன்றை, குரவம், கொடுஞ்சி (தாமரை மொட்டு), இருப்பை, குவளை போன்ற மலர்கள் பற்றிக் குறிப்பிடுகின்றன.

நெய்தல் என்னும் மலர் கடலும் கடல் சார்ந்த நிலத்தைக் குறிக்கும் திணைப் பெயராகவே உள்ளது. கடல்நீர் கருநீலவண்ணமாக உள்ளது போலவே இம்மலரும்

---

72. க. வெள்ளைவாரணர், தொல்காப்பியம் மரபியல் உரைவளம், ப.48.
73. தி. முத்துகண்ணப்பன், சங்க இலக்கியத்தில் நெய்தல் நிலம், ப.121.

கருநீலமாகக் காட்சியளிக்கின்றது. "நெய்தல் மலர் கருநீலமானது இந்நிறம் கருமை என்று கருதியே கண்ணுக்கு உவமிக்கப்பட்டது"[74] என்பார் பி.எல்.சாமி.

நிறத்தால் மகளிரின் கண்ணைப் போன்று இருக்கும் நெய்தல் மலர் காலையில் மலரும் தன்மையுடையனவாகவும், மாலையில் குவியும் இயல்புடையனவாகவும் காணப்படுகின்றது. இதையே, "கடற்கரைக் கழியிடத்தே மலரும் நெய்தல், தோற்றத்தில் மகளிரின் கண்களைப் போன்று இருக்கும். இதன் இதழ்களிலிருந்து நீர் வடிதல் அழுகின்ற கண்ணிற்கு ஒப்புமையாகக் கூறப்படுகின்றது. கண்ணீரில் வாழும் மகளிரின் இரங்கத்தக்க நிலைக்குத் தண்ணீரில் நிற்கும் இப்பூ குறியீடாயிற்று"[75] என்று ச.வே. சுப்பிரமணியன் குறிப்பிடுகிறார். இதனால் நெய்தல் நிலத்தில் பல்கிச் சிறந்து காணப்படுவது கருநெய்தல் மலராகும். இம்மலரின் மிகை காரணமாகவே கடற்கரை, நெய்தல் என்று பெயர் பெற்றுள்ளது எனலாம்.

நெய்தல் நிலத்தில் கடற்கரையில் படரும் கொடிகளுள் மலரை யுடையது அடும்பு. இதன் இலை இருபிரிவாக இருத்தலில் மானடியை உவமை கூறுவர். இதன் மலர்கள் வெண்ணிறமாகவும், மங்கிய செந்நிறமாகவும், மணி போன்ற வடிவினை உடையதாகவும் இருக்கும். நெய்தல் நில மகளிர் இவ்வடும்பு மலரினை நெய்தல் மலரோடு கலந்து கூந்தலில் சூடிக் கொள்வதை,

**"அடும்பின் ஆய்மலர் விரைஇ நெய்தல்**
**நெடுந்தொடை வேய்ந்த நீர்வார் கூந்தல்"**[76]

என்று குறுந்தொகைப் பாடல் அடிகள் கூறுகின்றன. இவற்றினின்று மங்கையர் அடும்பு மலர்களைத் தம் கூந்தலில் சூடி மகிழ்ந்தனர் என்று தெரிய வருகின்றன.

நெய்தல் நிலத்தின் புன்புலால் நாற்றத்தை மாற்றி நறுமணம் வீசி, நலம் பயந்து நிற்பது தாழை மலர். கண்டல், கைதை என்னும் பெயர்களாலும் 'தாழை' என்று வழங்கப்படுகிறது. அடுக்கடுக்கான மடல்களுக்குள்ளே மிகுந்த பாதுகாப்பமைந்தது போன்று நடுவிடத்தில் தாழை அரும்பிப் பூக்கும். இது ஓலைப்பூ என்றும் வழங்கப்படும். பூ மடலுக்குள் நீறு போன்ற பொடியுடன் கூடிய கொத்துக் கொத்தான மெத்தென்ற

---

74. பி.எல். சாமி, சங்க இலக்கியத்தில் செடிகொடி விளக்கம், ப.58.
75. ச.வே. சுப்பிரமணியன், சங்க இலக்கியத்தில் இயற்கை (இலக்கியக் கட்டுரைகள்), ப.12.
76. உ.வே. சாமிநாத ஐயர்(உ.ஆ.), குறுந்தொகை மூலமும் உரையும், ப.705.

பஞ்சுருண்டைகள் போன்ற பகுதிகள் காணப்படும். இதனைச் சோறு என்றும் கூறுவர். இப்பூக்களில் சில வெண்ணிறமுடையன, சில பொன்னிறமுடையன. அவை முறையே வெண்டாழையென்றும், செந்தாழையென்றும் வழங்கப்பெறும். தாழை மலர்கள் மின்னலால் பூக்கும்.

**"மின் பொருட்டினால் கேதகை மலர்ந்திடும் விளங்கும்**

**என் பொருட்டினால் மாமழை சொரிந்திடும் ஈட்டும்"**[77]

என்கிறது கந்தபுராணம். இதனைக் கடுங்காற்று வீசுங்காலத்தும் பூக்கும் என்று கூறுவர். இதனால் தாழை மலர் கடற்கரையில் நறுமணத்தை அள்ளி வீசும் என்ற செய்தி கூறப்படுகிறது.

நெய்தல் நிலக் கடற்கரையிலும், கழிக்கரையிலும் செழித்து வளரும் மலர் முண்டகம். இது கழிமுள்ளி என்றும், கழுதை முள்ளி என்றும் வழங்கப்பெறுகிறது. மகளிர் முண்டக மலரைச் சூடிக் கொள்வர். "வெண்மணற் கரையில், வளைந்த முள்ளையுடைய கழி முள்ளியினது குளிர்ந்த மலர், காற்றால் சிதறிக் கிடக்கின்ற காட்சி நூலற்று உதிர்ந்து போன முத்துகளைப் போன்று தோன்றும்"[78] என்கிறார் முத்துகண்ணப்பன். இவ்வாறு நெய்தல் நிலத்தில் நெய்தல், அடும்பு, தாழை, முண்டகம் போன்ற எண்ணற்றப் பல வண்ண மலர்கள் பூத்துக் குலுங்கிப் புதுமணம் வீசியமையை அறியலாம்.

**மரங்கள்**

மண்ணின் மரபைச் சார்ந்தே மரம் வளர்கின்றது. பெருமணல் பகுதியைச் சார்ந்துள்ள கடலோரப் பகுதிகளில் வளரும் மரங்களாகப் புன்னை, தென்னை, ஞாழல், பெண்ணை போன்ற மரங்கள் வளர்வதைக் காணலாம். தென்னை முளைப்பதற்கும், அதை நடுவதற்கும் அதன் தாய் மண்ணாகிய மணலையே இன்றும் இட்டு வளர்ப்பதை உணர முடியும்.

சங்க இலக்கியங்கள் நெய்தல் நில மரம், செடி, கொடிகளாகக் குறிப்பிடும் பொழுது ஏர்கொடிப் பாசடம்பு, புன்னை, ஞாழல், செருந்தி, பெண்ணை (பனை), முண்டகம், தும்பை, தில்லை, கொன்றை போன்ற மரக் கருப்பொருள்களைக் குறிப்பிடுகின்றன.

---

77. கச்சியப்பசிவாச்சாரியார்(உ.ஆ.), கந்தபுராணம், ப.3.
78. தி. முத்துகண்ணப்பன், சங்க இலக்கியத்தில் நெய்தல் நிலம், ப.66.

இவற்றில் புன்னைமரத்தின் அமைப்பு, கடலை அடையாளப்படுத்தும் வண்ணமாகக் கருநீல நிறத்திலேயே உள்ளது. இதை, "நீலநிறப் புன்னை"[79] என நற்றிணையால் கூறப்படுகின்றது. இதனைச் சு. கீதா, "புன்னை மரக்கிளை கரியதாகக் காணப்படும். கடற்கரை மரங்களில் இதைப் போன்ற கரிய கிளைகளையுடைய பிற மரங்களைக் காண்பது அரிது. இதனாலேயே புன்னை மரத்தினைக் கடுங்கோட்டுப் புன்னை என்று சங்க நூல்கள் குறிப்பிடுகின்றன"[80] எனக் கூறுவதாலும் இதன் சிறப்பினைக் காணமுடிகின்றது.

நெய்தலுக்குரிய மற்றொரு சிறந்த மரம் ஞாழல், இது புலிநகக் கொன்றை என்றே வழங்கப்படுகின்றது. இதன் காய் நுனியிலே சற்று வளைந்து புலிநகம் போன்றிருத்தலின் இது புலிநகக் கொன்றை என்று அழைக்கப்படுகின்றது. இது கொன்றை வகையைச் சேர்ந்தது. ஞாழல் மரங்கள், கடல் அலை மோதித் தொடுகின்ற அளவு கடலுக்கு மிக அண்மையில் வளர்ந்துள்ளதை,

**"புள்இறை கொண்ட முள்ளுடை நெடுந்தோட்டுத்**

**தாழை மணந்து ஞாழலொடு கெழீஇ"**[81]

என்று அகநானூற்றுப் பாடல் அடிகள் எடுத்துரைக்கின்றன. இதனால் ஞாழல் மரங்கள் கடலருகே வளர்வதை அறியலாம்.

நெய்தல் நிலத்தில் பல்கிப் பெருகிக் காணப்படுவது பனை மரமாகும். விண்ணளவு ஓங்கி வளர்வது. நெய்தல் நில மணல் மேடுகளில் கும்பல், கும்பலாக வளர்ந்திருக்கும். அதனைப் பனந்தோப்பு என்று கூறுவர். பனை இளவேனில் காலத்தில் காய்க்கத் தொடங்கும். முற்றாத காய் நுங்கு என வழங்கப்படும். நுங்குக் கண்கள் சுளை போலிருக்கும். இனிய நீரோடு அருந்துவதற்கு மிகவும் சுவையாக இருக்கும். காய் முற்றிப் பழமாகும். பழத்தில் மூன்று கொட்டைகள் இருக்கும். கொட்டைகள் முளைத்து கிழங்குகளாகும். கிழங்குகள் அடிபெருத்து நுனிசிறுத்து நீண்டிருக்கும். "பனங்கிழங்கினைப் பிற்காலத்து வாழ்ந்த சத்திமுத்தப் புலவர் நாரையின் அலகுக்கு ஒப்பிட்டிருப்பது மிகவும் பொருத்தமானது".[82] இவ்வாறாக நீர் சூழ்ந்த கடற்கரையில்

---

79. பின்னத்தூர் நாராயணசாமி ஐயர்(உ.ஆ.), நற்றிணை நானூறு, ப.9.
80. சு. கீதா, நற்றிணையில் மரம்செடிகொடிகள், செம்மொழி தமிழ் இலக்கியங்கள் ஆய்வுக்கோவை (தொகுதி-2), ப.1028.
81. ரா. வேங்கடாசலம் பிள்ளை (உ.ஆ.), அகநானூறு, மணிமிடை பவளம், ப.400.
82. சத்திமுத்தப்புலவர்(உ.ஆ.), தனிப்பாடல் திரட்டு(பாகம்-1), ப.203.

புன்னை, ஞாழல், கொன்றை போன்ற சில மர வகைகள் இருந்திருக்கின்றன என்று உணரலாம்.

**பறவைகள்**

பரந்துபட்ட இந்நிலவுலகில் பல்லாயிரக்கணக்கான உயிரினங்கள் வாழ்கின்றன. அவ்வகையில் சங்க இலக்கியங்களில் புலவர்கள், பல்வேறு வகைப்பட்ட உயிர் வகைகளும், அவற்றின் வாழ்வியல் அமைப்புகளும் உயிரியல் வல்லுநர்களே வியக்கும் வண்ணம் பாடியுள்ளனர். உயிர் வகைப்பாட்டில், சுழற்சி முறையில் ஒன்றை ஒன்று சார்ந்து வாழ வேண்டும் என்பதை அனுபவரீதியாக உணர்ந்து தம் பாடல்களில் வெளிப்படுத்தி உள்ளனர். இதனைத் தொல்காப்பியமும், சங்க இலக்கியமும் உயிரினங்களின் வாழ்வியலைப் பதிவு செய்துள்ளன.

உலகில் வாழும் உயிரினங்களைத் தொல்காப்பியர் ஆறு வகையாகப் பிரித்துக் காட்டியுள்ளார். அவற்றுள் விலங்குகளையும், பறவைகளையும் பற்றிக் கூறும் பொழுது தொல்காப்பியர்,

**"மாவும் புள்ளும் ஐயறிவினவே**

**பிறவும் உளவே அக்கிளைப் பிறப்பே"**[83]

என்ற நூற்பாவில் குறிப்பிட்டுள்ளார். இதனால் விலங்குகளும், பறவைகளும் ஐந்தறிவு உடையன என்பது புலனாகும்.

கடலும் கடல் சார்ந்த நிலவியல் பகுதிகளில் வாழும் பறவைகளாக அன்றில், மகன்றில் என இறையனார் அகப்பொருளும், கம்புள் எனத் தமிழ் நெறி விளக்கமும், கடற்காகம் என்று நம்பியகப் பொருளும், வாயசம், கண்டகம் என்று முத்துவீரியமும் எடுத்துரைக்கின்றன.

சங்க இலக்கியமான ஐங்குறுநூறு பெருங்கடல்புள். அன்னம், நாரை, வெள்ளாங்குருகு, குருகு, சிறுவெண்காக்கை, முதுகுருகு, குருகினம், இனபுள் போன்ற பறவைகளையும், குறுந்தொகை மகன்றில், கொக்கு, வாவல், அன்றில், வெண்குருகு போன்ற பறவைகளையும் கூறுகின்றன. நற்றிணை வண்டினம், தும்பி, குரீஇ (குருவி), குராவில்(ஆந்தை), காக்கை, கூகை போன்றவற்றையும், அகநானூறு கொக்கினம், கடல்

83. க. வெள்ளைவாரணர்(உ.ஆ.), தொல்காப்பியம் மரபியல் உரைவளம், ப.50.

சிறுகாக்கை, முதுபுள் போன்ற பறவையினங்களையும் கலித்தொகை ஞிமிறு(வண்டு), பருந்து போன்ற பறவையினங்களையும் கூறுகின்றன.

அன்னம் நெய்தல் நிலத்தில் காணப்படும் பறவைகளில் ஒன்று, வெண்ணிறமானது. வானில் மிக உயரத்தில் பறக்கக் கூடியது, கால்களில் நீரில் நீந்துவதற்கு ஏற்ற தோலடிகளையுடையது. கடலிலும், கழியிலும் நீரைத்துழாவி மீன்களைப் பற்றி உண்ணும். இதனை ஔவை துரைசாமிப் பிள்ளை, "அன்னத்தின் கால் நீண்டு, மயிரடர்ந்து, நுனிகுவிந்து, தோலுறை பெற்றதால் துதிக்கால் அன்னம்"[84] என்று கூறப்படுகிறது என்கிறார். அன்னம் கடற்கரை மணலிலும் அங்குப் படர்ந்துள்ள அடும்புக் கொடிகளின் மீதும் தங்கி இருக்கும்.

நெய்தல் நிலத்தில் கடற்காக்கை, நாரை, கொக்கு என்ற பறவைகளைத் தவிர அன்னம் என்ற பெயர் கொண்ட பறவையினம் இப்பொழுது இல்லை என்று கூறலாம்.

ஆண் பறவையும், பெண் பறவையும் இணைந்தே வாழும் பறவைகளே அன்றில் பறவைகள். ஒன்றை விட்டு ஒன்று பிரிந்தால் வருந்திப் பன்முறை கூவி இறந்துவிடும். உளமார்ந்த அன்பில் ஆழ்ந்து, இணை பிரியாது வாழும் காதலர்க்கு ஆணும், பெண்ணுமான அன்றில் பறவைகளையே புலவர்கள் உவமையாகக் கூறுவார்கள். அன்றில் என்னும் சொல்லை அன்று + இல் எனப் பிரித்தால், ஒன்று இல்லாமல் மற்றொன்று உயிர் வாழாது என்னும் பொருளைப் பெறுகின்றது. இப்பறவை பற்றித் தமிழண்ணல், "அன்றில் பறவைகள் பனைமரங்களின் மடல்களின் ஊடே சிறுசிறு கூடுகட்டிக் கொண்டு, கூதிர்கால நள்ளிரவு நேரம் போன்றவற்றில் ஒன்றுடன் ஒன்று கூடி மகிழ்ந்து. இசைக்கருவி போல இனிதாக மிகத் தாழ்ந்த குரலில் ஒலியெழுப்பும். இவ்வொலி கூடியிருக்கும் காதலர்களின் இன்பத்தை மிகுவிக்கும், பிரிந்திருக்கும் காதலர்களின் காம இன்ப உணர்வைத் தூண்டிவிட்டு அவர்களை இரவெல்லாம் வருந்தச் செய்யும்"[85] என்பர்.

இப்பறவைகளின் தன்மையைப் பெரிதும் ஒத்த மற்றொரு பறவையைப் பற்றியும் இலக்கியத்தில் பலவிடத்தும் கூறப்படுகிறது. அது நீரில் வாழ்வது. மகன்றில் என்று வழங்கப்படுகிறது.

---

84. ஔவை சு. துரைசாமிப்பிள்ளை(உ.ஆ.), ஐங்குறுநூறு மூலமும் விளக்க உரையும், ப.312.
85. தமிழண்ணல், உள்ளங்கள் ஒன்றிடும் அன்றில் பறவைகள், ப.5.

கடற்கரையிலும், நெய்தல் நிலக்கழிப் பகுதிகளிலும் காணப்படும் ஒரு வகைக் காக்கை. கடற்கரையில் வாழும் பழங்குடிமக்கள் இதனைக் கடற்காக்கை என்றே கூறுகின்றனர். இதன் கழுத்தின் கீழ்ப் புறம் மட்டும் சிறிது வெளுத்து ஏனைய உடல் முழுவதும் மங்கிய கருமையோடு இருப்பதால் இது சிறுவெண்காக்கை என வழங்கப் பெறுகிறது. இதனுடைய வாயின் உள்பகுதி செந்நிறமாய் இருக்கும். இது நீர்நிலைகளில் மீன் பிடித்துண்டு, கடற்கரையில் உள்ள மரங்களில் கூடிகட்டி வாழும். இதனை நீர்க்காக்கை என்றும் கூறுவர். இச்சிறுவெண்காக்கைகள் நெய்தல் நிலத்து மரங்களாகிய புன்னை, தாழை, பனை போன்றவற்றில் தங்கும் எனச் சங்க இலக்கியங்கள் விளக்குகின்றன.

நெய்தல் நிலத்திற்குரிய பறவைகளுள் குருகும் ஒன்று. இதன் கால்கள் கருமைநிறம் உடையதாகவும், உடல் வெண்மையானதாகவும் இருக்கும். பனைமரத்தில் கூடிகட்டிவாழும். இது கடலிலும், கழியிலும் உள்ள மீன், ஆமை போன்றவற்றைப் பிடித்து உண்டு வாழும். இதன் உடலுக்குச் சங்கு, வெண் கூதாளம்பூ, வெண்டாழம்பு போன்றவை உவமையாகக் கூறப்படுகின்றன. நீர் வாழ் பறவைகள் எல்லாம் பொதுப்படக் கொக்கு என்றே வழங்கப்படுவது உண்டு. ஆனால் கொக்கினங்காள், குருகினங்காள் எனத் தனித்தனியாகக் கூறப்படுவதால் வேறுவேறென்பது தெளிவாகின்றது. குருகும் அன்றிலைப் போலத் துணையைப் பிரிந்திருப்பின் நள்ளிரவில் அமையுறாது வருந்தி அகவி அதனை அழைக்கும்.

கொக்கும், நாரையும், கடலும் கடல் சார்ந்த பகுதியான முதற்பொருளை வெளிப்படுத்துவனவாக உள்ளன. கடல் அலை போன்று வெண்மையாகவும், கடல்நிறம் போன்று அதன் கால்கள் நீலநிறத்திலும் உள்ளது கொக்கு. ஆம்பல் மொட்டு போன்று வளைந்த கழுத்துப் பகுதியைப் பெற்றுள்ளதால் இது கொக்கு எனப் பெயர் பெற்றதை,

**"மாரி ஆம்பல் அன்ன கொக்கின்**

**பார்வல் அஞ்சிய பருவரல்ஈர்"**[86]

என்னும் குறுந்தொகைப் பாடல் அடிகளால் அறியமுடிகின்றது.

கொக்கு இனத்தைச் சார்ந்ததே நாரை என்னும் பறவை. வெள்ளையும், செம்பழுப்பும் கலந்த வண்ணமாக உள்ளது. குளக்கரைகளிலும், வயல் வரப்புகளிலும்

---

86. உ.வே. சாமிநாத ஐயர்(உ.ஆ.), குறுந்தொகை மூலமும் உரையும், ப.230.

இதைக் காணலாம். இதனைக் "கரிய கால்களை உடைய வெண்ணிற நாரைகள் கழியில் மீன்களைத் தேர்ந்து கண்டு தங்கியிருக்கின்றன. பிறகு கரையில் தாழை மரத்தில் கூட்டமாகக் கூடியிருந்து, கடல் அலைகளின் ஒலியினால் தூங்கும்"[87] என்பார் மு.வரதராசன். இவ்வாறு கருப்பொருள்கள் முதற்பொருளின் சூழலை விளக்குகின்றன.

**ஊர்**

தொல்காப்பிய உரையாசிரியர் நச்சினார்க்கினியர், "நெய்தற்கு ஊர் பட்டினமும் பாக்கமும்"[88] என்று கூறியுள்ளார். நம்பி அகப்பொருள் விளக்கம், நெய்தல் ஊர் "பாக்கம், பெறலரும் பட்டினம்"[89] என்று கூறுகிறது. "பாக்கம்,பட்டினம் நெய்தல் நிலத்து ஊரே"[90] என்று பிங்கலநிகண்டும், "பட்டினமே நெய்தல்"[91] என்று சூடாமணியும் கூறுகின்றன.

நெய்தல் நில மக்கள் வாழும் ஊரானது நிலாவைப் போல விளங்கும் மணம்மிக்க தெருக்களைக் கொண்டது. இத்தெருக்களில் மீனின் புலால் நாற்றம் வீசிக் கொண்டே இருக்கும். அங்கு ஒரு நாள் தங்கியிருப்பவர்களுக்கு அவ்வூர் அன்பினால் இன்பம் தரக்கூடியது. சொந்த ஊரைக் கூட மறந்திடச் செய்யும் இயல்புடையது என்பதை,

**"நிலாவின் இலங்கு மணல்மலி மறுகின்**
**புலாவஞ் சேரிப் புல்வேய் குரம்பை**
**ஊரென வுணராச் சிறுமையொடு நீருடுத்து**
**இன்னா உறையுட்டு ஆயினும் இன்பம்**
**ஒருநாள் உறைந்திசி னோர்க்கும் வழிநாள்**
**தம்பதி மறக்கும் பண்பின் எம்பதி"**[92]

என்று கூறுவதிலிருந்து நெய்தல் நில மக்களின் ஊர்ச் சிறப்பினை அறியமுடிகின்றது.

---

87. மு. வரதராசன், குறுந்தொகைச் செல்வம், ப.129.
88. நச்சினார்க்கினியர்(உ.ஆ.), தொல்காப்பியம், பொருளதிகாரம், ப.46.
89. நாற்கவிராச நம்பி, அகப்பொருள் விளக்கம், ப.6.
90. பிங்கல முனிவர், பிங்கல நிகண்டு, ப.103.
91. மண்டல புருடர், சூடாமணி நிகண்டு, பக்.106-107.
92. ரா. வேங்கடாசலம் பிள்ளை (உ.ஆ.), அகநானூறு, மணிமிடை பவளம், ப.191.

சங்க இலக்கியங்கள் சுட்டும் பொழுது சிறுகுடி, சேரி, சீறூர், பாக்கம், மூதூர், பேரூர், சேரியம், மருங்கூர்ப்பட்டினம், சிறுகுடிபாக்கம் என்ற ஊர்ப்பெயர்களாகச் சுட்டுகின்றன. சீறூர், மூதூர், பேரூர் என்றும் ஊர் என்றும் பொதுப் பெயர்களையே பெரும்பாலும் சங்க நூல்களில் காணமுடிகின்றது. "ஊர் என்று பொதுவான சொல்லையே புலவர்கள் பெரும் பான்மையும் பயன்படுத்தி வந்துள்ளனர். ஆயின் கந்தரத்தனார் பாடலில் குறிஞ்சி நல்லூர் என்ற ஊரையே குறிப்பாகச் சுட்டுகின்ற நுட்பத்தைக் காணமுடிகின்றது"[93] என்பார் வை.சாத்தையா. தொண்டி, கொற்கை போன்ற துறைமுகப் பட்டினங்கள் பற்றிய செய்திகளும் நெய்தல் பாடல்களில் காணப்படுகின்றன.

இவ்வாறு நெய்தல் நில ஊர்கள் பட்டினம், பாக்கம் என்ற பெயரில் பலவிடங்களில் வழங்கப்பட்டு வந்தாலும், குடி, சிறுகுடி, ஊர் என்ற பெயர்களிலேயே மிகுதியாய்க் கையாளப்பட்டுள்ளன என்பதை அறியலாம்.

**நீர்**

நீரின்றி அமையாது உலகம் என்னும் வாக்கிற்கேற்ப மக்களின் அனைத்துச் சூழ்நிலைகளிலும் நீர் இன்றியமையாத ஒன்றாகக் காணப்படுகின்றது. பழங்காலத்தில் நல்லாட்சி புரியும் நாட்டில் வானம் மும்மாரி பொழிந்து நீர்வளம் மிகுந்திருந்தது. நீர் என்று சொல்லும் பொழுது ஊற்று நீர், சுனை நீர், கிணற்றுநீர், அருவிநீர் எனப் பலவகையுண்டு, நிலத்திற்கு நிலம் நீரானது வேறுபட்டிருந்தது.

நெய்தல் நிலத்துக்குரிய நீர் கடல்நீர், மணற்கிணறு, உவர்க்கழி போன்றவை ஆகும். நெய்தல் பாடல்களில் கடல் சார்ந்த பகுதியின் நீர்நிலைகளாகக் குறிப்பிடும் பொழுது தண்கடல், முழங்குகடல், பெருங்கடல், துறை, நளிநீர், மணிநீர், பெருநீர், கலிதிரை, தீம்நீர், மாநீர், கடும்புனல், குண்டுநீர், விரிநீர், பெருநீர், முதுநீர், நீத்துநீர், இலங்குநீர், இருநீர், உரவுநீர், வளைநீர், நீடுநீர், நெடுநீர், புலவுநீர், தெண்நீர், தண்ணீர், வறுநீர், துணிநீர், பனிநீர், பௌவநீர், மாநீர், இமிழ்நீர், மல்குநீர், கழிநீர், பரப்புநீர், முந்நீர், செழுநீர், இருள்நீர், தூங்குநீர், நீலநீர், வயங்குநீர், ஓதநீர், உவறுநீர், வெந்நீர், பிறங்குநீர் எனப் பல சொற்களால் கடலினைக் குறிப்பிடுகின்றன.

பெருங்கடல்கள் உப்பு நீரைக் கொண்டுள்ளது. உப்புக் கனிமங்கள் நிலத்திலிருந்து ஆறுகள் வழியாகக் கடலில் கலப்பதால், கடல்நீர் உப்புத் தன்மைக் கொண்டுள்ளது. மதுரைக்காஞ்சி, கடல் நீரை முந்நீர் என்று குறிப்பிடுவதை,

---

93. வை. சாத்தையா, சங்க இலக்கியத்தில் அம்பலும் அலரும், ப.26.

**"ஓங்குதிரை வியன் பரப்பின்**

**ஒலி முந்நீர் வரம்பு ஆக"[94]**

என்னும் பாடல் அடிகள் விளக்குகின்றன. இது ஆற்றுநீர், ஊற்றுநீர், மழைநீர் ஆகிய மூன்று விதமான நீரைத் தன்னகத்தே கொண்டுள்ளதால் முந்நீர் என்ற பெயர் பெற்றது எனலாம்.

கடற்கரையில் மணல் பகுதியில் தோண்டும் நீர் மணல், கிணறு நீர் எனலாம், மணலே உவர்நீரை நீக்கி நன்னீரைத் தருகின்றது. "கடற்கரைகளுக்கு மணல் வராவிட்டால் நெய்தல் நில நன்னீர் உவராகும். கடல்நீர் நன்னீர் ஊற்றுக்களில் புகுந்துவிடும்"[95] என்பார் ஆர்.எஸ்.நாராயணன்.

சங்க இலக்கியங்கள், நெய்தல் நிலத்தில் கடலை ஒட்டிக் கழிகள் பல இருந்தன என்று கூறுகின்றன. அவற்றில் நெய்தல் கொடிகள், புன்னை, ஞாழல் போன்ற மரங்கள் செழித்து வளர்ந்தன என்றும் கூறுகின்றன. கழி என்பது கடலை அடுத்திருக்கும் உப்பு நீர்ப்பரப்பு ஆகும். அவை உப்பங்கழிகள், நன்னீர்கழிகள் என்று இருவகைகளாகப் பிரிக்கப்படுகின்றன. உப்பங்கழிகளிலும், அவற்றை ஒட்டியும் மரஞ்செடி கொடிகள் பெரும்பாலும் வளராது, நன்னீர் கழியின் கரையில் பூத்து நிற்கும் புன்னையின் நுண்தாது. அக்கழியில் மலர்ந்துள்ள நெய்தல் மலரில் உதிர்ந்து பொலிவதை,

**புன்னை நுண்டா துறைத்தரு நெய்தல்**

**பொன்படு மணியிற் பொற்பத் தோன்று"[96]**

என்று ஐங்குறுநூற்றுப் பாடல் அடிகள் இயம்புகின்றன. இதனால் கடலுக்கு அண்மையிலேயே நன்னீர்க்கழிகளும், உவர்கழிகளும், நீர் நிலைகளும் நிறைந்துள்ளன என்று அறியலாம்.

**பறை**

"பறை என்பதற்கு முரசு, வட்டம்"[97] என்று அகராதி பொருள் தருகின்றது. பழந்தமிழர்கள் தகவல்களைத் தெரிவிக்கும் கருவிகளில் 'பறை' சிறப்பிடம்

---

94. பொ.வே. சோமசுந்தரனார்(உ.ஆ.), மதுரைக்காஞ்சி, ப.42.
95. ஆர்.எஸ். நாராயணன், நீலநிறம் நீளநிறம் (தினமணி தலையங்கம்), 8.11.2012, ப.20.
96. உ.வே. சாமிநாத ஐயர்(உ.ஆ.), ஐங்குறுநூறு, ப.189.
97. மு. சண்முகம் பிள்ளை (உ.ஆ.), தமிழ் - தமிழ். அகரமுதலி, ப.738.

பெற்றிருந்தது. "ஆதிவாசிகள் விலங்குகளின் தோலை எடுத்துப் பறை செய்து அவர்கள் வசிக்கும் குகையின் அருகில் உள்ள மரத்தின் உச்சியில் கட்டி, மாலை நேரம் வந்ததும் குறிப்பிட்ட நபர் மரத்தில் ஏறி பறையை ஒலிக்கச் செய்வர். குகையிலிருந்து வேட்டைக்குச் சென்ற அனைவரும் வரும் வரையிலும் பறை ஒலித்துக்கொண்டே இருக்கும். பறையொலியைக் கேட்ட புலி, சிங்கம் போன்ற மிருகங்கள் குகை இருக்கும் திசையை நெருங்காமல் மிரண்டு ஒடின. இதனால் அங்கு வசித்தவர்கள் நிம்மதியாக வாழ்ந்தனர் என்றும் மனிதன் கண்டுபிடித்த முதல் இசைக்கருவி பறையேயாகும்"[98] என்றும் அறிய முடிகிறது.

நெய்தல் நிலத்துப் பறை நாவாய்ப் பறையாகும். இதனை, 'மீன்கோட்பறை', சாக்காட்டுப்பறை என்றும் அழைப்பர். கடல் சார்ந்த நெய்தல் நிலத்தில் மீன் பிடித்து வாழும் அந்நில மக்கள் தங்கள் வாழ்வில் எல்லா நிகழ்வுக்கும் பயன்படுத்துவது நாவாய்ப்பறை, நாவாயில் ஏறி மீன் பிடிக்கச் செல்லும் போது பரதவர்கள் வழிபாடு நடத்தி பறை முழக்கிச் செல்லும் மரபு இருந்துள்ளது. தஞ்சை மற்றும் திண்டுக்கல் மாவட்டங்களில் 'தப்பாட்டம்' என்ற பெயரில் தற்போது வளர்ச்சி பெற்று வருகிறது. இப்பறை இறப்புச் சடங்கிற்கும் பயன்படுகின்றது. ஒரு வீட்டில் சாக்காட்டுப் பறை ஒலித்தது என்பதை,

**"ஓரி னெய்தல் கறங்க வோரில்**

**ஈர்ந்தண் முழவின் பாணி ததும்ப"**[99]

என்ற புறநானூற்றுப் பாடல் அடிகள் வெளிப்படுத்துகின்றன. இதனால் நெய்தல் நிலத்தில் உள்ள பறை சாப்பறை என்பது தெளிவாகின்றது.

சங்க இலக்கியங்களில் பறை உவமை வடிவிலும், தலைவியின் இரங்கல் உணர்வினை வெளிக்காட்டும் விதமாகவும் காட்சியளிக்கின்றது. யாழின் ஒலியைக் கேட்ட மான் இன்பம் அடைந்தது என்று எண்ணாது. அதன் அரிய உயிர் போகும் படி பறையைத் தட்டினாற் போல, தலைவன் முன்பு தன்னை வஞ்சித்து இன்பத்தை ஏற்படுத்திப் பின்பு அந்த இன்பம் நீங்கும்படி கைவிட்டான் என்பதை,

---

98. பறை, தினத்தந்தி, தலையங்கம் (23.08.2014), மதுரைப் பதிப்பு, ப.22.
99. ஔவை சு.துரைசாமிப்பிள்ளை(உ.ஆ.), புறநானூறு (பகுதி-1), ப.418.

**"மறையிற்றன் யாழ்கேட்ட மானை யருளா**

**தறைகொன்று மற்றதன் ஆருயி ரெஞ்சப்**

**பறையறைந் தாங்கொருவன் நீத்தான்"**[100]

என்ற கலித்தொகைப் பாடல் அடிகள் விளக்குகின்றன. இதன் வழியாகத் தலைவியின் துன்ப நிலையினை எடுத்துரைப்பதற்குப் பறை என்னும் கருவி பயன்பட்ட செய்தியினைக் காணமுடிகின்றது.

**யாழ்**

சங்க இலக்கியத்தில் யாழுக்குச் சிறப்பான இடம் தரப்பட்டுள்ளது. நரம்புக் கருவிகளில் மிகச் சிறப்புக் கொண்டதாக யாழ் காணப்படுகின்றது. அழகிய உருவும், இனிய இசையும் இதன் சிறப்புக்குக் காரணமாகின்றது. நெய்தல் நிலத்திற்குரிய இசைக்கருவி விளரி யாழாகும். நெய்தல் பண்ணே விளிரிப் பண்ணாகிறது.

**"செவ்வழி யாழ் நரம்பன்ன கிளவியார் பாராட்டும்**

**பொய்தீர்ந்த புணர்ச்சியுள் புதுநலங் கடிகல்லாய்"**[101]

என்ற கலித்தொகைப் பாடல் அடிகள் யாழ் கேட்பதற்கு இனியதாகவும், இசைப்பதற்கு ஏற்றதாகவும் அமைந்துள்ளதைக் குறிப்பிடுகின்றது.

யாழைச் சங்க காலத்தில் பல்வேறு பொருள்களினால் செய்தனர். நெய்தல் நில மக்கள் சுறாமீனின் நீண்ட மருப்பை நன்கு சீவி, அதை வகைப்படுத்தி யாழாக உருவாக்கியுள்ளனர். நெய்தல் செடியின் நீண்ட நாரை நன்கு பிணைத்து, முறுக்கி அதனை யாழ் நரம்பாக்கிக் கட்டியுள்ளனர். பின்னர் அதை இசைத்து மகிழ்ந்துள்ளதை,

**"எறிசுறா வான்மருப்புக் கோத்து நெறிசெய்த**

**நெய்தல் நெடுநார்ப் பிணித்துயாத்துக் கையுளர்வின்**

**யாழிசை கொண்ட இனவண்டிமிர்ந்தார்ப்ப"**[102]

என்னும் பாடல் அடிகள் உணர்த்துகின்றன.

---

100. நச்சினார்க்கினியர்(உ.ஆ.), கலித்தொகை, ப.444.
101. மேலது, ப.375.
102. த. கோவேந்தன், அன்பொடு புணர்ந்த ஐந்திணை(நெய்தல்), ப.242.

யாழின் இசையானது சில சமயங்களில் இன்ப உணர்ச்சியையும், வேறு சில சமயங்களில் துன்ப உணர்ச்சியையும் தூண்டுவதாக அமைகின்றது. எல்லோருக்கும் இன்பம் தரக்கூடிய யாழை விரலால் தடவி நள்ளிரவில் இசை கூட்டும் பொழுது அது தலைவனைப் பிரிந்திருக்கும் தலைவியின் உயிரைப் பறிக்கும் விதமாக அமைந்துள்ளதை,

**"விரல் கவர்ந்து உழந்த கவர்வின் நல்யாழ்**

**யாமம் உய்யாமை நின்றது**

**காமம் பெரிதே கலைஞரோ இலரே"**[103]

என்று கூறுவதனால் தலைவனைப் பிரிந்திருக்கும் தலைவிக்கு இன்பம் தரக்கூடிய யாழானது காமநோய் என்னும் துன்பத்தைத் தருவதாக அமைந்துள்ளது. இவற்றால் விளரியாழின் சிறப்பினை அறியலாம்.

**செவ்வழிப் பண்**

பாடல்களில் அமைந்துள்ள இசையின் முறைமை நிலையே பண் ஆகும். பண் என்பதற்கு "இசைவகை; யாழ் முதலிய நரம்பு வாத்தியங்கள், பாடல்"[104] என்றெல்லாம் தமிழ் இலக்கிய அகராதி விளக்கம் தருகின்றது.

பரதவர் இனமக்கள் வாழும் நெய்தல் நிலத்திற்குரிய பண் செவ்வழிப்பண் ஆகும். செவ்வழிப் பண்ணைச் சீறியாழில் திறம்பட அமைத்துள்ளனர் என்பதை,

**"சீறியாழ் செவ்வழி பண்ணி யாழநின்**

**காரெதிர் கானம் பாடினே மாக"**[105]

என்னும் புறநானூற்றுப் பாடல் அடிகள் இயம்புகின்றன.

செவ்வழிப் பண் பெரும்பாலும் சோக நிகழ்வினை, எடுத்துக்காட்டும் ஒன்றாகக் காணப்படுகின்றது. நெய்தல் திணைப் பாடல்களில் தலைவனும், தலைவியும் பிரிந்து உள்ள நிலையில் பாடப்படும் ஒரு பண்ணாகக் காட்சியளிக்கிறது. இரங்கற் பண்ணாகிய

103. பின்னத்தூர் நாராயணசாமி ஐயர்(உ.ஆ.), நற்றிணை நானூறு, ப.413.
104. பாலூர் கண்ணப்ப முதலியார்(தொ.ஆ.), தமிழ் இலக்கிய அகராதி, ப.266.
105. உ.வே. சாமிநாத ஐயர்(உ.ஆ.), புறநானூறு, ப.268.

செவ்வழியை மெல்ல இசைத்தே தலைவியின் துன்பத்தைப் பாணன் பாங்கர்க்குக் கூறிய செய்தியை,

**"செவ்வழி நல்யாழ் இசையினென் பையெனக்**

**கடவுள் வாழ்த்திப் பையுள் மெய்ந்நிறுத்து"**[106]

என்ற அகநானூற்றுப் பாடல் அடிகள் விளக்குகின்றன. இவற்றால் தலைவியின் துன்ப நிலையினை வெளிபடுத்தும் பண்ணாகத் செவ்வழிப் பண் அமைந்துள்ளது எனலாம்.

நெய்தல் நில மக்கள் இறை வழிபாட்டிற்கும் செவ்வழிப் பண்ணை இசைத்துள்ளனர். தேவராட்டியான் மாலைப் பொழுதில் வார்க்கட்டை உடைய யாழ்த்தண்டில் செவ்வழிப் பண்ணை இசைத்து வழிபாட்டை நிகழ்த்தினான் என்பதை,

**"திவவுமெய்ந் நிறுத்துச் செவ்வழி பண்ணிக்**

**குரல்புணர் நல்யாழ் முழவோ டொன்றி"**[107]

என்னும் மதுரைக் காஞ்சிப் பாடல் அடிகளால் அறியலாம்.

இச்சான்றுகளால் செவ்வழிப் பண் மாலைப் பொழுதிற்குரியது. பிரிவுத்துன்பத்தை வெளிப்படுத்தக் கூடியது. வழிபாட்டிற்குரியது என்னும் செய்திகள் பெறப்பட்டுள்ளன.

**தொழில்கள்**

பழங்கால மனிதன் நாடோடியாக வாழ்ந்து வந்தான். பின்னர் அவன் நிலையான ஓரிடத்தில் வாழ முற்பட்ட போது தொழில்கள் பல வகைகளாகத் தோற்றம் பெற்றன. மனிதனின் வாழ்க்கைக்குத் தொழில் முக்கியத்துவம் வாய்ந்ததை உணர்ந்த மனிதன் அந்தந்த நிலத்திற்கேற்றவாறு தொழிலுக்கு முன்னுரிமை கொடுத்தான்.

சங்க கால நெய்தல் நில மக்களான பரதவர்கள் கடலையே நம்பி வாழ்ந்து வந்தனர். அவர்கள் மீன்பிடித் தொழிலையும், முத்துக்குளித்தலையும், உப்புத் தொழிலையும் முதன்மைத் தொழிலாகச் செய்து வந்தனர்.

"கடலுக்குச் சென்று மீன்பிடித்தலும், உப்பளத்தில் உப்பு விளைவித்தலும் நெய்தல் நில ஆடவரின் தொழிலாகும். ஆடவர்கள் பிடித்து வந்த மீன்களைப் பயன்படுத்தியவை போக எஞ்சியவற்றைக் கருவாடாகக் காயவைப்பதும், அப்படிக் காய வைத்த

106. ந.மு. வேங்கடசாமி நாட்டார்(உ.ஆ.), அகநானூறு, களிற்றியானை நிரை, ப.48.
107. பொ.வே. சோமசுந்தரனார்(உ.ஆ.), மதுரைக்காஞ்சி, ப.190.

மீன்களுக்குக் காவல் காக்க இளம் பெண்களை ஏவுவதும், காய்ந்த கருவாட்டையும், விளைந்த உப்பையும் முதுபெண்டிர் சுமந்து சென்று அவற்றைப் பண்டமாற்றாகத் தந்து மருத நில ஊர்களில் நெல் முதலிய தானியங்களைப் பெற்று வருவர். இவையே அவர்களின் தொழிலாகும்"[108] என்கிறார் மீனவன்.

இவை தவிர ஆழ்கடலில் முத்து எடுத்தல், சங்கறுத்து அணிகலன் செய்து வாணிபம் செய்தல் போன்றவையும் நடைபெற்றுள்ளன. "இப்பகுதியில் வாழ்ந்த மக்களின் முதன்மையான தொழில் முறை மீன்பிடித்தல், முத்துக்குளித்தல், சங்கறுத்தல், உப்பு விளைவித்தல், மீன் உலர்த்துதல், கடல் வாணிபம் மேற்கொள்ளுதல் என அனைத்தும் கடல் சார்ந்தே காணப்படுகின்றன"[109] என்பார் ச.சிறிகாந்தன்.

நெய்தல் நில மக்கள் பல தொழில்களில் ஈடுபட்டாலும் மீன்பிடித்தல், உப்பு விளைவித்தல் அவர்களின் முக்கியத் தொழிலாகக் காணப்படுகின்றன எனலாம்.

**உரிப்பொருள் - விளக்கம்**

மக்கட்கு உரிய பொருள் உரிப்பொருளாகும். உரிப்பொருள் மக்களின் வாழ்க்கையை ஒட்டி அமையும். உரிப்பொருள் என்பதற்கு இதற்கு இது உரியது என்று பொருள் கொள்ளலாம்.

"உரிப்பொருள் யாவும் மக்களுக்கே உரியன. எனவே அவற்றுக்கு உரிப்பொருள் என்று பெயர்"[110] எனக் கே.கே. பிள்ளையும். "மனித வாழ்க்கையின் பிழிவே சங்க இலக்கியம் காட்டும் உரிப்பொருள்"[111] என்று மீனாட்சி சுந்தரனாரும் உரிப்பொருளை விளக்குவர்.

"ஐந்திணை ஒழுக்கமாகிய களவு, கற்புத் திருமணமும், கைக்கிளை மணம், பெருந்திணை வாழ்வு ஆகிய இம்மூன்று தமிழர் வாழ்விலே நிகழ்ந்த இயற்கை நிகழ்ச்சிகள். இவை எந்த நாட்டில் இருந்தும் தமிழர்கள் கடன் வாங்கியவையல்ல; எந்த மொழிகளில் இருந்தும் தமிழ் மக்கள் கற்றுக் கொண்டவைகளும் அல்ல; தமிழர்

108. கவிஞர் மீனவர், பண்டைய தமிழரும் பரதவர் வாழ்வும், ப.137.
109. ச. சிறிகாந்தன், நெய்தல் சமூகத்தாரின் மரபு அறிவு (கருத்தரங்கக் கட்டுரைகள்), ப.44.
110. கே.கே. பிள்ளை, தமிழக வரலாறு மக்களும், பண்பாடும், ப.132.
111. தெ.பொ. மீனாட்சி சுந்தரனார், தமிழ் இலக்கிய வரலாறு, ப.27.

சமுதாயத்தில் தாமே தோன்றி நிலவிய இயற்கை மண வாழ்வாகும். இது தொல்காப்பியக் கண்ணாடி நமக்குக் காட்டும் உண்மை"[112] என்ற சாமிசிதம்பரனாரின் கருத்துத் தமிழ்ச் சமூகத்திற்கே உரிய இயற்கை ஒழுக்கம் ஆகும்.

தொல்காப்பியர் கூறும் "திணை ஏழாயினமைக்குக் காரணம் முக்காமத்தன்மையும் அன்று; நானிலப்பாங்கும் அன்று; எழுவகை காதலொழுக்கங்களே உரிப்பொருள் ஆம்"[113] என்று கூறும் வ.சுப. மாணிக்கம் கருத்தும் இங்கு இணைத்துக் கருதத்தக்கதாகும். தொல்காப்பியர் அகவொழுக்கத்தை முதல், கரு, உரி அடிப்படையில் தான் ஏழாகப் பிரித்துள்ளார். அகவொழுக்கம் உரிப்பொருளை அடிப்படையாகக் கொண்டுள்ளது என்பது புலனாகிறது.

தொல்காப்பியம் ஐந்திணைகளின் உரிப்பொருள்களை,

**"புணர்தல் பிரிதல் இருத்தல் இரங்கல்**
**ஊடல் அவற்றின் நிமித்தம் என்றிவை**
**தேருங் காலைத் திணைக்குரிய பொருளே"**[114]

என்ற நூற்பாவில் விளக்குகிறது.

தொல்காப்பியம் உரிப்பொருள்களை மட்டும் கூறாது அவற்றின் நிமித்தங்களையும் நுட்பமாகக் கூறிச் செல்கிறது. இந்நூற்பாவில் புணர்தல், பிரிதல் என்று தொல்காப்பியர் பொதுவாகக் கூறினாரே தவிர, 'புணர்தல் குறிஞ்சி' என்றோ, 'பிரிதல் பாலை' என்றோ கூறவில்லை, உரை ஆசிரியரான இளம்பூரணர், "புணர்தல் என்பது குறிஞ்சிக்கும், இருத்தல் என்பது முல்லைக்கும், இரங்கல் என்பது நெய்தற்கும், ஊடல் என்பது மருதத்திற்கும், பிரிவு என்பது பாலைக்கும் பெரும்பான்மையும் உரித்தாகவும், சிறுபான்மை எல்லாப் பொருளும், எல்லாத் திணைக்கும் உரித்தாகவும் கொள்ளப்படும்"[115] என்று விளக்கம் தருகின்றார். சங்கப் புலவர்களும் பெரும்பாலும் இவ்வாறே செய்யுள் இயற்றியுள்ளனர்.

---

112. சாமி சிதம்பரனார், தொல்காப்பியத் தமிழர்(இலக்கிய வரிசை-2), ப.51.
113. வ.சுப. மாணிக்கம், தமிழ்க் காதல், ப.22.
114. ச. சோமசுந்தர பாரதியார்(உ.ஆ.), தொல்காப்பியம், பொருளதிகாரம், ப.40.
115. இளம்பூரணர்(உ.ஆ.), தொல்காப்பியம், பொருளதிகாராம், ப.16.

நிமித்தமாவது ஒவ்வொரு ஒழுக்கத்தை அடுத்து முன்னும், பின்னும், முதலும், முடிவுமாகத்தொடுத்து அவ்வொழுக்கத்திற்கு இன்றியமையாதத் தொடர்பு உடையனவற்றைச் சுட்டுவதாகும். இந்நிமித்தத்திற்குச் 'சூழ்நிலை' என்று பொருள்கொள்ளல் தகும். இதிலிருந்து ஓர் அகவொழுக்கமும், அது நிகழ்வதற்கமைந்த சூழ்நிலையுமே ஒரு திணைக்குரிய உரிப்பொருள் என்பது தெளிவாகின்றது.

"தலைவன் தோழியைக் குறையுறும் பகுதியும், அதற்குத் தோழி கூறுவனவும், குறைநேர்தலும், மறுத்தலும் முதலியன புணர்ச்சி நிமித்தமாகும்; ஓதல், பகை, தூது ஆகியவற்றின் பகுதியும், பொருட் பிரிவும் பின் தலைவி வருந்துவனவும், தோழி ஆற்றுவித்தனவும் ஆகியன பிரிதல் நிமித்தமாம்; பருவங்கண்டு ஆற்றாத தோழி கூறுவனவும் பருவமன்று என வற்புறுத்துவனவும், வருவாரென்று வற்புறுத்துவனவும், தலைவன் பாசறைக்கண் இருந்து உரைத்தனவும், அவை போல்வனவும் இருத்தல் நிமித்தமாகும்; கடல் முதலியனவும், நீங்குவனவுமெல்லாம் இரங்கல் நிமித்தமாகும்; பரத்தையும், பாணனும் முதலியோர் ஊடல் நிமித்தமாகும்."[116] இவ்வாறாக ஒவ்வொரு திணைக்கு முரிய உரிப்பொருள் நிமித்தத்தை நச்சினார்க்கினியர் விளக்குகிறார். அவர் கூறியுள்ள நிமித்தத்தை அடிப்படையாகக் கொண்டே நிலத்திற்குரிய திணையைக் காணமுடிகிறது.

**நெய்தல் திணைக்குரிய உரிப்பொருள்**

நெய்தல் திணையின் உரிப்பொருள் இரங்கலும் இரங்கல் நிமித்தமும் ஆகும். இவ்வுரிப்பொருள், முதற்பொருள் கருப்பொருள்களை விடச் சாலச் சிறந்தது என்று கூறுவர் அறிஞர்.

நெய்தல் நிலக் கடற்கரைச் சோலையானது பல மரங்கள் அடர்ந்து, உதிர்ந்த மலரும், மெத்தென்ற மணலும் பொருந்திப் பழகுவதற்கு இனிதாக இருப்பதால், கருத்தொருமிக்க தலைவனும், தலைவியும் தம்முள் அளவளாவதற்கு ஏற்ற இடமாகப் பயன்படும். இவ்வாறு பல நாள் பழகிய பின் தலைவியைத் திருமணம் செய்து கொள்ள எண்ணியோ அல்லது அவளை மணம் முடித்த பின்போ, பொருள் ஈட்டும் பொருட்டு வேறிடங்களுக்குச் செல்வான் தலைவன். போருக்குச் செல்லுதற் பொருட்டு அவன் பிரிவதும் உண்டு. கடல் கடந்து வாணிகத்தின் பொருட்டுப் போதலும் உண்டு. அங்ஙனம் செல்லும் தலைவன் இளவேனிலோ, முதுவேனிலிலோ, கார் காலத்திலோ திரும்பி

116. நச்சினார்க்கினியர்(உ.ஆ.), தொல்காப்பியம், பொருளதிகாரம்,, ப.38.

வருவதாகக் கூறிச் செல்வான். அக்கூற்றில் நம்பிக்கை கொண்டு தலைவியும் காத்திருப்பாள். காத்திருந்த தலைவி, தலைவன் வாராவிடில், பொறுமை எல்லை கடந்து, வருத்தம் தாங்காது, தன் முன் காணப்படும் உயர்திணைப் பொருளாயினும், அஃறிணைப் பொருளாயினும் அவைகளிடம் எல்லாம் தன்குறை தோன்றக் கூறுவாள். இவ்வாறு கூறுதலே நெய்தல் திணையின் 'உரிப்பொருள்' என்று பேசப்படும் இரங்கலாகும்.

தலைவன் சென்ற இடத்தில் தலைவியை எண்ணி வருந்துவதும், தலைவி, தலைவனை எண்ணி இல்லிலிருந்து இரங்குவதுமாக உள்ளனர். இதைத் தொல்காப்பியம்,

**"வருத்த மிகுதி சுட்டுங்காலை**

**உரித்தென மொழிப வாழ்க்கையுள் இரக்கம்"**[117]

என்கிறது. எனவே வருந்தி இரங்குவது தலைவன், தலைவி இருவருக்கும் உண்டு. "இரங்கல் என்பது தலைவனோ, தலைவியோ களவிலோ, கற்பிலோ பிரிவு வேளையில் வருந்துவதாகும்"[118] எனக் குறிப்பிடுகிறார் தி.செல்வம்.

தலைவனும், தலைவியும் கண்டு கேட்டு உண்டு உயிர்த்துப் பழகிய காலத்துக் கடற்கரைச் சோலையும், கடற்கருப் பொருள்களும் மகிழ்வைத் தருகின்றன. தலைவன் பிரிந்தவுடன் தலைவிக்குக் கடற்கரையும், கடல்சார்ந்த கருப்பொருள்களும் துன்பமாகக் காட்சியளித்து வருந்தி இரங்குகிறாள். தலைவனை மீண்டும் காண வேண்டும் என்ற தவிப்புத் தலைவிக்கு ஏற்படுகிறது. இந்நிலையில் அவன் தினமும் வந்தொழுகும் கடற்கரையை நோக்கி அவள் நெஞ்சம் செல்கிறது. அங்கு அவனைக் காணாததால் கடல் அலை போல அவளது நெஞ்சம் தடுமாறி நிற்பதை,

**"இருங்கழி யோதம் போல் தடுமாறி**

**வருந்தினை அளியஎன் மடங்கெழு நெஞ்சே"**[119]

---

117. ச. பாலசுந்தரம் (உ.ஆ.), தொல்காப்பியம், பொருளதிகாரம், ப.226.
118. தி. செல்வம், குறிஞ்சி என்னும் சொல்லுக்குப் புணர்தல் என்றும், முல்லை என்னும் சொல்லுக்கு இருத்தல் என்றும் இவ்வாறு கொள்வது பொருந்துமா என்னும் ஆய்வு (செம்மொழித் தமிழ் இலக்கியங்கள் ஆய்வுக் கோவை), தொகுதி-3. ப.1848.
119. நச்சினார்க்கினியர்(உ.ஆ.), கலித்தொகை, ப.772.

என்ற கலித்தொகைப் பாடல் அடிகள் சுட்டிக்காட்டுகின்றன. இவ்வாறு "கதிரவனின் மறைவுக்குப் பிறகும் தலைவன் வாராமை குறித்துத் தலைவி கண்ணீர் விட்டு அழும் பாக்கள் நெய்தல் கலியில் தான் இடம்பெறுகின்றன"[120] என்பர் அ.பாண்டுரங்கன். ஆகவே இரங்கல் என்பது தலைவன், தலைவி ஆகிய இருவருக்குள் நிகழும் காதல் வருத்தங்களேயாகும்.

## திணைமயக்கம்

திணைக்குரிய முதற்பொருள், கருப்பொருள், உரிப்பொருள் என்ற மூன்றும் தத்தமக்குரிய திணையில் மட்டும் வருவதல்லாமல் பிறதிணைக் கண்ணும் மயங்கி வருவதே திணை மயக்கம் ஆகும். மயக்கம் என்பது இரண்டு அல்லது இரண்டுக்கு மேற்பட்ட பொருள்கள் கலந்து நிற்றலாகும். அதாவது வேறுபட்ட திணைப் பொருள்கள் தம்முள் கலத்தலைக் குறிப்பதாகும். "ஒரு திணையின் எல்லைக்கு உட்பட்ட சில கூறுகள் பிறிதொரு திணையின் கட்டுக்கோப்போடு கலந்து நிற்கவும் கூடும்"[121] என்று ந.சுப்புரெட்டியார் கூறுகிறார்.

தொல்காப்பியப் பொருளதிகாரத்தை மூலநூலாகக் கொண்டு பிற்காலத்து எழுந்த இலக்கண நூலான நம்பியகப் பொருள்.

**"முத்திறப் பொருளும் தத்தம் திணையொடு**

**மரபின் வாராது மயங்கலும் உரிய"**[122]

என முதல், கரு, உரிப்பொருள் மூன்றும் தன் நிலத்தில் திணையோடு கூடிய இலக்கண முறைப்படி வாராமல் பிற திணையோடு மயங்கியும் வரும் என்று திணைமயக்கம் பற்றிக் குறிப்பிடுகிறது.

### முதற்பொருள் மயக்கம்

நிலமும், பொழுதும் முதற்பொருள் என்று தொல்காப்பியம் குறிப்பிடுகின்றது. இவற்றில் நிலம் மயக்கம் பெறாது என்பதனை,

---

120. அ. பாண்டுரங்கன், தொகை இயல், ப.97.
121. ந. சுப்புரெட்டியார், அகத்திணைக் கொள்கைகள், ப.31.
122. கா.ர. கோவிந்தராச முதலியார்(உ.ஆ.), அகப்பொருள் விளக்கம், ப.291.

**"திணைமயக் குறுதலும் கடிநிலை இலவே**

**நில னொருங்கு மயங்குதல் இல்லென மொழிப**

**புலன் நன் குணர்ந்த புலமை யோரே"**[123]

என்னும் நூற்பா வழி உணரலாம். இதன்படி திணைக்குரிய ஒழுக்கங்கள் மயங்கி நிகழ்தல் என்பது நீக்கப்பட முடியாத ஒன்று, ஆனால் முதற்பொருளான நிலம், பொழுது இவற்றுள் நிலங்கள் தம்முள் மயங்குதல் இல்லை. பொழுது மட்டுமே மயங்கும். இதனை இளம்பூரணர், "ஒரு திணைக்குரிய முதற்பொருள் மற்றொரு திணைக்குரிய முதற்பொருளுடன் மயங்கி வரும். நிலம் வேறொரு திணையில் மயங்காது, காலம் மயங்கும்"[124] என்று குறிப்பிடுவார்.

நச்சினார்க்கினியர், "திணை என்பது மூன்று பொருளையும் குறித்தே வரும் என்பதால் முதல், கரு, உரிப்பொருள் பிற நிலத்திலும் மயங்கி வரும்"[125] என்பர்.

இவற்றால் திணை மயக்கத்தில் முதற்பொருளாகிய நிலம் மட்டும் மயங்காது, மற்ற பொழுது, கரு, உரி ஆகிய மூன்றும் எந்த நிலத்துக்கும் மயங்கும் எனலாம். 'நிலனொருங்கு மயங்குதல் இன்றென மொழிப' என்னும் நூற்பாவில் 'மொழிப' எனப் பிறர்மேல் வைத்துச் சொன்னதன் காரணமாக நிலங்கள் மயங்குவது உண்டு என்பது தொல்காப்பியக் கருத்துமாகும்.

**நெய்தல் திணைப் பாடல்களில் முதற்பொருள் மயக்கம்**

நெய்தல் திணையில் பிறதிணைகளான குறிஞ்சி, முல்லை, மருதம், பாலை ஆகிய நான்கு திணை முதற்பொருள் மயங்கி வருகின்றன.

**நெய்தலுள் மருதம்**

களவுக் காலமான இதுவரை இரவு நேரத்தில் மட்டுமே தலைவனின் தேர், தலைவியைக் காண வந்து கொண்டிருந்தது. ஆனால் இன்று அத்தேர் குதிரைகள் விரைந்தோடி மறைவேதுமின்றி இளையரோடு அலர்தூற்றும் பெண்கள் காணுமாறு பகல் நேரத்தில் வந்ததை,

---

123. ச. சாம்பசிவனார் (பதி.ஆ.), தொல்காப்பியர் பொருட்படலப் புத்துரை(தொகுதி-2), ப.32.
124. இளம்பூரணர்(உ.ஆ.), தொல்காப்பியம், பொருளதிகாராம், ப.13.
125. நச்சினார்க்கினியர்(உ.ஆ.), தொல்காப்பியம், பொருளதிகாரம், ப.15.

**"இரவந் தன்றால் திண்தேர் கரவாது**

**ஒல்லென ஒலிக்கும் இளையரோடு வல்வாய்**

**அரவச் சீறூர் காண**

**பகல்வந் தன்றால் பாய்பரி சிறந்தே"**[126]

என்னும் அகநானூற்றுப் பாடல் அடிகள் கூறுகின்றன. தலைவியைத் திருமணம் செய்து கொள்வதற்காகப் பலரும் காண, தலைவன் தேரேறி வந்த செய்தி மருதத்தின் முதற் பொருளான பகற்பொழுதின் வாயிலாக வெளிப்படுகிறது.

**நெய்தலுள் பாலை**

பொருள் வயிற் பிரிந்த தலைவனையும், அவன் சென்ற கடத்தற்கரிய பாலை வழியையும், வெயில் சுட்டெரிக்கும் கோடைக் காலத்தையும் எண்ணித் தலைவி ஆற்றாமை மிகுந்து காணப்படுவதாக,

**"விசும்பு உறநிவந்து அழலும் விலங்கு அருவெஞ்சுரம்**

**இறந்து தாம் எண்ணிய எய்துதல் வேட்கையால்**

**அறம்துறந்து ஆயிழாய் ஆக்கத்தில் பிரிந்தவர்"**[127]

என்னும் அடிகள் சுட்டுகின்றன. இவ்வாறு கலித்தொகையில் நெய்தல் பாடலில் பாலையின் முதற்பொருளான வெஞ்சுரமும். கோடைக்கால இயல்பும் சுட்டப்பெற்று முதற்பொருள் மயக்கம் பெற்று வந்துள்ளது.

முல்லையின் சிறு பொழுதான மாலையின் கொடுமையை எண்ணி நெய்தல் திணை தலைவி வருத்தமுற்றமை (கலி:119,120) (ஐங்:166,நற்:369), கரிய தலைவியின் துன்பம் (அகம்:80,120,300,340). இவை போன்ற பாலை, முல்லை, மருதம், குறிஞ்சித் திணையின் முதற்பொருள் நெய்தலுள் மயக்கமாக வந்துள்ளன.

**கருப்பொருள் மயக்கம்**

ஒரு நிலத்தில் தோன்றிய கருப்பொருள் பிறிதொரு நிலத்தின்கண் காணப்படுவது, 'கருப்பொருள் மயக்கம்' எனப்படும். அதாவது உவமை கூறுவதாயினும் உள்ளுறை,

---

126. ந.மு. வேங்கடசாமி நாட்டார்(உ.ஆ.), அகநானூறு, மணிமிடை பவளம், ப.96.
127. வீ. இளவழுதி (உ.ஆ.), நெய்தற்கலி, ப.199.

இறைச்சி போன்ற குறிப்புப் பொருள் கூறுவதாயினும் அந்தந்த நிலத்திற்குரிய கருப்பொருள்களாலேயே கூற வேண்டும். அந்தப் பாடல்களில் வரும் மாந்தர்களும் அந்தந்த நிலம் சார்ந்தவர்களாகவே இருத்தல் வேண்டும். அவ்வாறன்றி மற்றைய நிலங்களிலுள்ள பொருள்கள் விரவி வருவது கருப்பொருள் மயக்கம் ஆகும்.

கருப்பொருள் மயக்கத்தினைத் தொல்காப்பியர் குறிப்பிடும் பொழுது ஒரு நிலத்திற்குரிய பூவும், பறவையும் மற்றைய நிலங்களிலும் கலந்து வரும். அவ்வாறு கலந்து வருவது திணை மயக்கம் இல்லை என்னும் பொருளில் குறிப்பிடுகின்றார்.

**"எந்நில மருங்கிற் பூவும் புள்ளும்**

**அந்நிலம் பொழுதொடு வாரா வாயினும்**

**வந்த நிலத்தின் பயத்த ஆகும்"**[128]

எனக் குறிப்பிடுவதனால் பூ, புள் இவை தவிர மற்றக் கருப்பொருள்களே கருப்பொருள் மயக்கமாக வரும். பூவும் புள்ளும் நிலம் மாறி வருவது திணை மயக்கமாகக் கொள்வதிலிருந்து விலக்கு அளிக்கப்படுவதாகத் தொல்காப்பியர் கூறுகின்றார்.

இதனை இளம்பூரணர், "கருப்பொருளில் பூவும், புள்ளுமாகிய பறவையும் பிற திணையில் மயங்கியும், மயங்காமையும் வரும், இவ்வாறு கருப்பொருள் மயங்கிவருவது திணைமயக்கம் அன்று"[129] என்று கூறுவதிலிருந்து உறுதி செய்யலாம்.

நச்சினார்க்கினியர், "எழுதிணை நிகழ்ச்சியாகிய நால்வகை நிலத்தும் பயின்று வந்த பூவும், பறவையும் தத்தமக்கு உரியனவாகக் கூறிய நிலத்தொடும், காலத்தொடும் நடவாமற் பிற நிலத்தொடும், காலத்தொடும் நடப்பினும் அவை வந்த நிலத்திற்குக் கருப்பொருளாம்"[130] என்று கூறுகிறார். இவ்வாறு பூ, புள் என்னும் கருப்பொருள்கள் புணர்தல், இருத்தல், ஊடல், இரங்கல், பிரிதல் என்னும் உரிப்பொருள்களை வெளிப்படுத்துவதாக உள்ளதாலேயே இவை இரண்டிற்கும் திணை மயக்கத்தில் இருந்து விலக்கு அளித்திருக்கலாம்.

---

128. ஆ. சிவலிங்கனார் (பதி.ஆ.), தொல்காப்பியம், அகத்திணையியல் உரைவளம், ப.161.
129. இளம்பூரணர்(உ.ஆ.), தொல்காப்பியம், பொருளதிகாராம், ப.18.
130. ச. சாம்பசிவனார் (பதி.ஆ.), தொல்காப்பியர் பொருட்படலப் புத்துரை(தொகுதி-2), ப.48.

"ஒரு நிலத்துப் பூவும், புள்ளும் அந்நிலத்திற்குரிய நிலத்தொடும், பொழுதொடும் வாராமல் வேற்று நிலத்து நிலத்தொடும், பொழுதொடும் வந்தாலும் அந்தந்த வேற்று நிலத்தின், வேற்றுப்பொழுதின் உரிப்பொருளின் பயனையே தாமும் உடையனவாகும். இதனால் கருப்பொருள் மயக்கம் கூறப்பட்டது"[131] என்று ஆ.சிவலிங்கனார் கூறுகின்றார். பூவும் புள்ளும் மயங்கும். ஆனால் இவற்றினை மயக்கமாகக் கொள்ளக் கூடாது என்பதே புலனெறி வழக்கமாக உள்ளது எனலாம்.

**நெய்தல் திணைப் பாடல்களில் கருப்பொருள் மயக்கம்**

நெய்தல் திணைப் பாடல்களில் குறிஞ்சி, முல்லை, மருதம், பாலை என்ற நான்கு திணை கருப்பொருள்கள் மயக்கம் பெற்று வந்துள்ளன.

**நெய்தலுள் குறிஞ்சி**

தலைவியால் காதலிக்கப்படும் தலைவன் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என்ற நானில வளங்களையும் தன் நாட்டில் ஒருங்கே பெற்றுச் செல்வச் செழிப்புடன் வாழ்பவன் என்பதனை,

**"கணங்கொள் அருவிக்கான் கெழுநாடன்**

**குறும்பொறை நாடன் நல்வயல் ஊரன்**

**தண்கடற் சேர்ப்பன்"**[132]

என்ற பாடல் அடிகள் உணர்த்துகின்றன. இவ்வாறாக நெய்தல் நிலத்தலைவனின் செல்வ வளத்தையும், பெருமையையும் உணர்த்தவே இந்நானிலக் கருப்பொருள்களும் பாடலில் ஒருங்கே வந்துள்ளன என்பதை உணர முடிகின்றது.

**நெய்தலுள் முல்லை**

முல்லை நிலக் கோவலர் ஊதும் குழலோசையினைக் கேட்டும். முல்லை அரும்புகள் மலர்ந்ததைக் கண்டும் தலைவர் வராததால் தனிமையில் நெய்தல் நிலத்தலைவி வருத்தமுற்று இருப்பதனை,

---

131. ஆ. சிவலிங்கனார் (உ.ஆ.), தொல்காப்பியம், அகத்திணையியல் உரைவளம், ப.165.
132. பொ.வே. சோமசுந்தரனார்(உ.ஆ.), ஐங்குறுநூறு, ப.264.

**"கோவலர் தீம்குழல் இணைய அரோஎன்**

**பூஎழில் உண்கண் புலம்புகொண்டு இணையும்"**[133]

என்ற பாடல் அடிகள் புலப்படுத்துகின்றன. இவ்வாறாக முல்லை நிலக் கோவலர் குழலோசை, முல்லைமலர் போன்ற கருப்பொருள்கள் நெய்தல் திணைத் தலைவியின் வருத்தத்திற்குக் காரணமாக அமைகின்றன.

**நெய்தலுள் மருதம்**

நற்றிணைப் பாடல் ஒன்றில் தலைவி கடற்கரைச் சோலையில் உள்ள சிறுகுடியில் மீனைப் பிடிக்கின்ற பரதவர் மகள் ஆவாள். தலைவனோ நெடிய கொடிகள் காற்றால் அசைந்து நுடங்கும் கடைத்தெருக்களைக் கொண்ட பழைய ஊரின்கண் வாழ்கின்ற செல்வமிக்கத் தேரினையுடையவனின் மகன். ஆகவே எம் குலத்திற்கு நீ பொருந்து வாயில்லை. உடம்பெல்லாம் புலால் நாற்றம் வீசக்கூடிய எங்களுக்குப் பரதவர் குடியில் உம்மைப் போன்ற செல்வர்களும் உள்ளார்கள் என்று கூறித்தோழி, தலைவனுக்குக் குறை மறுப்பதை,

**"இவளே, கானல் நண்ணிய காமர் சிறுகுடி**

**நீல்நிறப் பெருங்கடல் கலங்க உள்புக்கு**

**மீனெறி பரதவர் மகளே நீயே,**

**நெடுங்கொடி நுடங்கும் நியம மூதூர்க்**

**கடுந்தேர்ச் செல்வன் காதல் மகனே**

**நிணச்சுறா அறுத்த உணக்கல் வேண்டி**

**இனப்புள் ஓப்பும் எமக்குநலன் எவனோ**

**புலவு நாறுதும் செலநின் றீமோ**

**நும்மொடு புரைவதோ அன்றே**

**எம்ம னோரில் செம்மலு முடைத்தே"**[134]

133. நச்சினார்க்கினியர்(உ.ஆ.), கலித்தொகை, ப.404.
134. பின்னத்தூர் நாராயணசாமி ஐயர்(உ.ஆ.), நற்றிணை நானூறு, ப.58.

என்ற நற்றிணைப் பாடல் அடிகளால் அறியலாம். இப்பாடலில் உள்ள கானல், சிறுகுடி, பரதவர் மகள், மூதூர் போன்ற கருப் பொருள்களின் வழியாக நெய்தல் தலைவியிடம் மருதநிலத் தலைவன் கொண்ட காதல் புலனாகிறது.

குறிஞ்சியின் கருப்பொருளான அருவி நீரைக் கண்ட தலைவியின் கலக்கம் (குறு:200), தலைவன், தலைவியின் ஆயத்தாருடன் குரவைக் கூத்தாடியதால் இற்செறிக்கப்பட்டத் தலைவி(குறு:294, அகம்:20, ஐங்:181), மழை பெய்யும் காலத்துக் கலைமான் கூட்டம் துள்ளி ஆடுகின்றதும், நெல் விளைந்து புது வருவாயினை உடையதும், மழை வறண்ட காலத்துக் கழிமுள்ளி மலர்ந்து, வெண்மையான உப்பு விளைவதுமான முல்லை, மருதம், நெய்தல் திணை வளங்களை ஒருங்கே பெற்ற தலைவியின் ஊர் (நற்:311) பற்றிய செய்திகள் கூறப்படுகின்றன.

நெய்தல், செருந்தி மலருடன் மருத மலரான குவளையும் சேர்ந்து மலரும் உப்பங்கழி (அகம்:150), அழகிய நெய்தல் மலரைத் தின்னும் எருமையைக் கொண்ட, தாழையை வேலியாக உடையதும், நெய்தல் மலருடன் வெண்ணெல்லும் விளையக் கூடியதுமான மருதம், நெய்தல் என்ற இருதிணை வளங்களைக் கொண்ட தலைமக்களின் ஊர்கள் பேசப்படுகின்றன (அகம்:100, ஐங்:190).

தண்ணுமை இசை ஒலிக்கும் மருதநில மூதுரை விடுத்துப் பாலை ஊர்களின் வழியாகப் பொருள் தேடச் சென்ற மருதத்தலைவன் (நற்:130), பாலை நிலப் பறவையான கூகையின் ஒலியினைக் கேட்டுத்துன்புறும் நெய்தல் திணைத் தலைவி (நற் 218,319). இவை போன்று குறிஞ்சி, முல்லை, மருதம், பாலைத் திணைகளின் கருப்பொருள்கள் நெய்தல் திணைப் பாடல்களில் கருப்பொருள் மயக்கமாக வந்தாலும் அவை அகமாந்தர்களின் செயல்களை வெளிப்படுத்துவதற்காகவே வந்துள்ளமையை உணர முடிகின்றது.

**உரிப்பொருள் மயக்கம்**

ஒரு நிலத்திற்குச் சிறப்புக்குரியதாகக் கூறப்படும் உரிப்பொருள் பிறிதொரு நிலத்திலும் நிகழும் என்பதே இயற்கை. இவற்றை உணர்ந்த தொல்காப்பியர் உரிப்பொருள் எல்லா நிலத்திலும் மயங்கி வரும். ஆனால், அதனை மயக்கமாகக் கொள்ளாமல் அவ்வுரிப் பொருளுக்கு உறுதுணையாக இருக்கும் முதற்பொருளும், கருப்பொருளும் மட்டுமே மயங்கி வரும் என்னும் கருத்து அடிப்படையிலேயே,

**"உரிப்பொருள் அல்லன மயங்கவும் பெறுமே"**[135]

என்று தொல்காப்பியர் கூறுகிறார். தொல்காப்பியர் உரிப் பொருள் மயங்கும் என்ற உணர்வுடையவரே, அதனாலேயே உடன்போக்காகிய பிரிவும், அப்பிரிவில் தலைவனும், தலைவியும் வருந்தி இரங்குவதும் ஒன்றாக நிகழும் என்பர்.

**"கொண்டுதலைக் கழிதலும் பிரிந்தவன் இரங்கலும்**

**உண்டென மொழிய ஓரிடத் தான"**[136]

எனப் பாலையிடத்து இரங்கலும் உண்டு என்பதை அறிய முடிகின்றது. அவ்வாறு பிரிந்து இரங்கும் இடத்து ஏற்கனவே முன்பு நிகழ்ந்ததைத் தலைவி நினைத்துப் பார்ப்பதும், தலைவன் நிகழ்ந்ததை எடுத்துக் கூறி நிற்றலும் உரிப்பொருள் மயக்கமாகவே கொள்ளலாம் என்பதை,

**"நிகழ்ந்தது நினைத்தற்கு ஏதுவும் ஆகும்"**[137]

என்றும்

**"நிகழ்ந்தது கூறிநிலையலுந் திணையே"**[138]

என்று தொல்காப்பியர் கூறுவதனைக் காணமுடிகின்றன.

தொல்காப்பியர் கருத்து அடியொற்றியே உரிப்பொருள் மயங்கி வராது என்றாலும், சங்கப் பாடல்களில் மயங்கி வருவது உண்டு என்பதை, "உரிப்பொருள் மயங்கி வருதல் இல்லை. உரிப்பொருள் மயங்கி வருதல் கலி முதலாகிய சான்றோர் செய்யுள்களில் கண்டுகொள்க"[139] என இளம்பூரணர் கூற்றால் உரிப்பொருள் மயங்கும் என்பதை அறியமுடிகின்றது.

நச்சினார்க்கினியரும் உரிப்பொருள் மயங்கி வரும் என்றே குறிப்பிடுகிறார். "உரிப்பொருள் அல்லன என்பதை உரிப்பொருள் என்று சொல்லப்பெறும் ஐந்திணையும், உரிப்பொருள் அல்லாத கைக்கிளையும், பெருந்திணையும் நான்கு நிலத்தும் மயங்கி

---

135. இளம்பூரணர்(உ.ஆ.), தொல்காப்பியம், பொருளதிகாராம், ப.14.
136. ஆ. சிவலிங்கனார் (உ.ஆ.), தொல்காப்பியம், அகத்திணையியல் உரைவளம், ப.137.
137. ச. சாம்பசிவனார் (பதி.ஆ.), தொல்காப்பியர் பொருட்படலப் புத்துரை(தொகுதி-2), ப.121.
138. மேலது, ப.123.
139. இளம்பூரணர் (உ.ஆ.), தொல்காப்பியம், பொருளதிகாரம், ப.14.

வரும் என்றும் இந்நிலத்தின் இவ்வொழுக்கம் என வரையறுப்பது நாடக வழக்கின் பாற்படும் என்றும் கூறுவார். உரிப்பொருளாக மாறிவந்த பாலையும் நால்வகை நிலத்தின் கண்ணும் மயங்கிவரும். இன்றும் பிற சான்றோர் செய்யுள்களுள் உரிப்பொருள் மயங்கியும், காலம் மயங்கியும் வரும்”[140] என்பர்.

இதனால் முதற்பொருள், கருப்பொருள், உரிப்பொருள் என்ற மூன்று பொருள்களும் பிறநிலத்து மயங்கி வருதலும் உண்டு. புலனெறி வழக்கின் படி ஒழுக்கம் சிறப்பு நிலையில் இருந்து பொது நிலைக்கு வருதல் சிறப்புக் கருதியே ஆகும். ஆகவே நிலம் நிலையானது, பொழுது பொதுவானது, ஒழுக்கம் இயங்கும் தன்மையுடையது, கருப்பொருளும் நிலம், பொழுதுக்கேற்ப இயைந்து வருவதுமாகும்.

**நெய்தல் திணைப் பாடல்களின் உரிப்பொருள் மயக்கம்**

நெய்தல் திணைப் பாடல்களில் குறிஞ்சி, முல்லை, மருதம், பாலை என்ற நான்குத் திணை உரிப்பொருளும் மயக்கம் பெற்று வந்துள்ளன.

தலைவன் தோழியை நயந்து தலைவியைக் கூடக் கருதுகிறான். பெருங்குடி பிறப்பினளாகிய தலைவியும் தலைவன் மீது பெருமயக்கம் கொண்டுள்ளாள். இதை அறிந்த தோழி தலைவன், தலைவியைச் சந்திக்கக் குறியிடம் நல்குவதை,

**“குன்றின் தோன்றும் குவவுமணற் சேர்ப்ப**
**இன்றிவண் விரும்பா தீமோ சென்றப்**
**பூவிரி புன்னை மீதுதோன்று பெண்ணைக்**
**கூஉங்க ணஃதே செய்ய ஆங்கண்**
**உப்பொய் உமணர் ஒழுமையொடு வந்த**
**இளைப்படு பேடை யிரியக் குரைத்தெழுந்து**
**உருமிசைப் புணரி யுடைதரும்**
**பெருநீர் வேலியெஞ் சிறுநல் லூரே”**[141]

என்னும் அகநானூற்றுப் பாடல் அடிகளால் அறியலாம். தலைமக்கள் இருவரது ஒத்த குடிப்பெருமையையும், அருங்குணங்களையும், உண்மையான காதலையும் தன் கூரிய அறிவுத்திறத்தால் உணர்ந்த தோழி, தலைவனுக்குக் குறை நேர்ந்து இருவரும் சந்திப்பதற்குக் குறியிடம் நல்குகின்ற இச்செயல் குறிஞ்சித் திணையின் உரிப்பொருளாகும்.

---

140.ஆ. சிவலிங்கனார்(பதி.ஆ.), தொல்காப்பியம், அகத்திணையியல் உரைவளம், ப.119.

141. ந.மு. வேங்கடசாமி நாட்டார்(உ.ஆ.), அகநானூறு, நித்திலக்கோவை, ப.25.

தலைவி அன்னையால் இற்செறிக்கப்பட்டு இருப்பதைத் தலைவனிடம் சிறைப்புறமாகக் கூறும் தோழி (நற்:27, அகம்:20,90,370), தலைவனைத் தோழி வரைவு கடாயது (நற்: 67,159,223,363,375), அகம்(60,100,320), (ஐங்:113, 115,117, 179, 186, 194), கலி (:133, 135, 136) வரைவு மலிதல் (நற்: 78 91, 163, 278), (குறு: 51,35) (அகம்: 70, 160), (ஐங்:101, 102, 147) தோழி அறத்தோடு நிற்றல் (நற்:207) (அகம்:110, 190), (ஐங்:106, 107, 110, 182, 190), குறை நேர்ந்த தோழி (அகம் : 330, 380), (நற்:245), இரவுக்குறி நேர்ந்த தோழி (நற்:23, 331), இயற்கைப் புணர்ச்சி நீங்கிய தலைவன் பாகனுக்குக் கூறியது (அகம்:230, 390), (ஐங்:171), தோழி கையுறை மறுத்தமை (ஐங்:187) என்பனவாக இவை போன்ற பல பாடல்கள் குறிஞ்சித் திணையின் உரிப்பொருள்களைப் பெற்று நெய்தல் திணையில் மயங்கி வந்துள்ளன.

**நெய்தலில் முல்லை**

வினைவயிற் பிரிந்து சென்ற தலைவன் அவ்வினையை முடித்துத் திரும்புகிறான். தலைவன் தேர்ப் பாகனிடம் தலைவியின் பிரிவுத்துயரைக் கூறித் தேரினை விரைவாகச் செலுத்தம்படி கூறுவதை,

**"அறிதலும் அறிதியோ பாக பெருங்கடல்**
**ஏறிதிரை கொழீஇய எக்கர் வெறிகொள**
**ஆடுவரி அலவன் ஓடுவயின் ஆற்றாது**
**ஆசைஇயுள் ஒழிந்த வசைநீர் குறுமகட்கு**
**உயவினென் சென்றியான் உள்நோ யுரைப்ப**
**மறுமொழி பெயர்த்தல் ஆற்றான் நறுமலர்**
**ஞாழல் அஞ்சினைத் தாழிணர் கொழுதி**
**முறிதிமிர்ந்து உதிர்த்த கையள்**
**அறிவஞர் உறுவி ஆய்மட நிலையே"**[142]

என்னும் நற்றிணைப் பாடல் அடிகள் விளக்குகின்றன. இவ்வளவு அறியாமை உடைய தலைவியைக் காண விரைவது நம் கடமையாகும். ஆகவே அதற்கேற்ப நம் தேரினை

---

142. பின்னத்தூர் நாராயணசாமி ஐயர்(உ.ஆ.), நற்றிணை நானூறு, ப.133.

விரைந்து செலுத்துக எனத் தலைவன் தேர்ப் பாகனைத் தூண்டுகின்ற முல்லையின் உரிப்பொருள் நெய்தல் பாடலில் வந்துள்ளது.

திருமணமான பின்பு தலைவி மனைக்கு சென்ற தோழி தலைவனிடம் கூறியது (நற்:35,131) (ஐங்:149), பருவம் கண்டு அழிந்த தலைவி தோழிக்குக் கூறியமை (குறு:103, 122, 195,197, 200), பருவ வரவின் கண் வேறுபடும் எனக் கவன்ற தோழிக்குக் கிழத்தி உரைத்தது (குறு:341), தலைவன் வரைந்து எய்திய பின்றைத் தோழி, தலைவிக்குச் சொல்லியது (அகம்:400) (ஐங்:148), தலைவன் வினைமுற்றி வந்ததனால் தலைவியின் ஆற்றாமை நீங்கியமை (ஐங்:134) (கலி:130, 134) என்பன போன்ற முல்லைத் திணையின் உரிப்பொருள் நிமித்தங்கள் நெய்தல் திணைப் பாடல்களில் உரிப்பொருள் மயக்கமாக வந்துள்ளது.

**நெய்தலில் மருதம்**

தலைவனின் பரத்தமையால் ஊடல் கொண்ட தலைவி, தலைவனே நின் காதல் பரத்தை உன்னிடம் பெரிதும் மயக்கம் முற்றிருக்கிறாள், ஆதலின் அவளை நீ முன்னினும் பேரன்புடன் முயங்கி இன்புறுவாயாக என்று கூறித் தலைவனுக்கு வாயில் மறுப்பதை,

**"பண்டையின் மிகப்பெரி தினைஇ**

**முயங்குமதி பெரும மயங்கினள் பெரிதே"**[143]

என்னும் ஐங்குறுநூற்றுப் பாடல் அடிகள் புலப்படுத்துகின்றன. தன்னை விட்டுப் பரத்தையிடம் இன்பம் நுகரச் சென்ற தலைவன் மீது தலைவி கொண்ட உறுதியான கோபமே, தலைவனுக்கு தலைவி வாயில் மறுக்கின்ற மருதத்தின் உரிப்பொருள் ஆகும்.

தலைவனுக்குத் தோழி வாயில் நேர்தல் (குறு:9), பரத்தையிற் பிரிந்து வந்து தலைவன் கேட்பத் தோழிக்குக் கிழத்தி உரைத்தமை (குறு:349), பரத்தையர் பிரிவால் தலைவி அடைந்த வருத்தத்தைக் தோழி, பாணனுக்கு உரைத்தமை (அகம்:50), காதல் பரத்தையிடம் உறவு கொண்ட தலைவனுடன் ஊடிய தலைவி (ஐங்:121, 128, 135, 136), வாயில் வேண்டிய தலைவனுக்குத் தோழி உரைத்தமை (ஐங்:143, 153), வாயில் மறுத்த தலைவி (ஐங்:152,154), வாயில் மறுத்த தோழி (ஐங்:156, 158), தலைவனிடம் பரத்தை கடிந்துரைத்தமை (நற்:315) போன்ற மருதத்தின் உரிப்பொருள் கொண்ட பாடல்கள், நெய்தல் திணைப் பாடல்களில் உரிப்பொருள் மயக்கமாகக் காணப்படுகிறது.

---

143. உ.வே. சாமிநாத ஐயர்(உ.ஆ.), ஐங்குறுநூறு, ப.160.

## முடிபுகள்

பழந்தமிழ் மக்களின் எண்ண ஓட்டங்களையும், பண்பாட்டுச் சிறப்புக்களையும் உலகம் கண்டுகொள்ள உதவும் ஒப்பற்றக் கருவூலமாகச் சங்க இலக்கியங்கள் விளங்குகின்றன. இவ்விலக்கியங்கள் தமிழ்மொழியின் பழமைக்கும், வளத்திற்கும் சான்றுகளாக உள்ளன.

சங்க கால மக்கள் இயற்கையோடு ஒன்றிய வாழ்வை மேற்கொண்டு வந்தனர். நிலமும், பொழுதும் முதற்பொருளாகும். காலத்தைப் பொழுது என்றும் கூறுவர். கார், கூதிர், முன்பனி, பின்பனி, இளவேனில், முதுவேனில் ஆகிய காலங்கள் பெரும் பொழுதுகள் ஆகும். காலை, நண்பகல், எற்பாடு, மாலை, யாமம், வைகறை ஆகியவை சிறுபொழுதுகள் ஆகும். பெரும் பொழுதை ஆண்டு, திங்கள், கிழமை, நாள், நாழிகை, நொடி எனவும் பகுத்து வாழ்ந்தனர்.

ஓரறிவுடைய புல் முதல் ஆறறிவுடைய மக்கள் வரையிலான உயிர்பொருள்களும், உயிரில்லாத பொருள்களும் முதற்பொருள்களின் சார்பாக நின்று கருக்கொண்டு உலகின் மேல் தோன்றுகின்றன. இதனைக் கருப்பொருள் எனக் கூறினர். உரிப்பொருள் என்பது வாழும் இடத்திற்கும், எழும் உணர்வுகளுக்கும் இடையே உள்ள இயல்பை விளக்குவது என்பதை அறியமுடிகிறது.

திணை என்பது ஒழுக்கமாகும். இத்திணையானது அகவாழ்வு, புறவாழ்வு என வகைப்படுத்தப்பட்டுள்ளதை அறியலாம். திருமணத்திற்கு முந்தைய காதல் ஒழுக்கம் களவு எனப்படுகிறது. தலைவனும், தலைவியும் திருமணத்தினால் இணையும் இல்லறவாழ்வு கற்பு என அழைக்கப்பட்டது. தமிழர்களின் அகவாழ்வைப் போன்று புறவாழ்வும் நெறிமுறைகளுக்கு உட்பட்டதாகும்.

தொல்காப்பியர் காலத்தில் தமிழகத்தில் புவியியல் அடிப்படையில் நானிலப் பாகுபாடு இருந்தது. அந்தந்த நிலங்களில் வாழ்ந்த மக்களின் ஒழுக்கத்தை அடிப்படையாகக் கொண்டே நிலப் பாகுபாடும் அமைந்திருந்ததால் நிலத்தையும் ‘திணை’ என்றே குறித்தனர்.

கடலும் கடல் சார்ந்த மணற்பகுதியுமே நெய்தல் நிலமாகும். நெய்தல் நில மக்களாகிய பரதவர்களின் வாழ்க்கை முறையை அடிப்படையாகக் கொண்டு தோன்றிய இலக்கியங்கள் ‘நெய்தல் திணை’ இலக்கியங்களாகப் போற்றப்பட்டன எனலாம்.

நெய்தலின் முதற்பொருள் கடலும் கடல் சார்ந்த இடமுமாகும். பெரும் பொழுது ஆறும், சிறு பொழுது எற்பாடும் நெய்தலுக்கு உரியது.

நெய்தல் நிலத்திற்குத் தெய்வம் வருணன், நுளையர், நுளைச்சியர் என்பன நெய்தல் நில மக்கட் பெயராகும். சேர்ப்பன், துறைவன், கொண்கன் என்பன நெய்தல் நிலத் தலைமக்கட் பெயராகவும் சுட்டப்படுகின்றன. நெய்தல் நில மக்கள் உப்பையும், மீனையும் பிற நிலங்களில் விற்றுக் கிடைத்த பொருள்களை உணவாக உட்கொண்டனர்.

நெய்தல் நில விலங்காக, சுறா மீனும், பறவை, கடற்காக்கை என்றும் குறிப்பிடப்படுகின்றன. ஊர் பட்டினம், பாக்கம் ஆகும். நெய்தல் நிலத்தில் தாழை, அடும்பு, நெய்தல் போன்ற பல மலர்கள் காணப்படுகின்றன. கடற்கரை ஓரங்களில் புன்னை, ஞாழல், பெண்ணை போன்ற மரங்கள் காட்சியளிக்கின்றன.

மீன்கோட்பறையும், விளரியாழும், செவ்வழிப் பண்ணும் நெய்தற் நிலத்திற்குரியவை. கடல் நீரும், கேணி நீரும், கழிகளும் முக்கிய நீர் நிலைகள் ஆகும். நெய்தல் நில மக்கள் உப்பு விளைவித்தல், மீன் பிடித்தல், அவற்றை விற்றல் போன்றவற்றை முக்கியத் தொழிலாகக் கொண்டு வாழ்க்கை நடத்தினர் என்பதை அறிய முடிகின்றது.

நெய்தலில் உரிப்பொருளாக இரங்கலும் இரங்கல் நிமித்தமும் இடம் பெறுகிறது.

ஒரு திணையின் எல்லைக்குட்பட்ட சில கூறுகள் பிறிதொரு திணையின் கட்டுக்கோப்போடு கலந்து வருவது திணை மயக்கம் ஆகும். திணை ஒழுக்கத்தின் புறனடையே திணை மயக்கம் என்றும், நிலங்கள் தவிரபொழுது, கருப் பொருள், உரிப்பொருள் ஆகியன திணை மயக்கமும் பெற்று வரும். நெய்தல் திணைப் பாடல்களில் குறிஞ்சி, முல்லை, மருதம், பாலை ஆகிய நான்குத் திணை முதற்பொருள், கருப்பொருள், உரிப்பொருள் மயங்கி வருவதைத் காணலாம்.

# இயல் - இரண்டு
# நெய்தல் நில மக்களும் தொழில்களும்

- மனித இனத்தின் தோற்றம்
- சங்ககாலத் தமிழ் மக்கள்
    - குறிஞ்சி நில மக்கள்
    - முல்லை நில மக்கள்
    - மருத நில மக்கள்
    - பாலை நில மக்கள்
    - நெய்தல் நில மக்கள்
- நெய்தல் நில ஆடவர்
    - உமணர்கள்
    - சங்க இலக்கியத்தில் பரதவர்
    - பரதர்
    - பரதவர் - பெயர்க்காரணம்
    - பரதவர் குறுநில மன்னர்
    - பரதவர் நாகவகுப்பினர்
    - பரவர் - பட்டினவர்
    - சாதுவன் கடல் வாணிகன்
    - பாணர் செம்படவர்
    - பாணரும் மீன்பிடித்தலும்
    - புராணமும் பரதவரும்
    - பெரியன்
    - தழும்பன்
    - திதியன்
    - தித்தன் வெளியன்

அம்பி

கலம்

திமில்

தோணி

நாவாய்

பஃறி

புணை

வங்கம்

கலம் பழுது பார்த்தல்

உப்பு விளைவித்தலும், விற்றலும்

சங்கு

சங்கெடுத்தல்

சங்குவளை செய்தல்

பவளம் குளித்தல்

முத்துக்குளித்தல்

நெய்தல் நில மகளிர் தொழில்கள்

உப்பு விற்றல்

மீன் உணக்கல்

மீன் விற்றல்

மீன் பிடித்தலில் மகளிர்

முடிபுகள்

# இயல் - இரண்டு
# நெய்தல் நில மக்களும் தொழில்களும்

தமிழிலக்கிய வரலாற்றிலே பழந்தமிழ் இலக்கியத்திற்குத் தனிச் சிறப்புண்டு. ஒப்பீட்டு நோக்கிலே சொல்வதானால் அதற்கு நிகரான வேறு இலக்கியம் எதுவும் இந்திய மொழிகளில் இல்லையென்றே கூறலாம். அதனை நன்கு கற்றுத் தெளிந்த பேரறிஞர்கள் பழந்தமிழ் நூல்களுக்கு ஒப்பான மக்கள் இலக்கியம் வேறெந்த மொழியிலும் காணப்படுவதில்லை என்று கூறுகின்றனர். பழந்தமிழ் இலக்கியங்கள் ஐவகை நிலப்பாகுபாட்டை அடிப்படையாகக் கொண்டவை. அவற்றுள் நெய்தல் என்பது உப்பங்கழியும், கடற்பிரதேசமும் ஆகும். இத்திணை மாந்தர்கள் நிலத்தில் வாழ்ந்தாலும் இவர்களது வாழ்வாதாரம் கடலைச் சார்ந்து அமைகிறது. குறிஞ்சியில் விலங்குகளை வேட்டையாடுதலைப் போல கடலில் மீன் வேட்டையாடச் செல்கின்றனர் எனச் சங்கப் பாடல்கள் குறிக்கின்றன. அத்தகு நெய்தல் திணை மக்கள் பற்றியும், அவர்கள் மேற்கொள்ளும் தொழில்கள் குறித்தும் இவ்வியல் விளக்குகின்றது.

**மனித இனத்தின் தோற்றம்**

"உலகம் தோன்றிய காலத்தில் தீக்குழம்பாக இருந்த மண் முதலில் குளிர்ந்து அமைந்த நிலப்பகுதி தென்னிந்தியாவாகும். இவ்விடத்தில் மனிதன் தோன்றி இருக்கலாம்"[1] என்ற கருத்து நிலவுகிறது.

"இந்திய நாடு இன்று காணப்படும் வடிவினை முன் அடைந்திருக்கவில்லை. கன்னியாகுமரிக்குத் தெற்கே காணப்படும் இந்து மாக்கடல், முன் ஒரு பெரிய நிலப்பரப்பாக விளங்கியது. அது கிழக்கே பர்மா தொடங்கித் தெற்கே சீனா வரையிலும் இருந்தது. மேற்கே ஆப்பிரிக்காவில் கிழக்குத் தெற்குக் கரைகள் வரையிலும், வடக்கே விந்திய மலை வரையிலும் விரிந்திருந்தது. அந்நிலப் பரப்புக்கு ஆங்கில பௌதீக நூலார் 'லெமூரியா' என்று பெயர் இட்டனர். தமிழ் முன்னோர் இதனைக் குமரிக்கண்டம் என

1. V.R.R. Dikshitar, (Au.) Pre Historic South India, p.234, considering the fact that we have scarvely any trades of volcanic eruptions or earn tremors, as they frequent occur in North India. It may be said that South India was the part of the world to settle first as a land mass. It is probable that the original man night have come into existence first in South India.

வழங்கினர்."[2] பின் கடல் பொங்கியெழுந்து அதன் பல பகுதிகளைத் தன்வயப்படுத்திக் கொண்டது.

குமரி நாட்டின் வடக்கே குமரி ஆறும், தெற்கே பஃறுளி ஆறும் ஓடிக்கொண்டிருந்தன. இந்த இரு ஆறுகளையும், இவற்றின் இடையே கிடந்த நாற்பத்தொன்பது நாடுகளையும் கடல் கொண்டமையை இலக்கியங்கள் விளக்கி நிற்கின்றன.

முத்தமிழ்க்காப்பியமாகிய சிலப்பதிகாரத்தை இயற்றிய இளங்கோவடிகள்,

**"வடிவேல் எறிந்த வான்பகை பொறாது**
**பஃறுளி யாற்றுடன் படுமலை யடுக்கத்துக்**
**குமரிக்கோடும் கொடுங்கடல் கொள்ள**
**வடதிசைக் கங்கையும் இமயமும் கொண்டு**
**தென்திசை ஆண்ட தென்னவன் வாழி"**[3]

என்று பாண்டியன் புகழைப் பாடி வாழ்த்தியுள்ளார். இதனால் பாண்டிய நாட்டில் ஓடிய பஃறுளி ஆற்றோடு, பல மலைப் பகுதிகளும், குமரி மலையும் கொடிய கடலால் கொள்ளப்பட்டுஅழிந்தது தெளிவாக விளங்குகிறது. கடல் கோளுக்கு உட்பட்ட அக்குமரி நாடு (அ) லெமூரியா 'மனித நாகரிகத்தின் தொட்டில்' (Craddle of human race) எனச் சிறப்பிக்கப்படுகிறது.

"மனித வாழ்க்கைக்கும், உயிர் வாழ்க்கைக்கும் முதல் பிறப்பிடம் இந்த லெமூரியாவேயாகும். மனித நாகரிகத்தின் தொடக்கமும் இங்கே தான் ஏற்பட்டிருக்க வேண்டும், கிட்டத்தட்ட நூறாயிரம் ஆண்டுகளாக மனித வகுப்புத் தவழ்ந்து வளர்ந்த தொட்டில் இவ் இலெமூரியாக் கண்டமே எனலாம்"[4] என்கிறார் அப்பாத்துரை.

---

2. Abinas Chandra Das(Au), Ric Vedic India, p.91, There is Geological evidence to prove that in very early time South India. Formed part of a huge continent which extended from Burma and South China in the East. South Africa on the West, Vindya hills on the north and Australia on the South.
3. ந. மு. வேங்கடசாமி நாட்டார் (உ.ஆ.), சிலப்பதிகாரம், ப.520.
4. கா. அப்பாத்துரை, குமரிக்கண்டம் அல்லது கடல் கொண்ட தென்னாடு, ப.50.

சென்னைப் பல்கலைக் கழக வரலாற்றுப் பேராசிரியராய் விளங்கிய V.R. இராமச்சந்திர தீட்சதர், "மத்திய தரைக் கடற்பகுதி வாழ் மக்களினம், தென்னிந்தியாவையும், ஆப்பிரிக்காவையும் இணைத்த கண்டம், நீரில் மூழ்கிய நிலப்பரப்பாகும். அதுவே, திராவிடர்களின் பண்டைய இருப்பிடமாகும். அந்த நிலப்பரப்பே மத்திய தரைப்பகுதி வாழ் மக்களின் பிறப்பிடமாகும்"[5] எனக் குறிப்பிட்டுள்ளார். ஆதலால் லெமூரியாக் கண்டம் என்று ஆராய்ச்சியாளர்களால் குறிப்பிடப்படுகின்ற குமரிக்கண்டம் தான் மனித இனம் தோன்றிய முதல் இடமாகும்.

மேற்கூறிய விளக்கங்களால், கடலில் அமிழ்ந்து விட்டக் குமரிக் கண்டமாகிய பழந்தமிழ் நாட்டின் எஞ்சிய ஒரு பகுதியே இன்றைய தென்னாடு என்பதும், அவ்வாறு அழிந்துவிட்ட பகுதியிலேயே மக்களினம் (தமிழினம்) முதலில் தோன்றியது எனலாம்.

## சங்க காலத் தமிழ் மக்கள்

தமிழ் நாட்டில் நிலத்தைப் பாகுபடுத்தியுள்ள முறையே வரலாற்றில் முதல் இடம் பெறுவதாகும். நிலத்தை, 'நானிலம்' என்றே வழங்கி, இயற்கைச் சூழலுக்கு ஏற்ப அதை நால்வகையாகப் பிரித்துள்ளார்கள் பழந்தமிழ் மக்கள். குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என்ற நால்வகைப் பகுப்பே நாட்டு மக்கள் வாழ்க்கையை நன்கு விளக்கிக் காட்டுகின்றது. இந்நிலப் பிரிவுகளுக்கு ஏற்பவே இவற்றில் வாழும் மக்களின் வாழ்க்கை முறைகளும், இயல்புகளும், பிற நெறிகளும் அமைகின்றன. இந்நான்கு வகை நிலங்களும், இவற்றின் சிதைவால் தோன்றும் பாலையுமே தமிழ் இலக்கியத்தில் ஐந்திணையாகக் காட்சியளிக்கின்றன. இவ்விலக்கியங்கள் நாட்டின் வாழ்வை ஒளிபெறக் காட்டும் விளக்கங்களாய் அமைகின்றன. இனி ஒவ்வொரு நிலத்தையும், திணையையும் விரிவாகக் காணலாம்.

### குறிஞ்சி நில மக்கள்

இந்நிலப்பகுதி இயற்கையெழில் மிக்கது. இங்கு வாழ்ந்த பழந்தமிழ்க்குடிமக்களில் ஆடவர் குன்றவர். குறவர் என்று பெயர் பெற்றனர்; மகளிர் குறத்தியர் ஆவர். மலைச் சார்பான இடங்களில் விளையத்தக்க மலைநெல், தினை ஆகியவற்றைப் பயிர் செய்தும், தேனழித்தும், கிழங்கெடுத்தும், வேட்டையாடியும் இவர்கள் வாழ்ந்து வந்தார்கள். இந்த மலை நிலத்திலே அகில், தேக்கு, வேங்கை போன்ற மரங்கள் வானளாவி வளர்ந்து

---

5. V.R. Ramachandra Dikshitar, Origin and Spread of the Tamils, pp.27 – 29.

நிற்கும். கரடி, புலி, சிங்கம், யானை போன்ற விலங்குகளும், மயில், கிளி ஆகிய பறவைகளும் இங்கு வாழ்வனவாகும். காந்தள், வேங்கை போன்ற மலர்கள் இந்நிலமெங்கும் பூத்துக் குலுங்கும். மலைவீழ் அருவிகளும், சுனை நீரும் இந்நிலத்திற்கு நீரை அளிப்பன. மலைச் சாரலில் மாண்புடன் விளங்கிய சிறுகுடியில் இந்நிலமக்கள் இல்லம் அமைத்துக் கொண்டு வாழ்ந்து வந்தனர். குறிஞ்சி நிலத் தலைவனுக்குச் சிலம்பன். வெற்பன், பொருப்பன் என்னும் பெயர்கள் வழங்கின. இந்நிலத்திற்குரிய தெய்வம் முருகன். 'முருகு' என்னும் பெயர் அழகு என்னும் பொருளுடையது. இயற்கையழகு குடிகொண்ட இந்நிலத்தில் வாழ்ந்தோர் அழகான முருகனை வழிபட்டுவந்தனர். தொண்டகம் என்னும் சிறுபறையும், வெறியாட்டு விழாவும் இந்நிலத்திற்கு உரியவை. இந்நிலத்திலே தாம் கண்ட இன்பக் காட்சிகளைப் புலவர்கள் விவரிக்குந் திறம் சங்க நூல்களிலே காணக்கிடக்கின்றன.

**முல்லை நில மக்கள்**

வளமான காடுகள் பசுமைக் காட்சி வழங்கும் முல்லை நிலத்திலே வாழ்ந்த பழந்தமிழ்க்குடிகள் ஆயர் எனப்படுவர். குறும்பொறை நாடன் இந்நிலத்துத் தலைவன் ஆவான். ஆயர், இடையர் என்று ஆடவரும், ஆய்ச்சியர், இடைச்சியர் என்று மகளிரும் வழங்கப்பெற்றனர். இவர்கள் இந்நிலத்தில் வரகு, சாமை போன்ற பயிர்களை விளைவித்து வந்தனர். கொன்றை, காயா, குருந்தம் போன்றவை இந்நிலத்தில் வளமுற வளரும் மரங்களாகும். முல்லைப் பூவும், தோன்றி மலரும் இந்நிலத்தில் நறுமணம் வீசும். கானக் கோழியும், மானினங்களும், முயல்களும் முல்லை நிலத்தில் களித்துத் திரியும் உயிரினங்களாகும். பொங்கு புனலுடன், ஒடுங்காண்யாறுகளும் இந்நிலத்திற்கு நீர்வளம் தருவன. இவர்கள் பாடி, சேரி என்று பெயர் கொண்ட வாழிடங்களில் வீடுகளமைத்து வாழ்ந்தனர். ஆநிரைகளை மேய்த்தல் இவர்களது சிறந்த தொழிலாகும். முல்லை நில மக்கள் குழலூதியும், முல்லை யாழில் சாதாரிப் பண்ணை இசைத்துப் பாடியும் இன்புறுவர். இந்நிலமக்கள் மாயோனான கண்ணனை வழிபட்டு வந்தனர் என்பதைச் 'செங்கண்மால்' என்று பரிபாடலும்.

**"அங்கண் முல்லையின் தெய்வமென் றருந்தமி ழுரைக்கும்**

**செங்கண் மால்"**[6]

என்று திருத்தொண்டர் புராணமும் கூறுகின்றன.

---

6. கி.வா.ஜகந்நாதன் (உ.ஆ.), பெரிய புராண விளக்கம், ப.262.

**மருதநில மக்கள்**

வயலும் வயலைச் சார்ந்த இடமுமாகிய மருதநிலம் ஆருயிர் மருந்தாகிய நெல்லினை உழுது விளைத்தற்கு ஏற்றதாகும். கிணறுகளும், பொய்கைகளும், ஆறுகளும் இந்நிலத்தை வளம்படுத்தும். மருதநில மக்களில் உழவர், கடையர் என்று ஆடவருக்கும், கடைச்சியர், உழத்தியர் என்னும் பெயர்களை மகளிர்க்கும் வழங்கினர். பசுமைக் காட்சி வழங்கும் பயிர் நிலங்களை அடுத்துக் காஞ்சி, மருதமரங்கள் காணப்படும். வஞ்சிக்கொடி வளமுற்றிருக்கும். தாமரை, கழுநீர், குவளை ஆகிய நீர்ப்பூக்கள் இந்நிலத்திற்கு உரியவை. கழனிகளில் செந்நெல்லும், வெண்ணெல்லும் விளைவிக்கும் இந்நிலவாசிகள், அக்கழனிகளுக்கு இடையே அமைந்திருக்கும் மூதூர், பேரூர் என்று பெயர் பெற்ற ஊர்களிலே வாழ்ந்து வளங்கொழிப்பர். எருமை, நீர்நாய் போன்ற விலங்குகளும், நாரை, அன்னம், குருகு போன்ற பறவைகளும் மருத நிலத்தைத் தம் வாழிடமாக உடையன. இந்திரன் இந்நிலத்திற்குரிய தெய்வமாவான். இங்கு வாழ்வோர் மருதயாழ் பயில்வதும், மருதப்பண் பாடுவதும் மரபு.

**பாலைநில மக்கள்**

நான்கு நிலங்களுள் முல்லையும், குறிஞ்சியும் முறைமையில் திரிந்து பாலை நிலமாதல் உண்டு. குறிஞ்சிக்கும், முல்லைக்கும் இடையில் இயல்பாகவன்றிச் செயற்கையால் பாழ்படுவதால் தோன்றும் பாலையைத் தொல்காப்பியர்நடுநிலைத் திணை என்பர். பிற்காலத்தவர் இதனை ஒரு தனிநிலமாகவே கொள்வர். நானிலங்களுமே தம் இயற்கை வளமிழந்து பாழ்பட்டுப் பாலையாகும் என்று கூறுவதும் உண்டு.

**“நானிலம் வாய்க்கொண்டு நன்னீரறமென்று கோதுகொண்ட**

**வேனிலஞ் செல்வன் சுவைத்தமிழ் பாலை”**[7]

என்ற நம்மாழ்வார் வாக்கால் இதனை அறியலாம். இங்கு வாழ்வாருள் ஆடவர்க்கு எயினர், மறவர் என்பன பெயர். பெண்பாலர் எயிற்றியர், மறத்தியர் எனப்படுவர். இன்னோர் பயிர்த் தொழில் புரிதற்கு ஏற்ற நிலவாய்ப்பு இன்மையால், வழிப்பறி செய்தும், கொள்ளையிட்டும் வாழ்க்கை நடத்தினர். உழிஞை, பாலை, இருப்பை என்னும் மரங்கள் பாலைக்கு உரியவை. குரா, மரா என்னும் மரப்பூக்கள் இந்நிலத்தில் உண்டு. இங்கே சிறப்பான நீர் நிலைகள் இல்லை, நீர் வற்றிய பள்ளங்களும், பாழ்ங்கிணறுகளுமே

---

7. பெரியவாச்சான் பிள்ளை (உ.ஆ.), திருவித்தம், ப.162.

காணப்படுகின்றன. பாலை நிலத்தார் வாழும் ஊருக்குக் குறும்பு என்பது பெயர். விடலை, காளை என்பவை இந்நிலத்துத் தலைவனுக்கு வழங்கிய பெயர்களாகும்.

**நெய்தல் நில மக்கள்**

கடலும் கடல் சார்ந்த இடமுமாகிய நெய்தல் நிலத்தில் வாழும் ஆடவர் பரதவர், நுளையர் என்றும், பெண்பாலர் பரத்தியர், நுளைச்சியர் என்றும் வழங்கப்படுவர். இவர்கள் கடற்கரையை அடுத்துள்ள பட்டினம், பாக்கம் என்னும் குடியிருப்புக்களில் மீன்பிடித்தல், உப்பு விளைவித்தில் ஆகிய தொழில்களை மேற்கொண்டு வாழ்வர்;உப்பும், மீனும் விற்றுப் பண்டமாற்றாக உணவுப் பொருள்களைப் பிற நிலத்தவரிடமிருந்து பெறுவர். இந்நிலத்தில் புன்னை மரமும், தாழைச் செடிகளும் சிறப்பாகக் காணப்படும். தாழையும், நெய்தலும் இந்நிலத்திற்குரிய மலர்களாகும். கடலில் முதலையும், சுறாமீனும், கரைகளில் கடற்காகம், அன்றில், அன்னம் போன்ற பறவைகளும் மிகுதியாக வாழும். மணற்கேணிகளும், உவர்க்கழிகளும் இங்குள்ள நீர்நிலைகளாகும். நெய்தல் நிலத்துத் தலைமகனுக்குத் துறைவன், கொண்கன், சேர்ப்பன் என்னும் பெயர்கள் வழங்கின. நீருக்குக் கடவுளாகிய வருணனை இவர்கள் வழிபட்டு வந்தனர். நெய்தற் பறையும், விளரியாழும், செவ்வழிப் பண்ணும் இந்நிலத்திற்கு உரியவை ஆகும்.

ஒரு திணை நிலத்து வாழும் மக்கள் பெயர் நிலம் பற்றிய பெயரும், தொழில் பற்றிய பெயரும் என இருவகைப்படும். ஆயர் என்பது முல்லை நிலத்தில் வாழும் மக்களைக் குறித்து வழங்கும் நிலப்பெயராகும். வேட்டுவர் என்பது வேட்டைத் தொழில் புரிந்து வாழும் மக்களைக் குறித்து வழங்கும் தொழிற்பெயராகும். இவை ஆண்மக்களைக் குறித்த பெயர்கள். இவ்வாறே இவர்களோடு தொடர்புடைய பெண்மக்களைக் குறித்த பெயர்களும் சங்க இலக்கியங்களில் இடம்பெற்றுள்ளமையைக் காணலாம்.

நெய்தல் நில மக்களைப் பற்றிப் பல இலக்கண, இலக்கியங்கள் கூறுகின்றன. அவற்றுள்,

**"பெயரும் வினையுமென்று ஆயிரு வகைய**
**திணைதொறும் மரீஇய திணைநிலைப் பெயரே"**[8]

8. இளம்பூரணர் (உ.ஆ.), தொல்காப்பியம், பொருளதிகாரம், ப.18.

என்ற தொல்காப்பிய நூற்பாவிற்கு உரை எழுதிய நச்சினார்க்கினியர். நெய்தல் நில மக்கள் பெயராக நுளையர், திமிலர், பரதவர், நுளைத்தியர், பரத்தியர் என்றும், தலை மக்கள் பெயராகக் கொண்கன், துறைவன், சேர்ப்பன், மெல்லம் புலம்பன் என்றும், பரத்தி, நுளைச்சி என தலைவி பெயர் வரும்”[9] என்று கூறியுள்ளார்.

சங்க இலக்கிய நூல்கள், “நெய்தல் நிலத் தலை மக்களைக் கொண்கன், துறைவன், சேர்ப்பன், மெல்லம் புலம்பன் எனவும், நெய்தல் நிலப் பொது மக்களில் ஆடவர்களைப் பரதவர், பரதர், திமிலர், திமிலோன், நுளையர் எனவும், பெண்களைப் பரதவர் மகளிர், நுளைமகள்”[10] எனவும் குறிப்பிடுகின்றன.

இலக்கண, இலக்கியங்கள் மட்டும் அல்லாமல் நிகண்டுகளும் நெய்தல் நில மக்களைப் பற்றிக் கூறுகின்றன. சூடாமணி நிகண்டு நெய்தல் நில மக்களை,

**“பரதவர் நுளையரோடு பஃறியார் திமிலர்சாலர்**
**கருதிய கடலர்கோலக் கழியரே நெய்தல் மாக்கள்**
**விரவிய பரத்திமேவு நுளைச்சியே அளத்தி நீண்டு**
**பெருகிய கடற்பிணாவே நெய்தலிற் பெண்ணின் நாமம்”**[11]

என்றும்,

**“கொண்கனே துறைவனோடு குறித்த மெல்லம்புலம்பன்**
**தண்கடல் சேர்ப்பன் நெய்தல் தலைவனைச் சாற்றுநாமம்”**[12]

என்றும் கூறுகின்றது.

மேற்கூறிய சான்றுகளால் நெய்தல் நிலத்தின் ஆண் மக்கள் நுளையர், திமிலர், பரதவர் எனவும், பெண்மக்கள் நுளைத்தியர், பரத்தியர், நுளைச்சியர் எனவும் வழங்கப்பட்டனர் என்பதை அறியமுடிகின்றது.

---

9. நச்சினார்க்கினியர்(உ.ஆ.), தொல்காப்பியம், பொருளதிகாரம், ப.47.
10. தி. முத்து கண்ணப்பன், சங்க இலக்கியத்தில் நெய்தல் நிலம், ப.170.
11. நா. கதிரைவேற்பிள்ளை(உ.ஆ.), சூடாமணிநிகண்டு, ப.48.
12. மேலது, ப.49.

## நெய்தல் நில ஆடவர்

நெய்தல் நிலத் தலைமகன் பெயர்களாகத் துறைவன், கொண்கன், சேர்ப்பன் என இலக்கண நூல்களும், கொண்கன், துறைவன், சேர்ப்பன், புலம்பன் என்று இலக்கியங்களும் குறிப்பிடுகின்றன. சங்க இலக்கியப் பாடல்களில் சுட்டிக் காண்பிக்கப்படும் நெய்தல் நிலத் தலைமக்கள் அக்காலத்தமிழ்ச் சமுதாயத்தில் மிக உயர்வாக மதிக்கப்படும் நிலையில் வாழ்ந்தனர். சான்றாக நற்றிணைப் பாடலொன்றில் உலோச்சனார் தேரில் செல்லும் கொண்கனை,

**"நடுநாள் வரூஉம் இயல் தேர்க் கொண்கனொடு**

**செலவு அயர்ந்திசினால் யானே"**[13]

எனக் குறிப்பிடுவதிலிருந்து அக்காலத் தமிழ்ச் சமுதாயத்தில் உயர்ந்த மதிப்புடனும், செல்வச் செழிப்புடனும் நெய்தல் நிலத் தலைமக்கள் வாழ்ந்துள்ளதை அறிய முடிகிறது.

### உமணர்கள்

உமணரைப் பற்றி ஓரளவு முழுமையான செய்திகள் இலக்கியங்களின் வழிக் கிடைக்கப்பெறுகின்றன. உப்புவாணிகர் உமணர் எனப்பட்டனர். உமணர்கள் பரதவரினின்றும் வேறானவர்களாகக் காணப்படுகின்றார்கள். நெய்தல் நிலத்தில் வாழும் இவர்கள் உப்பு வாணிகத்தில் ஈடுபட்டவர்களாகவும், உப்பு விளைவிப்பவர்களாகவும் இருக்கின்றனர். உமணர் என்போர், "உள்நாட்டுப் பகுதிகளில் உப்பினை விற்று நெல்லைப் பெறும் பணியைப் பரதவர் செய்யவில்லை. அவர்களிடமிருந்து உமணர் எனப்படும் நாடோடி வாணிகக் குடியினர் உப்பினைப் பெற்று வண்டிகளில் ஏற்றிக் குடும்பம், குடும்பமாக இருந்து, ஊர் ஊராகச் சேரி சேரியாகச் சுற்றி வரும் வாழ்க்கையை மேற்கொண்டார்கள்"[14] என்று ராஜ்கௌதமன் குறிப்பதிலிருந்து உமணர்கள் பரதவர்களிடம் இருந்து வேறுபட்ட தொழிலைச் செய்தவர்கள் என்பது புலப்படுகிறது.

உமணர்கள் கடற்கரை கடல் சார்ந்து வாழ்ந்தனர் என்பதை, "கடற்கரையிலும், கழிக்கரையிலும் உள்ள உவர் நிலத்தில் சிறுசிறு பாத்திகளமைத்து, அவற்றில் கடல் நீரினையும், உப்பங்கழி நீரையும் பாய்ச்சி விளைவிப்பர். சிலவிடங்களில் உவர்

---

13. பின்னத்தூர் நாராயணசாமிஐயர் (உ.ஆ.), நற்றிணை நானூறு, ப.324.
14. ராஜ்கௌதமன், பாட்டும் தொகையும் தொல்காப்பியமும் தமிழ்ச் சமூக உருவாக்கமும், ப.199.

நிலத்தடியிலேயே மிகுந்த உப்புச் சத்துள்ள நீரூற்றுக்கள் உள்ளன. அங்கெல்லாம் அந்நீரை வெளிக்கொணர்ந்து பாத்திகளில் பாய்ச்சுவர். ஞாயிற்றின் வெம்மையால் நீர்வற்றி உப்புப் பூத்துக்காணும். நெய்தல் நிலமக்கள் உப்பு விளைவித்து அதனைப் பலவிடத்தும் சென்று விற்பர். இவ்வாறு உப்புத் தொழிலில் ஈடுபட்டு உள்ளவர் உமணர் என்றழைக்கப் படுகின்றனர்"[15] என உப்பு விளைவித்தவர்கள் பற்றிக் கூறுகிறார் முத்து கண்ணப்பன்.

உமணர்கள் பூங்கொத்துக்களுடைய வேப்ப மரத்தின் இலைகளால் பின்னப்பட்ட மாலையை அணிந்திருந்தனர். பருத்த வலுவுடைய தோளையும், முறுக்கலடைந்த உடலையும் உடையவர்கள். சிறிய துளையுடைய வளைவான நுகத்திடை எருதுகள் பிணைக்கப் பட்ட பெருங்கயிற்றைக் கையில் பிடித்து வண்டியை ஒழுங்குபடுத்திப் பாதுகாத்து வந்தனர். அவ்வாறு வரும் போது உணவில் இடப்படும் உப்பின் விலை சொல்லி ஊர்கள் தோறும் பெரும் சாலை வழியே உப்பு வாணிகர்கள் செல்வதை,

**"சிறுதுளைக் கொடுநுகம் நெறிபட நிரைத்த**
**பெருங்கயிற்று ஒழுகை மருங்கில் காப்ப**
**சில்பத உணவின் கொள்ளை சாற்றி**
**பல்லெருத்து உமணர் பதிபோகு நெடுநெறி"**[16]

என்ற பெரும்பாணாற்றுப்படைப் பாடல் அடிகள் கூறுகின்றன. உமணர்களின் தோற்றதையும், இவ்விடத்தில் இயல்பையும் அறிய முடிகின்றது.

உமணர்கள் வண்டியில் ஏற்றிய உப்பின் பாரம் குறித்த சிந்தனையுடனேயே எப்பொழுதும் வண்டியைச் செலுத்துவதை,

**"எருதே இளைய நுகம் உணராவே**
**சகடம் பண்டம் பெரிது பெய்தன்றே**
**அவல் இழியினும் மிசை ஏறினும்**
**அவணது அறியுநர் யார்? என உமணர்**
**கீழ்மரத்து யாத்த சேம அச்சு அன்ன"**[17]

15. தி. முத்துகண்ணப்பன், சங்க இலக்கியத்தில் நெய்தல் நிலம், ப.200
16. பொ.வே. சோமசுந்தரனார் (உ.ஆ.), பெரும்பாணாற்றுப்படை, ப.59.
17. ஔவை சு.துரைசாமிப்பிள்ளை (உ.ஆ.), புறநானூறு(பகுதி-I), ப.234.

என்று புறநானூற்றுப் பாடல் சுட்டுகிறது. இளைய எருதுகள் பூட்டப்பட்ட வண்டியில் உப்பின் பாரம் அதிகமாக இருத்தலின், பள்ளம் மேடெங்கும் ஏறி இறங்கும் போது, பாரத்தினால் சக்கரத்தின் அச்சு முறிந்துவிடுமோ என்று நினைத்துக் கொண்டே வண்டியைச் செலுத்தினார்கள்.

உமணர்கள் பெரும்பாலும் உப்பு விளைவித்தலிலும், விளைவித்த உப்பினைக் கொண்டு போய் விற்பனைச் செய்வதிலும் ஈடுபட்டனர். நெடுந்தொலைவுகளுக்கு அவர்கள் உப்பைக் கொண்டு சென்று விற்பதை வழக்கமாகக் கொண்டிருந்தனர் என்பதால் ஓரிடத்தில் நிலையான வாழ்வை அவர்கள் கொண்டு இருக்கவில்லை என்றும் தெரிகின்றது.

**சங்க இலக்கியத்தில் பரதவர்**

பரதவர், பரவர் அல்லது பரதர் என்போர், தமிழகத்தின் மிகப் பழமையான மக்கள் குழுமத்தில் ஒரு பிரிவினர். முத்துக்குளித்தல், மீன்பிடித்தல், சங்கறுத்தல், உப்பு விளைவித்தல் போன்றவை இவர்களது தொழில்கள். கடல் சார்ந்த தொழிலில் ஈடுபடும் இவர்கள் பண்டைய காலங்களில் போர் வீரர்களாக அரச படைகளில் பணியாற்றினர். பல சங்க இலக்கியங்கள் இவர்கள் புகழைப் பாடுகின்றன. பல்வேறு கல்வெட்டுக்கள் மற்றும் சங்க இலக்கிய நூல்கள் இந்தப் பரதவர்களின் சிறப்பை எடுத்துரைக்கின்றன.

பரதவ மக்கள் கட்டான உடலமைப்பு உள்ளவர்கள். முறுகேறிய தசையினையும், பரந்து அகன்ற மார்பினையும், குன்றெனத் திரண்டிருந்த தோள்களையும் உடையவர்கள். அஞ்சாத நெஞ்சமும் ஆற்றலும் கொண்டவர்கள். துடுக்கும், மிடுக்கும், துணிவும் மிக்கவர்கள். ஓங்கி உயர்ந்து எழும் அலைகளில் ஊடுருவிப் பாய்ந்து பயின்று, அச்சத்தை அடியொடு அகற்றிய ஆண்மையாளர்கள் என்பதை,

**"படலைக் கண்ணி பருஏர் எறுழ்த் திணிதோள்**
**முடலை யாக்கை முழுவலி மாக்கள்"**[18]

என்ற பாடல் அடிகள் விளக்குகின்றன. இவ்வாறு சங்க இலக்கியங்களின் வாயிலாகப் பரதவ மக்களின் தோற்றம் குறித்து அறிந்து கொள்ளமுடிகின்றது.

---

18. பொ.வே.சோமசுந்தரனார்(உ.ஆ.), பத்துப்பாட்டு (பகுதி- II), ப.58.

**பரதர்**

பரதர் என்ற சொல்லானது நெய்தல் நில மக்களைக் குறிப்பதாகும். பரதர் என்ற சொல் பெரும்பாணாற்றுப் படையில் ஓரிடத்திலும், மதுரைக்காஞ்சியில் ஓரிடத்திலும், திணைமொழியில் ஓரிடத்திலும் காணப்படுகின்றன.

**"மாட மோங்கிய மணன்மலி மறுகிற்**

**பரதர் மலிந்த பல்வேறு தெருவின்"**[19]

என்று பெரும்பாணாற்றுப் படையிலும்,

**"முழங்குகடல் தந்த விளங்குகதிர் முத்தம்**

**ஆரம்போழ்ந் தறுத்த கண்ணேர் இலங்குவளை**

**பரதர் தந்த பல்வேறு கூலும்"**[20]

என்ற மதுரைக் காஞ்சியிலும் வந்துள்ள பரதர் என்னும் சொல் பல்வேறு பண்டங்களையும் கலங்களின் வழி ஏற்றுமதி, இறக்குமதி செய்யும் வாணிகத் தொழிலில் ஈடுபட்டிருந்த பரதவரையே குறிப்பதாக அமைகின்றது. திணைமொழியில்,

**"கடல் கொழித்திட்ட கதிர்மணி முத்தம்**

**படம் அணி அல்குல் பரதர் மகளிர்"**[21]

என்ற பாடலடிகளில் வரும் பரதர் என்ற சொல் நெய்தல் நில மக்களையே குறிப்பிடுகின்றது. சிலப்பதிகாரத்தில்,

**"பரதர் மலிந்த பயங்கெழு மாநகர்**

**முழங்குகடல் ஞால முழுவதும் வரினும்"**[22]

என்ற இடத்தில் வரும் 'பரதர்' என்ற சொல்லுக்குக் 'கடலோடிகள்' என்றே அரும்பதவுரை கூறுவதும் இங்கு குறிப்பிடத்தக்கது.

---

19. நச்சினார்க்கினியர் (உ.ஆ.), பத்துப்பாட்டு மூலமும் உரையும், ப.185.
20. பொ.வே.சோமசுந்தரனார்(உ.ஆ.), மதுரைக்காஞ்சி, ப.119.
21. அ.நடராசபிள்ளையவர்கள்(உ.ஆ.), திணைமொழியைம்பது, ப.43.
22. உ.வே. சாமிநாதஐயர்(உ.ஆ.), சிலப்பதிகாரம், ப.42.

ஆதலின், 'பரதர்' என்ற சொல்லுக்கு வாணிகர் என்ற பொருள் கொண்டால் வாணிகம் செய்யும் பரதவரைக் குறிப்பதாகும்.

**பரதவர் - பெயர்க் காரணம்**

பரதவர் என்ற சொல் குறித்துப் பல விளக்கங்கள் உள்ளன. பரதவரைக் குறிக்கும் பரதர், பரவர் என்ற சொல்லாட்சிகள் எழுத்து வேறுபாட்டினைக் கொண்டதாக இருந்தாலும் பொருள் ஒன்றே. பரதவர் என்ற சொல்லிலிருந்து தகரம் கெட்டுப் பரவர் என்ற சொல்லும், வகரம் கெட்டுப் பரதர் என்ற சொல்லும் தோன்றியதாக எண்ண முடிகின்றது. துரை அரங்கசாமி, "பரதவர் என்ற சொல் 'பர' என்ற பகுதி அடியாகப் பிறந்து பரவை(கடல்) என்ற சொற்கள், 'விரிதல்' என்று பொருள்படும். பொருள் சிறப்புக் குறிக்கும் 'து' என்ற உறுப்பு 'பர' என்னும் அடிச்சொல்லோடு சேரப் 'பரது' என்ற சொல் பிறக்கும். இதனோடு 'அர்' விகுதி சேர்ந்தமையால் 'பரதர்' என்னும் சொல் பிறந்திருக்கலாம்"[23] என்கிறார். ஆகவே பண்டையக் காலத்தில் பரதவர் என்ற சொல் கடலோரத்தில் வாழ்ந்த மீனவ மக்களைக் குறிப்பதாக அமைகின்றது.

"பரதர் என்றால் நெய்தல் நில மக்கள், வைசியர் எனவும் பரதவர் என்ற சொல்லுக்குத் தென் திசை ஆண்ட குறுநில மன்னர்கள்"[24] எனவும் அகராதிகள் பொருள் கூறுகின்றன.

பரதவர் என்பதற்கு அபிதான சிந்தாமணி, "நெய்தல் நில மாக்களில் ஒருவகைச் சாதியார், வலைவீசின திருவிளையாடல் விழா நடத்திவிப்போர்"[25] என்றும், இவர்கள், "கடலோடி வகுப்பினர்"[26] என்றும் குறிக்கின்றது. வலைவீசின என்ற சொல் அவர்கள் மீன்பிடித்தலைத் தொழிலாகக் கொண்டவர்கள் என்பதைக் குறிக்கிறது. பரதவர் என்பதை, "குறுநில மன்னர்களில் ஒரு வகையினர்"[27] என்றும் சங்க இலக்கியச் செய்திக்களஞ்சியம் குறிப்பிடுகிறது. கடல் சார்ந்த மக்கள் பல பெயர்களில் அழைக்கப்பட்டாலும் பரதவர் என்பதே பொதுவாகக் குறிக்கப்படுகிற பெயராக

---

23. துரை, அரங்கசாமி, சங்ககாலச் சிறப்புப்பெயர்கள், பக்.272 -273.
24. ஏ.இராமையா, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி, ப.303.
25. ஆ.சிங்காரவேலு முதலியார், அபிதான சிந்தாமணி, ப.1262.
26. மேலது.
27. தா.கோவேந்தன், சங்க இலக்கியச் செய்திக் களஞ்சியம், ப.197.

இருக்கிறது. "நெய்தல் நில மருவிய குலப்பெயரால் பரதவர். நுளையர், திமிலர் என்ற ஆண்களைக் குறிக்கும் பெயர்களில் முதலாவதான பரதவர் என்ற பெயர் மட்டுமே சங்க இலக்கியத்தில் பல்கி வழங்கப்பட்டுள்ளது"[28] என்ற முத்துகண்ணப்பனின் கூற்று இதனை மெய்ப்பிக்கிறது. இதனால் பரதவர் என்ற சொல் கடலை வாழ்வாதாரமாகக் கொண்டு வாழும் நெய்தல் நில மக்களைக் குறிக்கப் பயன்படுத்தப்பட்டது என்பது தெளிவாகின்றது.

**பரதவர் குறுநில மன்னர்**

பரதவர்கள் முத்துக் குளித்தலில் ஈடுபட்டு அவ்வாணிகத்தில் தலைமையும், உரிமையும் பெற்று விளங்கிய செய்திகள் பல உள்ளன. அவர்கள் சிற்றரசர்களாகவும், குறுநில மன்னர்களாகவும் விளங்கியுள்ளனர். பாண்டியப் பெருமன்னர்களும், சோழப் பேரரசர்களும் பரதவர்களின் வன்மையையும், திண்மையையும், படை வலிமையையும் கண்டு பலகாலம் பெருங்கவலை கொண்டிருந்த செய்திகளும் இலக்கியத்தால் பெறப்படுகின்றன.

பரதவர்கள், தம் பகைவர் கண்டஞ்சிக் கலங்கும் படியான வலிமையினையும், ஆற்றலையும், நெஞ்சுரத்தையும் கொண்டிருந்தனர். 'அழிப்போம்' என வஞ்சினம் கூறினால். அவர் எவராயினும் அழித்தே தீருவர் என்பதை,

**"ஒன்று மொழி ஒலி இருப்பின்**
**தென் பரதவர் போர் ஏறே"**[29]

என்று மாங்குடி மருதனார் மதுரைக் காஞ்சியில் குறிப்பிடுகின்றார்.

சங்க காலத்தில் பாண்டிய நாட்டின் தென் பகுதியை ஆண்டு வந்த குறுநிலத் தலைவர்களான தென் பரதவர்கள் சோழ, பாண்டியப் பேரரசுகளோடு முரண்பட்ட போது அவர்களால் வெல்லப்பட்டனர். சான்றாக, தென்னாட்டில் புகுந்து வம்பு செய்த தென்பரதவர்களைச் செருப்பாழி எறிந்த இளஞ்சேட் சென்னி வென்றுள்ளதை,

**"தென் பரதவர் மிடல்சாய**
**வடவடுகர் வாளோட்டிய"**[30]

என்ற புறநானூற்றுப் பாடல் அடிகள் கூறுகின்றன.

---

28. தி. முத்துகண்ணப்பன், சங்க இலக்கியத்தில் நெய்தல் நிலம், ப.169.
29. நச்சினார்க்கினியர் (உ.ஆ.), மதுரைக்காஞ்சி, ப.297.
30. ஔவை சு.துரைசாமிப்பிள்ளை (உ.ஆ.), புறநானூறு (பகுதி-2), ப.382.

இவர்களைத் "தென்பரதவர் என்பார் தென்னாட்டின் கண் இருந்து, குறும்பு செய்து வந்த குறுநில மன்னர்களாகிய பரதவர் என்றும், இவர்களைச் சோழ மன்னர்களும், பாண்டிய மன்னர்களும் வென்று அடிமைப்படுத்தினர்"[31] என்றும் விளக்குகிறார் மதுரைக் காஞ்சி உரையாசிரியர் பொ.வே.சோமசுந்தரனார்.

தர்ஸ்டன், 'பரதவர்கள் ஒரு காலத்தில் பேராற்றல் பெற்றவர்களாக விளங்கினர். கடற்செலவில் தமக்கிருந்த சிறந்த திறமையும், முதிர்ந்த அனுபவமும் அவர்களை, ஒப்பாரும் மிக்காரும் இல்லாத உயர் தலைமையாளராக விளங்கச் செய்தன. அவர்களுள் முறையான அரச பரம்பரையும் இருந்து வந்தது. அப்பரம்பரையினர் ஆதியரசர் என அழைக்கப்பட்டு வந்தனர்"[32] என்று கூறுவதும் கருத்தில் கொள்ளத்தக்கது.

இவற்றால் பரதவர்கள் தமிழகக் கடற்கரையில் பேராதிக்கம் கொண்டு வாழ்ந்தார்கள் என்பது தெளிவாகின்றது. அவர்கள் முத்துக் குளிக்கும் தொழிலும், வாணிகத்திலும் முழு உரிமை பூண்டிருந்த ஓர் ஆற்றல் மிகு இனமாகப் பல்லாண்டுகள் இருந்துள்ளனர் என்பதற்குப் பல சான்றுகள் உள்ளன.

"போர்ச்சுகீசியர்கள் கன்னியாகுமரியைச் சுற்றி வந்த போது, மன்னார் குடாப் பகுதி முழுவதுமுள்ள முத்துக் குளிக்கும் உரிமையும், தலைமையும் பரவர்களிடமே (பரதவர்கள்) இருந்ததைக் கண்டறிந்தனர். கணக்கெடுக்கவியலாத பல நெடுங்காலமாகவே இம்முத்துக் குளித்தல் இப்பரதவர்களின் ஆதிக்கத்தில் இருந்து வருகிறது"[33] என்று கூறும் ஹார்ன்வெல் என்பவரின் அறிக்கைக் குறிப்பும் இதற்குச் சான்று பகர்வதாகும்.

"முத்துக் குளித்தலுக்கு முழு உரிமை பூண்டவர்கள் பரதவர்களின் தலைவர்களே; முத்துக்குளித்தலால் வரும் செல்வத்தை அந்தந்தப் பகுதியின் தலைவர்கள் தங்களுக்குள் பங்கிட்டுக் கொள்வர். அதனால் தலைவர்கள் சிறந்த செல்வமும், செல்வாக்கும், தலைமையும் பெற்றுத் தன்னிகரற்று விளங்கினர். படை வீரர்களையும் வைத்திருந்தனர். அவற்றின் துணையால் பிற அரசர்களின் கொடுமைகளினின்றும், அவ்வரசர்களின் குடிகளால் ஏற்படும் தொல்லைகளினின்றும் தங்களைக் காத்துக் கொண்டனர்.

---

31. பொ.வே.சோமசுந்தரனார்(உ.ஆ.), பத்துப்பாட்டு மூலமும் உரையும் (பகுதி-2), ப.59.
32. E.Thurston, Castes and Tribes of Southern India. p.141.
33. Harnwell, Report on the Indian Pearl Fisheries in the Gulf of Mannar, p.190.

பரதவர்கள் தாம் பெற்றிருந்த செல்வச் செருக்காலும், படை பலத்தாலும் அரசர்களை அணுவளவும் மதிக்காமலும். அவர்களுக்கு அடங்காமலும் இருந்துள்ளனர். இந்நிலை அரசர்களுக்குப் பெருங்கவலையை அளித்திருக்கும். பின்னர் 'மூர்' என்ற வகுப்பினர் மதுரைக் கடற்கரையருகே வந்து குடியேறி முத்துக் குளிக்கும் தொழிலில் ஈடுபட்டனர். சின்னாளில் பரவர்களுக்கும், அம்மூர் மரபினர்களுக்கும் தொழிலில் போட்டி ஏற்பட்டு அதனால், பூசலும் போரும் விளைந்தன. மன்னர்கள் பரதவர் மீதிருந்த வெறுப்பினாலும், அச்சத்தாலும் அம்மூர் மக்களோடு சேர்ந்து கொண்டு பரதவர்களை அடக்கிப் பணிய வைப்பதில் முனைந்தனர். இறுதியில் பரதவர்களின் செல்வமும், செல்வாக்கும் ஒடுங்கின"[34] என்று தர்ஸ்டனும் குறிப்பிட்டுள்ளார்.

இச்செய்திகளினின்று ஒப்பற்ற பேரரசர்களாய் தமிழகத்தே நிகழ்ந்த பாண்டிய மன்னர்களையும், சோழப் பேரரசர்களையும் எதிர்க்கத்தக்கப் பேராற்றலும், பெரும்படை பலமும் பரதவர்கள் பெற்றிருந்தனர். அவ்வளவு வலிமையும், செல்வமும், செல்வாக்கும் பரதவர்கள் படைத்து வாழக்காரணம் அவர்கள் முத்துக்குளித்தலுக்கு முழு உரிமை பூண்டு கடல் வாணிகத்திலும் தலை சிறந்து விளங்கியமையே ஆகும்.

**பரதவர் நாகவகுப்பினர்**

தமிழகத்தில் வாழ்ந்த மிகப் பெரிய பழைய குடியினர் வில்லவர், மீனவர் என்பவர்கள் ஆவர். வில்லவர் அல்லது வில்லாளிகள் மலைப் பகுதிகளிலும், காடுகளிலும் வாழ்ந்து வேட்டையாடும் தொழிலால் வாழ்க்கை நடத்தினார்கள். மீனவர் அல்லது செம்படவர் ஆற்றுத்தீரங்கள், தாழ்வெளிகள், கடற்கரை ஆகிய பகுதிகளில் வாழ்ந்தார்கள். அவர்கள் மீன்பிடித்து வாழ்க்கை நடத்தினார்கள். இவ்விரு கிளையினத்தவர்களும், "இந்தியா முழுவதும் பரவியிருந்த ஒரு முற்பட்ட கால மனித இனத்தவர். அவர்கள் இன்றும் இரஜபுதனத்திலும், கூர்ச்சரத்திலும் தங்கியுள்ளார்கள். அங்கே அவர்கள் பீலர்கள் என்றும், மீனவர்களென்றும், கன்னட நாட்டில் பில்லவர்"[35] என்றும் அழைக்கப்படுகிறார்கள்.

பரதவர்கள் நாகவகுப்பினர் என்றும் அழைக்கப்படுவது உண்டு. "பரதவர் கடற்கரையில் வாழ்ந்து மீன்பிடிப்பதாலோ, கடல் வாணிகத்தாலோ வாழ்க்கை நடத்திய நாகவகுப்பினர் ஆவர். அவர்கள் முத்தும், சங்கும் எடுக்கக் கடலில் மூழ்கினர்.

34. E. Thurston, Castes and Tribes of Southern India, p.149.
35. வி. கனகசபை, ஆயிரத்தெண்ணூறு ஆண்டுகளுக்கு முற்பட்ட தமிழகம், ப.75.

அத்துடன் மூழ்குமிடத்தில் சுறாக்கள் வராமல் தடுப்பதற்குரிய மந்திரமும் அவர்கள் அறிந்திருந்தனர். அவர்கள் தென்பாண்டி நாட்டில் கொற்கையைச் சூழ்ந்த இடத்திலேயே மிகவும் வலிமை மிக்கவர்களாய் இருந்தார்கள். மீனும் ஊனும் உண்டு அவர்கள் வலிமை வாய்ந்தவர்களாயிருந்தனர். விற்படை ஏந்தி அஞ்சாத் தீரங்காட்டிப் போரிட்டதனால், எதிரிகளுக்கு அவர்கள் அச்ச மூட்டினர்"[36] என்று கனகசபைக் குறிப்பிடுகின்றார். இதனால் பரதவர்கள் மிகப் பழமையான குடியினைச் சேர்ந்தவர்கள் என்பதும், நாக வகுப்பினராக இருந்திருக்கலாம் என்பதும் புலனாகின்றன.

**பரவர் - பட்டினவர்**

பரதவர்கள் 'பரவர்' எனவும், 'பட்டினவர்' என்றும் அழைக்கப்படுகின்றனர். "தமிழல் பரவை என்றால் பெரும் நீர்ப் பரப்பு அல்லது கடல் எனப் பொருள்படும். பரவை என்பதிலிருந்து பரவர் என்ற சொல் பிறந்தது (பரவை + அர் - பரவர்). பரவர் தமது ஆதிஇடம் அயோத்தி எனக் கருதுகிறார்கள். இவர்கள் தென்னிந்திய கடலோரங்களிலும், இலங்கையிலும் காணப்படுகின்றனர். இவர்களின் முக்கிய இடம் தூத்துக்குடி. இவர்கள் பிரான்சிஸ் சேவியரால் கிறித்தவ மதத்துக்குத் திருப்பப்பட்டவர்களாவர்.

பரவர்கள் மீன்பிடிப்பர், மரமேறுவர், கிறித்துவருக்கும், தாழ்த்தப்பட்டோருக்கும் துணி வெளுப்பர், பெண்கள் சிப்பியைச் சுட்டுச் சுண்ணாம்பு செய்வர்"[37] என்று ந.சி.கந்தையா கூறியுள்ளார்.

பரதவர் என்ற சொல்லுக்குப் 'பட்டினவர்' என்ற பொருள் உண்டு. வாணிகத் தொழில் புரிபவர் வாணிகர் எனப்பட்டனர். பரதவர்கள் மீன், உப்பு, சங்கு, முத்து இவற்றைக் கொண்டு வாணிகம் செய்வதால், அவர்களும் வாணிகர்களே, வாணிகர்களுக்குப் பொதுவாகச் 'செட்டி' என்ற பட்டம் உண்டு. அவர்கள் பெயருக்கு இறுதியில் இச்செட்டி என்ற பட்டப் பெயரையும் சேர்த்தே வழங்குவர். அவ்வாறே, பரதவர்களில் ஒரு பகுதியினரான பட்டினவர் இன்றும் 'செட்டி' என்ற பட்டத்தையே தம் பெயருக்குப் பின் சேர்த்து வழங்குகின்றனர். பூணூல் அணியும் வழக்கமும் சிலர் மேற்கொண்டுள்ளனர்.

---

36. வி. கனகசபை, ஆயிரத்தெண்ணூறு ஆண்டுகளுக்கு முற்பட்ட தமிழகம், ப.86.
37. ந.சி. கந்தையா, தென்னிந்தியக் குடிகளும் குலங்களும், ப.85.

சிலப்பதிகாரத்தில் பரதவர், பரதர் என்று வரும் சொற்களுக்கு "மீன்வலையையுடைய பட்டினவர், வணிகர், கடலோடிகள்"[38] என்று அரும்பதவுரையும், அடியார்க்கு நல்லார் உரையும் பொருள் கூறுவது கூர்ந்து நோக்கற்குரியது.

"சென்னை, செங்கற்பட்டு, தென்னார்க்காடு, தஞ்சை ஆகிய மாவட்டங்களை யடுத்த கடற்கரையில் வாழும் பரதவர்களில் பெரும்பாலோர் பட்டினவர் என்ற பிரிவைச் சார்ந்தவர்களே. அவர்கள் தம் பெயருக்குப் பின், 'செட்டியார்' என்ற பட்டப் பெயரைச் சேர்த்தே அழைக்கப்படுகின்றனர். அவர்கள் குடியிருப்புகளின் தலைவர்கள் அல்லது நாட்டாண்மைக்காரர்கள், பெரியதனக்காரர்கள், ஊர்செட்டியார்கள் என்றே அழைக்கப் படுகின்றனர். செட்டி என்பது வாணிகரின் பட்டப்பெயர்"[39] என்று உ.வே.சா. குறிப்பிடுகின்றார்.

ஆகவே பரதவர் என்ற சொல் செட்டி, வாணிகர், கடலோடிகள், பட்டினவர் போன்றோரைக் குறிப்பதாகத் தெரிகின்றது.

**சாதுவன் கடல் வாணிகன்**

மணிமேகலை கூறும் சாதுவன் பரதவனே எனக் கருதத் தோன்றுகிறது.

ஆதிரையின் கணவனான சாதுவன், தன் செல்வத்தைக் கணிகைக்கும், வட்டிற்கும், சூதிற்கும் வைத்திழந்தான். மீண்டும் பொருள் திரட்ட வங்கம் போகும் வாணிகர் தம்முடன் தங்கா வேட்கையில் சென்றான். நடுக்கடலில் கடுங்காற்றால் அவன் சென்ற கலம் சிதைய, ஒடிந்த மரத்துண்டொன்றைப் பற்றிக் கொண்டு அலைகடலை நீந்திக் கரைசேர்ந்தான். உடல் சோர்ந்து, நாகரிகத்தின் நிழலும் படராத நாகர் வாழ் மலைப் பக்கக் கடற்கரையில் ஒதுங்கிக் கிடந்தமையை,

**"நளி இரு முந்நீர் வளிகலன் வௌவ**
**ஒடிமரம் பற்றி ஊர்திரை உதைப்ப**
**நக்க சாரணர் நாகர் வாழ்மலைப்**
**பக்கம் சார்ந்தது அவர் பான்மையன் ஆயினன்"**[40]

என்று மணிமேகலை கூறுகின்றது.

---

38. ந.மு. வேங்கடசாமி நாட்டர் (உ.ஆ.), சிலப்பதிகாரம் மூலமும் உரையும், ப.166.
39. உ.வே.சாமிநாதஐயர் (உ.ஆ.), சிலப்பதிகாரம், ப.154.
40. ஔவை சு. துரைசாமிப்பிள்ளை (உ.ஆ.), மணிமேகலை, ப.218.

சாதுவனைக் கொன்று தின்னக் குதூகலத்தோடு ஓடி வந்த நாகமக்கள் அவன், தம் தாய் மொழியில் பேசுவது கண்டு மகிழ்ந்தனர். அவனைத் தொழுது குருவாய் ஏற்று அவன் அறிவுரை கேட்டனர். அவன் பேசிய நாகர் மொழியே அவர்கள் அவன்பால் நட்புறவும், பெருமதிப்பும் கொள்ளக் காரணமாயிருந்தது என்பது குறிப்பிடத்தக்கது.

ஆகவே, சாதுவன், பரதவன் என்பது பெறப்படுகிறது. அவ்வாறே, அச்சாதுவனுடன் வங்கம் போன வாணிகர், சந்திரதத்தன் என்னுமோர் வாணிகன், சிலப்பதிகாரம் கூறும் சில செட்டிகள் ஆகியோரும் பரதவர்களே என்று கூறலாம்.

**பாணர் செம்படவர்**

தமிழகத்தில் உள்நாட்டு நீர்நிலைப் பகுதிகளில் மீன் பிடித்து வாழும் மீனவர்கள் செம்படவர் என அழைக்கப்படுகின்றனர். செப்பு உலோகத்தால் படகு அமைத்து மீன் பிடித்தமையால் அவர்கள் அப்பெயர் பெற்றனர் என்றும், சிவபெருமானின் போர்ப்படை வீரர்களின் பரம்பரையில் வந்தவர்கள். ஆகையினால், சிவன்படையர் என்பது செம்படவர் என்று திரிந்து வழங்கப்படுவதாகக் கூறப்படுகிறது. இவர்கள் பருவதராஜ குலத்தினர் என்றும் தங்களை அடையாளப்படுத்திக் கொள்கிறார்கள்.

இச்செம்படவர்களைப் பற்றி அபிதானசிந்தாமணி, "செம்படவர் தமிழ்நாட்டு வலையர். இவர்கள் பட்டினவர்கள் போல் அல்லாமல் நல்ல நீர் உள்ள ஆறு, ஏரி, குளம், குட்டைகளில் வலை வீசி உயிர் வாழ்கிறவர்கள். இவர்கள் படகோட்டுதலில் வல்லமை பெற்றவர்களாதலாலும் செம்படச்சியாம் அங்கம்மாளைச் சம்புவாகிய சிவனுக்குக் கொடுத்தமையாலும் செம்படவர் எனப்பட்டனர். பர்வதராஜன் செம்புப் படகிலேறி வலை வீசின காலத்தில் அகப்பட்ட இராக்கதருடன் ஒரு ருஷியும் அகப்பட்டு அரசனை உன் கோத்திரம் என்னவென்று வினாவி உன் கோத்திரத்தார் செம்படவராக எனச் சபிக்கப்பட்ட குலத்தினர் ஆதலால் பர்வதராஜ வம்சத்தினர் என்றனர். இவர்கள் கடவுளை வணங்கும் காலத்தில் இவர்களைச் சோதிக்கக் கடவுள், ஒரு பெருமீனை நதியில் தோற்றுவிக்கத் தியானத்தை மறந்து மீனைப்பிடிக்க முயன்றதால் நீங்கள் மீன் வலையராக சபிக்கப்பட்டவர்கள் என்றும் கூறுவர். இவர்கள் தங்களைப் பட்டினவரினும் உயர்ந்தவராக எண்ணுகிறார்கள். இவர்களில் பெரும்பாலானோர் பூசாரிகள், சிலர் லிங்கதாரிகள், மலையனூரில் சிவபூஜை செய்வோர்"[41] எனக் குறிப்பிடுகிறது.

---

41. ஆ. சிங்காரவேலு முதலியார்(ஆசி.), அபிதான சிந்தாமணி, பக்.728 - 729.

சங்க இலக்கியங்களில் குறிப்பிடப்படும் பாணர்களே தற்காலத்தில் 'செம்படவர்' என வழங்கப்படுவதாக ஒரு கருத்துள்ளது. ஏனெனில் பாணர்கள் இசைக்கருவிகள் கொண்டு இசைப்பதிலும். ஆடல், பாடல் கலைகளிலும் வல்லவர்கள். அது போன்று இச்செம்படவர்களும் இசைக்கருவிகள் இசைப்பதிலும்(பம்பை, உடுக்கை), பாடல்கள் பாடுவதிலும், நாடகங்கள் நடிப்பதிலும் வல்லவர்கள். இவர்கள் ஊர்த் தேவதைக் கோயில்களில் பூசாரிகளாகவும், குறி சொல்பவர்களாகவும் பணிபுரிகின்றனர். இவர்களது வசிப்பிடங்கள் மருத நிலப்பகுதிகளிலே அமைந்துள்ளது. ஆகவே சங்க இலக்கியங்களில் குறிப்பிடப்படும் பாணர்களே செம்படவர்கள் எனலாம்.

**பாணரும் மீன்பிடித்தலும்**

பாணர்கள் பாடல் ஆடல்களில் வல்லர்கள்; இசைக் கருவிகளை இயக்கி ஆடியும், பாடியும் காண்போரை மகிழ்வித்த வாழ்பவர்கள். ஏரி, குளங்கள் போன்ற நீர்நிலைகளில் மீன்பிடிப்பது இவர்கள் தொழில் என்பதற்கு இலக்கியங்களில் சான்றுகள் உள்ளன.

பாணர் உள்நாட்டு நீர்நிலைகளில் (ஆறு, ஏரி, குளங்களில்) வலை வீசியும், தூண்டில் இட்டும் மீன் பிடித்தார்கள். அவர்கள் பிடித்த மீன்களைப் பாண்மகளிர் ஊரில் கொண்டு போய்ப் பயிற்றுக்கும், தானியத்துக்கும் மாற்றியதை,

**"முள்ளயிற்றுப் பாண்மகள் இன்கெடிறு சொரிந்த**
**அகன்பெறு வட்டி நிறைய மனையோள்**
**அரிகாற் பெரும்பயறு நிறைக்கும் ஊர"**[42]

என்று ஓரம்போகியார் கூறுகின்றார்.

ஆகவே கடலில் மீன் பிடித்தலில் ஈடுபடுவோர். பரதவர் என்பதும், உள்நாட்டு நீர் நிலைகளில் மீன் பிடிப்பவர் பாணர் என்பதும் புலனாகிறது. உள்நாட்டு மீன் பிடித்தலில் பரதவர் ஈடுபடுவதில்லை.

**புராணமும் பரதவரும்**

"சிவபெருமானின் சாபத்தால் பார்வதி தேவி மீனவர் மகளாகத் தோன்றி, ஒரு மீனவத் தலைவனால் வளர்க்கப்பட்டாள். பின்னர்ச் சிவபெருமான் மீனவக் காளையாக

---

42. பொ.வே. சோமசுந்தரனார்(உ.ஆ.), ஐங்குறுநூறு, ப.75.

வடிவம் தாங்கி வந்து, கடலில் கட்டுக்கடங்காமல் திரிந்து, மீனவர்க்குப் பெருந்தீங்கு விளைவித்து வந்த பெரும் சுறா மீனை அடக்கினார். பின் அம்மீனவர் மகளை மணந்தார்”[43] என்றும் திருவிளையாடற் புராணம் கூறுகிறது.

திருவிளையாடற் புராணக்கதை, அஞ்சத்தக்கப் பெருஞ்சுறாவாகக் கடலில் உலவிப் பரதவர்க்கு இன்னல் விளைவித்தவர், பார்வதியோடு சிவபெருமானால் சாபமிடப்பட்ட நந்திதேவர் என்று கூறுகிறது. ஆனால், “பரதவர்களிடையே வழங்கி வரும் ஒரு பழங்கதையின் படி வேலன் (முருகன்) தான் அச்சுறா மீனாக வந்து கடலைக் கலக்கிப் பரதவர்க்குத் துன்பம் தந்தான். மீனவர் மகளாய்ப் பிறந்த பார்வதியை மணக்க மீனவனாய் வடிவெடுத்து வந்த பரமசிவனார், அச்சுறா மீனை வலை வீசிப்பிடித்து இழுத்தார். அப்போது அம்மீன் கடுமை காட்டவே, ‘வேலா வா! வேலா வா!’ என்று அன்புடன் அழைத்ததால் அம்மீன் எளிதாக வலையோடு வந்துவிட்டது. அதனால் தான் அம்மீனினம் ‘வேலா என்று வழங்கப்பட்டு மருவி, இப்போது வேளா’”[44] என்று வழங்கப்படுவதாகவும் கூறுவர்.

இன்னொரு பழங்கதையும் உண்டு. “அரக்கர்கள் துன்பம் விளைவித்த போது அவர்களை அழிக்கச் சிவபெருமான் படைக்கடவுளான கார்த்திகேயனை உலகத்தில் தோன்றப் பணித்தார். அவ்வாறே கார்த்திகேயன் சரவணப் பொய்கையில் பல வீரர்களோடு தோன்றினார். அந்த வீரர்கள் தாம் மீனவர்கள் என்று கூறுகிறது. உலகம் கடல் பெருக்கால் அழிந்த போது, அம்மீனவ வீரர்கள் ஒரு தோணியில் ஏறிக்கொண்டு கடல் பெருக்கினின்று தப்பி விட்டார்கள். பின் வெள்ளம் வடிந்து அத்தோணி தரை தட்டியதும், அவர்கள் மீண்டும் தரை தட்டிய இடத்தில் குடியேறினார்கள். அந்த இடம் தான் தோணிபுரம் என இன்றும் வழங்கப்படுகின்றது. அவர்களின் மரபினரே பரதவர் என்றும் அப்பழங்கதை கூறுகின்றது”[45] என்கிறார் தர்ஸ்டன்.

எனவே இதிகாசங்களும், புராணங்களும் கூட நெய்தல் நிலம் குறித்தும், மீனவர் குறித்தும் பல செய்திகளை உள்ளடக்கியனவாக உள்ளன.

**பெரியன்**

பொறையாற்றுத் தலைவனான பெரியன் பெரும் கொடையாளன் எனச் சிறப்பிக்கப்படுகிறான். “பெரியன் பெரிய கொடை வள்ளலாய் வாழ்ந்தான். அவனைப்

---

43. ந.மு. வேங்கடசாமி நாட்டார்(உ.ஆ.), திருவிளையாடற்புராணம், ப.161.
44. தி. முத்துகண்ணப்பன், சங்க இலக்கியத்தில் நெய்தல் நிலம், ப.217.
45. E. Thurston, Castes and Tribes of Southern India, p.141.

பற்றி அறிந்த இரவலர் அனைவரும் அவனையே சூழ்ந்து கிடப்பர். அவனை விட்டு அப்பாற் செல்ல எண்ணார்"[46] என்று பெரியன் பற்றியக் குறிப்பினைத் தருகிறார் கா.கோவிந்தன்.

பெரியன் புறையாறு என்னும் சோழநாட்டுக் கடற்கரை நகரை ஆண்டவன் ஆதலில், இவன் நெய்தல் நிலத் தலைவனாகக் கருதப் படுகிறான். இதனை, "புறையாறு என வழங்கும் புறந்தை, புன்னை மரங்கள் நிறைந்த சோலைகள் மலிந்த சோழநாட்டுக் கடற்கரை நகர். அது பெரியன் என்னும் குறுநில மன்னனின் தலைநகர்[47] என்கிறார் முத்துகண்ணப்பன்.

பெரியன் என்கின்ற சிற்றரசனுக்கு உரிய ஊரானது நல்ல வளம் உடையது. அப்பெரியன் குதிரைகளுடனான சிறப்பான தேரை உடையவன்.இரவலர்க்கு வரையாது வழங்கித் தன்னுடனே வைத்துக் கொள்பவன். அழகிய புன்னை மரங்களையுடைய கடற்கரை சோலை சூழ்ந்த ஊர் அவனுடைய புறந்தையாகும். இக்கருத்தை,

**"பரியுடை நல்தேர்ப் பெரியன் விரிஇணர்ப்**
**புன்னை அம்கானல் புறந்தை முன்துறை**
**வம்ப நாரை இனன் ஒலித்தன்ன**
**அம்பல் வாய்த்த தெய்ய"**[48]

என்ற அகநானூற்றுப் பாடல் அடிகள் சுட்டுகின்றன. இக்கருத்தில் இருந்து பெரியன் என்ற சொல்லுக்கு உகந்த வாழ்க்கையை அவன் வாழ்ந்தவன் எனத் தெரிகிறது.

**தழும்பன்**

அகப்பாடல்களால் அறியப்படும் மன்னர்களில் இவனது இயற்பெயர் அறியப்படவில்லை. போரில் யானை மிதித்து உண்டான தழும்பினைக் கொண்டவன் என்பதால் தழும்பன் எனப்பட்டான். "வாள்போர் வல்லானாகிய அவ்வீரன் தான் மேற்கொண்ட போர் ஒன்றில் பெண் யானையால் மிதியுண்டு பெரும்புண் பெற்றான். அப்புண் தந்த தழும்பு பெரிய வழுதுணை அளவு பெரிதாதல் கண்ட மக்கள் அவனை வழுதுணைத் தழும்பன் என்று பெயரிட்டுப் பாராட்டினர்"[49] என்கிறார் கா.கோவிந்தன்.

---

46. கா. கோவிந்தன், சங்க கால அரசர் வரிசை, ப.15.
47. தி.முத்துகண்ணப்பன், சங்க இலக்கியத்தில் நெய்தல் நிலம், ப.238.
48. ந.மு.வேங்கடசாமிநாட்டார்(உ.ஆ.), அகநானூறு, களிற்றியானைநிரை, ப.258.
49. கா. கோவிந்தன், சங்க கால அரசர் வரிசை, ப.105.

தழும்பனது ஊர் ஊணூர் என்பதாகும். ஊணூரின் வளம் பற்றி,

**"வெண்ணெல் அரிஞர் தண்ணுமை வெரீஇக்**
**கண்மடற் கொண்ட தீந்தேன் இரீயக்**
**கள்ளரிக்கும் குயம் சிறுசின்**
**மின்சீவும் பாண்சேரி**
**வாய்மொழி தழும்பன் ஊணூர்"**[50]

என்று புறநானூறு கூறுகிறது. அதாவது ஊணூர் நிலவளமும், நீர்வளமும் மிக்கதாகும். வெண்ணெல் அரியச் செல்பவர்கள் வயலில் இருக்கும் சிறு உயிரினங்களை ஊறு செய்யக் கூடாது என்பதற்காக முதலில் வாயால் ஒலியெழுப்பி அவற்றை விரட்டுவர். தேனீக்கள் இல்லாத தேன் கூட்டினை எளிதாக எடுக்க முடியும் என்பதால் குயவர்கள் கூடழித்துத் தேனைக் கொள்வர். சேரிவாழ் பாணர்கள் சிறுமீன் பிடித்து மகிழ்வர். இத்தகைய வளம்மிக்கது தழும்பனது ஊர் எனக் கூறப்படுகிறது. அவன் தழும்பு பெற்றதைக் குறிக்கும் பாடல்,

**"பிடிமதி வழுதுணைப் பெரும்பெயர்த் தழும்பன்**
**கடிமதில் வரைப்பின் ஊணூர் உம்பர்**
**விரிநிதி துஞ்சும் வீறுபெறு திருநகர்**
**இருங்கழிப் படப்பை மருங்கூர்ப் பட்டினத்து**
**எல்லுமிழ் ஆவணம்"**[51]

என்பதாகும். இதில் தழும்பனது வீரமும், அவனது கொடையும் சுட்டப்படுகின்றன. தூங்கல் ஓரியார் என்னும் புலவரால் பாடப் பெற்றப் புகழுக்குரியவன். தமிழகத்தில் அவன் புகழ் எங்கும் பரவி கிடந்தது. பெருங்கொடை வழங்கும் நாலோக்க இருக்கையினை உடையவன் என்றும் பாராட்டப் பெறுகிறான். மருங்கூர் பட்டினத்தை அடுத்த ஊணூர் அவனது வாழ்விடம் ஆதலின், இவன் நெய்தல் நிலத் தலைவன் எனச் சிறப்பிக்கப்படுகிறான்.

---

50. ஔவை சு. துரைசாமிப்பிள்ளை(உ.ஆ.), புறநானூறு (பகுதி.2), ப.296.
51. ந.மு. வேங்கடசாமிநாட்டார் (உ.ஆ.), அகநானூறு, மணிமிடைபவளம், ப.250.

**திதியன்**

நெய்தல் நிலத்துக்குரிய புன்னை, திதியன் என்னும் குறுநில மன்னனின் காவல் மரமாயிருந்து உள்ளது. அன்னி என்னும் குறுநில மன்னன் வலிமை மிக்க ஊர்களையும், வேற்படையினையும் உடைய எவ்வியென்னும் சிற்றரசனது அறிவுரையும் பொருள்படுத்தாமல். திதியனைக் குறுக்கைப் பறந்தலை என்னும் இடத்தில் எதிர்த்தான். அவனது காவல் மரமாகிய பழம்பெரும் புன்னையை வெட்டி வீழ்த்தினான். அதனைப் பெறாத திதியன், அன்னியைக் கொன்றொழித்ததை,

**"அன்னி குறுக்கை பறந்தலை திதியன்**

**தொல்நிலை முழுமுதல் துமியப் பண்ணி**

**புன்னை குறைத்த ஞான்றை"**[52]

என்ற அகநானூற்றுப் பாடல் அடிகள் விளக்குகின்றன. குறுக்கைப் பறந்தலை நெய்தல் நிலத்தின் சிறந்த ஊர் எனவும், நெய்தல் நிலத்திற்குரிய மரமான புன்னையைக் காவல் மரமாகக் கொண்டிருந்தான் என்ற காரணத்தால் திதியன் நெய்தல் நிலம் உள்ளிட்ட நாட்டின் தலைவன் எனவும் கூறலாம்.

**தித்தன் வெளியன்**

வீரை என்பது ஒரு கடல்துறை ஆகும். அது போரில் வல்ல வேளிர்களுள் ஒருவனான வெளியனின் மைந்தன் தித்தனுக்கு உரியது. அவ்வீரை நகரில் உள்ள முரசுகட்டில்களில் மாலை வேளையில் வரிசையாக விளக்குகள் சுடர் விட்டெரியும். காலையிலும், மாலையிலும் சங்குகள் முழங்குவதுண்டு. அத்துறையில் பரந்து விரிந்து கிடக்கும் உப்பளத்தில் விளைந்த வெள்ளுப்பு, குன்றெனக் குவிந்து கிடப்பதை,

**"அடு போர் வேளிர் வீரை முன்துறை**

**நெடுவெண் உப்பின் நிரம்பாக் குப்பை"**[53]

என்ற அகநானூற்றுப் பாடல் அடிகளால் அறியலாம்.

தித்தன் உறையூரில் நாடுகாவல் புரிந்தவன். ஆதலால் அவ்வீரைத் துறை, சோழ நாட்டுக் கடற்கரை எனலாம். இவனது துறைமுகப் பட்டினம் கானலம் பெருந்துறை.

---

52. ந.சி. கந்தையாப்பிள்ளை (உ.ஆ.), அகநானூறு, களிற்றியானைநிரை, ப.123.
53. ந.மு. வேங்கடசாமிநாட்டார் (உ.ஆ.), அகநானூறு, மணிமிடை பவளம், ப.203.

இவன் பாடி வரும் பாணரைப் போற்றிப் பல பரிசுகள் அளித்தவன். கோபகனன்றெழுந்து போர் புரியும் வீரர் மிக்க காலாட் படையினை உடையவன். இவனது கானலம் பெருந்துறைப் பட்டினத்துக்கு, வெளிநாடுகளிலிருந்து கலங்கள் பல பெரும் திரளான பொன்னை ஏற்றிக் கொண்டு வந்து கொடுத்து, இந்நாட்டுப் பொருள் பல பெற்றுச் சென்றதை,

**"தித்தன் வெளியன்**

**இரங்குநீர்ப் பரப்பின் கானலம் பெருந்துறை**

**தனம் தரு நன்கலம்"**[54]

என்ற பாடல் அடிகள் கூறுகின்றன. இதனால் தித்தன் வெளியன் ஒரு சிறந்த நெய்தல் நிலத்தைச் சார்ந்த குறுநில மன்னன் என்று உணர முடிகின்றது.

**திமிலர், திமிலோன்**

திமிலர் என்பவர்கள் சங்க காலம் தொட்டே தமிழகத்தில் இருந்த மீனவர் குடிகள் ஆவர். திமில் என்பது சங்காலத் தமிழர் பயன்படுத்திய கடல் நீர் கலங்களுள் ஒன்றாகும். இக்கலத்தை ஓட்டியவர்கள் திமிலர்கள். மதுரைக் காஞ்சியில் மாங்குடி மருதனார் குறிப்பிடும்,

**"பரந்தோங்கு வரைப்பின் வன்கைத் திமிலர்**

**கொழுமீன் குறைஇய துடிக்கண் துணியல்"**[55]

என்னும் அடிகள் திமிலர்கள் நிறைந்துள்ள கலங்களையும் செலுத்த வல்ல ஆற்றல் உடையவராய்க் காட்டுகின்றன. இவ்வாறு மீன் பிடிக்கும் படகினன் ஆகிய திமிலோன் கொண்டு வந்த மீன்களை, செல்வமிக்க தங்கைமார் தெருக்களில் விலை கூறி விற்றதை,

**"ஓங்கு திரைப் பரப்பின் வாங்குவிசைக் கொளீஇத்**

**திமிலோன் தந்த கடுங்கண் வயமீன**

54. ந.மு. வேங்கடசாமிநாட்டார் (உ.ஆ.), அகநானூறு, மணிமிடை பவளம், ப.78.
55. பொ.வே. சோமசுந்தரனார் (உ.ஆ.), மதுரைக்காஞ்சி, ப.120.

**தழையணி யல்குற் செல்வத் தங்கையர்**

**விழவியர் மறுகின் விலையெனப் பகரும்"[56]**

என்ற பாடலடிகள் எடுத்து இயம்புகின்றன. இதனினின்று திமிலில் ஏறிச் சென்று மீன் பிடிக்கும் மீனவர்களைத் திமிலர், திமிலோன் என்று அழைத்தனர் எனலாம்.

**திரையன்**

காஞ்சியைத் தலைநகராகக் கொண்டு ஆண்ட மன்னன் திரையன் ஆவான். இவன் குடிமன்னர்களுள் சிறப்பாகப் போற்றப்படுவன் என்பதைக் ககைசபை, "குடி மன்னருள் முதலாவதாகக் கூறக் கூடியவன் திரையன். அவன் தலைநகரம் காஞ்சிபுரம். அவன் திரையர் அதாவது கடலரசர் குடி மரபைச் சார்ந்தவன். இம்மரபையே சோழரும் தங்கள் குடிமரபாகக் கொண்டிருந்தனர். புகழ்பெற்ற கரிகாலச் சோழன் சிறுவனாயிருந்த காலத்தில் காஞ்சித் திரையன் சோழ அரசையே கைப்பற்றி அதன் மீது நீண்ட நாள் ஆட்சி செய்தான்"[57] எனக் கூறுகிறார். திரையனின் சிறப்பினை,

**"வலம்புரி அன்ன வசைநீங்கு சிறப்பின்**

**அல்லது கடிந்த அறம்புரி செங்கோல்**

**பல்வேல் திரையற் படர்குவிர் ஆயின்**

**கேள்அவன் நிலையே கெடுகநின் அவலம்"[58]**

என்ற பெரும்பாணாற்றுப்படைப் பாடல் அடிகள் சுட்டுகின்றன. அதாவது, திரையன் சேர, சோழ, பாண்டிய மன்னருக்கும் மேலானவன், அறம் பெருகச் செய்தவன். செங்கோன்மை நிலவ செய்தவன். அவ்வாறான திரையனைச் சேர்வோருக்கு அவ்விநாடியே மனக்கவலை தீரும் எனப்பாடல் கூறுகிறது. திரையனது நாட்டில் வாழ்வோர் யாதொரு குறைவும் இன்றி வாழ்ந்தனரென்றும், அதற்குக் காரணம் திரையனது நல்லாட்சியேயாகும் என்றும் பெரும்பாணாற்றுப்படை கூறுகிறது.

திரையனது ஆட்சியில் கவலைகள் அழிந்த பெண்ணொருத்தியைப் பற்றி,

---

56. த. கோவேந்தன், அன்பொடு புணர்ந்த ஐந்திணை (நெய்தல்), ப.148.
57. வி. ககைசபை, ஆயிரத்தெண்ணூறு ஆண்டுகட்கு முற்பட்ட தமிழகம், ப.164.
58. பொ.வே.சோமசுந்தரனார்(உ.ஆ.), பெரும்பாணாற்றுப்படை, ப.50.

**"நல்லிருள் விடியல் புள்ளெழப் போகிப்**
**புலிக்குரல் மத்தம் ஒலிப்ப வாங்கி**
**ஆம்பி வான்முகை யன்னகூம்பு முகிழ்**
**உறையமை தீந்தயிர் கலக்கிநுரை தெரிந்து**
**புகர்வாய்க் குழிசி பூஞ்சுமட்டு இரீஇ**
**நாள்மோர் மாறும் நன்மா மேனிச்**
**சிறுகுழை துயல்வரும் காதின் பனைத்தோள்**
**குறுநெறிக் கொண்ட கூந்தல் ஆய்மகள்**
**அளைவிலை உணவிற் கிள்ளையுடன் அருந்தி**
**நெய்விலைக் கட்டி பசும்பொன் கொள்ளாள்**
**எருமை நல்லான் கருநாகு பெறூஉம்"**[59]

என்று பெரும்பாணாற்றுப்படை கூறுகிறது. அதிகாலையில் பறவைகள் விழித்துக் குரல் எழுப்பும் நேரத்தில் எழுந்து தயிரைக் கடைந்து, மோரும் நெய்யும் கொண்ட கூடையினைத் தலையில் வைத்துக் கொண்டு செல்லும் ஆயர்மகள் அப்பொருள்களை விற்று எருமை, பசு போன்றவற்றை வாங்கி வருவாள். பொன்னணியினும் பசுவும், எருமையுமே மேலானது என அவற்றை வாங்கி வரும் அவளது அறிவு வியக்கத்தக்கது என்று பாடல் குறிக்கிறது.

திரையனது ஆட்சியில் உள்ள மக்கள் அறிவுத் திறனும், நுட்பமும் உடையவர்கள் என்பதை வலியுறுத்தவே இப்பாடலைப் புலவோர் கூறுகின்றார் எனலாம். ஆயின் திரையன் மிகச் சிறந்த அரசனாக வீற்றிருந்தான் என்பதைப் புலப்படுத்துவதாக இப்பாடல் அமைகின்றது. பசு, எருமை என்பன முல்லை நிலத்தில் காணப்படும். நெய்தல் நிலத்திலும் இவற்றைப் பயன்படுத்தினர் என்பதும், அவை தரும் பால் பொருள்களை விற்றுப் பிற பண்டங்கள் வாங்கினர் என்பதையும் இப்பாடல் குறிப்பிடுகின்றது.

**நுளையர், அரையர்**

நெய்தல் நிலத் தலைவனைச் சங்க இலக்கியங்கள் 'நுளையர்' என்ற பெயரில் சுட்டுகின்றன. நுளையர் என்ற பெயர் எட்டுத்தொகையுள் அகநானூற்றில் ஓரிடத்திலும்,

59. நச்சினார்க்கினியர் (உ.ஆ.), பத்துப்பாட்டு மூலமும் உரையும், ப.190.

பதினெண் கீழ்க்கணக்கு நூலான திணைமாலை நூற்றைம்பதில் ஓரிடத்திலும் மட்டுமே காணப்படுகின்றன. பெரிய கடற்பரப்பில் குளிர்ந்த துறையில் உள்ள நுளையர்கள், வயல் உழவரோடு போரிட்டனர். இதைக் கண்ட நரைத்த முதியோராகிய மருத நில மக்கள் போர் செய்யும் கைப்பிணிப்பினை விடுத்து விலக்கி, முற்றிய தேனாகிய கள்ளின் தெளிவை நுளையருக்கு அளித்ததை,

**"கழனி உழவரோடு மாறெதிரிந்து மயங்கி**
**இருஞ்சேற் றள்ளல் எறிசெருக் கண்டு**
**நரைமூ தாளர் கைபிணி விடுத்து**
**நனைமுதிர் தேறல் நுளையர்க் கீயும்"**[60]

என்று அகநானூற்றுப் பாடல் அடிகள் இயம்புகின்றன.

நுளையர் வாழும் இடமாவது மற்றவர் புகுவதற்கு அரிய தாழை மரங்கள் நெருங்கிப் படர்ந்து கிடக்கும் அலை பொருந்திய கடல் நீரையுடைய கரையில் உள்ளதனை,

**"தாழை துவளும் தரங்க நீர்ச் சேர்ப்பிற்றே**
**ஏழை நுளையர் இடம்"**[61]

என்று திணைமாலை நூற்றைம்பது பாடல் அடிகள் கூறுகின்றன. இவற்றினால் நுளையர்கள் தாழை மரங்கள் நிறைந்த கடற்கரைப் பகுதியில் வாழ்ந்திருக்கின்றனர் என்று அறிய முடிகின்றது.

பரதவர் பிற்காலத்தில் 'அரையர்' என்று வழங்கப்பட்டதை,

**"எழில் உமைகலங்கி இறைஞ்சல் கண்டுஇரங்கி**
**இலங்கு அதி அரையன் நம் அன்பன்**
**உழையிடை இனி புதல்வியாய் உதித்தால்**
**உலகுனோர் காணவந்து உனையாம்"**[62]

---

60. ரா. வேங்கடாசலம்பிள்ளை(உ.ஆ.), அகநானூறு, நித்திலக்கோவை, ப.145.
61. அ. நடராசப் பிள்ளை (உ.ஆ.), திணைமாலை நூற்றைம்பது, ப.157.
62. பெரும்பற்றப்புலியூர்நம்பி(உ.ஆ.), திருவாலவுடையார் திருவிளையாடற்புராணம், ப.54.

என்று திருவாலவாயுடையார் திருவிளையாடலில் இருந்து அறியலாம். "அதி என்ற சொல்லுக்கு 'வலைச்சாதி' என்று பொருள் கூறுகிறார்"[63] உ.வே.சாமிநாதஜயர். அறுபத்து மூன்று சிவனடியார்களில் பரதவர் குலத்தைச் சார்ந்த ஒருவர், அதிபத்தர் என வழங்கப்படுவதும் குறிப்பிடத்தக்கது.

"இன்றைய தமிழகத்தில் பரதவர், திமிலர், நுளையர், அரையர் என்ற பெயர்கள் பெரும்பாலும் வழக்கில் இல்லை. ஆனால், கேரள மாநிலத்தில் விழிஞம் என்ற கடற்கரை ஊரின் மேற்குப் பகுதியிலும், கொடுங்கலூரையடுத்த கடற்கரைப்பகுதியிலும், கன்னியாகுமரி மாவட்டத்தில் சில பகுதிகளிலும் வாழும் மீனவர்கள் நுளையர், அரவர், அரையர் என்று இன்றும் வழங்கப்படுகின்றனர். அரசர் என்பதே அரையர் என்று திரிந்துள்ளது. கடலுக்கும், கரைக்கும் தலைமை பூண்டவர்கள் கடலரசர் என்ற பொருளில் அப்பெயர் வழங்கப்படுகிறது"[64] என்று முத்துகண்ணப்பன் எடுத்துக் கூறுகின்றார்.

இதனால் பரம்பரை மீனவர்கள் நுளையர், அரையர் என்ற தம் பழைய குலப்பெயராலேயே இன்றும் வழங்கப்பட்டு வருகின்றனர்.

**மத்தி**

பரதவர்களின் தலைவன் எனக் குறிக்கப்படுகிறவன் 'மத்தி' ஆவான். சோழ மன்னர்களின் ஆதிக்கத்தில் இருப்பவர்கள் அவன் கூறும் செயல்களை முடிக்கக் கடமைப்பட்டவர்கள் ஆவர். அவ்வாறு செய்ய முற்படாதவர்களைத் தண்டிப்பது வழக்கமாகும். அந்த வகையில் சோழர் யானைகளைப் பிடிப்பதற்காக எழினி என்பவனை வரச் சொன்னான், அவன் வரவில்லை. கோபங் கொண்ட சோழர் மத்தியை ஏவி அவனைப் பிடிக்கச் சொன்னான். சோழனின் ஏவலின் பேரில், மத்தி படையெடுத்துச் சென்று எழினியை வென்றான். பின்னர் அவனது பற்களைப் பிடுங்கி வெண்மணி என்னும் கோட்டை வாசல் கதவில் பதித்தான். தன் வெற்றிக்கு அடையாளமாக அவ்வூர் நீர்த்துறையில் கல் நாட்டியதை,

**"பிடிபடு பூசலின் எய்தாது ஒழிய**

**கடுஞ்சின வேந்தன் ஏவலின் எய்தி**

63. உ.வே. சாமிநாதஜயர்(உ.ஆ.), திருவாலவுடையார் திருவிளையாடற்புராணம், ப.83
64. தி. முத்துகண்ணப்பன், சங்க இலக்கியத்தில் நெய்தல் நிலம், ப.306.

**நெடுஞ்சேண் நாட்டில் தலைத்தார்ப் பட்ட**

**கல்லா எழினிபல் எறிந்து அழுத்திய**

**வன்கண் கதவின் வெண்மணி வாயில்**

**மத்தி நாட்டிய கல்கெழு பனித்துறை"**[65]

என்ற அகநானூற்றுப் பாடல் அடிகள் விளக்குகின்றன. மத்தியின் வெற்றியின் வாயிலாகப் பரதவர்கள் மீன் பிடிப்பதிலும், கடல் கடந்து செல்வதிலும் மட்டுமின்றிப் போர் புரிவதிலும் பேராற்றல் பெற்றவர்களாகத் திகழ்ந்ததையும் அறிய முடிகின்றது.

**மூவன்**

இவன் ஒரு சிற்றூர் மன்னன் ஆவான். இவனது ஊர் நெய்தல் நிலமும், மருத நிலமும் சேர்ந்த பகுதியெனக் குறிக்கப்படுகிறது. இவனது நாடு வளமுடையது ஆகும். அவனது நிலத்தில் நாரைகள் ஆம்பல் மலரின் தேனினை உண்டு கடலின் தாளம் கேட்டுக் கண்ணுறங்குகின்றன. அத்தகைய நாட்டினை உடைய மூவன் தன்னை நாடி வந்தோர்க்குப் பரிசில் தராமல் காலம் நீட்டித்தமையை,

**"நசைதர வந்துநின் இசைநுவல் பரிசிலென்**

**வறுவியேன் பெயர்கோ வாள் மேம்படுந!**

**ஈயாய் ஆயினும் இரங்குவென் அல்லன்"**[66]

என்று புறநானூற்றுப் பாடல் அடிகள் கூறுகின்றன. இதனால் மூவன் பரிசில் வேண்டி வந்தாரைப் பரிசில் நீட்டிக்கும் வகையினன், அதாவது பரிசுத் தரத்தயங்குபவன் என்பது தெரிகின்றது.

எல்லா மன்னர்களும் வள்ளண்மையில் சிறந்திருக்கவில்லை என்பதற்கு மூவனே சான்றாவான். மூவனின் வலியப் பற்களைப் பிடுங்கிச் சேரன் கணைக்கால் இரும்பொறை, தன் வாயிற் கதவில் வைத்து இழைத்ததை,

---

65. த. கோவேந்தன், அன்பொடு புணர்ந்த ஐந்திணை (நெய்தல்), ப.215.
66. ஔவை சு. துரைசாமிப்பிள்ளை(உ.ஆ.), புறநானூறு(பகுதி-2), ப.23.

**"மூவன் முழுவலிமுள் எயிற்று அழுத்திய கதவின்**

**கானலம் தொண்டிப் பொருநண் வென்வேல்**

**தெறல் அருந்தானைப் பொறையன்"**[67]

என்று நற்றிணைப் பாடல் அடிகள் சுட்டுகிறது. இவ்வாறு மூவன் என்னும் குடியினன் வாழ்ந்தமை குறித்துச் சங்க இலக்கியம் கூறுகின்றது.

**சங்ககால மகளிர்**

சங்ககாலத்தில் மகளிர் பண்பாடுகளில் சிறந்து விளங்கினர். பெண்கள் உயர்வாகப் போற்றப்பட்டனர். பண்பு நலத்தில், கற்பு நெறியில், இல்லற வாழ்க்கையில் நல்லறத்தோடு திகழ்ந்தனர். சங்க இலக்கியத்தில் பெண்ணுரிமை பேணப்பட்டது. மனையறம் பேணும் கல்வியோடு நுண்கலைகளையும் மகளிர் பயின்றனர். அச்சம், நாணம், மடன் போன்ற பண்புகள் பெண்களுக்கே உரிய பெரும் பண்புகளாகப் போற்றப்பட்டதை,

**"அச்சமும் நாணும் மடனும் முந் துறுதல்**

**நிச்சமும் பெண்பாற்கு உரிய என்ப"**[68]

என்று தொல்காப்பியர் குறிப்பிட்டுள்ளார். கற்பு, காமம், நல்லொழுக்கம் பொறை, நிறை, அடக்கம், விருந்து, சுற்றம் ஓம்பல் ஆகிய பண்புகளும் மகளிர்க்கு இன்றியமையாதவை ஆகும். கற்பில் சிறந்த மகளிர் பிற தெய்வங்களைத் தொழுதல் இல்லை, கணவனையே தெய்வமாக மதித்து ஒழுகினர். சங்க கால மகளிர் அறிவு, உறுதி, பண்பாடு ஆகிய பண்புகளில் சிறந்திருந்தனர்.

சங்க காலத்தில் ஆண்பாற் புலவர்களைப் போலப் பெண்பாற் புலவர்களும் அரசியலறிவு உடையவர்களாகத் திகழ்ந்தனர். தன்மானம் உடையவர்களாகவும், வீரம் உடையவர்களாகவும், தம் மக்கள் விளங்க வேண்டும் என்பது மறக்குடி மகளிரின் குறிக்கோளாக இருந்தது. தன்னைப் பேணுதற்கு யாருமற்ற நிலையிலும் தன் நாட்டைக் காப்பதற்குத் தன் சிறு மகனையும் போர்க்களம் அனுப்புவதை,

---

67. பின்னத்தூர் நாராணசாமிஐயர்(உ.ஆ.), நற்றிணை நானூறு, ப.25.

68. இளம்பூரணர் (உ.ஆ.), தொல்காப்பியம், பொருளதிகாரம், ப.208.

**"வேல்கைக் கொடுத்து வெள்துவிரித்து உடீஇப்**

**பாறுமயிர் குடுமி எண்ணெய் நீவி**

**ஒரு மகன் அல்லது இல்லோன்**

**செருமுக நோக்கிச் செல்க என விடுமே"**[69]

எனப் புறநானூற்றுப் பாடல் அடிகள் விளக்குகின்றன. இம்மகளிரின் பண்பாடு சங்ககால வீரம் மிக்க பண்பாட்டினைச் செழுமைப்படுத்தியது என்று அறியலாம்.

## நெய்தல் நில மகளிர்

நெய்தல் நிலத்தில் வாழும் மகளிரை நுளைச்சி, பரத்தி என இலக்கண நூல்கள் சுட்டுகின்றன. ஐங்குறுநூறு, குறுந்தொகை, அகநானூறு, கலித்தொகை ஆகிய அகநூல்களில் குறிப்பாக நெய்தல் பாடல்களில் தலைவி பற்றியக் குறிப்புக்கள் இல்லை. ஆனால், நற்றிணை ஒரு பாடலில் மட்டும் கொடிச்சி எனத் தலைவியின் பெயரைச் சுட்டுகின்றது.

**"சீறூ ரோளே நாறுமயிர்க் கொடிச்சி**

**காக்கும் கையகத் ததுவே பிறர்"**[70]

குறுந்தொகை, அகநானூறு நூல்களில் சில இடங்களில் தலைவி உமணர்கள், பரதவர் மகள் என அழைக்கப்படுகிறாள். "நெய்தல் தலைவி பரதவர் மடமகள் என்றும், உமணர் மடமகள் என்றும் குறிக்கப்படுகிறாள்"[71] என்பார் தமிழண்ணல், நெய்தல் பாடல்களில் தலைவியின் பெயராக ஓரிடத்தில் கூடப் பரத்தி எனக் குறிப்பிடப்படவில்லை.

### நுளைமகள்

நுளைமகள் என்பவள் மீனவப் பெண். அவள் அலைகள் கொண்டு வந்த மணம் கமழும் விறகுகளைக் கொண்டு, கரும்புகையும், செந்தீயும் கமகமக்கச் சமைப்பாள். பருத்த தோளழகு உடையவள், வானத்து நிலா இவள் முகத்தைப் பார்த்துத் தனக்கு இப்படிப்பட்ட அழகு இல்லையே என ஏங்கும் முக அழகினைக் கொண்டவள். அதில் வேலின் கூர்மை போல் நோக்கும் கண்பார்வை உடையவள் என்பதை,

---

69. உ.வே. சாமிநாத ஐயர் (உ.ஆ.), புறநானூறு, ப.157.
70. பின்னத்தூர் நாராயணசாமி ஐயர்(உ.ஆ.), நற்றிணை நானூறு. ப.119.
71. தமிழண்ணல், சங்கமரபு, ப.214.

**"ஓங்கு நிலை ஒட்டகம் துயில் மடிந்தன்ன**

**வீங்குதிரை கொணர்ந்த விரைமர விறகின்**

**கரும்புகைச் செந்தீ மாட்டி, பெருந்தோள்**

**மதி ஏக்கறூஉம் மாசு அறுதிரு முகத்து**

**நுதிவேல் நோக்கின் நுளைமகள்"**[72]

என்று சிறுபாணாற்றுப்படைப் பாடல் அடிகள் நுளைமகளின் தோற்றம் குறித்து விளக்குகின்றது.

நெய்தல் நிலத் தலைவர்களின் இளைய மகளாகிய நுளையர் மகள் கடலிலே நீந்துபவள், கரையிடத்து அலைந்து அங்கிருக்கும் நண்டுகளைக் கால்களால் கண்டு பிடிப்பவள். கரையில் உள்ள நெய்தல் பூக்களைக் கொய்பவள். நீண்ட கண்களை உடையவள் என்பதை,

**"நெய்தல் மலர் கொய்யும் நீள்நெடுங் கண்ணினாள்**

**மையல் நுளையர் மகள்"**[73]

என்றும், குளிர்ந்த கடற்கரைச் சோலையில் உள்ள அழகிய நெய்தல் நிலத்தலைவரின் இளைய மடமகள் என்பதை,

**"தாழை தவழ்ந்து உலாம்வெண் மணல்தண்கானல்**

**மாழை நுளையர் மடமகள்"**[74]

என்று திணைமாலை நூற்றைம்பது குறிப்பிடுகின்றது. இவ்வாறு நுளையர் மகள் தோற்றம் குறித்து விளக்கப்படுகின்றன.

**பரதவர்மகள்**

நெய்தல் நிலத்தில் வாழும் மகளிரைப் பரதவர் மகள், பரதவர் மடமகள், பரதவ மகளிர் என்று பலவாறு அழைக்கின்றனர். கடற்கரையை அடுத்துள்ள அழகிய சிற்றூர், அங்கு வாழும் நீலநிறப் பெருங்கடல் கலங்க அதன் உள்ளே புகுந்து மீன் வேட்டையாடும் பரதவர் மகள் என்பதை,

---

72. நச்சினார்க்கினியர்(உ.ஆ.), சிறுபாணாற்றுப்படை,ப.165.
73. அ. நடராசப்பிள்ளை(உ.ஆ.), திணைமாலை நூற்றைம்பது, ப.57.
74. மேலது. ப.44.

**"நீல்நிறப் பெருங்கடல் கலங்க உள்புக்கு**

**மீன்எறி பரதவர் மகளே"**[75]

என்ற நற்றிணைப் பாடல் அடிகள் விளக்குகின்றன.

பரதவ மகளின் அழகினைப் பற்றிக் குறுந்தொகைப் பாடல்,

**"நுண்வலை பரதவர் மடமகள்**

**கண் வலை படூஉம் கானலானே"**[76]

என்று கடற்கரைச் சோலையில் வாழும் பரதவர் மகள் பேரழகி. மயில் போல் கூந்தல் உடையவள், மடப்பம் பொருந்திய மகள், அவளுடைய கண் வலையில் விழுந்தவர்கள் தப்ப முடியாது. நானும் அவள் கண் வலையில் சிக்கினேன். ஆகையால் அங்கு செல்லாதே என்று கூறுவதிலிருந்து பரதவ மகளின் அழகு வெளிபடுகிறது. அவர்கள் குரவைக் கூத்தின் ஓசையோடு ஆரவாரம் செய்வதை,

**"மணிப்பூ முண்டகத்து மணல் மலி கானற்**

**பரதவ மகளிர் குரவையொ டொலிப்ப"**[77]

என்று மதுரைக்காஞ்சிப் பாடல் அடிகள் எடுத்துக் கூறுகின்றன. இவற்றால் பரதவர் மகளிரின் அழகினை அறிந்து கொள்ளலாம்.

## தொழில்

தொழில் என்பதற்குப் பல வகையான விளக்கங்கள் கூறப்பட்டுள்ளன. க்ரியாவின் தமிழ் அகராதி தொழில் என்றால், "பொதுவாக வேலை பணம் சம்பாதிப்பதற்குச் செய்யும் செயல்"[78] என்கிறது.

நர்மதாவின் தமிழ் அகராதி தொழில் என்பதற்கு, "வேலை மனித உழைப்பு, இயந்திரங்கள் ஆகியவற்றைப் பயன்படுத்தி இலாப நோக்குடன் ஒரு பொருளை

---

75. த. கோவேந்தன், அன்பொடு புணர்ந்த ஐந்திணை (நெய்தல்), ப.92.
76. பொ. வே. சோமசுந்தரனார் (உ.ஆ.), குறுந்தொகை, ப.331.
77. நச்சினார்க்கினியர்(உ.ஆ.), மதுரைக்காஞ்சி, ப.348.
78. எஸ். இராமகிருஷ்ணன், க்ரியாவின் தற்காலத்தமிழ் அகராதி, பக்.592 - 593.

உற்பத்தி செய்திடும் செயல்"[79] எனக் குறிப்பிடுகின்றது. பொதுவாக உழைப்பு என்பது பெயர்ச் சொல்லாக அமையும் போது ஒரு செயல் அல்லது தொழிலைக் குறிக்கும்.

உழைத்தல் என்னும் வினைச் சொல்லாக அமையும் போது அவை தொழில் செய்தலைக் குறிப்பதாக அமைகின்றது.

உழைப்பு என்றால், "உற்பத்திக் காரணிகள் என்று கூறப்படும் ஆக்க வளங்களுள்(Productive Resources) உழைப்பு (Labour) என்பதும் ஒன்றாகும். பொதுக்கண்ணோட்டத்தில் உழைப்பு என்ற சொல் மனிதனின் அறிவுசாரா இயல்பான உடல் உழைப்பைத் தான் குறிக்கும். ஆனால் இன்றையத் தொழில் துறையில் மனிதனின் உடலும், உள்ளமும் ஒன்றாக உழைக்க வேண்டியது இன்றியமையாதது. எனவே பொருளியல் வழியில் உழைப்பு என்பது மனிதனின் உடல் சார்ந்த, மனம் சார்ந்த, திறம் பெற்ற, திறம் பெறாத உற்பத்தி முயற்சிகளைக் குறிக்கும். இம்முயற்சிக்குப் பரிசாக அளிக்கப்படும் ஊதியம் கூலியாகும்"[80] என்று வாழ்வியற் களஞ்சியம் விளக்கம் அளிக்கிறது.

பொருளியல் பேரறிஞராகிய மார்சல், "உழைப்பு என்பது மூளையையோ, உடலையோ, முழுவதுமாகவோ, பகுதியாகவோ வருத்தி ஏதோ ஒன்றைப் படைப்பதற்காகச் செய்கின்ற செயலைக் குறிக்கும்"[81] என வரையறை அளிக்கின்றார். உழைப்பு என்பதனுள் அடங்கும் தொழில் வல்லுநர்கள் பல்வேறு விதமாக வகைப்படுத்துகின்றனர். எனினும், பண்டைத் தமிழர் செய்த தொழில்களை அவர்கள் வாழ்ந்த சமுதாய நிலைக்கு ஏற்றவாறு வகைப்படுத்திக் கூறலாம்.

**பழந்தமிழர் தொழில்கள்**

கல் தோன்றி மண்தோன்றிய காலத்தில் தோன்றிய மனிதன், இயற்கையில் கிடைத்த உணவுகளான காய்கள், பழங்கள், கிழங்குகள் போன்றவற்றை உண்டு வாழ்ந்து வந்தான். அவன் தன் வாழ்விடமாக மரப்பொந்துகளையும், மரக்கிளைகளையும், விலங்குகள் தங்கும் குகைககளையும் அமைத்துக் கொண்டான். அதன் பின்னர் உணவின் பொருட்டு வேட்டைத்தொழிலை மேற்கொண்டான். அத்தொழில் வாழும்

79. மாருதிதாசன் (ஆசி.), நர்மதாவின் தமிழ் அகராதி, ப.342.
80. வெ.சுப்பிரமணியம், வாழ்வியற் களஞ்சியம் (தொகுதி-5), ப.342.
81. ஆல்பிரெட் மார்சல், பொருளியல் கொள்கைகள், ப.159.

நிலத்திற்கு ஏற்ப அமைந்தது. அவற்றில் குறிஞ்சிநிலப்பகுதி மலைப் பகுதியானதால் வேட்டைத் தொழிலையும், முல்லை நிலப்பகுதி காடுகளானதால் மேய்த்தல் தொழிலையும் செய்தனர். மருத நிலப்பகுதி சமவெளியானதால் உழவுத்தொழிலையும், நெய்தல் நிலப்பகுதி கடல் பகுதியானதால் மீன்பிடித்தொழிலையும் செய்தனர். இத்தொழிலில் தேவைக்கு அதிகமான பொருள்கள் கிடைத்ததால் அவற்றை வேறு இடங்களுக்குக் கொண்டு செல்ல வசதியாக நெய்தல் நிலமும், பாலையும் அமைந்தன. இந்நிலத்தின் வழியாக வாணிகத்தை மேற்கொண்டனர். அதன்பின்னர், சமூகத்தில் தொழில் அடிப்படையில் அரசர், அந்தணர், வாணிகர், வேளாளர் என நான்கு பிரிவினர் இருந்தனர்.

இவர்களைத் தவிரச் சமூகத்தின் நல்வாழ்வுக்கு உதவும் தொழில்களைச் செய்த பல்வேறு தொழில் பிரிவினரும் இருந்துள்ளனர். இவர்கள் தச்சர், கொல்லர், குயவர், வண்ணார் என்ற பெயர்களால் அழைக்கப்பட்டனர். இவர்கள் செய்த தச்சுத்தொழில், கொல்லுத்தொழில், மட்பாண்டத்தொழில், சலவைத்தொழில் ஆகியன குலத் தொழில்களாக அமைந்தன. மனிதன் செய்த தொழிலுக்கு ஏற்ப அவனுடைய பெயரும், தொழிலும் சிறப்புப் பெற்றன. எத்தொழிலுக்கும் தூண்டுகோளாய் அமையும் அறிவும், ஒழுக்கமும் இன்றியமையாச் சிறப்புடையன. தனிமனிதனின் வளர்ச்சி சமுதாய வளர்ச்சிக்கு வழிவகுத்தன. நல்வித்துக்களாக விதைக்கப்பட்ட ஒவ்வொரு தொழிலும் ஆல்போல் தழைத்தது.

பழந்தமிழர் செய்த தொழில்கள் எவை என்பதைக் கண்டறிய சங்க இலக்கியங்கள் உதவுகின்றன. சங்க கால மக்களின் வாழ்வியலைக் குறித்து எழுதப்பட்ட நூல்களும், அக்காலத் தமிழகத்தைப் பற்றிய பிறநாட்டு அறிஞர்களின் குறிப்புக்களும் தமிழரின் தொழில் திறம் குறித்து அறியத் துணை நிற்கின்றன.

## நெய்தல் நில மக்களின் தொழில்கள்

நெய்தல் நிலமானது மணல் சூழ்ந்த பகுதியாகும். இங்கு நெல், கேழ்வரகு போன்ற உணவு தானியங்கள் எதுவும் விளையாது. ஆகவே நெய்தல் நிலத்து மக்கள் கட்டுமரங்களிலும், படகுகளிலும் கடலுக்குச் சென்று மீன் பிடித்தனர். இவற்றோடு முத்துக்குளித்தல், சங்கு எடுத்தல், கடற்கரையில் உள்ள உப்பளங்களில் கடல் நீரைப் பாய்ச்சி, உப்பு விளைவித்தல் போன்ற தொழில்களையும் மேற்கொண்டனர்.

உப்பையும், மீனையும் அயல் நிலத்தார்க்குப் பண்டமாற்று செய்து நெல் போன்ற தானியங்களைப் பெற்று வாழ்ந்தார்கள், எஞ்சிய மீன்களை உப்பிட்டுப் பதப்படுத்தி,

உலர்த்தி, கருவாடாக்கி விற்பனை செய்தனர். கடற்கரை அருகில் இருந்த துறை முகங்களில் வெளிநாட்டிலிருந்து வந்த வாணிகக் கப்பல்கள் இறக்குமதி, ஏற்றுமதி செய்ததன் விளைவாகத் துறைமுகப் பட்டினங்களில் வாணிகமும், செல்வமும் பெருகி வளர்ந்திருந்தன.

பரதவ மக்கள் கடலில் மீன் பிடித்தலைத் தலையாய தொழிலாகக் கொண்டவர்கள். கழிகளிலும் மீன்பிடிப்பர். உப்பு விளைவித்தலும் அவர்களது தொழிலாகும். இவற்றால் வரும் பொருள்களைக் கொண்டு வாழ்க்கை நடத்தி வந்ததை,

**"நெய்தற்கு உணா மீன் விலையும் உப்பு விலையும்"**[82]

என்று நச்சினார்க்கினியரும்,

**"நெய்தற்கு உணவு உப்பு விலையும் மீன் விலையும்"**[83]

என்று இளம்பூரணரும், 'தெய்வம் உணாவே' என்னும் தொல்காப்பிய நூற்பாவிற்கு உரை கூறுவதன் வாயிலாக அறிய முடிகின்றது.

சங்க காலத்தில், "தென்தமிழ் நாட்டின் கடலோர கிராமங்களில் வாழ்ந்த பரதவர்கள் கடலுக்குள் சென்று மீன் பிடித்தல், அவைகளைப் பண்டமாற்று முறையில் விற்றல், மிகுதியான மீன்களைக் கருவாடு தயாரித்தல், வருடத்தின் குறிப்பிட்டக் காலங்களில் கடலில் மூழ்கி சங்கு, முத்துக்குளித்தல் போன்ற தொழில்களைச் செய்து வந்தனர்"[84] என்கிறார் மோ. நேவிஸ் விக்டோரியா.

"தமிழ்நாட்டின் பாரம்பரியம் மிக்க பழங்குடிகளாகக் காட்சியளிக்கும் பரதவர்கள் முத்துக்குளித்தல், சங்கு எடுத்தல், மீன்பிடித்தல், கடல் வாணிபம் என்ற தொழில்களோடு இணைத்துப் பேசப்படுகின்றனர்"[85] என்று ஆ. சிவசுப்பிரமணியன் குறிப்பிடுகின்றார்.

இக்கூற்றுக்களினால் பரதவ மக்களின் தொழில்கள் கடலை சார்ந்தே அமைந்திருக்கின்றன என்பது தெளிவாகின்றது.

---

82. நச்சினார்க்கினியர்(உ.ஆ.), தொல்காப்பியம், பொருளதிகாரம், ப.46.
83. இளம்பூரணர்(உ.ஆ.), தொல்காப்பியம், பொருளதிகாரம், ப.19.
84. மோ. நேவிஸ் விக்டோரியா,முத்துக்குளித்துறைப் பரதவர்கள், ப.4.
85. ஆ. சிவசுப்பிரமணியன்(உ.ஆ.), பரதவர் நேற்று இன்று நாளை கடல் நிலம் மக்கள், ப.63.

**மீன் பிடித்தல்**

பரதவர்கள் தூண்டிலில் சிறிய மீன்களை இரையாகக் குத்திக் கடலிலும், கழியிலும் எறிந்து மீன்பிடிப்பர். பரதவர்கள் ஆழ் கடலுக்குள்ளே சென்று நிறைய மீன்களைப் பிடித்துப் படகுகளில் ஏற்றித் திரும்புவதைப் பல சங்கப் பாடல்கள் குறிப்பிடுகின்றன. பரதவர்கள் வலைகளைப் படகுகளில் நிரப்பிக் கொண்டு, இடியெனப் பேரலைகள் முழங்கி மோதும் கடலின் ஊடே அப்படகினைச் செலுத்துவார்கள். "மீனவர்கள் படகின் இருமருங்கிலும் இருந்து கொண்டு கரையிலிருந்து கடலுக்குள் படகை வலிமையுடன் தள்ளி செலுத்துவது, மதம் மிகுந்த களிற்றினைப் பாகர்கள் பக்கத்தில் நின்று தள்ளிச் செல்வதை ஒக்கும்"[86] என்பர்.

வன்தொழில் புரியும் வரிவலைப் பரதவ இளைஞர்கள் இறால் மீனொடு வேறு பல மீன்களையும் பிடித்துக் குவிக்கும் வேட்கை மீதூர, வேட்டைக்குச் செல்வர். தங்கள் படகில் பாய்ந்தேறி, அலை கடல் நடுவே சென்று வாளரம் போன்ற வன்சுறாக்களோடு, மற்ற பெருமீன்களையும் பிடித்துப் படகில் நிறைபார்கள். பெருமீன்களைத் துண்டங்களாகக் கூறுபடுத்தித் தோணிகளில் குவித்துக் கரையேறித் தங்கள் கழிசூழ் பாக்கம் சேர்வதை,

> **"வாள்வாயச் சுறவொடு வயமீன் கெண்டி**
>
> **நிணம்பெய் தோணியர் இகுமணல் இழிதரும்**
>
> **பெருங்கழிப் பாக்கம்"**[87]

என்ற பாடல் அடிகளால் அறியலாம். இவ்வாறு பரதவர்கள் மீன்பிடி தொழிலில் சிறந்து விளங்கியிருக்கின்றனர்.

**இரவில் மீன்பிடித்தல்**

பரதவர்கள் நள்ளிரவில் மீன் வேட்டைக்குச் செல்வதில் ஆர்வம் உடையவர்கள். தீப்பந்தங்களைக் கொளுத்திக் கொண்டு தங்கள் வலிமையான படகுகளில் கடலுக்குள் செல்வர். தீப்பந்தங்களின் ஒளியினைக் கண்டு சிறுமீன்கள் திரண்டெழும். அவற்றைத் தின்பதற்கு வெண்சுறாக்கள் விரைந்து வரும். அவற்றைப் பரதவர்கள் பிடிக்கின்ற செய்திகள் நெய்தல் பாடல்களில் காணப்படுகின்றன.

---

86. தி. முத்துகண்ணப்பன், சங்க இலக்கியத்தில் நெய்தல் நிலம், ப.186.
87. பின்னத்தூர் நாராயணசாமிஐயர் (உ.ஆ.), நற்றிணை நானூறு, ப.139.

பரதவர்கள் கடுங்குளிர் வாட்டும் கார்கால இரவில் தீப்பந்தங்களைக் கொளுத்திக் கொண்டு படகில் சென்று கொடுஞ் சுறாக்களைப் பிடித்ததை,

**"கணைக்கான் மாமலர் காப்ப மல்குகழித்**

**துணைச்சுறா வழங்கலும் வழங்கும் ஆயிடை**

**எல்லிமிழ் பனிக்கடல் மல்குசுடர்க் கொளீஇ**

**எமரும் வேட்டம் புக்கனர்"**[88]

என்ற பாடல் அடிகள் விளக்குகின்றன.

பரதவர்கள் வளைவான படகுகளிலே இரவு நேரத்தில் கடலுக்கு மீன் பிடிக்கச் செல்லும் போது மீன் நெய்யைக் கிளிஞ்சலிலே வார்த்து சிறு சுடர் விளக்கினை ஏற்றுவார்கள். காற்று அதனை அணைத்து விடாதிருக்கப் பொத்தி வைப்பதை,

**"நெடுங்கடல் அலைத்த கொடுந்திமிற் பரதவர்**
**கொழுமீன் கொள்ளை அழிமணல் குவைஇ**
**மீன்நெய் அட்டிக் கிளிஞ்சில் பொத்திய**
**சிறுதீ விளக்கில் துஞ்சம் நறுமலர்"**[89]

என்ற பாடல் அடிகள் உரைக்கின்றன. இவ்வாறு மீனவர்கள் இரவில் மீன்வேட்டை மேற்சென்றால் தீப்பந்தங்களின் ஒளியினைக் கண்டு மீன்கள் வெளியே வரும். அம்மீன்களை மீனவர்கள் பதமாய்ப் பிடித்துக் கொள்வர் என்ற செய்தியையும் அறியமுடிகின்றது.

"நள்ளிரவில் நடுக்கடலில் சென்று விளக்கொளி அல்லது தீப்பந்தங்களின் துணைகொண்டு மீன்பிடித்தல், பொதுவாக, கடல் கொந்தளிப்பின்றி, ஓங்கியெழும் அலைகள் அதிகமின்றி, ஏரி, குளங்கள் போல அமைதியாய் அடங்கியுள்ள கடற்பகுதியில் தான் இயலும்"[90] என்று முத்துகண்ணப்பன் கூறுகின்றார்.

---

88. த. கோவேந்தன், அன்பொடு புணர்ந்த ஐந்திணை(நெய்தல்), ப.95.
89. பொ. வே. சோமசுந்தரனார்(உ.ஆ.), நற்றிணை மூலமும் உரையும், ப.219.
90. தி.முத்துகண்ணப்பன், சங்க இலக்கியத்தில் நெய்தல் நிலம், ப.189.

இரவு நேரத்தில் பரதவர்களது படகிலிருக்கும் விளக்குகள் வளைந்தும், மங்கியும், விட்டு விட்டெரிவது நீல நெடுவானில் மின்னி மிளரும் விண்மீன்களெனத் தோன்றுவதை,

**"வளிபொரக் கற்றைத் தாஅய் நளிசுடர்**
**நீல்நிற விசும்பின் மீனொடு புரைய"**[91]

என்னும் நற்றிணைப் பாடல் அடிகளால் அறியமுடிகின்றது. இவ்வாறு இரவில் விளக்கொளியின் துணைக் கொண்டு மீன் பிடிக்கும் செய்திகள் பெரும்பாலும் மேலைக்கடலில் (பண்டைய சேர நாட்டுப்பகுதி) நிகழ்ந்தவை என்று தெரிகிறது. அப்பகுதிகளில் தான் கடும்புயல் வீசும். ஒரு சில நாள்களைத் தவிர ஆண்டு முழுவதும் கடல் அலையற்று அமைதியாய் இருக்கும். இரவில் மீன்களைப் பிடிக்கப் போவது இப்பொழுது உண்டானாலும், விளக்கேற்றிப் போகும் பழக்கம் காணப்படவில்லை என்பது குறிப்பிடத்தக்கது.

இதனால் இன்று விளக்கொளியையோ, தீப்பந்தங்களைக் கொண்டு மீன்பிடிப்பது பரதவ மக்களுக்கு எண்ணவும் இயலாத செயல் என்றும், அமைதி தவழும் கடல் பகுதி வாழ் மக்கள் தீயொளி கொண்டு இரவில் மீன் பிடிப்பர் என்பதும் தெளிவாகிறது.

**கழிகளில் மீன் பிடித்தல்**

பரதவர்கள் கடலில் மீன் பிடிப்பதோடு மட்டும் நில்லாது கழிப் பகுதிகளில் சுற்றித் திரியும் மீன்களையும் பிடிக்கின்ற செய்திகள் நெய்தல் பாடல்களில் காணப்படுகின்றன. கடலில் மீன்பிடிக்கும் வலையை விடக் கழிகளில் மீன்பிடிக்கப் பயன்படுத்தும் வலைகள் மாறுபட்டவை.

கழிகளில் பரதவர்கள் மீன்பிடிக்கின்ற செய்தியினை மதுரை மருதனில நாகனார் என்னும் சங்கப் புலவர் அகப்பாடல் ஒன்றில், ஊணூர் பகுதியைச் சேர்ந்த பரதவர்கள் பெரிய கழிகளில் நேரிய கோல்களை உடைய அழகிய வலையினால் இறால் மீன்களைப் பிடித்ததை,

**"இருங்கழி முகந்த செங்கோல் அவ்வலை**
**முடங்குபுற இறவோடு இனமீன் செறிக்கும்"**[92]

என்று குறிப்பிடுகின்றார். இதன் வழிக் கழிகளிலும் பரதவர்கள் மீன் பிடிக்கின்ற நிலையை அறிந்து கொள்ள முடிகின்றது.

---

91. பின்னத்தூர் நாராயணசாமி ஐயர்(உ.ஆ.), நற்றிணை நானூறு, ப.249.
92. ரா. வேங்கடாசலம் பிள்ளை(உ.ஆ.), அகநானூறு, மணிமிடைபவளம், ப.235.

**குலத்தொழில் பழக்குதல்**

பரதவ குடிமக்கள் தங்கள் பிள்ளைகளைச் சிறுவயது முதற்கொண்டே தம் குலத்தொழிலில் பழக்குவர். ஆழ்கடலில் சென்று மீன்களைப் பிடித்து வந்த தந்தையுடன் சிறுவர்கள் கடல் வேட்டம் செல்ல ஆர்வம் கொள்வர். தந்தையுடன் கடலில் செல்ல விரும்பும் சிறுவன் ஒருவனின் பேரார்வத்தை நற்றிணைப் பாடலொன்று பின்வருமாறு சித்திரிக்கின்றது,

**"கடும்சுறா எறிந்த கொடும் தாள்தந்தை**

**புள்இமிழ் பெரும்கடல் கொள்ளான் சென்று என**

**மனை அழுது ஒழிந்த புன்தலை சிறாஅர்"**[93]

இப்பாடல் கொடிய சுறா மீன்களை வலையிட்டுப் பிடிக்கின்ற முயற்சியை உடைய தந்தை, பெரிய கடலில் வேட்டைக்குச் செல்லப் புறப்படுகின்றான். அவன் மகனும் உடன்செல்ல விரும்புகிறான். ஆனால் தந்தை சிறுவனை உடனழைத்துச் செல்லவில்லை. அதனால் ஏமாற்ற மடைந்த அச்சிறுவனது அழுகை மாற மனைக்குப் பக்கத்திலிருந்த பனைமரத்தின் நுங்கு ஒன்று கிடைக்கின்றது. அதை உண்டு ஆறுதலடைந்தான்.

இளையவரும், முதியவருமான பரதவ மக்கள், தம் உறவினர்களுடன் கூடியிருந்து சுறாமீன் தாக்கியதினால் கிழிந்து போன வலையினைச் செப்பம் செய்வர், பின்னர் அவ்வலையினைக் கொண்டு பெரிய மீன்களைப் பிடிக்க வேண்டும் என்ற எண்ணத்துடன் பரதவர்கள் கடலுக்குச் செல்வர். இவர்களுடன் கொல்லும் தொழிலில் விருப்பம் உடைய சிறுவர்களும் செல்வதை,

**"இளையரும் முதியரும் கிளையுடன் குழீஇக்**

**கோட்சுறா எறிந்தென சுருங்கிய நரம்பின்**

**வலையும் தூண்டிலும் பற்றிப் பெருங்கால்**

**திரையெடு பௌவம் முன்னிய**

**கொலை வெஞ் சிறார்"**[94]

என்ற பாடல் அடிகளால் கொடுஞ்சுறாவைப் பிடிக்க வல்ல தந்தையர் தம் மைந்தரையும் குலத்தொழிலில் பழக்குவர்.

93. பொ. வே. சோமசுந்தரனார்(உ.ஆ.), நற்றிணை மூலமும் உரையும், ப.481.
94. பின்னத்தூர் நாராயணசாமிஐயர்(உ.ஆ.), நற்றிணை நானூறு, ப.125.

**சுறாமீன் வேட்டம்**

கடலில் பல வகை மீன்கள் இருந்தன. அவற்றுள் சுறாமீன் புகழ்பெற்றது. சுறா மீன்கள் மிகப் பெரியதாகவும் பரதவர்க்குத் துன்பம் கொடுப்பனவாகவும் இருந்தன என்று சங்க இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன. "சுறாமீன்கள் மிகுந்த ஆபத்தானவை, ஆதலின் பரதவர்கள் வலைவீசி பெரிய சுறா மீன்களைப் பிடிக்கமாட்டார்கள். எத்தகைய உறுதி வாய்ந்த கயிற்றினால் பின்னிய வலையினையும் சுறாமீன் எளிதில் சிதைத்து விடும். ஆதலால் அக்காலத்தில் பரதவர்கள் தூண்டிலைக் கொண்டும், எறியுளி கொண்டும் சுறாமீன்களைப் பிடித்தனர். பரதவர்கள் சுறாமீன் பிடித்தலைச் சுறாமீன் வேட்டம்"[95] என்பர்.

தோள் வலிமை மிக்க பரதவர்கள் கடலில் நேரான கோலையும், வளைந்த முடிகளையும் கொண்ட அழகிய வலையினை வீசுவர். அக்கொடுமுடி வலையினையும் சுறாமீன்கள் கூரிய கொம்பினால் கிழித்துத் தப்பியோடி விடுவதை,

**"வன்கைப் பரதவர் இட்ட செங்கோல்**
**கொடுமுடி அவ்வலை பரியப் போகிக்**
**கடுமுரண் எறிசுறா வழங்கும்**
**நெடு நீர்ச் சேர்ப்பன்"**[96]

என்ற பாடல் அடிகள் எடுத்துக்காட்டுகின்றன. சுறாமீனைப் பிடிப்பதற்கு வலையினையும், சாட்டுளி என்ற எறி ஈட்டியினையும் பயன்படுத்தினார்கள் என்ற செய்திகள் நெய்தல் திணைப் பாடல்களில் காணப்படுகின்றன.

கொடுஞ்சுறா மீன்களை வேட்டையாடிப் பிடிப்பதில் அஞ்சா நெஞ்சமும், ஆர்வமும் கொண்ட பரவர்கள் முதல்நாள் சுறாமீன் வேட்டையின் போது சுறாமீனானது வலை கிழியும் படியாக அதனை அறுத்துத் தப்பிச் சென்ற போதிலும், மறுநாள் மிகுந்த திறத்துடன் பரதவர்கள் அச்சுறா மீனைப் பிடித்ததை,

**"கொடுமுடி அவ்வலைப் பரியப் போகிய**
**கோட்சுறாக் குறித்த முன்போடு**
**வேட்டம் வாயாது எமர்வா ரலரே"**[97]

95. தி. முத்துகண்ணப்பன், சங்க இலக்கியத்தில் நெய்தல் நிலம், ப.191.
96. த. கோவேந்தன், அன்பொடு புணர்ந்த ஐந்திணை(நெய்தல்), ப.145.
97. மேலது, ப.127.

என்ற நற்றிணைப் பாடல் அடிகள் எடுத்துக் கூறுகின்றன. இதனின்று பரதவர் தம்தொழிலில் விடாமுயற்சியை உடையவர் என்பதை அறியமுடிகின்றது. விடாமுயற்சியுடன் பிடித்த மீன்களை நெற்களத்தில் அறுவடை செய்த உழவர்களைப் போன்று வேண்டுவோர்க் கெல்லாம் தேவைக்கும் மிகுதியாகக் கொடுத்துப் பின்னர் எஞ்சியவற்றைத் தங்களுக்குள் பங்கிட்டு விலைகூறி விற்று வாழ்ந்தனர்.

**மீன்பிடிக்கருவிகள்**

சங்க காலத்தில் நெய்தல் நிலத்துப் பரதவ மக்கள் கடலில் மீன்பிடிப்பதற்கு வலைகள், பறிகள், விசைத்தூண்டில், தூண்டில், எறியுளி எனப் பலவகையான மீன்பிடிக்கருவிகளைப் பயன்படுத்தினர். கடலில் சென்று மீன்பிடிக்கத் திமில், தோணி, அம்பி, கட்டுமரம் போன்ற மரக்கலங்களைப் பயன்படுத்தினர்.

**வலை**

மீன்பிடி வலை ஒரு வகை நாரினால் பின்னப்பட்டு நுட்பமான முடிச்சுகளை உடையதாகவும், சிறுசிறு கண்களை உடையதாகவும் காணப்படும். வலைகளின் முடிகளுக்கு இடையில் உள்ள சிறு இடைவெளியை மீனவர் 'கண்கள்' என்று வழங்குவர். அக்கண்கள் கிழிந்து சிதைந்து போனால் அவற்றைச் சரிசெய்தலைப் 'பூரை பொத்துதல்' என்று கூறுவர்.

வடிக்கதிர் (வலையை முறுக்கும் கம்பி) என்னும் கருவி கொண்டு நூல் இழைகளை முறுக்கிக் கயிறு திரிப்பர். புதிதாய் உள்ள சிறுசிறு வலைத்துண்டுகளை முடித்துப்பின் அவற்றை நன்கு இணைத்து ஒன்றாக்கி முழு வலையாகச் செப்பஞ் செய்வர். முறுக்கிய நூலைக் கொண்டு மீன்கள் கிழித்தமையால் பழுதடைந்த வலைகளையும் சீர்படுத்துவர்.

பரதவர்கள் மீன்பிடி வலைகளைச் சிக்கெடுத்துச் சீர்படுத்துவர். வெண்மணல் பரப்பில் விரித்து. உலர்த்தி அருகில் உள்ள நீலநிறப் புன்னையில் நிழலில் தங்கி இருப்பர், பின் கடலில் தங்களுக்கு மீன்கள் கிடைக்கும் காலத்தைக் கூர்ந்து நோக்கிக் காத்திருப்பதை,

**"கானல்அம் சிறுகுடிக் கடல்மேம் பரதவர்**

**நீனிறப் புன்னைக் கொழுநிழ வசைஇத்**

**தண்பெரும் பரப்பின் ஒண்பதம் நோக்கி**

**யங்கண் அரில்வலை உணக்குந் துறைவன்”**[98]

என்று கூறுவதிலிருந்து பரதவர்கள் மீன்பிடிப்பதற்கு வலையானது மிகவும் பயன்பாடு உடையதாக இருந்ததை அறியமுடிகின்றது.

**பெரிய வலை**

இவ்வகை வலையினைப் பற்றித் தி. முத்துகண்ணப்பன், “பெரிய வலை என்று ஒரு வகை வலையுண்டு. அது உண்மையில் நீளத்திலும், பரப்பிலும் மிகவும் பெரியது. கரையிலிருந்து உறுதி வாய்ந்த வடம் போன்ற நீளக்கயிற்றால் பெரியனவும், சிறியனவுமான பல வலைகளை ஒன்றோடொன்று இணைத்திருப்பர். நடுவில் மிகப் பெரிய பை போன்ற வலையினைப் பிணைத்திருப்பர். அப்பை வலையினை ‘மடி’ என்று வழங்குவர். அது உறுதியான நூலால், நெருக்கமாய்ச் சிறிய கண்களாகப் பின்னப்பட்டிருக்கும்”[99] என்று குறிப்பிடுகிறார்.

நெடிய கயிற்றால் கட்டப்பட்ட குறுகிய கண்களை உடைய அழகிய வலை, கடலிலுள்ள இனமாகிய மீன்களையெல்லாம் கடல் வற்றிவிடும்படி ஒருங்கே முகந்து கொள்ளும், அவ்வலையினைப் பரதவ மாக்கள் சுற்றஞ்சூழ நெருங்கி மகிழ்ச்சி ஆரவாரத்துடன் கரை நோக்கி இழுப்பர். அப்படி ஒருங்கே குழுமி இழுப்பது, உமணர் வண்டிகளில் பூட்டிச் செலுத்தும் வலிய எருதுகள் ஒன்று கூடியதை ஒத்திருக்கும் என்பதை,

**“நெடுங்கயிறு வலந்த குறுங்கண் அவ்வலை**

**கடல்பாடு அழிய இனமீன் முகந்து**

**துணைபுணர் உவகையர் பரத மாக்கள்”**[100]

என்ற அகநானூற்றுப் பாடல் அடிகள் சுட்டுகின்றன. பெரிய வலையின் அமைப்பினையும், தோற்றத்தினையும், பரதவர்கள் அதனைக் கடலில் பெய்து சுற்றம் சூழக் கரையிலிருந்து இழுப்பதையும் அறிய முடிகின்றது.

---

98. பொ. வே. சோமசுந்தரனார்(உ.ஆ.), நற்றிணை மூலமும் உரையும், ப.7.
99. தி. முத்துகண்ணப்பன், சங்க இலக்கியத்தில் நெய்தல் நிலம், ப.193.
100 ந.சி. கந்தையாப்பிள்ளை (உ.ஆ.), அகநானூறு, ப.32.

**தூண்டில்**

சங்க காலத்தில் குளம், குட்டை, ஏரி போன்ற நீர்நிலைகளில் மீன்பிடிக்கத் தூண்டில் என்னும் மீன்பிடிக் கருவி பயன்படுத்தப்பட்டது. இக்கருவியின் முன்பகுதி வளைந்து கூர்மையாக இருக்கும். அதன் மேற்பகுதியில் மீன்களுக்கான இரை கோர்க்கப்பட்டிருக்கும். சங்கப் பாடல்கள் இக்கருவியைக் 'கொடுவாய் இரும்பு' எனக் குறிப்பிடுகின்றன.

க்ரியாவின் தமிழ் அகராதி தூண்டிலை, "தூண்டில் - மீன் பிடிக்கப் பயன்படும் தக்கை இணைக்கப்பட்ட உறுதியான இழையின் நுனியில் கொக்கி போன்ற இரும்பு முள்ளையுடைய நீண்ட கோல், Fishing Rod"[101] என்று கூறுகின்றது.

தமிழ்ப் பரதவர்கள், "தூண்டில் என்னும் கருவியை ஒரு கோலின் நூலில் கட்டிப் போட்டு மீன் பிடித்தனர். இக்கருவியின் முன்பகுதி வளைந்து கூர்மையாக இருக்கும். அதன் மேற்பகுதியில் மீன்களுக்கு இரையாகிய உணவுப் பொருள்கள் கோர்க்கப்பட்டிருக்கும்"[102] என்கிறார் வே.சா. அருள்ராசு.

மீன் பிடிப்பதில் வல்லமை பெற்ற பாண்மகன், மூங்கிலால் ஆன தூண்டில் கோல் நடுங்குமாறு, அதன்மீது கட்டப்பட்டிருந்த (கொடுவாய் இரும்பின் வளைந்த தலைப்பகுதியில்) இரையை வாளைமீன் கவ்விச் சென்றதைப் பெரும்பாணாற்றுப் படையில் கடியலூர் உருத்திரங் கண்ணனார்,

**"நெடுங்கழைத் தூண்டில் நடுங்க நாண் கொளீஇ**
**கொடுவாய் இரும்பின் மடிதலை புலம்பப்**
**பொதி இரை கதுவிய போழ்வாய் வாளை"**[103]

என்று கூறுகின்றார். சங்ககால மக்கள் தூண்டிலை மிகப்பெரும் அளவில், மிகவும் பரந்து விரிந்த வட்டத்தில், வகைவகையான சூழல்களிலும், தளங்களிலும் கையாண்டிருப்பது தெரிய வருகிறது.

**விசைத்தூண்டில்**

பரதவர்கள் கடலில் மீன்பிடிக்க வலையுடன் விசைத் தூண்டிலையும் பயன்படுத்தினர்.

---

101. எஸ். இராமகிருஷ்ணன், க்ரியாவின் தமிழ் அகராதி, ப.572.
102. வே.சா. அருள்ராசு, பழந்தமிழகத்தில் இரும்புத்தொழில், ப.74.
103. உ.வே. சாமிநாதஐயர்(உ.ஆ.), பெரும்பாணாற்றுப்படை, ப.197.

வளைவான மீன்பிடிப் படகுகளை உடைய பரதவர்கள் சுறா மீனைப் பிடிக்க விசைத் தூண்டிலைக் கடலில் எறிந்ததை,

**"கடுஞ்சுறா எறிந்த கொடுந்திமில் பரதவர்**

**வாங்குவிசைத் தூண்டில் ஊங்கூங்கு ஆகி"**[104]

என்னும் நற்றிணைப் பாடல் அடிகள் உரைக்கின்றன. பரதவர் மீன் பிடிக்கப் பயன்படுத்திய தூண்டிலானது மிகுந்த விசையுடன் வெளிப்பட்டதால் விசைத்தூண்டில் என்று அழைக்கப்படுகின்றது.

**எறியுளி**

மீன்பிடித்தல் என்பது மனிதனின் வாழ்வாதாரங்களுள் முக்கியமான ஒன்று, மனித நாகரிகத்தின் தொடக்க காலங்களில் இது மீன் வேட்டையாகத் தான் இருந்து வந்தது. வேல் கொண்டும், ஈட்டி கொண்டும் எறிந்து மீன்களை வேட்டையாடியது தான் மீன் பிடித்தலின் முதற்கட்டம், விவிலியத்தின் பழைய ஏற்பாட்டுப் பக்கங்களில் 'மீன் எறிவேல்' பற்றியக் குறிப்புக்களைக் காணலாம்.

**"கூரிய முட்களால் அதன் தோலையும்,**

**மீன்எறி வேல்களால் அதன் தலையையும் குத்தி நிரப்பு வாயோ"**[105]

என்னும் அடிகள், பழம்பெருங்காலம் தொட்டே இருந்துவந்த மீன்எறி வேல்களின் பயன்பாட்டைப் புலப்படுத்துகின்றன.

சங்க இலக்கியத்திலே 'மீன் எறிவேல்' என்ற சொல்லிற்கு இணையாக. 'எறிஉளி' என்னும் சொல் வழங்கியிருப்பதைக் காண முடிகிறது. சுறாமீனின் வலிமைக்கு ஆற்றாமல் வலைகள் கிழிபட, பரதவ மக்கள் எறியுளியைப் பயன்படுத்திச் சுறாவைக் குத்தி வீழ்த்துகின்ற காட்சிகள் சங்க இலக்கியங்களிலே சுட்டிக்காட்டப்பட்டுள்ளன.

சிறிய குடிசைகளில் வாழும் கொலைத் தொழிலை உடைய பரதவர்களால் எறியப்பட்ட உளியால் தாக்கப்பட்ட சுறாவானது வலி தாங்காது துள்ளிக் குதிக்கும். அடிபட்ட அச்சுறா மீன் காயத்திலிருந்து வெளிப்படும் குருதியால் கடலானது சிவப்பு நிறத்திற்கு மாறுவதனை,

---

104. த. கோவேந்தன், அன்பொடு புணர்ந்த ஐந்திணை (நெய்தல்), ப.123.
105. யோபு, திருவிவிலியம் (பழைய ஏற்பாடு), ப.808.

**"குறியிறைக் குரம்பைக் கொலைவெம் பரதவர்**
**எறியுளி பொருத ஏமுறு பெருமீன்**
**புண்ணுமிழ் குருதி புலவுக்கடல் மறுப்பட்ட"**[106]

என்னும் பாடல் அடிகளின் வாயிலாக அறியமுடிகின்றன. பரதவர்கள் சுறாமீன் உள்ளிட்ட பெரிய மீன்களைப் பிடிப்பதற்கு 'எறியுளி' என்னும் கருவியைப் பயன்படுத்தியிருக்கின்றனர்.

**மரக்கலக் கட்டுமானம்**

நம் நாட்டுக் கப்பற்கலை வல்லுநர்கள் கப்பற்கலையை நன்கு ஆய்ந்து அக்கலையை வளர்த்திருக்கின்றனர். கலன்கள் எவ்வளவு நீளம், அகலம் இருக்க வேண்டும் என முடிவு செய்து கலன்களை அமைந்தனர். கலன்களைச் செய்ய என்ன மரம் நல்ல மரம் எனக் கண்டு அந்த மரத்தில் கலன்கள் உருவாக்கப்பட்டு உள்ளன. பழங்காலத்தில் தேக்கு, புன்னை, அயனிப்பலா, வேம்பு, இருப்பை எனப் பலவிதமான மரங்களைக் கொண்டு கலங்கள் கட்டப்பட்டன.

கப்பல் சாத்திரம் என்னும் நூல், "கப்பல் கட்டுதற்குரிய மரங்கள்: வேம்பு, இருப்பை, புன்னை, நாவல் இவை நீர்மட்ட வைப்புக்கு உரியன. பக்கவங்குக் கால்களுக்கு: வெண்தேக்கு, தேக்கு இவை உரியன"[107] என்று கூறுகின்றது.

நாவாய் சாத்திரம் என்னும் கப்பற்கலை நூல், "கப்பல் கட்டுவதற்குப் பயன்படுத்தப்படும் மரத்தில் சுழிகள் இருக்கக்கூடாது என்ற இலக்கணத்தை வகுக்கிறது. சுழிகளைப் போலவே சில உருவங்களும் இழைத்த மரத்தில் காணப்படும். இவை 'கண்ணடை' என்று பேசப்படுகின்றது. விலங்கின் குளம்பு போலவும், பூப்போலவும் இன்னும் சிலவாறாகவும் கண்ணடைகள் மரங்களில் இருக்கும். மரம் வெட்டுவாய், மஞ்சள் நிறமாகில் உடும்பு வாழும், கறுப்பாகில் பாம்பு வாழும், தயிலம் போல் இருக்கில் தேள், குயில் வண்ணமாகில் எலி, சிவப்பாகில் தவளை மிகுதி, இவற்றையெல்லாம் பார்த்தே கப்பல் கட்டுவதற்கு மரத்தைத் தேர்ந்தெடுக்க வேண்டுமென்று"[108] உரைக்கிறது.

---

106. தொ. சூசைமிக்கேல், வள்ளுவர் நெய்தல் நிலத்தவரே, ப.224.
107. தி. பொ. பழனியப்பப் பிள்ளை (பதி.ஆ.), கப்பல் சாத்திரம், ப.22.
108. எஸ்.சௌந்திரபாண்டியன்(பதி.ஆ.), நாவாய் சாத்திரம், ப.22.

பண்டையக் காலத்தில் மரப்பலகைகளாக இழைக்கப்பட்ட மரங்கள் மூன்று அடுக்காக இணைக்கப்பட்டு மரக்கலங்களாகக் கட்டப்பட்டன. அக்காலத்தில் ஆணிகள் கிடையாது. மர இணைப்பிற்கு மூங்கில் மரப்பத்தைகள் ஆணிகளைப் போலப் பயன்படுத்தப்பட்டன. வின்சுலோவின் தமிழ் அகராதி பத்தையினை, "பத்தை - Thin Pieces of Bambu or Splints of Board a since, பத்தை வைத்து கட்ட To Apply Slints as to a Broken Limp[109] என்று குறிப்பிடுகின்றது.

சங்க இலக்கியத்தில் மரக்கலக்கட்டுமானங்களைப் பற்றியப் குறிப்புக்கள் இல்லாவிட்டாலும், தற்கால தமிழகத்தின் கீழைக் கடற்கரை ஊர்களில் (நாகப்பட்டினம், கடலூர்) மேற் கூறியவாறு பண்டைய மரபின்படி நடைபெற்று வரும் மரக்கலக் கட்டுமான முறைகள் இவற்றிற்குச் சான்றுகளாக அமைகின்றன.

**மரக்கல வகைகள்**

தமிழ் இலக்கியங்களில் 18 வகையான கலன்கள் சொல்லப்பட்டுள்ளன. அவையாவன1.மிதவை, 2.புணை, 3.கட்டுமரம், 4.தெப்பம், 5.தோணி, 6.படகு, 7.ஓடம், 8.முடுகு, 9.கைப்பரிசு, 10.சோங்கு, 11.அம்பி, 12.திமில், 13.நாவாய், 14.வங்கம், 15.கலம், 16.மதலை, 17. கப்பல், 18.பஃறி இவற்றை 1.கட்டுமரம்வகை, 2.தோணிவகைகள், 3.வள்ளம் வகை என மூன்றாக வகைப்படுத்தலாம்"[110] என்கிறார் ம.அருள்தளபதி.

சங்கப் பாடல்களில் திமில், நாவாய், வங்கம், அம்பி, தோணி, ஓடம், கலம், பஃறி என்பவை பற்றிய செய்திகள் காணக்கிடைக்கின்றன. திமில், அம்பி, தோணி என்ற மூன்றும் மீன் பிடித் தொழிலுக்குப் பயன்படுத்தப்பட்டன. வங்கம், நாவாய் என்பன பண்டங்களை ஏற்றிக்கொண்டு நெடுந்தொலைவு செல்வதற்குப் பயன்பட்ட பெருங்கலங்களாகும். கலம் என்ற சொல்லும் பல இடங்களில் பயின்று வந்துள்ளது. பொதுவாகக் கலம் என்பது மரக்கலம் என்றே பொருள்படும். இது பெரும்பாலும் பண்டம் ஏற்றும் படகுகளையே குறித்தது.

**அம்பி**

அம்பி என்பது மூங்கில் மரத்தைக் குடைந்து உருவாக்கப்பட்ட படகாகும். கு. அரசேந்திரன் "மரத்தைத் துளைத்து உருவாக்கிய மரக்கலம் அம்பி எனப்பட்டது"[111]

---

109. வின்சுலோ(தொ.ஆ.), வின்சுலோ தமிழ் ஆங்கில அகராதி, ப.727.
110. ம. அருள்தளபதி, அறிவியல் தமிழ் வளமும் வளர்ச்சியும், ப.85.
111. கு. அரசேந்திரன், தமிழ்க் கப்பல் மொழி ஆய்வு, ப.34.

என்கிறார். தமிழ் லெக்சிகன் அம்பியினை, "Small Boat"[112] எனக் குறிப்பிடுகிறது. சங்ககாலத்தில் தமிழகத்தில் அம்பிகள் ஆறுகளிலும், கடலிலும் ஓடின.

நற்றிணைப் பாடல்கள் அம்பியினை, "தூங்கல் அம்பி"[113], "முறிவாய் அம்பி"[114] எனக் குறிப்பிடுகின்றன. இப்பாடல்களில் குறிப்பிடப்படும் தூங்கல் அம்பி என்பது தாலாட்டுவது போல அசைந்து செல்லும் மிதவை எனலாம். முறிவாய் அம்பி என்பது ஒடிந்த நிலையில் குச்சி போன்ற முகப்பும், பின்பக்கமும் கொண்டது.

கடலில் மீன்பிடிக்கும் நோக்கத்துடன் பரதவர்கள் அம்பிகளைச் செலுத்துவர். இவ்வாறு செலுத்தப்படும் அம்பிகள் பரிகோற்காரர் (அங்குசம் கொண்ட பாகர்) பிணித்துச் செலுத்துகின்ற அடக்குதற்கு உரிய யானையைப் போன்றிருக்கும் என்பதை,

**"நிறையப் பெய்த அம்பி காழோர்**
**சிறையருங் களிற்றிற் பரதவர் ஒய்யுஞ்"**[115]

என்னும் பாடல் அடிகள் சுட்டிக்காட்டுகின்றன. இதனால் அம்பி பெரும்பாலும் மீன் பிடிக்கும் தொழிலுக்கே பயன்படுத்தப்பட்டது எனலாம்.

**கலம்**

ஆதிமனிதன் "மருதத்தையும் தாண்டி நெய்தலாகிய கடலுக்குள் பயணம் மேற்கொள்ள மரத்தைக் குடைந்து ஒரு கலம் செய்து கொண்டான். அதற்கு மரக்கலம் எனப் பெயர் தந்தான்"[116]

பொதுவாகத் தமிழில் கலம் என்னும் சொல்லுக்கு பல பொருள் உண்டு. ஆகவே பொருள் மயக்கத்தைத் தவிர்க்கும் பொருட்டு மட்கலம், உண்கலம், குடிகலம், மரக்கலம் என அடை மொழியோடு இச்சொல் தமிழில் கையாளப்படுகிறது.

நர்மதாவின் தமிழ் அகராதி "மரக்கலம் - மரக்கலன் நீரில் செல்லும் மரத்தால் ஆன போக்குவரத்துச் சாதனம்"[117] எனக் கூறுகின்றது.

---

112 S. Vaiyapuri Pillai(Ed.), Tamil Lexicon, (Vol-V), p.2758.
113. பின்னத்தூர் நாராயணசாமி ஐயர்(உ.ஆ.), நற்றிணை நானூறு, ப.436.
114. மேலது, ப.389.
115. த. கோவேந்தன், அன்பொடு புணர்ந்த ஐந்திணை (நெய்தல்), ப.97.
116. கு.அரசேந்திரன், தமிழ்க் கப்பல் மொழி ஆய்வு, ப.31.
117. மாருதிதாசன்(ஆசி.), நர்மதாவின் தமிழ் அகராதி, ப.724.

யவனர்கள் மரக்கலத்திலே பொன்னோடு வந்து மிளகோடு திரும்பிப் போகும் நல்ல வளமை மிக்க ஊர் முசிறி என்பதை அகநானூற்றில் எருக்காட்டூர் தாயங்கண்ணனார்,

**"யவனர் தந்த வினைமாண் நன்கலம்**
**பொன்னோடு வந்து கறியொடு பெயரும்**
**வளம்கெழு முசிறி ஆர்ப்பெழ வளைஇ"**[118]

எனக் குறிப்பிட்டுள்ளார். இதனால் அக்காலத்தில் கலம் வெளிநாட்டு வாணிகத்திற்குப் பயன்படுத்தப்பட்டது எனலாம்.

**திமில்**

சங்ககாலத்தில் கடலில் மீன் பிடிக்கப் பயன்படுத்தப்பட்ட படகுகளில் திமிலும் ஒன்றாகும். தமிழ் லெக்சிகன் திமிலினை "Catamaran Small Boat"[119] என்கிறது.

திமில் ஒரு பெரிய மீன் போன்ற வடிவினை உடையது. "திமி என்றால் யானைமீன், பெருமீன்"[120] என்கிறது திவாகர நிகண்டு, பெருமீன் என்பது சுறாமீனைக் குறிக்கும். பெருமீனைப் போன்ற தோற்றத்தையுடையது என்ற பொருளில் படகு 'திமில்' என்று பெயர் பெற்றன எனலாம்.

திமிலில் கொடுந்திமில், திண்திமில், நெடுந்திமில் எனப் பல வகைகள் உண்டு. திமிலை உடைய பரதவர்கள் 'திமிலர்' என்றும் 'திமிலோன்' என்றும் அழைக்கப்பட்டனர்.

சிறுகுடியில் வாழும் பரதவ மக்கள் பெரிய கடலில் விரைந்து செல்வதற்குத் திமில் என்னும் படகினைப் பயன் படுத்தியதை,

**"சிறுகுடிப் பரதவர் பெருங்கடல் மடுத்த**
**கடுஞ்செலற் கொடுந்திமில் போல"**[121]

என்னும் பாடல் அடிகளின் வழியாக அறியலாம். இவற்றில் குறிப்பிடப்படும் திமில் வளைவான படகாகும். பரதவர்கள் கடலில் பல வகையான மீன்களை வேட்டையாடுவதற்கு திமில் என்னும் படகினைப் பயன்படுத்தினர் எனலாம்.

---

118. ரா. வேங்கடாசலம் பிள்ளை(உ.ஆ.), அகநானூறு, மணிமிடைபவளம், ப.339.
119. S. vaiyapuri Pillai(Ed.), Tamil Lexicon(Vol-III), p.1880.
120. திவாகர முனிவர், சேந்தன் திவாகரம், ப.202.
121. ந. மு. வேங்கடசாமிநாட்டார்(உ.ஆ.), அகநானூறு, நித்திலக்கோவை, ப.47.

**தோணி**

பழங்காலத்தில் ஆறுகளையும், கடலையும் கடந்து செல்வதற்குப் பயன்படுத்தப்பட்ட படகுகளில் தோணியும் ஒன்றாகும். க்ரியாவின் தமிழ் அதகராதி, "தோணி - துடுப்பால் தள்ளப்படும் படகு (Raving Boat)"[122] எனக் குறிப்பிடுகின்றது.

வி. ஆர். இராமச்சந்திர தீட்சிதர், "கோடிக்கரையில் இன்றும் வழக்காற்றில் இருக்கும் (திருட்டுப் படகு என்னும் பொருள் உடையதான) கள்ளத்தோணி படகு வகைகளில் சிறப்புடைய ஒன்றாகும்"[123]என்கிறார். முற்காலத்தில் நீர்ப்போக்கவரத்திற்குப் பயன்படுத்தப்பட்ட தோணி இன்று மீன்பிடிக்கவும் பயன்படுத்தப்படுகின்றது.

பெரிய மரக்கலங்களில் கொண்டு வரப்பட்ட பொன் பொருள்களை உப்பங்கழிப் பகுதிகளில் ஓடும் தோணிகள் வழியாகக் கரைக்குக் கொண்டு வந்ததை,

**"கலந்தந்த பொற் பரிசம்**

**கழித்தோணியாற் கரைசேர்க்குந்து"**[124]

என்ற பாடலடிகள் அறிவுறுத்துகின்றன. அக்காலத்தில் ஆழம் குறைவான துறைமுகத்திற்குப் பெரிய கலங்கள் வரமுடியாது. அவை நடுங்கடலில் நங்கூரமிட்டு நிறுத்தப்படும், தோணிப் படகுகளே அக்கலங்களிலிருந்து பொருள்களை ஏற்றி வந்து துறைமுகத்தில் இறக்குமதி செய்யும்.

தோணி கடல் நீரைப் பிளந்து கொண்டு குதிரையைக் காட்டிலும் வேகமாகச் சென்றதை,

**"உழுத்த அதர் உண்ட ஓய்நடைப் புரவி**

**கடல்மண்டு தோணியின் படைமுகம் போழ"**[125]

என்ற புறநானூற்றுப் பாடல் அடிகள் விளக்குகின்றன. இதிலிருந்து தோணி வேகமாகச் செல்லும் தன்மையுடையதை அறியலாம்.

---

122. ரா. சுப்பிரமணியன்(மு.ஆசி.), க்ரியாவின் தமிழ் அகராதி, ப.596.
123. கா. கோவிந்தன் (மொ.ஆ.), தமிழர் தோற்றமும் பரவலும், ப.115.
124. ஔவை சு. துரைசாமிப்பிள்ளை(உ.ஆ.), புறநானூறு(பகுதி- I), ப.286.
125. உ.வே.சாமிநாதஐயர் (உ.ஆ.), புறநானூறு மூலமும் உரையும், ப.472.

**நாவாய்**

சங்ககாலத் தமிழகத்திலிருந்த பெரிய மரக்கல வகைகளில் நாவாயும் ஒன்றாகும். தேவநேயப் பாவணர் நாவாயினை, "நாவுதல் – கொழித்தல்; நாவு - நாவாய் - கடல் நீரைக் கொழித்துச் செல்லும் பெருங்கலம்"[126] என்று கூறுகின்றார். தமிழ் லெக்சிகன் நாவாயினை, "Vessel Ship"[127] என்கிறது. நாவாய் என்னும் மரக்கலம் பாய் மரங்களுடன் கூடிய பெரிய மரக்கலமாகும், பாய்கள் விரிக்கப்பட்ட நிலையில் காற்றின் உதவியுடன் நாவாயானது கடலில் செலுத்தப்படும்.

மதுரைக் காஞ்சியில் மாங்குடி மருதனார் நாவாயானது பெருங்கடலில் அடிக்கும் காற்றின் துணையாலே அலைகளைப் பிளந்து கொண்டு கூம்பில் கொடிகளுடன் முரசம் ஒலிக்க துறைமுகத்தை அடைந்ததை,

**"இன் இசைய முரசம் முழங்கப்**

**பொன் மலிந்த விழுப் பண்டம்**

**நாடு ஆர நன்கு இழிதரும்**

**ஆடு இயல் பெரு நாவாய்"**[128]

எனக் குறிப்பிட்டுள்ளார். தற்காலத்திலும் நாவாய் போன்றபெரிய சரக்குக் கப்பல்கள் கொடியுடனும், ஒலி எழுப்பிக் கொண்டும் துறைமுகத்திற்குள் நுழைகின்றன. சரக்குக் கப்பல்களில் உள்ள கொடிகள் அவை எந்த நாட்டைச் சேர்ந்தது என அறிவதற்காக கப்பலின் கொடி மரத்தில் கட்டப்படுகின்றன.

**பஃறி**

சங்ககாலத்தில் பொருள்களை ஏற்றிச் செல்லப் பயன்படுத்தப்பட்ட படகுகளில் பஃறியும் ஒன்றாகும். தமிழ் லெக்சிகன் பஃறியினை, "Coracle Boat,படகு"[129] என்கிறது. இத்தகைய பஃறியைப் பற்றிப் பட்டினப் பாலை,

---

126. தேவநேயப் பாவணர், வடமொழி வரலாறு(பகுதி-2), ப.20.
127. S. Vaiyapuri Pillai(Ed.), Tamil lexicon(Vol-II), p.2229.
128. நச்சினார்க்கினியர்(உ.ஆ), பத்துப்பாட்டு மூலமும் உரையும், ப.293.
129. S.Vaiyapuri Pillai (Ed.), Tamil Lexicon(Vol.V), p.2758.

**"வெள்ளை உப்பின் கொள்ளை சாற்றி**
**நெல்லொடு வந்த வல்வாய்ப் பஃறி**
**பணைநிலைப் புரவியின் அணைமுதற் பிணிக்கும்"**[130]

என்று கூறுகின்றது. இவற்றில் வெள்ளை உப்பினை நெல்லுக்குப் பண்டமாற்றாக ஏற்றிச் செல்ல வந்த படகுகள் (பஃறிகள்) தறிகளால் பிணைக்கப்பட்டிருந்த காட்சி குதிரைகளை வரிசையாக லாயத்தில் கட்டி வைக்கப்பட்டிருந்த காட்சி வைக்கப்பட்டிருந்ததைப் போல இருந்ததாகக் குறிப்பிடுகின்றது. இதனால் சோழ நாட்டுப் பகுதியில் ஓடும் ஆறுகளிலும், உப்பங்கழிப் பகுதிகளிலும் பஃறிகள் ஓடியிருக்கின்றன எனலாம்.

**புணை**

புணை என்பது தெப்பத்தை விடச் சற்றுச் சிறியதாக இருக்கும் மிதவையாகும். "துளை எனப் பொருள்பட்ட 'புண்' என்பதிலிருந்து தான் புண் - புணை என மரக்கலம் குறிக்கும் சொல்லும் தோன்றியது"[131] என்கிறார் கு. அரசேந்திரன்.

புணையில், மரப்புணை, பூம்புணை, நீடுபுணை, வான்புணை எனப் பலவகை உண்டு, இத்தகைய புணையினை அகநானூறு,

**"கொழுங்கோல் வேழத்துப் புணைதுணை யாகப்**
**புனலாடு கேண்மை அனைத்தே"**[132]

என்று கூறுவதிலிருந்து புணையானது வேழத்தால் (மூங்கிலால்) உருவாக்கப்பட்டதை அறியலாம். புணை கடலில் மீன்பிடிப் படகாகப் பயன்பட்டதை,

**"இருநீர்ச் சேர்ப்பின் உப்புடன் உழுதும்**
**பெருநீர்க் குட்டம் புணையொடு புக்கும்"**[133]

என்ற பாடல் அடிகள் விளக்குகின்றன. இதனால் புணை மனிதன் பயன்படுத்திய மிதவை வகையைச் சார்ந்தது எனலாம்.

---

130. பொ. வே. சோமசுந்தரனார்(உ.ஆ.), பட்டினப்பாலை, ப.36.
131. கு. அரசேந்திரன், தமிழ்க்கப்பல் மொழி ஆய்வு, ப.34.
132. த.கோவேந்தன், அன்பொடு புணர்ந்த ஐந்திணை(நெய்தல்), ப.156.
133. ரா. வேங்கடாசலம்பிள்ளை(உ.ஆ.), அகநானூறு, மணிமிடைபவளம், ப.378.

**வங்கம்**

வங்கம் என்பது பெரிய மரக்கல வகைகளில் ஒன்றாகும். இது நாவாயை விடச் சற்றுச் சிறியது என்றாலும் நாவாயினை விட விரைந்து செல்லக்கூடியது. வங்கநாட்டுப் பாணியில் கட்டப்பட்ட மரக்கலமாதலின் வங்கம் எனப் பெயர் பெற்றிருக்கின்றது. "கப்பல் கட்டுவதற்கு வங்கம் உயிர் நாடியாக இருப்பதைக் கொண்டு மரக்கல வகை ஒன்றிற்கு வங்கம் என்று பெயர் சூட்டப்பட்டிருக்கலாம்"[134] என்று அ.இராகவன் குறிப்பிடுகின்றார்.

வங்கம் பற்றி அகப்பாடல் ஒன்றில் மதுரை மருதனிளநாகனார்,

**"உலகுகிளர்ந் தன்ன உருகெழு வங்கம்**
**புலவுத்திரைப் பெருங்கடல் நீரிடைப் போழ**
**இரவும் எல்லையும் அசைவின் றாகி**
**விரைசெலல் இயற்கை வங்கூ ழாபட"**[135]

என்று சுட்டிக்காட்டுகின்றார். இவற்றில் அச்சம் விளைவிக்கும் வகையில் வங்கம் என்னும் ஒரு வகை மரக்கலம், புலால் நாற்றம் உடைய அலை வீசும் பெரிய கடலின் இடையில் நீரைப் பிளந்து கொண்டு இரவு, பகல் பாராது விரைந்து செல்லும் ஆற்றலுடையது என்கிறார். இவற்றிலிருந்து வங்கம் மிகப்பெரிய மரக்கலமாக இருந்ததை அறிய முடிகின்றது.

இதனால் தமிழர்கள் பலவகையான கலன்களையும், தங்களது தேவைகளுக்கேற்பப் பட்டறிவாலும், நுண்ணறிவாலும், ஆக்குந்திறனும், அவற்றைச் செலுத்தும் திறனும் ஒருங்கே அமையப் பெற்றவர்களாக விளங்கினர் என்பது தெளிவாகின்றது.

**கலம் பழுது பார்த்தல்**

சங்ககாலத் தமிழகத்திற்கு வாணிகத்தின் பொருட்டு வெளிநாடுகளிலிருந்து கலங்கள் பல வந்து சென்றன. பலவகையான மரக்கலங்கள் வந்து செல்லுமிடத்தில் கலங்களைப் பழுது பார்க்க துறைமுகப் பகுதியில் பணிமனைகளை அக்கால சேர, சோழ, பாண்டிய அரசர்கள் ஏற்படுத்திக் கொடுத்திருந்தன.

---

134. அ. இராகவன், நம்நாட்டுக் கப்பற்கலை, ப.118.
135. ந.மு. வேங்கடசாமிநாட்டார்(உ.ஆ.), அகநானூறு, மணிமிடைபவளம், ப.137.

அம்பி, தோணி, திமில், நாவாய், வங்கம் எனப் பல வகையானக் கலங்கள் கட்டுதலை அறிந்திருந்த தமிழர் அவற்றில் பழுது ஏற்படின் சரி செய்யும் திறனையும் பெற்றிருந்தனர். இது ஒரு சமநிலை வளர்ச்சியாகும். சமநிலை வளர்ச்சி என்பது கலங்களைக் கட்டுவதும், செப்பனிடுவதுமாகும். பொதுவாகக் கடல்வழிப் போக்குவரத்திற்கு கலங்களைப் பழுது பார்த்தல் இன்றியமையாத ஒன்றாகும். அக்காலத்தில் ஒவ்வொரு துறைமுகத்திலும் கலங்களைச் செப்பனிடும் பணிமனைகளும், தச்சர்களும் இருந்திருக்க வேண்டும், பதிற்றுப்பத்தில் அரிசில் கிழார்,

**"பெருங்கடல் நீந்திய மரம்வில யறுக்கும்**
**பண்ணிய விலைஞர் போலப் புண் ஒரிஇப்"**[136]

என்ற பெருங்கடலிடையே பல்வேறு நாடுகளுக்குச் சென்று வந்த மரக்கலத்தை துறையில் பழுது பார்த்து மீண்டும் கடலிடையே செலுத்துவர் எனக் குறிப்பிட்டுள்ளார். இதன் வழியாகச் சங்க காலத்தில் பரதவர்கள் படகினைக் கடலில் செலுத்தும் திறனை மட்டுமல்லாமல் செப்பனிடும் திறனையும் பெற்றிருந்ததை அறிய முடிகிறது.

**உப்பு விளைவித்தலும், விற்றலும்**

நெய்தல் நிலமக்கள் கடற்கரையைச் சார்ந்த இடங்களில் உள்ள உவர் நிலத்தில், சிறு சிறு பாத்திகள் அமைத்து, அவற்றில் கடல் நீரையும், உப்பங்கழி நீரையும் பாய்ச்சி உப்பு விளைவிப்பர். சூரிய ஒளியின் வெப்பத்தினால் உப்பளத்தில் தேக்கப் பெற்ற கடல் நீரானது வற்றி உப்புப் பூத்துக் காணப்படும்.

மழை பெய்தாலும், பொய்த்தாலும் பரதவ மக்கள் கவலைப்பட மாட்டார்கள், மழை பெய்தால் நெற்பயிர் செழித்து வளர்ந்து அவர்களுக்குப் புறவருவாயினைத் தரும். மழை பொய்த்தால் கழிக் கரைகளெல்லாம் காய்ந்து அவ்வுவர் நிலத்தே வெள்ளுப்பு விளைந்து குவியும். பரதவர்கள் ஏர் பூட்டி உழாமல் இனிது விளையும் உப்பினைக் குன்றெனக் குவித்து, உப்பு வாணிகரின் வருகையை எதிர் நோக்கியிருப்பதை,

**"உவர்விளை உப்பின் உழாஅ உழவர்**
**ஒகை உமணர் வருபத நோக்கிக்**
**கான லிட்ட காவற் குப்பை"**[137]

என்ற நற்றிணைப் பாடல் அடிகள் நமக்கு விளக்குகின்றன.

136. உ.வே. சாமிநாதஐயர்(உ.ஆ.), பதிற்றுப்பத்து, ப.219.
137. பின்னத்தூர் நாராயணசாமிஐயர்(உ.ஆ.), நற்றிணை நானூறு, ப.408.

நெய்தல் நிலமக்கள் உப்பு விளைவித்து, அதனைப் பலவிடத்தும் சென்று விற்பர். உப்புத் தொழிலில் ஈடுபட்டுள்ளவர் 'உப்பு வாணிகர்' என்ற சொல்லால் சங்க இலக்கியங்களில் குறிக்கப்பட்டுள்ளனர். சங்க காலத்தில் நெய்தல் நிலமக்கள் மீன் பிடித்தல், விற்றல் ஆகிய தொழில்களுடன் உப்பு விளைவித்தலையும், உப்பு விற்றலையும் கூடத் தம் தொழில்களாகக் கொண்டிருந்தனர்.

உமணர்கள் தாம் விளைவித்த உப்பினைப் பக்கத்திலுள்ள ஊர்களுக்கும், வெளியூர்களுக்கும் சென்று விற்பனை செய்வார்கள். உமணர் வெள்ளிய கல்லுப்பைச் சகடத்தில் ஏற்றி எருதுகளைப் பூட்டி நெடுமணல் வழியைக் கடந்து செல்வர். அப்படி செல்லுகையில் ஆழ்மணலில் சக்கரங்கள் அடிக்கடி புதைந்துவிடும். புதைந்த சக்கரத்தை மீண்டும் தூக்கிப் பெயர்த்து முன்னோக்கிச் செலுத்தும் போது பேரொலி எழுப்புவதை,

**"வெண்கல் உப்பின் கொள்ளை சாற்றிக்**
**கணநிரை கிளர்க்கும் நெடுநெறிச் சகடம்**
**மணல்மடுத்து உரறும் ஓசைக் கழனிக்"**[138]

என்ற பாடல் அடிகள் எடுத்துக் கூறுகின்றன.

"உப்பு வாணிகர் வெண்கல் உப்பினை விலைகூறி விற்றுக் கொண்டே கதிரவனின் வெம்மையால் வெடித்த குன்றுகளையும் கடந்து செல்வார்கள். அப்பொழுது வண்டியில் பூட்டிய எருதுகளை விரைந்தோடத் தூண்டும் தாற்றுக் கோலினை ஏந்தி இருப்பர்"[139] என்று வி.சி.சசிவல்லி கூறுகின்றார்.

இதனால் உமணர்கள் எப்பொழுதும் ஊர்ந்து செல்லும் உப்பு சகடத்தோடே கூட்டம் கூட்டமாய்க் காடும், மலையும் கடந்து செல்லும் நிலையில்லாத நாடோடி வாழ்க்கையினை உடையவர்கள் என்பது தெரிகின்றது.

**சங்கு**

முத்துக்களைப் போலலே சங்குகளும் கடலிலிருந்து எடுக்கப்படுகின்றன. "தமிழ் இலக்கியங்களில் சங்கானது கம்பு, கோடு, சங்கம், சுத்தி, அரிமுகம், நந்து, தேவதத்தம், பணிலம், இடம்புரி, வலம்புரி, சலஞ்சலம், தரா, பாஞ்சன்னியம், வண்டு, வளைவாரணம், வெள்ளை எனப் பல பெயர்களில் அழைக்கப்படுகின்றது."[140] இருப்பினும் வளை,

---

138. த. கோவேந்தன், அன்பொடு புணர்ந்த ஐந்திணை (நெய்தல்), ப.84.
139. வி. சி. சசிவல்லி, பண்டைத் தமிழர் தொழில்கள், ப.185.
140. ஜோ.பிரின்ஸ், பன்முக நோக்கில் பண்டைத் தமிழரின் கடல் வாழ்வியல் வரலாற்றாய்வு (2008), ப.224.

பணிலம், வலம்புரி என்ற சொல்லாட்சிகளே மிகுதியாகத் தமிழ் இலக்கியங்களில் கையாளப்பட்டுள்ளன.

கடலில் வாழும் சங்குகள் அடிக்கடி கரையிலும் வெளிப்பட்டு வருவதுண்டு, வலம்புரிச் சங்குகள் கரையின் மீது வந்து உலாவுவதால் அதன் சுவடு பட்ட இடம் உழுதது போல் தோன்றும். அப்போது கடற்கரை மணலில் மூடிக்கிடக்கும் முத்தங்கள் வலம்புரி உழுதமையால் மணல் நீங்கி வெளிப்பட்டு இருள் கெட இமைப்பதை,

**"வலம்புரி உழுத வார்மணல் அடைகரை**

**இலங்குகதிர் முத்தம் இருள்கெட இமைக்கும்"**[141]

என்று ஐங்குறுநூற்றுப் பாடல் அடிகள் விளக்குகின்றன.

பொதுவாகத் தமிழகத்துக் கடலோரப் பகுதிகளில் கிடைக்கும் சங்குகள் அந்தமான் தீவுகளுக்கு அருகே கிடைக்கும் சங்குகளிலிருந்து சற்று மாறுபட்டவையாகும். சங்குயிரிகள் தை, மாசி, பங்குனியில் இனப்பெருக்கம் செய்கின்றன. அப்போது கடற்படுகைகளில் புதிய முட்டை உறைகளைக் காண முடியும். சங்கின் மேற்படலம் கடினமாக இருப்பதால் கிளையோனா(Cliona) போன்ற பஞ்சுயிரிகளாளோ அல்லது மீன்களாளோ ஆபத்து ஏற்படுவதில்லை. கடலில் கிடைக்கும் பெரும்பாலான சங்குகள் இடம்புரி சுற்று உடையவை, வலம்புரிச் சங்குகள் அரிதாகவே கடலில் கிடைக்கின்றன.

**சங்கெடுத்தல்**

சங்கெடுக்கும் தொழில் தமிழகத்தின் தென்கடலோரப் பகுதிகளிலும், இந்தியாவின் பிறபகுதிகளிலும் தொன்று தொட்டு நடைபெற்று வருகிறது. பரதவர்கள் பரந்த கடலுக்குள் முத்துக் குளிப்பது போல வலம்புரிச் சங்குகளையும் மூழ்கி எடுப்பதை,

**"இலங்குஇரும் பரப்பின் எறிசுறா நீக்கி**

**வலம்புரி மூழ்கிய வான்திமிற் பரதவர்"**[142]

என்ற பாடலடிகளின் வழி அறிய முடிகின்றது.

---

141. பொ. வே. சோமசுந்தரனார்(உ.ஆ.), ஐங்குறுநூறு, ப.193.

142. ந.மு. வேங்கடசாமி நாட்டார்(உ.ஆ.), அகநானூறு, மணிமிடைபவளம், ப.378.

பரதவர்கள் ஆழ்கடலில் மூழ்கிச் சங்கெடுக்கும் போது தமக்கு ஊறு நேரிடா வண்ணம் கொடுமையான எறிசுறா மீன்களை விலக்கிச் செல்வர். இச்செய்திபற்றி வி.கனகசபை, "அவர்கள் (பரதவர்) முத்தும், சங்கும் எடுக்கக் கடலில் மூழ்கினர். அத்துடன் மூழ்குமிடத்தில் சுறாக்கள் வராமல் தடுப்பதற்கரிய கூடிய மந்திரமும் அவர்கள் அறிந்திருந்தனர்"[143] என்கிறார்.

இதைப் பற்றி மார்க்கோபோலோ என்ற வெனிஸ் நகர வாணிகப் பயணியும் பின்வருமாறு கூறியுள்ளார். "இக்குடாவில் (வங்காளக்குடா) அளவிற் பெரிய மீன்கள் நிறைந்திருப்பதால், அவை முத்துக் குளிப்பவர்களை அடியோடு கொன்றுவிடும். இக்கேட்டினைத் தவிர்க்கும் பொருட்டு அவ்வாணிகர்கள் தங்களுடன் மந்திரத்தால் வசியம் செய்யும் பலரை அழைத்துச் செல்வர், பார்ப்பனக் குடியைச் சேர்ந்த இரு மந்திரவாதிகள். அம்மீன்களின் மீது தாங்கள் கற்ற வித்தையை ஏவி, அதனால் மீன்களைத் தம் வயப்படுத்தி முத்துக் குளிப்பவருக்கு யாதொரு தீங்கும் நேரிடதவாறு தடுத்துப் பாதுகாக்கின்றனர்."[144]

தமிழகத்தில் கிடைக்கும் சங்கினங்கள் ஐந்து வகையாகப் பிரிக்கப்படுகின்றன. அவையாவன: 1.தூத்துக்குடி இனம், 2. இராமேஸ்வரஇனம், 3.கீழக்கரை இனம், 4.சோழமண்டலக் கடற்கரைஇனம், 5.திருப்பானக்குடி இனம் ஆகியவையாகும். இவை தவிர இந்தியாவின் பிற பகுதியிலிருந்து கிடைக்கும் சங்கினங்கள் அந்தமான் சங்கினம், கேரள சங்கினம், குஜராத் சங்கினம், நயினாத்தீவு சங்கினம் எனப் பல பிரிவுகளில் வகைப்படுத்தப்படுகின்றன. இவ்வாறு பல வகையான சங்கினங்கள் கூறப்பட்டாலும் இவை அனைத்திலும் தூத்துக்குடி சங்கினமே 'சாதிச்சங்கு' என்று சிறப்பிடம் பெறுகிறது.

தூத்துக்குடிப் பகுதியில் பலநூறு ஆண்டுகளாக, சங்கு குளித்தல் முக்கியமான தொழிலாக மைய அரசின் மேற் பார்வையில் நடைபெற்று வருகிறது. இந்தியாவில் ஆண்டுதோறும் 7 முதல் 8 லட்சம் வரை சங்குகள் எடுக்கப்படுகின்றன. தென்னிந்தியாவில் எடுக்கப்படும் சங்குகள் வங்காளத்திற்கு ஏற்றுமதி செய்யப்படுகின்றன. சங்குளைக் கொண்டு அழகிய அணிகலன்கள் செய்வது வங்காளத்தில் குடிசைத் தொழிலாக உள்ளது. மேற்கு வங்கத்தில் கல்கத்தா, பங்குரா,

---

143. வி. கனகசபை, ஆயிரத்தெண்ணூறு ஆண்டுகட்கு முற்பட்ட தமிழகம், ப.86.
144. வி.எஸ். வி.இராகவன், மார்க்கோபோலோ, ப.17.

மீட்னாபூர் போன்ற இடங்களிலும், வங்கதேசத் தலைநகரான டாக்காவிலும் சங்கினால் அழகுப் பொருள்கள் செய்யும் தொழில் இன்றும் நடைபெற்று வருகிறது.

**சங்குவளை செய்தல்**

சங்குகளைச் சிறு வாளினால் அறுத்து அரத்தினால் அராவி அழகான வளையல்கள் செய்யும் தொழில் சங்க காலத்தில் சிறப்பாக நடைபெற்றது. சங்கறுக்கும் தொழிலைச் செய்தவர் 'வேளாப் பார்ப்பார்' என்றழைக்கப்பட்டார்.

சங்ககாலத்தில் கடலிலிருந்து எடுக்கப்படும் சங்குகளை வாளினால் அறுத்து அழகிய வளையல்கள் செய்யப்பட்டதை,

**"கடற்கோ டறுத்த வரம்போழ் அவ்வளை**

**ஒண்டொடி மரவரற் கண்டிகுங் கொண்க"**[145]

என்ற பாடல் அடிகளால் அறியலாம். சங்கு வளையல் அணிவதை சங்ககாலத்து மகளிர் நாகரிகமாகக் கருதினார்கள். அது மங்கலமாகவும் கருதப்பட்டது. செல்வ மகளிர், அரசமகளிர் என அனைத்து மகளிரும் அக்காலத்தில் சங்குவளை அணிந்தனர். ஏழை மகளிர் இடம்புரிச் சங்கு வளைகளையும், செல்வ மகளிரும், அரச மகளிரும் வலம்புரிச் சங்கு வளைகளையும் அணிந்தனர்.

சங்ககாலத்தில் கைம்பெண்களைத் தவிர ஏனைய மகளிரும் சங்கு வளைகளை அணிந்திருந்தார்கள். தொன்றுதொட்டு மகளிர் சங்கு வளையல் அணிந்து வந்த வழக்கம் சமீப காலத்தில் அடியோடு மறைந்துவிட்டது. சங்கெடுக்கும் தொழிலும், சங்கறுக்கும் தொழிலும் பிற்காலத்தில் மறைந்து போய்விட்டது எனலாம்.

**பவளம் குளித்தல்**

நவமணிகளுள் பவளமும் ஒன்றாகும், கடலில் மூழ்கிச் சங்கும், முத்தும் எடுப்பது போலவே பவளமும் பரதவர்களால் எடுக்கப்பட்டது.

கடற்கரையில் தாழ்ந்து படர்ந்திருக்கும் அடும்பின் கொடியை மோதி கடல் சங்குகள் ஒலி செய்யும், அவ்வொலியினைக் கேட்டு அங்கு வந்தடையும் பரதவர்கள் முத்துக்களோடு பவளங்களையும் மூழ்கி எடுப்பதை,

---

145. உ.வே. சாமிநாதஐயர்(உ.ஆ.), ஐங்குறுநூறு மூலமும் உரையும், ப.194.

**"தாழ் அடும்பு மலைந்த புணரிவலை ஞரல**

**இலங்குநீர் முத்தமொடு வார்துகிர் எடுக்கும்"**[146]

என்னும் பதிற்றுப்பத்துப் பாடலடிகள், பரதவர்கள் கடலில் மூழ்கி பவளங்கள் எடுத்ததைக் குறிப்பிடுகின்றன.

**முத்துக்குளித்தல்**

சங்ககாலத்தில் முத்துச் சிப்பிகள் நிறைந்த கடற் பகுதியையொட்டி வாழ்ந்தவர்கள் முத்துக்குளிக்கும் தொழிலிலும், சங்கெடுக்கும் தொழிலிலும் ஈடுபட்டிருந்தனர். பழம்பெரும் நாடான 'பாண்டிய நாடு முத்துடைத்தது' என்னும் பெருமை பெற்றதாகும். சங்ககாலத்தில் பாண்டிய நாட்டு முத்துக்கள் வடஇந்தியப் பகுதிகளுக்கும், உலகின் பிற பகுதிகளுக்கும் குறிப்பாக மேற்காசிய நாடுகளுக்கும் ஏற்றுமதி செய்யப்பட்டன.

அபிதான சிந்தாமணி முத்துத் தோன்றும் விதத்தை, "இப்பூச்சிகளுக்கு மேலும், கீழுமாக வட்டமான கற்கள் போல் இரண்டு மூடிகள் இருக்கின்றன. இந்த மூடிகள் நடுவில் சதையுள்ள பூச்சி இருக்கிறது. இது இரைக்காகக் கடலின் கீழ் ஓடுகையில் நண்டும், மீன்களும் கலக்கிய சேறும், கல்லும் இதன் வயிற்றினுள் புகுந்து துன்பத்தைத் தரும். கையில்லாமையால் கற்களை வெளியில் விடாது கற்கள் உள் சென்றதால் உண்டான துன்பத்தால் ஒரு விதப்பசையை அதுகல்லின் மேல் பூசுகிறது. அதுவே முத்தாகிறது"[147] எனக் குறிப்பிடுகிறது.

மீனவர்கள் விரிந்த கடலில் இருந்து திரண்ட முத்துக்களை எடுத்துக் கொண்டு வந்து, வண்டினம் ஒலித்துக் கொண்டிருக்கும் கரையினிடத்தே அவற்றைப் பங்கிட்டுக் கொள்வதை,

**"கண்திரள் முத்தம் கொண்டு ஞாங்கர்த்**

**தேனிமிர் அகன்கரைப் பகுக்கும்**

**கானலம் பெருந்துறைப் பரதவன் எமக்கே"**[148]

என்ற அகநானூற்றுப் பாடல் அடிகள் உணர்த்துகின்றன. இதனால் பரதவர்கள் அளவு கடந்த முத்துச் சிப்பிகளை மூழ்கி யெடுத்துக் கரைக்குக் கொண்டு வந்து அவற்றைப் பங்கிட்டு விற்றுச் செல்வங்கொழித்து வாழ்ந்து வந்தனர் என்பது தெரிகின்றது.

---

146. ஔவை சு.துரைசாமிப்பிள்ளை(உ.ஆ.), பதிற்றுப்பத்து, ப.122.

147. ஆ. சிங்காரவேலு முதலியார், அபிதான சிந்தாமணி, ப.1334.

148. ரா. வேங்கடாசலம் பிள்ளை(உ.ஆ.), அகநானூறு, மணிமிடைபவளம், ப.380.

## நெய்தல் நில மகளிர் தொழில்கள்

அன்பு, அமைதி, ஆற்றல் ஆகிய பண்புகளும், இயற்கை அழகும் உடையவர் மகளிர். 'வினையே ஆடவர்க்கு உயிரென' வினை மேற்கொள்ளல் ஆடவர் கடமையாகக் கூறப் பெற்றாலும் மகளிரும் தான் வாழ்ந்த நில இயல்பிற்கு ஏற்ற வகையில் தொழில் செய்வதில் ஈடுபட்டிருந்தனர். தன் வாழ்க்கைக்குத் தன் குடும்பத்திற்கு வேண்டிய பொருள் ஈட்டுவதில் ஆர்வமும், முயற்சியும், உழைப்பும் உடையவராய்ப் பொறுப்புணர்ச்சியுடன் வாழ்ந்துள்ளனர், ஆண்கள் கடலில் சென்று மீன் பிடிக்கும் தொழிலைச் செய்தனர் என்றால் அவ்வாறு பிடித்துக் கொண்டுவந்த மீன்களைச் சேகரித்தல், விற்றல், எஞ்சியவற்றை உலர வைத்தல் போன்ற பல பணிகளை நெய்தல் நில மகளிர் செய்தனர் என்று பண்டைய இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன.

### உப்பு விற்றல்

நெய்தல் நில மக்களின் மற்றொரு தொழில் உப்புவிற்றல். உமணர்கள் உவர் நிலத்தில் விளையும் உப்பினை வண்டிகளில் ஏற்றுச் சென்று மற்ற இடங்களில் வாழும் மக்களுக்கு விற்பர். உப்பு வாணிகர் வண்டி நிறைய உப்பு மூட்டைகளை ஏற்றிப் பக்கத்து ஊருக்குக் கொண்டு போய்ச் சேர்ப்பர். அப்படிப் போகும் பொழுது, வண்டியில் பூட்டப்பட்ட எருது சோர்ந்தால், பூட்டுவற்கு வேண்டும் என்று வேறு எருதுகளைத் தம்மொடு கொண்டு போவர். வண்டியில் ஆடவர் ஏறிக் கொள்ளாது. மகளிரை ஓட்டச் செய்து, தாம் சாலையில் இருமருங்கும், எருதுகள் திருகாமலும், வண்டியச்சு முறியாமலும் பாதுகாத்துச் செல்வர். சில வேளைகளில், கையிலே குழந்தையையுடைய மகளிரும், அவ்வாறு எருதுகளைத் துரத்தி, வண்டியை ஓட்டிக் கொண்டு போவதை,

> **"பெருங்கயிற் றொழுகை மருங்கிற் காப்பச்**
> **சில்பத உணவின் கொள்ளை சாற்றிப்**
> **பல்லெருத் துமணர் பதிபோகு நெடுநெறி**
> **எல்லிடைக் கழியுநர்க் கேம மாக"**[149]

என்ற பெரும்பாணாற்றுப்படைப் பாடல் அடிகளால் அறியமுடிகின்றது.

---

149. பொ. வே. சோமசுந்தரனார்(உ.ஆ.), பெரும்பாணாற்றுப்படை, ப.207.

பொதுவாக உமண ஆடவர் ஊருக்குள் சென்று உப்பு விற்பதில்லை, உமணப்பெண்கள் உப்பை ஊருக்குள் கொண்டு சென்று விற்பர். உமணப் பெண்கள் ஊர்த் தெருக்களில் உப்பை நெல்லுக்கு மாற்றியதை.

**"கதழ்கோல் உமணர் காதல் மடமகள்**

**சில்கோல் எல்வளை தெளிர்ப்ப வீசி**

**நெல்லின் நேரே வெண்கல் உப்பு எனச்**

**சேரி விலைமாறு கூறலின்"**[150]

என்ற அகநானூற்றுப் பாடல் அடிகள் விளக்குகின்றன. இவ்வாறு உப்பு வாணிகத்தில் உமண ஆடவருக்கும், பெண்டிருக்கும் பெரும் பங்கிருந்தது. அவர்களது பயணம் மருதம், நெய்தலில் தொடங்கி பிற நிலங்களிலும் தொடர்ந்தது. சங்க காலத்தில் அனைத்து நில மக்களுக்கும் உப்பு இன்றியமையாதப் பொருளாக இருந்த படியால் அக்காலத்தில் உப்பு உற்பத்தித் தொழிலும், உப்பு வாணிகமும் தமிழகத்தில் சிறப்பாக நடைபெற்றன எனலாம்.

**மீன் உணக்கல்**

"பரதவர்கள், கடலிலுள்ள மீன்களை எல்லாம் வாரிக் கரையிற் கொட்டி விட்டனரோ என்று எண்ணக் கூடிய அளவு மீன் கொள்ளையினைத் தங்கள் பாக்கத்தே குவித்து விடுவர், விற்றது போக எஞ்சியவற்றையும், விற்பனைக்குரிய காலம் கடந்து பிடித்தவற்றையும் மகளிர் உப்பிட்டு உலர வைப்பர். உணங்கிய மீனைக் கருவாடு"[151] என்பர்.

பெரிய மீன்களைச் சிறுசிறு துண்டங்களாக வெட்டி உப்பிட்டு உலர்த்துவதற்கு 'உப்புக்கண்டங்கள்' என்பர். வெண்மணல் பரப்பில் அவற்றைப் பரப்பி வெயிலில் காய வைத்துப் பறவைகள் அவற்றைக் கவர்ந்து விடாது பரதவ மகளிர் காவல் காத்ததை,

**"நிணச்சுறா அறுத்த உணக்கல் வேண்டி**

**இனப்புள் ஒப்பும்"**[152]

என்ற பாடல் அடிகள் கூறுகின்றன.

---

150. த. கோவேந்தன், அன்பொடு புணர்ந்த ஐந்திணை (நெய்தல்), ப.183.
151. தி. முத்துகண்ணப்பன், சங்க இலக்கியத்தில் நெய்தல் நிலம், ப.199.
152. பின்னத்தூர் நாராயணசாமி ஐயர்(உ.ஆ.), நற்றிணை நானூறு, ப.91.

பரந்த பெருங்கடலில் பிடித்து வந்த மீன்களையும், இருங்கழியிலிருந்து பிடித்து வந்த இறா மீன்களையும் பரதவர்கள் எக்கர் சூழ்ந்த வெண்மையான மணலில் உலர வைப்பர். மீன்கள் உலர்ந்த பின்னர் பாக்கம் எங்கிலும் புலால் நாற்றம் வீசுவதை,

**"பெருங்கடற் பரதவர் கோண்மீன் உணங்கலின்**

**அருங்கழி கொண்ட இறவின் வாடலொடு**

**நிலவுநிற வெண்மணல் புல்லப் பலவுடன்**

**எக்கர் தொறும் பரிக்குந் துறைவன்"**[153]

எனவரும் குறுந்தொகைப் பாடலால் உணரமுடிகின்றது.

இவ்வாறு உடனுக்குடன் அங்காடிக்கு விற்பனைக்கு எடுத்துச் செல்ல முடியாத நிலையில், சற்றுத் தொலைவான பகுதிகளில் பிடிபடும் மீன்களை ஆங்காங்கே வெண்மணற் பரப்பில் உலர வைத்துப் பல நாள்களுக்குப் பின் அனைத்தையும் ஒருங்கு திரட்டிக் கொண்டு ஊர் திரும்பி, விற்பனை செய்வது இன்றும் வழக்கமாய் உள்ளது.

**மீன்விற்றல்**

பரதவ ஆண்கள் பெருங்கடலுக்குச் சென்று ஏராளமான மீன்களைப் பிடித்துக் கரைக்குத் திரும்புவர். அம்மீன்களைப் பரதவ குலப் பெண்டிர் அயலூர்க்குச் சென்று விற்று விட்டு அதற்குப் பண்ட மாற்றாகத் தமக்குத் தேவையானப் பொருளைப் பெற்று வருவர்.

நள்ளிரவில் சென்று பிடித்துத் தன் தமையன்மார் விடியலில் கொண்டு வந்த திரண்ட கோடுகளை உடைய வாளை மீன்களைப் பாண்மகள் நெடிய கொடிகள் பறக்கும் கள் மலிந்த தெருவில் பழைய செந்நெல்லை வாங்க மறுத்துக் கழங்கு போன்ற பெரிய முத்துக்களையும், அணிகலன்களையும் பெற விரும்பியதை,

**"மால் இருள் நடுநாட் போகி தன்னையர்**

**காலைத் தந்த கணைக்கோட்டு வாளைக்கு**

**அவ்வாங்கு உந்தி அஞ்சொல் பாண்மகள்**

**நெடுங்கொடி நுடங்கு நறவுமலி மறுகில்**

---

153. பொ. வே. சோமசுந்தரனார் (உ..ஆ.), குறுந்தொகை, ப.576.

**பழஞ்செந் நெல்லின் முகவை கொள்ளாள்**

**கழங்குறழ் முத்தமொடு நன்கலம் பெறூஉம்”**[154]

என்ற அகநானூற்றுப் பாடல் அடிகள் எடுத்தியம்புகின்றன.

பரதவர்கள் கடலில் பிடித்த சுறா, இறால் போன்ற மீன்களைப் பரதவ மகளிர் எளிதில் தானியத்திற்கு மாற்றியதை,

**“மான்ற மாலை மகிழ்ந்த பரதவர்**

**இனிது பெறு பெருமீன் எளிதினின் மாறி”**[155]

என்ற நற்றிணைப் பாடல் அடிகள் விளக்குகின்றன.

பரதவர்களில் கணவன், மனைவி இருவரும் உழைத்து உண்பர். கணவனையும், மக்களையும், மனையையும் போற்றிக் காப்பதோடு, தாமும் உழைத்துப் பொருள் சேர்த்து வாழ்வதில் கண்ணும் கருத்துமாக இருப்பவர்கள் பரதவர் குடி மகளிர். இன்றும் பிடித்து வரும் மீன்களை மீனவப் பெண்கள் தலைச் சுமையாகத் தூக்கிச் சென்று அங்காடியில் விற்று வருவது பெரும் வழக்கமாக உள்ளது.

**மீன் பிடித்தலில் மகளிர்**

நெய்தல் நில மகளிர் மீன் பிடித்தல், மீன் உணக்கல், புள் ஒப்பல், உப்பு விற்றல், மீன் விற்றல் ஆகிய தொழில்களை மட்டுமல்லாது மீன்பிடித்தலையும் மேற்கொண்டதை அகநானூற்றுப் பாடல் ஒன்றில் காணமுடிகின்றது. கயிற்றினைக் கொண்ட நுண்ணிய தூண்டிற் கோலால் பாணரது மகள் புனலை அடுத்த கரையில் வரால் மீன் பிடித்த நிகழ்ச்சியை,

**“நாண்கொள் நுண்கோலின் மீன்கொள் பாண்மகள்**

**தான்பனல் அடைகரைப் படுத்த வராஅல்”**[156]

என்ற பாடல் அடிகள் குறிப்பிடுகின்றன.

நெய்தல் நில மகளிர் தாம் வாழ்ந்த நிலச் சூழலுக்கு ஏற்ப ஆடவர்க்குத் துணையாக நின்றனர். ஆடவர்க்கு இணையான தொழில்களை மேற்கொண்டனர். இல்லறத்தின் பொருளாதாரத் தேவைகளைத் தீர்த்து வைப்பதில் இவர்களின் பங்கு குறிப்பிடத்தக்கதாகும்.

---

154 ந. மு. வேங்கடசாமி நாட்டார்(உ.ஆ.), அகநானூறு, மணிமிடைபவளம், ப.18.
155. பின்னத்தூர் நாராயணசாமிஐயர்(உ.ஆ.), நற்றிணை நானூறு, ப.298.
156. த. கோவேந்தன், அன்பொடு புணர்ந்த ஐந்திணை (நெய்தல்), ப.226.

## முடிபுகள்

உலகின் பிறபகுதி மக்கள் நிலையான வாழ்வின்றி அமைதியுற்று வாழ்ந்த காலத்திலேயே தமிழர்கள் நல்ல அரசியல் அமைப்பினையும், சமுதாய ஒருமைப் பாட்டினையும், வாணிகச் சிறப்பினையும், இலக்கியச் செல்வத்தினையும் பெற்று வாழ்ந்துள்ளார்கள்.

குமரிக்கண்டம் என்று தமிழ் இலக்கியங்களிலிருந்து அறியலாகும் தென்பகுதியே மனிதத் தோற்றத்தின் முதலிடமாய் இருந்திருக்க வேண்டும். மறைந்த நிலப்பகுதியே (குமரிக்கண்டமே) பண்டையத் தமிழ்நாடு என்பதும் இன்றுள்ள தென்னிந்தியா வழியாகத்தான் மக்கள் உலகிலுள்ள பல பகுதிகளுக்கும் சென்று குடியேறினர். அவ்வாறு சென்றவர்கள் வெவ்வேறு இனத்தவர்களாய், தட்பவெப்ப நிலைகள், மண்வளம், நீர்வளம் ஆகியவற்றிற்கேற்ப நடை, உடை பாவனைகள், பழக்க வழக்கங்கள். மொழிகள் ஆகியவற்றாலே மாற்றங்களைப் பெற்றவர்களாய் வாழத் தலைப்பட்டனர்.

ஐவகையாகப் பகுக்கப்பட்ட நிலத்திற்குத் தனித்தனி தெய்வம், உணவு, விலங்கு, மரம், செடி, கொடிகள், தொழில் எல்லாம் பிரித்துக் காட்டப்பெறுகின்றன. இப்படிப் பகுக்கப்பட்ட பொருள்களோடு பொருந்தி மக்கள் வாழும் வாழ்க்கை முறையே சமுதாய வாழ்வின் அடிப்படை வரலாறு ஆகும். இதனால் தமிழக ஐந்திணை வாழ்வே தமிழ்நாட்டுப் பண்டைய வரலாறு என்பது தெரிகின்றது.

வயல் நிலப் பகுதியை அடுத்து இருப்பது கடல் சார்ந்த நிலங்களும், கடல் ஓரப்பகுதியும், கடலுமாகும். இப்பகுதிகள் பெரும்பாலும் மணற்பாங்கானவை. தமிழகத்தின் மூன்று பக்கங்களும் கடல் சூழ்ந்திருந்ததால் மிகப்பெரிய நீண்ட கடற்கரையைப் பண்டையத் தமிழகம் பெற்றிருந்தது. இதைச் சார்ந்த நிலப்பகுதியை ‘நெய்தல்’ என்று கூறுவர்.

சங்க காலத்தில் நெய்தல் நிலப்பகுதியில் வாழ்ந்த மக்கள் பரதவர் என்றும், பட்டினவர் என்றும் அழைக்கப்பட்டனர். அவர்களுள் கொண்கன், துறைவன், சேர்ப்பன், மெல்லம் புலம்பன் தலைமக்களாவர், பரதர், திமிலர், திமிலோன், நுளையர் பொது மக்களாவர். நெய்தல் நில மகளிர் பரதவர் மகளிர், நுளையர் மகள் எனப்பட்டனர்.

சங்க காலத்தில் மீன்பிடித்தல், முத்துக்குளித்தல், சங்கெடுத்தல், உப்பு விளைவித்தல் போன்ற தொழில்கள் நெய்தல் நிலப் பரதவர்களின் முதன்மையான தொழில்களாக விளங்கின.

சங்ககாலத் தமிழ்ப்பரதவர்கள் மீன் பிடிக்கத் திமில், தோணி, அம்பி, கலம் போன்ற மரக்கலங்களையும், நுண்வலை, கோல்வலை ஆகிய வலைகளையும், தூண்டில், எறியுளி ஆகிய மீன்பிடிக்கருவிகளையும் பயன்படுத்தினர்.

நெய்தல் நிலத் தலைவரான நுளையர் மருதநில மக்களிடம் போரிட்டனர் என்பதும், மற்றவர் புகுவதற்கு அரிதான தாழை மரங்கள் நெருங்கிப் படர்ந்து கிடக்கும் கடற்கரையில் வாழ்ந்தனர் என்பதும் அறிய முடிகின்றது. தித்தன், திதியன், திரையன், தழும்பன், பெரியன், மத்தி, மூவன் என்போர் உயர்ந்த அல்லது ஆளும் வகையினராகக் காணப்படுகிறார்கள்.

சங்க காலத்தில் பெண்மை பெரும் சிறப்பாகப் பேசப்பட்டுள்ளது. பெண்கள் பண்பாலும், வாழ்வு நெறியாலும் சிறந்தவர்கள் என்ற குறிப்பு நுண்ணிதின் உணர்த்தப்படுகிறது. சங்க கால மகளிர் பண்பாடு போற்றத்தக்கதாய் இருந்தது. அச்சம், மடம், நாணம், பயிர்ப்பு என்னும் நாற்குணங்களும் நிறைந்தவர்களாக இருந்தனர். நெய்தல் நில மகளிர் அழகில் சிறந்தவர்களாகவும், அறிவாற்றல் கொண்டவர்களாகவும் திகழ்ந்தனர்.

பரதவர்கள் கொல்லவல்ல கொடுஞ்சுறா மீன்களை வேட்டையாடிப் பிடிப்பதில் அஞ்சாநெஞ்சமும், ஆர்வமும் கொண்டவர்கள். நள்ளிரவிலும் பரதவர் மீன் வேட்டையாடுவதில் நாட்டம் உடையவர் என்பதும் தெரிகின்றது. பரதவர்கள் கடல் மீன்பிடிப்பதோடு கழிகளிலும் மீன் பிடிப்பர். சிப்பிகள் மற்றும் முத்துக்கள் மூழ்கி எடுத்தல், அளங்களில் உப்பு விளைவித்தல் பரதவரின் பிற தொழில்களாகக் காணப்பெறுகின்றன.

நெய்தல் நில மகளிர் தம் வாழ்க்கைக்குத் தன் குடும்பத்திற்கு வேண்டிய பொருளீட்டுவதில் ஆர்வமும், முயற்சியும், உழைப்பும் உடையவராய்ப் பெறுப்புணர்ச்சியுடன் வாழ்ந்துள்ளனர். அவர்கள் மீன்பிடித்தல், மீன் விற்றல், மீன் உணக்கல், புள்ளோப்பல், உப்பு விற்றல் ஆகிய தொழில்களை மட்டுமல்லாது மீன்பிடித்தலையும் மேற்கொண்டுள்ளனர் என்பதும், பொருளாதாரத்தை மேம்படுத்துவதில் பெண்களின் பங்களிப்புப் பெரிதும் உதவியுள்ளதையும் அறிய முடிகின்றது.

# இயல் - மூன்று
# நெய்தற் சமுதாயம்

சமுதாயம் - வரையறை

மக்கள் கூடிய அமைப்பு

சங்க காலத் தமிழ்ச் சமூகத்தின் அடிப்படை

தமிழ்ச் சமூகத்தின் தோற்றம்

தொன்மையான குடிகள்

தொல்காப்பியர் காலச் சமூகப் பிரிவுகள்

அரசர்

அந்தணர்

வாணிகர்

வேளாளர்

அடியோர், வினைவலர்

உணவின் சிறப்பு

நெய்தல் நிலத்தார் உணவு

மது வகைகள்

கள்ளில் களிப்பு

நெய்தல் நில மகளிர் விருந்தோம்பல்

நெய்தல் நிலத்தார் ஆடைகள்

தழை

துகில்

நெய்தல் நிலத்தார் அணிகலன்கள்

இழை

வளை

# இயல் - மூன்று
# நெய்தற் சமுதாயம்

உலகெங்கிலும் மனித இனங்கள், நாகரிகம் அடைவதற்குப் பன்னெடுங் காலத்திற்கு முன்பிருந்தே கூடி வாழும் இயல்புடையதாக இருந்து வந்துள்ளன. கூடி வாழும் இயல்பினால் மனித இனங்கள் காலப்போக்கில் விரிந்தும், பரந்தும் வளர்ச்சியுற்றன. இதன் விளைவாக வாழும் இடம், பேசும் மொழி, செய்யும் தொழில் ஆகியவற்றின் அடிப்படையில் பல குழுக்களும், வகுப்புக்களும், சமூக நிறுவனங்களும் தோன்றின. இவற்றிற்கிடையே உண்டான உறவும், பிணைப்பும், முரண்பாடும் மெல்ல மெல்ல இறுகி, நெருக்கமான தொடர்புடைய மனித சமூக நிறுவனங்கள் பல உருவாயின. கி.மு.முந்நூறு முதல் கி.பி.இருநூறு ஆண்டுகளுக்கு உட்பட்ட காலத்தைச் சங்க காலம் என்பர். வேடர் முதல் மூவேந்தர் வரை பல்வேறு படிநிலைகளில் தமிழ்ச் சமுதாயம் வளர்ச்சி அடைந்து கொண்டிருந்த காலமாக இதனைக் கருதுவர். இத்தகைய சங்க காலத்தில் வாழ்ந்த நெய்தல் நில மக்களின் சமுதாய, பண்பாட்டு, பொருளாதார நிலையைச் சங்க இலக்கியங்களின் வழி எடுத்துக் கூறுவதாக இவ்வியல் அமைகின்றது.

**சமுதாயம் வரையறை**

"சமுதாயம் என்னும் வடமொழிச் சொல்லிற்குத் தமிழில் மக்களின் திரள், பொருள்களின் திரள், கோயிலின் நிருவாக அதிகாரிகளின் கூட்டம், பொதுவானது, பொதுவாகவேனும் அவரவர்க்குரிய பங்குப்படி பிரித்தேனும் அனுபவிக்கப்படும் ஊர்ப் பொதுச் சொத்து, உடன்படிக்கை"[1] என்னும் ஆறு வகையான பொருள்களைத் தருகின்றது தமிழ் லெக்சிகன். 'மக்களின் திரள்' என்னும் முதற் பொருளிலேயே "சமுதாயம்" என்னும் சொல் இக்காலத்தில் வழங்கப்படுகிறது.

பண்டைக் காலத்தில், சங்கச் சான்றோர்கள் 'மன்பதை' என்னும் சொல்லையே இப்பொருளில் கையாண்டு உள்ளார்கள் என்பதை,

**"மன்பதை காக்கும் நின்புரைமை நோக்காது**

**அன்புகண் மாறிய வறனில் காட்சியோடு"[2]**

---

1. S.Vaiyapuri Pillai, (Ed.), Tamil Lexicon, p.1302.
2. ஔவை சு. துரைசாமிப் பிள்ளை(உ.ஆ.), புறநானூறுமூலமும் உரையும் (பகுதி-2), ப.25.

என்ற புறநானூற்றுப் பாடல் அடிகள் விளக்குகின்றன. இச்சொல்லிற்கு "மக்கட்பரப்பு அல்லது உயிர்ப்பன்மை"[3] என்பது பொருளாகும். இக்காலத்தில் சமுதாயம் என்னும் சொல் ஓரளவிற்குச் சுருங்கிய பொருளில் 'சொசைட்டி' (Society) என்னும் ஆங்கிலச் சொல்லிற்கு நேரான இந்தியச் சொல்லாகப் பயன்படுத்தப்படுகின்றது. 'சொசைட்டி' என்னும் ஆங்கிலச் சொல் பல்வேறு பொருள்களை உணர்த்துகிறது. பல்வேறு கோணத்தில் பலவாக அறிஞர்கள் அதனுடைய செறிவும், சிக்கலுமிக்கப் பொருளினை விளக்க முயன்றுள்ளார்கள். "கூடிச் செயல்படுவதில் நாட்டத்தையும், பொதுவான நோக்கங்களையும், பற்றார்வத்தையும் உடையதாய் உள்ள சமூகமோ, நாட்டினமோ (Nation), பரந்துபட்ட மக்கள் கூட்டமோ சமுதாயம் எனப்படும்"[4] என்று தமிழ்நாட்டு வரலாற்றுக்குழு கருத்துத் தெரிவித்துள்ளது.

உறுப்புகள் பல சேர்ந்து உடல் ஆகுதல் போல மக்கள் பலர் சேர்ந்து உருவானதே சமுதாயம் ஆகும். க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதி சமுதாயம் என்பதற்கு, "மக்கள் தொகுதி (Society) எனவும், ஒரு குறிப்பிட்ட தொழில், துறை போன்றவற்றைச் சேர்ந்தவர்களின் தொகுதி, இனம்"[5] எனவும் கூறுகின்றது. இவ்வாறு சமுதாயம் என்னும் சொல்லிற்குப் பல வகையான விளக்கங்களை அறிஞர்கள் தந்துள்ளார்கள். அறிவாராய்ச்சித் துறைகளின் நோக்கிற்கும், போக்கிற்கும் ஏற்ற வகையில் அவ்விளக்கங்கள் அமைந்துள்ளன. அவை யாவும் சமுதாயத்தின் பல்வேறு இயல்புகளையும், நிலைகளையும் சுட்டுவனவாக அமைந்துள்ளன.

**மக்கள் கூடிய அமைப்பு**

"ஒரு சிறிய நிலப்பரப்பில் ஒரு பொது வாழ்க்கை வழியைப் பின்பற்றிக் கூட்டமாக வாழும் மக்கள் தொகுதி சமுதாயம் எனப்படும். இது மக்கள் ஒன்று கூடி ஒன்றுபட்ட எண்ணத்துடன் ஓர் இடத்தில் வாழும் அமைப்பைக் குறிக்கும்"[6] என்கிறது வாழ்வியற் களஞ்சியம்.

---

3. சு.வையாபுரிப்பிள்ளை, பாட்டும் தொகையும், ப.31.
4. தமிழ்நாட்டு வரலாற்றுக்குழு, தமிழ்நாட்டு வரலாறு - சங்ககாலம் (வாழ்வியல்), ப.2.
5. எஸ். இராமகிருஷ்ணன், க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதி, ப.406.
6. வெ.சுப்பிரமணியம்(ஆசி), வாழ்வியற் களஞ்சியம்(தொகுதி-8), ப.469.

தொடக்கத்தில் கூறப்பட்டவாறு மக்கள் கூட்டம் சமுதாயம் என்றாலும், இது வெறுங்கூட்டமன்று , அது பொது இயல்புகளும், உயர்ந்த இலட்சியமும் கொண்ட மக்கள் தொகுப்பைக் குறிப்பது ஆகும்.

"மனிதர் பலர் சேர்ந்தது தான் ஒரு சமுதாயம்; இப்படிச் சேர்ந்துள்ள ஒவ்வொரு மனிதனுடைய சொத்து , சுதந்திரங்களைப் பிறர் வந்து தாக்கா வண்ணம் பாதுகாப்பது அச்சமுதாயத்தின் கடமை. இப்படிப் பாதுகாக்க வேண்டுமென்றால் ஒவ்வொரு மனிதனும் அந்தப் பாதுகாப்பில் பங்கெடுத்துக் கொள்ள வேண்டுமென்று சொன்னால் அந்தச் சமுதாயத்தில் உறுப்பினராக உள்ள எல்லோரும் ஒன்று சேர்ந்து தானாக வேண்டும். இப்படி ஒன்று சேர்கின்ற போது தான் சமுதாயம் உண்டாகிறது"[7] என்று ரூஸோ சமுதாயம் என்பதற்கு விளக்கம் அளிக்கிறார்.

இத்தகைய சமுதாயங்கள் காலப்போக்கில் ஊர், நாடு என வளர்ந்து உலக அளவில் விரிவடைகிறது.

## சங்க காலத் தமிழ்ச் சமுகத்தின் அடிப்படை

சங்க காலத் தமிழ்ச் சமூகம், குடிகள், குடும்பங்கள் ஆகிய பலவற்றின் கூட்டுத் தொகையாகக் காட்சியளிக்கின்றது. சமூகத்தின் முதன்மையான உறுப்பாகக் குடும்பம் கருதப்பட்டது. குடும்பத்தின் தலைவனாகத் தந்தையும், தலைவியாகத் தாயும் விளங்கினர். குடும்பம், மக்கள் பலருக்குப் பணிபுரியும் நல்லதோர் அமைப்பாகச் சிறப்புற்றது. குடும்பத் தலைவன் 'கிழவன் தந்தை' எனவும், தலைவி 'மனையோள்' எனவும் சுட்டப் பெற்றதை,

**"மனையோள் கிளவியும் கிழவன் கிளவியும்**

**நினையும் காலை கேட்குநர் அவரே"**[8]

என்ற தொல்காப்பிய நூற்பாவால் அறியலாம். குடும்பங்களாக இயைந்த குடி ஒவ்வொன்றிற்கும் தனித்தனிப் பண்புகள் இருந்தன. அவற்றைக் "குடிமை"[9] என்றார். குடும்பங்கள் பல சேர்ந்து வாழும் இடம் 'சேரி' எனப்பட்டது.'சேர்' என்பதற்கு நெருங்கு,

---

7. பெ. சாமிநாதசர்மா(தமிழாக்கம்), சமுதாய ஒப்பந்தம், ப.17.
8. இளம்பூரணர்(உ.ஆ.), தொல்காப்பியம், பொருளதிகாரம், ப.497.
9. க.வெள்ளைவாரணர்(உ.ஆ.), தொல்காப்பியம், மெய்ப்பாட்டியல் உரை வளம், ப.215.

கூடு, திரள் என்பன பொருள். கூட்டமாகத் திரண்டு நெருக்கமாக மக்கள் சேர்ந்து வாழ்ந்த இடம் சேரி எனப் பெயர் பெற்றதை.

**"ஊரும் அயலுஞ் சேரி யோரும்**

**நோய் மருங்கறி நருந் தந்தையுந்"**[10]

என்கிறது தொல்காப்பியம். பல சேரிகளைக் கொண்டது ஓர் ஊர், ஊரில் மக்கள் நிலையாகத் தங்கி வாழ்ந்ததோடு, தங்கள் தொழில்களை முறையாகச் செய்து வந்தனர். அங்குத் தொழில் வழியாகப் பல சமூகங்கள் தோன்றின. சமூகத்தின் உறுப்பினர்களான மாந்தர் தங்களுக்குள் கலந்து உறவாடியதோடு, பிற குடியினரோடும் தொடர்பு கொள்ளலாயினர். காலப்போக்கில் அத்தொடர்பு விரிந்தும்,பரந்தும் பெருகலாயிற்று, அதன் விளைவாகச் சங்ககாலத் தமிழ்ச் சமூக அமைப்புத் தெளிவானதோரு வடிவத்தைப் பெற்றது.

## தமிழ்ச் சமூகத்தின் தோற்றம்

சங்க காலத் தமிழகத்தைத் தொல்காப்பிய இலக்கண நூல், நிலவியல் அடிப்படையில் ஐவகை நிலமாகப் பாகுபடுத்தியது. அவற்றைக் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்று வழங்கியது. ஐவகை நிலத்திலும் ஐந்து வகைப்பட்ட வாழ்க்கை நிலைகள் உருவாயின. ஐவகை நிலத்தில் வாழ்ந்த மக்கள், தாங்கள் வாழ்ந்த நிலத்தாலும், செய்த தொழிலாலும் பல குடியினராக வேறுபட்டிருந்தனர். இத்தகைய குடிச்சமூகங்களை, "வாழ்நிலப்பரப்பு வழிச் சமூகங்கள்"[11] என்பர் அறிஞர். நிலம் சார்ந்த இக்குடிகளை நிலைக்களனாகக் கொண்டு தொடக்க காலத்தில் தமிழ்ச் சமூகம் தோன்றியது எனலாம். பின்னர் மெல்ல மெல்ல 'தொழில் வழிச் சமுதாய அமைப்பு' உருவாகத் தொடங்கியது.

## தொன்மையான குடிகள்

பண்டையத் தமிழகத்தில் வாழ்ந்த மக்களை, பொதுவாக, தமிழ்க்குடிகள் என்று சுட்டுவதை,

---

10. பேராசிரியர்(உ.ஆ.), தொல்காப்பியம், பொருளதிகாரம், ப.582.

11. தமிழ்நாட்டு வரலாற்றுக்குழு, தமிழ்நாட்டு வரலாறு - சங்ககாலம்(வாழ்வியல்), ப.4.

**"மாயோன் கொப்பூழ் மலர்ந்த தாமரைப்**

**பூவோடு புரையும், சீர் ஊர் பூவின்**

**இதழகத்து அனைய தெருவம் இதழகத்து**

**அரும்பொருட்டு அனைத்தே அண்ணல் கோயில்**

**தாதின் அனையர் தண்தமிழ்க் குடிகள்"**[12]

என்னும் பரிபாடல் வழித் தெரியமுடிகின்றது. ஐவகை நிலத்து ஐந்திணை மக்களுள் எயினர்குடி, மறவர்குடி, குறவர்குடி, வேட்டுவர்குடி, ஆயர்குடி, கானவர்குடி, பரதவர்குடி, உமணர்குடி, உழவர்குடி என்பன அத்தமிழ்க் குடிகளில் சிலவாகும். வயல்கள் சூழ்ந்த மருதநிலப் பகுதிகளிலும்,கடல்வழி வாணிகம் நடத்த கடல்துறைப் பகுதிகளாலும் உருவான நகரங்களிலும், ஊர்களிலும் உடைமை பூண்ட குடிகளும் வாழ்ந்தன.

இக்குடிகளோடு தொன்று தொட்ட கைவினைத் தொழில் வழிக் குடியினராகக் குயவர், தச்சர், கொல்லர் ஆகியோரும் சார்ந்து வந்தனர். நிலம் சார்ந்த குடிகள் மற்றும் கைவினைக் குடிகளைத் தவிர, இக்குடிகளுக்கும், புரவலர்களுக்கும் தங்கள் இசை, கூத்து, ஆடல், பாடல், வழியாக மகிழ்வித்த இசைக்குடிகள் பல இருந்தன. இவர்களைப் பற்றி மாங்குடி கிழார்.

**"துடியன் பாணன் பறையன் கடம்பன் என்று**

**இந்நான்கு அல்லது குடியும் இல்லை"**[13]

என்று குறிப்பிட்டுள்ளார். இவ்வடிகளை ஆராய்ந்த அறிஞர் துடியன், பாணன், பறையன்,கடம்பன் எனப்பட்ட நான்கு குடியினரும் மூலதிராவிடப் பழங்குடி மக்கள் என்று கூறுகின்றனர். வரலாற்றாசிரியரான கே.கே.பிள்ளை, "இந்நான்கு அல்லது குடியில்லை என்பது வியப்பாக இருக்கிறது என்றும், ஒரு கால் ஆரியர், கலப்பில்லாத ஆரியர் வருகைக்கு முற்பட்ட பழங்குடி மக்களை இப்பெயர்கள் சுட்டுவதாகலாம்"[14] என்கிறார்.

---

11. தமிழ்நாட்டு வரலாற்றுக்குழு, தமிழ்நாட்டு வரலாறு - சங்ககாலம்(வாழ்வியல்), ப.4.
12. பொ.வே.சோமசுந்தரனார்(உ.ஆ.), பரிபாடல் திரட்டு, ப.476.
13. ஔவை சு.துரைசாமிப்பிள்ளை(உ.ஆ.), புறநானூறு மூலமும் உரையும் (பகுதி-2),ப.268.
14. தமிழ்நாட்டு வரலாற்றுக்குழு, தமிழ்நாட்டு வரலாறு - சங்ககாலம் (வாழ்வியல்), ப.6.

மாங்குடிகிழார் குறிப்பிடும் நால்வகைக் குடியினரும் தமிழ்க் குடிகள் ஆவர். "துடியை முழக்குபவன் துடியன், யாழ்வழிப் பண்ணினை இசைப்பவன் பாணன் என்றும், பறை அறைபவன் பறையன் என்றும் பெயர் பெற்றனர். கடம்பன் என்னும் பெயர் குடமுழா என்னும் கருவியை அறைபவனுக்கு வழங்கிய பெயராகும்"[15] என்கிறது சூடாமணி நிகண்டு. இவை அனைத்தும் இசை மற்றும் இசைக்கருவி வழி உண்டான பெயர்களாகும்.

இந்த இசைக் குடிகளைத் தவிர கூத்தர், பொருநர், கோடியர், வயிரியர், கிணையர் போன்ற கலைசார்ந்த குடிகளும் வாழ்ந்தன. சடங்குகள், செய்வித்த அகவன் மகளிர், கட்டுவிச்சி, அகவுநர், வேலன், கணியன், சாலினி மற்றும் நாழிகைக் காவலர்,சிறுகார்கோடன், குதிரை, தேர், யானைப்பாகர், துணி வெளுப்போர் ஆகியோரும் தமிழ்ச் சார்ந்த மரபினராவர். இவற்றிலிருந்து சங்ககாலத் தமிழ்ச் சமூகம் பற்றிய பொதுவான கருத்தை அறியமுடிகிறது.

### தொல்காப்பியர் காலச் சமூகப் பிரிவுகள்

தொல்காப்பியர் காலத்திற்கு முன்பே தமிழ் நாட்டில் மக்களிடையே அரசர், அந்தணர், வாணிகர், வேளாளர் என்று பலவிதப் பிரிவுகள் இருந்தன. இவையாவும் அவர்கள் செய்யும் தொழிலினால் ஏற்பட்ட பிரிவுகளாகும். இவர்களைத் தவிரப் பாணன், கூத்தர், பொருநர், அடியோர், வினைவலர் போன்ற பல பிரிவுகளும் இருந்தன.

உயிர் வாழ்க்கைக்கு இன்றியமையாத உழவுத் தொழில் செய்து வந்தவரை வேளாளர் எனவும், கொண்டு கொடுத்து வந்தவரை வாணிகர் எனவும், நாடு காத்து வந்தவரை அரசர் எனவும், ஒழுக்க நெறி கற்பித்து வந்தவரை அந்தணர் எனவும் வழங்கினர். இவை தொழில் பற்றியமைந்த பெயர்கள், உழவுத் தொழில் மற்ற எல்லாத் தொழில்களின் முதலும், இன்றியமையாச் சிறப்புடையதும் ஆனதால் தலைமை பற்றி வேளாளர் என்று சொல்லப்பட்டாலும் பிற தொழிலாளரும் இவற்றில் அடங்குவர். அரசர், அந்தணர், வாணிகர் அல்லாத மற்றையாவரும் வேளாளரே ஆவர். இந்நான்கு பிரிவுகளும் தொழில் பற்றிச் சிறப்பு வகையால் கூறப்பட்டனவே அன்றிப் பிறப்பு வகையால் கூறப்பட்டனவல்ல.

---

15. கோ. இளஞ்சேரனார்(பதி.ஆ.), சூடாமணி நிகண்டு, ப.323.

**அரசர்**

தமிழகத்தில் ஆட்சிமுறை என்று ஏற்பட்டதோ, அன்றிலிருந்து தமிழகம் முடியுடை வேந்தர் என்று சிறப்பித்துக் கூறப்படும் சேர, சோழ, பாண்டியர் என்னும் வேந்தர்களால் ஆளப்பட்டு வந்தது. இவர்களை, 'வண்புகழ் மூவர்' என்பர் தொல்காப்பியர். இப்பெரு நில மன்னரும், இவர்கட்கு உட்பட்ட குறுநில மன்னரும் அரசர் எனப்பட்டனர், பேரரசரால் சிறப்புப் பெற்ற வாணிகரும், வேளாளரும் சிற்றரசர் ஆவர்.

படை, கொடை, குடை, முரசு, குதிரை, யானை, தேர், தார், முடி போன்றன அரசர்க்கு உரியவை என்பதை,

> **"படையும் கொடையும் குடையும் முரசும்**
> **நடைநவில்புரவியும் களிறுந் தேரும்**
> **தாரும் முடியும் நேர்வன பிறவும்**
> **நெரிவுகொள் செங்கோல் அரசர்க்குரிய"**[16]

என்கிறது தொல்காப்பியம். வில், வேல், வாள், கழல், கண்ணி, தார் என்பன சிற்றரசர்க்கு உரிய சிறப்புகளாகும்.

அரசர்க்குரிய தொழில் கட்டுப்பட்டுடன் ஆட்சி புரிதலாகும்.தொல்காப்பியர் 'தெரிவுகொள் செங்கோல் அரசர்' என்று சிறப்பித்தால் பழந்தமிழ் அரசர்கள் முறை பிறழாது செங்கோல் செலுத்தியமை புலனாகும். இவ்வாறு அரசர்கள் சிறப்பாக ஆட்சி செய்தனர் என்பதை அறிய முடிகின்றது.

**அந்தணர்**

அறிவு, நல்லொழுக்கம், தன்னலமற்ற தன்மையாகிய பண்புடையார் அந்தணர் எனப்பட்டனர். எல்லா உயிர்களிடத்தும் அருளுடையவராய் அறநெறியில் வாழ்வோர் அந்தணர், அரசரை நல்வழிப்படுத்தலும், மக்கள் நல்வாழ்விற்காகத் தொண்டாற்றலும் இவர்கள் கடமைகளாகும்.

அந்தணர் என்பார் அரசர் போன்ற ஏனைய வகுப்பினரில் இல்லற முற்றிய பெரியோரே அன்றித் தனி வகுப்பினர் அல்லர் எனலாம். இவர்கள் பெரும்பாலும்

---

16. க. வெள்ளைவாரணர்(உ.ஆ.), தொல்காப்பியம் மரபியல் உரைவளம், ப.99.

ஓரிடத்தில் நிலையாகத் தங்கியிராமல் புலவர்கள் போன்று ஊர்தோறும் சென்று நாட்டு மக்களுக்கு நன்னெறி புகட்டி வந்தனர். அவர்கள் வழிச் செலவுக்குத் துணையாக ஊன்றுகோலும், தண்ணிர்க்கமண்டலம், ஆசனம் போன்றவற்றைக் கொண்டிருந்தனர் என்பதை,

**"நூலே கரகம் முக்கோல் மனையே**

**ஆயங் காலை அந்தணர்க் குரிய"**[17]

என்ற தொல்காப்பிய நூற்பா வழி அறியலாம்.

அரசர் போர் காரணமாக நகரை விட்டுச் சென்ற போது, வாணிகரும், வேளாளரும் உடன் சென்றால், அப்பொழுது அரசை நடத்த வேண்டிய பொறுப்பு அந்தணப் பெரியோர்களுக்கு உரியதை,

**"அந்தணாளர்க்கு அரசுவரை வின்றே"**[18]

என்ற நூற்பா உணர்த்துகின்றது, இதனால் அறிவும், பொதுநல ஆர்வமும் உடைய இல்லறம் நீத்த பெரியோர்களே அந்தணர் நிலையில் பொதுநலம் புரிந்து வாழ்ந்தனர் என்று தெரிகின்றது.

**வாணிகர்**

வாணிகர்களின் முக்கியத்தொழில் வாணிகமாகும், வாணிகம் செய்யும் தொழிலை வைசியன் பெறுவான்,

**"வைசிகன் பெறுமே வாணிக வாழ்க்கை"**[19]

என்கிறது தொல்காப்பிய நூற்பா. வாணிகரை உள்நாட்டு வாணிகர் என்றும், வெளிநாட்டு வாணிகர் என்றும் பாகுபடுத்தலாம்.

சங்க காலத் தமிழர் சமுதாயத்தில் வாணிகர் சிறப்பிடம் பெற்றனர். தமிழகம் இவர்களது வாணிகத் தொழிலால் செல்வச் செழிப்புற்று விளங்கியது. வாணிகர்களும் செல்வந்தர்களாய் வாழ்ந்தனர். இவர்கள் நூலோர் தமக்கு ஓதிய, அறநெறியில் இருந்தும் தவறாது, இல்லற நெறியிலும் பிறழாது இருந்தனர்.

---

17. பேராசிரியர்(உ.ஆ.), தொல்காப்பியம், பொருளதிகாரம்(பாகம்-2), ப.661.
18. இளம்பூரணர்(உ.ஆ.), தொல்காப்பியம், பொருளதிகாரம்,.ப.529.
19. க. வெள்ளைவாரணர், தமிழ் இலக்கிய வரலாறு தொல்காப்பியம், ப.298.

சங்க கால வாணிகர்கள் அறநெறியைக் கடைபிடித்தே வாணிகம் செய்தனர். காவிரிப்பூம்பட்டினத்தில் வாழ்ந்த வாணிகர்கள் தமக்குக் கிடைக்கும் இலாபத்தை வெளிப்படையாகக் கூறிப் பண்டங்களை விற்பனை செய்வர். பிறர் பொருளை மிகுதியாகக் கொள்ளாமலும், தம்முடைய பண்டங்களைக் குறைத்துக் கொடுக்காமலும் விற்பனை செய்வர். இவர்கள் நடுநிலைமையோடு ஏனைய நற்குணங்களும் நிறைந்த நல்ல நெஞ்சினை உடையவர்கள், தம் குடிக்குப் பழியாம் என்று அஞ்சி உண்மையே பேசுவர். இவ்வாறு வாணிகர்கள் அறநெறி தவறாது முறையே தொன்றுதொட்டு ஈட்டிய பொருளினை உடையவர்கள் என்பதை,

**"கொள்வதூஉ மிகை கொளாது கொடுப்பதூஉங் குறை கொடாது**

**பல் பண்டம் பகர்ந்து வீசும்**

**தொல் கொண்டித் துவன்றிருக்கை"**[20]

என்ற பட்டினப்பாலைப் பாடல் அடிகள் விளக்குகின்றன. இவ்வாறு சங்க காலத்தில் வாணிகத் தொழில் அறத்தை அடிப்படையாகக் கொண்டு நடைபெற்றது என்றும், வாணிகர்கள் நேர்மை உள்ளவர்களாகவும், பேராசையில்லாதவர்களாகவும், நடுநிலையே நின்று வாணிகம் புரிந்தனர்.

**வேளாளர்**

வேளாளர் என்பார் பெரும்பாலும் உழவுத்தொழில் செய்து மக்களை வாழ்வித்து வரும் பெருந்தகையாளர்கள்,

**"வேளாண் மாந்தர்க்கு உழுதூண் அல்லது**

**இல்லை எனமொழிப பிறவகை நிகழ்ச்சி"**[21]

என்கிறது தொல்காப்பியம். பல்வகைத் தொழிலாளர்களும் வேளாளரே ஆவர், எனினும் தலைமை பற்றி உழவுத் தொழிலே சிறப்பித்துச் சொல்லப்பட்டது. இவர்களுள் உழுதுண்ணும் வேளாளர், உழுவித்துண்ணும் வேளாளர் என இருவகைப்படுவர், உழுதுண்ணும் வேளாளர் உழவுத் தொழில் ஒன்றையே செய்தனர், உழுவித்துண்ணும்

---

20. பொ. வே. சோமசுந்தரனார்(உ.ஆ.), பத்துப்பாட்டு(பகுதி-2), ப.72.
21. க. வெள்ளைவாரணர்(உ.ஆ.), தொல்காப்பியம் மரபியல் உரைவளம், ப.113.

வேளாளர் உழவுத் தொழிலோடு, அரசரால் படை, கண்ணி போன்ற சிறப்புக்கள் பெற்றுப் படைத்தலைவராகவும், சிற்றரசராகவும் வாழ்ந்தனர்.

இதனால் வேளாண் மாந்தர் நிலத்தை உழுது பயிரிடும் நிலக்கிழார் என்பதும், நிலவுடைமையாளராகிய இவர்கள் உலகோரது பசியினைப் போக்கும் உழவினையன்றிப் பிற தொழில்களில் ஈடுபடுதல் அறமாகாது என்ற கொள்கையுடன் வாழ்ந்தனர் என்பது தெளிவாகின்றது.

**அடியோர், வினைவலர்**

ஐந்திணை ஒழுக்கத்தில் தலைமக்களாய் விளங்குபவர்கள் அறிவும், செல்வமும் உடைய நன்மரபினர் ஆவர், அன்னோர் கைக்கிளை, பெருந்திணை ஒழுக்கங்களில் ஈடுபடுதல், பொருந்தாமை பற்றி அவ்வொழுக்கங்களில் (கைக்கிளை, பெருந்திணை) தலைமக்களாய் பாடப்படுவோர் ஏவுந்தொழில் செய்யும் மரபினரும், அடிமை புரிவோராய் வாழ்வோருமே ஆவர்.

**"அடியோர் பாங்கினும் வினைவலர் பாங்கினும்**

**கடிவரை இலபுறத் தென்மனார் புலவர்"**[22]

என்று நூற்பாவில் தொல்காப்பியர் அடியோர் என்பவர் தமக்கென நிலையான பொருளோ, தொழிலோ இன்றி செல்வரிடத்தில் இருந்து அங்கேயே உண்டு, உடுத்தோ அல்லது நாள்கூலி பெற்றோ அச்செல்வர் தொழிலுக்கு அடிப்படையாய் இருப்பவர் என்கிறார். இவர்கள் கிளைகளைத் தங்கும் அடிமரம் போலிருந்து அச்செல்வர் தொழிலை முடிப்பர்.

வினைவலர் என்பார் ஆண்டுக்கூலிகளாய்ச் செல்வந்தர்களிடம் இருந்து தொழில் செய்வோர் ஆவர், அந்நாளில் ஆண், பெண் இருபாலாரினும் அடியார், வினைவலர் இருந்தனர்.

உலகியலுக்கு ஏற்ற வகையில் பலவகைப்பட்ட தொழில் செய்துவந்த மக்களிடையே நிகழும் பழக்கவழக்கங்களைக் கொண்டு அம்மக்களை அந்தணர், அரசர், வாணிகர், வினைவலர், அடியோர் எனவும், உழுதுண்ணும் வேளாளர், உழுவித்துண்ணும் வேளாளர் எனவும், பெருநில மன்னர், குறுநில மன்னர் எனவும் வகுத்துத் தொல்காப்பியர் இலக்கணம் செய்துள்ளார் என்பது நன்கு புலப்படுகின்றது.

---

22. நச்சினார்க்கினியர்(உ.ஆ.), பொருளதிகாரம், அகத்திணையியல், ப.52.

எட்டுத்தொகை, பத்துப்பாட்டு நூல்களில் சங்ககால மக்களின் வாழ்வில் முக்கிய இடம்பெறுவது திணைக் கோட்பாடாகும். அகப்பாடல்கள் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை எனத் திணைகளின் அடிப்படையில் பாகுபாடு செய்யப்பட்டிருந்தன. புறப்பாடல்கள் வெட்சி, கரந்தை, வஞ்சி, காஞ்சி, உழிஞை, நொச்சி, தும்பை, வாகை, என வழங்குகின்றன. அகம், புறம் என்னும் இருவகைத் திணைப்பாகுபாடுகளும் சமுதாய வளர்ச்சிப் போக்கோடும், மாற்றங்களோடும், மக்கள் வாழ்வியலோடும் நெருங்கியத் தொடர்புடையவனாய் இருந்தன. பொதுவாக இரு (அகம், புறம்) திணைகளும் சங்ககாலத் தமிழ்ச் சமுதாயத்தின் பல்வேறு பரிமாணங்களை எடுத்துக் காட்டுகின்றன.

சங்க இலக்கிய அகப்பாடல்களைக் காட்டிலும் புறப்பாடல்கள் தாம் சங்ககாலத் தமிழர்களின் வாழ்வியலை விரிவாகக் கூறுகின்றன. எட்டுத்தொகை, பத்துப்பாட்டு நூல்களிலுள்ள நில வருணனைகள் இலக்கிய மரபிற்கேற்ப அமையும் நிலப் பகுப்பன்று; அது புவியியல் (Geogrphy) அமைப்பே ஆகும்.

"தொன்மை இனக்குழு தமிழ்ச் சமுதாயம் (Primitive Trible Society) அழிந்து, தனிச் சொத்துரிமையை அடிப்படையாகக் கொண்ட நிலவுடைமைச் சமுதாயம் (Fedal Tamil Society) தோன்றிய காலக்கட்டமே சங்ககாலமாகும். இனக் குழுக்களாக வாழ்ந்து கொண்டிருந்த மக்கள் கூட்டம் உணவு சேகரிக்கும் நிலையிலிருந்து உணவு உற்பத்தி செய்யும் நிலைக்கு மாறியதை வளர்ச்சியின் ஒரு கட்டமாக வரலாற்று அறிஞர்கள் மதிப்பிடுவர்."[23] உணவுப் பொருள்களை உற்பத்தி செய்யும் நிலையிலிருந்து படிப்படியாக ஏற்பட்ட வளர்ச்சி உபரி உற்பத்திக்கும், அடுத்து ஏற்பட்ட பொருளாதார வளர்ச்சி குழுத்தலைவர்கள் சிற்றரசர்களாகவும் பின்னர் பேரரசர்களாகவும் உருப்பெற வாய்ப்புகளை ஏற்படுத்தின. இந்த வளர்ச்சி நிலைகள் பழந்தமிழகத்தில் தோன்றிய வரலாற்றினையே சங்க இலக்கிய நூல்களும் விரிவாக விளக்குகின்றன.

"சங்க இலக்கியத்தை விரிவாக உற்று நோக்கும்போது, பழந்தமிழ்ச் சமுதாயத்தை மூன்று பெருநிலைகளில் காணலாம். i) பழங்குடி(Prehistorical Society) ii) தொழில்வழிக் குடி(Communal Society) iii)பட்டினத்துக்குடி (Urban Society) ஆகியனவாகும். இனக்குழு சார்ந்த திணை வாழ்க்கைமுறையே பழங்குடியாகும். தொழில்வழிக்குடி என்பது நிலவுடைமை சார்ந்த சமுதாயம் எனலாம். நாகரிக உயர்நிலை வாழ்க்கை

---

23. சாமி சிதம்பரனார், தொல்காப்பியத் தமிழர், ப.63.

முறையினையும், பாதுகாப்பிற்கான அரசு நிறுவனத்தையும் கொண்டதே பட்டினத்துக் குடியாகும்".[24]

பேரரசர்களாகவும், சிற்றரசர்களாகவும், வள்ளல்களாகவும், ஐநிலதலை மக்களாகவும், பொது மக்களாகவும், வாணிகர்களாகவும், கலைஞர்களாகவும், சங்ககாலத் தமிழர் வாழ்ந்து வந்ததை அறியும் போது சங்காலத் தமிழகத்திலிருந்த சமுதாயமானது வர்க்க வேறுபாடுகளையுடைய சமுதாயமாகவே விளங்கியதை அறியலாம்.

**உணவின் சிறப்பு**

மனிதன் உயிர் வாழ முக்கியமானது உணவாகும். ஆதி மனிதனின் முதல் தொழிலே உணவுத் தேடலாயிருந்தது. ஆதிகால மனிதன் இயற்கையிலேயே கிடைத்த காய், கனி, கிழங்குகளைத் தின்றான். பின்னர் விலங்குகளை வேட்டையாடி அவற்றின் சதைப் பற்றுள்ள பகுதிகளைப் பச்சையாக உண்டான். நெருப்பை உண்டாக்கக் கற்றுக் கொண்ட பின்னரே இறைச்சியை நெருப்பில் வேக வைத்துப் பக்குவப்படுத்தி உண்ணத் தலைப்பட்டான். ஆற்றங்கரைப் பகுதியில் நிலையாகத் தங்கி வாழத் தொடங்கியபோது தான் மனிதன் தன் உணவினைத் தானே உற்பத்தி செய்யத் தொடங்கினான். நாகரிகப் படிநிலையின் காரணமாக ஏற்பட்ட சமுதாய வளர்ச்சியினால் தான் உணவு உற்பத்தியும், உணவுப் பழக்கங்களும் வளரத் தொடங்கின.

"மனித இனம், உணவு, உடை, உறைவிடம் ஆகிய அடிப்படைத் தேவைகள் மூன்றினை எவ்வாறு இயற்கையிலிருந்து பெற்று நுகர்கிறது என்பதைப் பொறுத்து அதன் நாகரிகப் படிநிலைகளைக் கணிக்கலாம். உணவு, உடை, உறைவிடம் மூன்றும் ஒன்றுக் கொன்று தொடர்புடையவை. ஒன்றை ஒன்று தீர்மானிப்பவை. ஒன்றில் ஏற்படுகிற மாற்றங்கள் மற்றவற்றையும் பாதிக்கக்கூடியவை. ஒரு குடும்பத்தின், சமூகத்தின், நாட்டின், பிரதேசத்தின் ஒட்டு மொத்தமான நாகரீக வாழ்வின், அந்த வாழ்வின் முழுமையின் சமச்சீரான தகுதிகளைக் கொண்ட அங்கங்களாக அம்மூன்றையும் மதிப்பிடலாம்"[25] என்கிறார் ராஜ்கௌதமன்.

---

24. கா. வெள்ளைவாரணர், சங்ககாலத் தமிழ் மக்கள், ப.8.
25. ராஜ்கௌதமன், பாட்டும் தொகையும் தொல்காப்பியமும் தமிழ்ச் சமூக உருவாக்கமும், ப.198.

"மனித சமுதாயம் உணவுக்காக எவ்வளவு போராட்டங்களைக் காலங்காலமாக நடத்திக் கொண்டு வந்திருக்கிறது என்பதை நாம் சரித்திரத்தில் பல இடங்களில் பார்க்கலாம். ஐயாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே மத்திய ஆசியாவிலிருந்து ஆரியர்கள் கூட்டங்கூட்டமாக இந்தியாவிற்கு உணவு தேடி வந்தனர். இந்தியாவின் உணவு வளத்தை முன்னிட்டு ஆரியர்களும், திராவிடர்களும் நீண்டகாலம் போரிட்டதையும் சரித்திரத்தின் வாயிலாக அறியலாம்"[26] என்று சே. நமச்சிவாயம் கூறுகின்றார்.

உணவு என்ற சொல்லினை உற்று நோக்கினால் உண் > உணா என அமைகிறது. உணவு என்பதில் 'உண்' என்பது அடிச்சொல்லாக அமைகிறது. உயிர் வாழ்வதற்குத் தேவையான ஆற்றலைத் தரும் பொருளை உணவென்று கூறுவர்.

**"உணாவே வலசி யுண்டி யோதன**

**மசனம் பதமே யிரையா கார**

**முறையே யூட்ட முணவென லாகும்"**[27]

என உணா, உண்டி, அசனம், பதம், இரை, ஆகாரம், உறை, ஊட்டம் என்பவற்றை உணவின் பெயர்களாகப் பிங்கல நிகண்டு குறிப்பிடுகிறது.

ஆடையில்லாத மனிதன் அரைமனிதன் என்பதைப் போல உணவில்லாத மனிதன் உயிரற்ற மனிதன் எனலாம். மக்களுக்குத் தேவையான அடிப்படைப் பொருள்களான ஊன், உடை, உறையுள் என்பவற்றில் உடையும், உறையுளும் இன்றிக்கூட வாழலாம், உணவின்றிவாழ முடியாது. உணவு மனிதனின் உயிர்நாடி, உணவு இல்லையேல் இவ்வுலகம் இல்லை, உலகின் அறம், ஒழுக்கம், மேன்மை எல்லாம் உணவில் அடங்கியிருக்கிறது. ஆகவே தான்,

**"நீர் இன்று அமையா யாக்கைக்கு எல்லாம்**

**உண்டி கொடுத்தோர் உயிர்கொடுத் தோரே"**[28]

என்று புறநானூறு விளக்குகிறது. இவ்வாறு பண்டைத்தமிழரின் உணவு முறைகளை அறிந்து கொள்ள எட்டுத்தொகையும், பத்துப் பாட்டும் பெரிதும் துணை நிற்கின்றன.

---

26. சே. நமச்சிவாயம், தமிழர் உணவு, ப.3.
27. பிங்கலமுனிவர், பிங்கல நிகண்டு, ப.178.
28. அ.ப. பாலையன்(உ.ஆ.), புறநானூறு மூலமும் உரையும், ப.23.

**நெய்தல் நிலத்தார் உணவு**

நெய்தல் நிலப்பகுதியில் வாழ்ந்த பரதவ மக்கள் மீன் பிடித்தலை முதன்மையான தொழிலாகக் கொண்டிருந்ததால் இவர்களது உணவில் பலவகையான மீன்கள் இடம்பெற்றுள்ளன. பரதவர் புரிந்த தொழிலுக்கு ஏற்ப அவரது உணவுப் பழக்கங்களும் அமைந்திருந்தன. கடலில் மீன் பிடித்து விட்டு வீடு திரும்பிய தந்தைக்கு நெல்லினால் சமைத்த மூரலாகிய வெண்சோற்றை அயிரை மீனையிட்டு ஆக்கிய கருவாட்டுடன் அவனுடைய இளையமகள் அளித்ததைக் குடவாயிற்கீரத்தனார்,

**"நெடுந்திமில் தொழிலொடு வைகிய தந்தைக்கு**
**உப்புநெடை நெல்லின் மூரல் வெண்சோறு**
**அயிலை துழந்த அம்புளிச் சொரிந்து**
**கொழுமீன் தடியொடு குறுமகள் கொடுக்கும்"**[29]

என்று கூறுகின்றார். இதனால் நெய்தல் நில மக்கள் மீன் உணவினையே அதிகம் உட்கொண்டனர் என்று தெரிகிறது.

எயிற்றியர்கள் விளிம்பு ஒடிந்த பானையில் சோறு சமைத்தனர். அதனுடன் உலர்ந்த மீனைப் பிளக்காமல் ஆக்கி, அதனைத் தெய்வங்களுக்கு இடும் பலியைப் போன்று தேக்கு இலையில் உறவினர்களுக்குப் பரிமாறியதை,

**"முரவுவாய்க் குழிசி முரியடுப்பு ஏற்றி**
**வாராது அட்ட வாடூன் புழுக்கல்**
**வாடாத் தும்பை வயவர் பெருமகன்**
**ஓடாத் தானை, ஒண்தொழில் கழல்கால்**
**செவ்வரை நாடன் சென்னியம் எனினே**
**தெய்வமடையின் தேக்கிலைக் குவைஇநும்**
**பைதீர் கடும்பொடு பதம் மிகப் பெறுகுவிர்"**[30]

---

29. ந.மு. வேங்கடசாமிநாட்டார்(உ.ஆ.), அகநானூறு, களிற்றியானைநிரை, ப.160.
30. நச்சினார்க்கினியர்(உ.ஆ.), பத்துப்பாட்டு மூலமும் உரையும், ப.186.

என்னும் பெரும்பாணாற்றுப்படைப் பாடல் அடிகள் உரைக்கின்றன. இவ்வாறு பல்வேறு பாடல்களின் வழியாகப் பண்டைத் தமிழர்கள் மீனினை விரும்பி உண்டனர் என்பதும், அவர்கள் உணவு சமைத்த முறையினையும் அறிந்து கொள்ள முடிகின்றது.

**மது வகைகள்**

சங்க காலத்தில் ஏழைகளும், செல்வர்களும் கள்குடிக்கும் பழக்கம் உடையவர்களாய் இருந்தார்கள். கள்ளில் இருமடைக்கள், கலிமடைக்கள், தேறல், தோப்பி, மட்டு, மகிழ், நறவு, நனை, அரியல் ஆகிய வகைகள் இருந்தன.மேலை நாட்டிலிருந்து இறக்குமதி செய்யப்பட்ட யவனருடைய கள் வகையும் தமிழகத்தில் கிடைத்தது. உடலுழைப்பு வாழ்க்கையை மேற்கொண்ட மக்கள் இதனைக் காலையில் விரும்பிப் பருகினார்கள், பகல், மாலை, இரவு வேளைகளில் பருகுவதற்கு ஏற்றவாறு கள் வகைகள் இருந்தன.

**கள்ளில் களிப்பு**

பரதவர்கள் ஆழ்கடலுக்குச் சென்று மீன் பிடிக்கும் கடின உழைப்பாளிகளாவர். ஆகவே அவர்கள் உடல் களைப்பு நீங்க கள்ளினைப் பருகினர். கள் பரதவர்களுக்குப் பேரின்பமும், புத்துணர்ச்சியும் தரும் பானமாக அக்காலத்தில் விளங்கியது. பனை மரத் தோப்புகளுக்கு இடையே பரதவரது குடியிருப்பு அமைந்திருந்ததால் அவர்கள் அப்பனை மரங்களிலிருந்து கள்ளினை வடித்துப் பருகினர்.

ஞாயிறு மறையும் மாலை வேளையில் பகலில் எளிதில் பெற்ற பெரும்மீன்களை விற்றுப் பரதவர்கள் மயக்கும் கள்ளைக் குடித்து மகிழ்வதை,

**"ஞான்ற ஞாயிறு குடமலை மறைய**

**மான்ற மாலை மகிழ்ந்த பரதவர்**

**இனிது பெறு பெருமீன் எளிதினின் மாறி**

**பனிஇரும் பரப்பின்"**[31]

என்னும் நற்றிணைப் பாடல் அடிகள் சுட்டுகின்றன. இதனால் இக்கள் அருந்தும் பழக்கம் மிகவும் பழமையானது என்பதும், பரதவர் தம் சுற்றம் சூழப் பாக்கத்தில் அமர்ந்து கள்ளை உண்டு மகிழ்ந்திருப்பர் என்பதும் தெளிவாகின்றது.

---

31. த. கோவேந்தன், அன்பொடு புணர்ந்த ஐந்திணை (நெய்தல்), ப.132.

## நெய்தல் நில மகளிர் விருந்தோம்பல்

குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என நானிலங்களில் வாழ்ந்த மக்கள் தங்களுடைய வாழ்க்கை முறைக்கேற்பவும், செல்வ நிலைக்கேற்பவும் தங்களுக்குக் கிடைக்கும் பொருள்களைக் கொண்டு தம்மிடம் வந்த விருந்தினர் அனைவருக்கும் விருந்து அளித்துள்ளனர். பழந்தமிழரது வாழ்வில் இடம்பெற்ற விருந்தோம்பல் என்னும் பண்பு இல்லறத்தின் நல்லறமாகவும், வாழ்வியற்கோட்பாடாகவும் அமைந்தது எனலாம். ஆற்றுப்படை நூல்கள், வேந்தர்களும், வள்ளல்களும், குடிமக்களும் விருந்தோம்பியதற்குச் சான்றாக விளங்குகின்றன.

"உண்பதற்கும், அருந்துவதற்கும் பல நல்ல பொருள்களுடன் கூடிய சிறந்த உணவு விருந்து; மனமகிழ்வூட்டுவனவும் விருந்தாகும்"[32] என ஆங்கில அகராதி குறிப்பிடுகிறது.

நெய்தல் நிலத்தில் வாழ்ந்த பரதவமக்கள் தங்கள் இல்லம் நாடி வரும் விருந்தினரை அன்புடன் வரவேற்று விருந்தோம்பி மகிழும் சிறந்த பண்பாட்டினைக் கொண்டிருந்தனர்.

ஆரவாரமிக்க பரதவர் பாக்கத்தில் மாலைப்பொழுது வந்தறிந்த வளையணிந்த மீனவமகள், மீன்நெய் பெய்து விளக்கேற்றி மனைக்கு ஒளியூட்டினாள். அகமும், முகமும் அன்புற மலர்ந்து விருந்தினர் வருகையை விரும்பி நோக்கிக் கொண்டிருந்ததை,

**"குணகடல் இவர்த்து குருஉக்கதிர் பரப்பி**
**பகல்கெழு செல்வன் குடமலை மறைய**
**புலம்புவந்து இறுத்த புன்கண் மாலை**
**இலங்குவளை மகளிர் வியல்நகர் அயர**
**மீன்நிணம் தொகுத்த ஊன்நெய் ஒண்சுடர்**
**நீல்நிறப் பரப்பில் தயங்குநிரை உதைப்ப**
**கரைசேர்பு இருந்த கல்லென் பாக்கம்"**[33]

என்று நற்றிணைப் பாடல் அடிகள் நவில்கின்றன. பரதவமக்கள் விருந்தினரை அன்பொழுக வரவேற்று, இனிது பேணிப் பகுத்துண்டு வாழும் பண்புடையவர். இவரது

32. A.Shorn, The Advanced Learners Dictionary of Current English, p.362.
33. பின்னத்தூர் நாராயணசாமி ஐயர்(உ.ஆ.), நற்றிணை நானூறு, ப.270.

மனைக்கிழத்தியர் விருந்தினரை வரவேற்க வழிமேல் விழிவைத்துக் காத்திருந்து பேணும் தன்மை உடையவர் என்பது தெரிகின்றது.

எயிற்பட்டினத்துப் பரதவமகள் களிப்பு மிக்கப் பழையக் கள்ளையும், சுட்ட குழல் மீனின் இறைச்சியையும் பாணர்க்கும், விறலியர்க்கும் கொடுத்து விருந்தோம்பியதைச் சிறுபாணாற்றுப் படையில் நல்லூர் நத்தத்தனார்,

**"மதி ஏக்கறூஉம் மாசுஅறு திருமுகத்து**
**நுதிவேல் நோக்கின் நுளைமகள் அரித்த**
**பழம்படு தேறல் பரதவர் மடுப்பக்**
**கிளைமலர்ப் படப்பைக் கிடங்கிற் கோமான்**
**தளையவிழ் தெரியல் தகையோற் பாடி**
**அறற்குழற் பாணி தூங்கி அவரொடு**
**வறற்குழல் சூட்டின் வயின்வயின் பெறுகுவீர்"**[34]

எனக் குறிப்பிட்டுள்ளார். இவற்றிலிருந்து பரதவ மகளிர் விருந்தினரைப் பேணலில் பேரார்வம் கொண்டவர் என்பதையும், 'உண்டிக்கழகு விருந்தோடுண்ணல்' என்ற நன்மொழிக்கிணங்க விருந்தினரைக் கணவரோடிருந்து எதிர்கொண்டழைத்து இன்முகங்காட்டி உண்பித்துத் தாமும் உண்டு மகிழ்தலில் தனியார்வம் கொண்டவர் என்பதையும் அறிகிறோம்.

## நெய்தல் நிலத்தார் ஆடைகள்

பழங்கால மனிதன் முதன்முதலில் ஆடையின்றி விலங்கோடு விலங்காக வாழ்ந்தான். பின்னர் காலப்போக்கில் தழைகளையும், மரப்பட்டைகளையும், விலங்குத் தோல்களையும் உடுத்தத் தொடங்கினான். பொதுவாக மனித இன வரலாற்றில் ஆடைகள் சிறப்பிடம் பெற்றன எனலாம். உண்ணத் தொடங்கிய, ஆடையில்லாத மனிதன் உடுத்தத் தொடங்கிய காலகட்டமே நாகரிக வளர்ச்சியின் முதற்படி நிலையாகும்.

---

34. நச்சினார்க்கினியர்(உ.ஆ.), சிறுபாணாற்றுப்படை, ப.45.

உடை என்பது உணவுக்கு அடுத்த நிலையில் வைத்து எண்ணக் கூடிய மிக முக்கியப் பொருளாக விளங்குகிறது. உடைகள் நிலங்களுக்கேற்பவும், தட்பவெப்பத்திற்கேற்பவும் மாறுபட்டன. நாகரிகமும், அறிவும் வளர வளர உடையிலும் மாற்றங்கள் ஏற்பட்டன. நெசவுத் தொழிலை மனிதன் கண்டறிந்த பின்பே இயற்கையுடைகள் நீங்கி செயற்கையுடைகளான பருத்தி ஆடைகள், பட்டாடைகள் உண்டாயின. மனிதனின் அடிப்படைத் தேவைகளில் ஒன்றான ஆடை தற்காலத்தில் ஆடம்பரத்தின் அடையாளமாக மாறிவிட்டது. ஆடை ஒருவரது சமூக மதிப்பைக் காட்டுகிறது. ஒருவரிடமிருந்து மற்றவரை வேறுபடுத்திக் காட்டுவதும் ஆடையே ஆகும்.

"மனிதனின் இரண்டாவது தேவை உடை, உணவினால் உடலுக்கு உண்டாகும் வலிமை பனி, குளிர் ஆகியவற்றால் உண்டாகும் துன்பத்தைத் தாங்குவதற்குத் தான் பயன்படும், அத்துன்பத்தைத் தடுக்காது. ஆகையால் அதனைத் தடுப்பதற்கு உடை தேவைப்படுகிறது. உடை அத்துன்பத்தைத் தடுத்து உடல் நலத்தைக் காக்கின்றது. உடல் நலத்தைக் காப்பதின் வழியாக மனிதனை, மனித உயிரைப் பேணுகின்றது. உயிரைக் காப்பதற்கு நேரிடைத் தேவையாக உணவு உள்ளதால் அது முதல் தேவையாகவும், உடலைக் காப்பதற்கு நேரிடைத் தேவையாக உடை உள்ளதால் அது இரண்டாவது தேவையாகவும் இருந்தது"[35] என்கிறார் வெற்றிச் செல்வன்.

சங்க கால மக்கள் அணிந்திருந்த ஆடைகளை அறிந்து கொள்ள எட்டுத்தொகையும், பத்துப்பாட்டும் சிறந்த சான்றுகளாக விளங்குகின்றன. தழை உடை, துகில், கலிங்கம், அறுவை, பட்டு, கஞ்சுகம், படம்(மெய்ப்பை), காழகம் எனப் பலவிதமான ஆடைகளைச் சங்கத்தமிழர் தங்களது செல்வச் செழிப்புக்கேற்ப அணிந்திருந்தனர்.

**தழை**

பெருமணல் நிலப்பகுதியான நெய்தல் நிலப்பகுதியில் பரதவ ஆடவரும், பெண்டிரும் எளிமையான உடைகளையே அணிந்தனர். நெசவுக் கலையை மனிதன் அறியும் முன்பு, தழைகளை மட்டுமோ அல்லது தழைகளையும், பூக்களையும், இளந்தளிர்களையும் விரவித் தொடுத்த தழையடைகளை ஆடையாகப் பயன்படுத்தினான். இதுவே தழை, தழையுடை, தழையாடை எனப்பட்டது. தழையாடையானது பகைத்தழை, மடிவை, குழை என்னும் பெயர்களில் சுட்டப் பெற்றுள்ளது. மனிதன் இயற்கையோடு இணைந்த வாழ்வு வாழ்ந்தான் என்பதற்குத் தழையுடை சிறந்த சான்றாகும்.

---

35. வெற்றிச்செல்வன், உடையியல், ப.13.

தழையாடைகள் பெரும்பாலும் நெய்தல், ஞாழல், ஆம்பல், குவளை, செயலை, நொச்சி போன்றவற்றின் தழைகளைக் கொண்டு தொடுக்கப்படுகின்றன. அம்மூவனார் அகப்பாடல் ஒன்றில், நெய்தல் நிலப் பெண் ஒருத்தி மெல்லிய அகன்ற அல்குலில் அழகு பெறப் புனைந்த பல தளிருடன் கூடிய தழையுடை அணிந்து நடந்து வருவதை,

**"ஐதகல் அல்குல் கவின்பெறப் புனைந்த**

**பல்குழைத் தொடலை ஒல்குவயின் ஒல்கி"**[36]

என்று கூறுகின்றார். இவற்றிலிருந்து பரதவப் பெண்டிரின் முதன்மையான ஆடையாகத் தழையாடை விளங்கியதைக் காண முடிகின்றது.

**துகில்**

சங்க இலக்கியத்தில் தழைக்கு அடுத்த நிலையில் பயன் பாட்டில் உள்ள ஆடை துகிலாகும். இது துயில் என்றும், துகின் என்றும் சில இடங்களில் வழங்கப்படுகிறது. துயில் என்பதன் பகுதி 'துய்' என்பதாகும். பஞ்சின் மென்மையான பகுதியைத் 'துய்' என்றே அழைப்பர். ஆகவே பஞ்சினால் செய்யப்பட்டதாகலின் துயின் என்ற பெயரைப் பெற்றிருப்பது பொருத்தமானதாக அமைந்துள்ளது.

காவிரிப்பூம்பட்டினத்துச் செல்வ மகளிர் பகற் காலத்தில் பட்டுடைகளையும், இராக்காலத்தில் மென்மையான துகில் உடையையும் உடுத்தியிருந்ததை,

**"துணைப் புணர்ந்த மடமங்கையர்**

**பட்டு நீக்கித் துகில் உடுத்தும்"**[37]

என்று பட்டினப்பாலைப் பாடல் அடிகள் இயம்புகின்றன. ஆகவே கடல் வாணிகத்தின் செல்வச் செழிப்பாலும், நாகரிக வளர்ச்சியின் காரணமாகவும் பட்டினத்துச் செல்வ மகளிர் பட்டு, துகில் போன்ற ஆடைகளை அணிந்திருந்தனர் எனலாம். நெய்தல் நிலப் பரதவர்கள் அணிந்திருந்த ஆடைகளைப் பற்றிய குறிப்புக்கள் சங்க இலக்கியத்தில் இல்லை, எனினும் அவர்கள் மீன் பிடித் தொழிலுக்கேற்ப ஆடை அணிந்திருந்தனர் எனலாம்.

---

36. ரா. வேங்கடாசலம்பிள்ளை(உ.ஆ.), அகநானூறு, நித்திலக்கோவை, ப.200.

37. பொ.வே. சோமசுந்தரனார்(உ.ஆ.), பத்துப்பாட்டு(பகுதி-2), ப.519.

## நெய்தல் நிலத்தார் அணிகலன்கள்

வரலாற்றுக்கு முற்பட்ட தமிழர் ஆடையோ, அணிகலனோ அணியவில்லை. பின்னர் காலப்போக்கில் பல நிறத் தளிர்களைக் குழையாகக் காதில் அணிந்தனர். பலவகையான விதைகளையும், கொட்டைகளையும் காதில் தொங்கவிட்டு அழகு பார்த்தனர். புற்களையும், நார்களையும் இணைத்து முறுக்கிக் கைகளிலும், கழுத்திலும் அணிந்தனர். இலைகளோடு கூடிய கொடிகளைக் கழுத்திலும், தோளிலும், இடையிலும், முன்கையிலும் சுற்றிக் கொண்டனர். பல வகையான மலர்களையும், இலை தளிர்களையும் மாலையாகத் தொடுத்து மார்பிலும், இடையிலும் அணிந்து கொண்டனர்.

பொன், வெள்ளி, ஈயம், செம்பு, பித்தளை, இரும்பு போன்ற உலோகங்களைக் கண்டறிந்த பின்பே நுட்பமான, வேலைப்பாடு நிறைந்த அணிகலன்களைத் தமிழர் அணிந்தனர். சங்கத்தமிழர் உலோகங்கள் மட்டுமின்றி நவமணிகளான வைரம், மரகதம், மாணிக்கம், கோமேதகம், வைடூரியம், முத்து, பவளம், நீலம் ஆகியவற்றின் இயல்பறிந்து அவற்றையும் அழகுபடச் செய்து அணிகலனாக அணிந்தனர். "உலக மக்களில் தமிழர்களைப் போல் ஒப்பனைக்கு அணிகலன்களைப் பயன்படுத்தியவர்கள் வேறு எந்நாட்டவரும் இல்லை. தமிழ் மக்கள் ஆண்டாண்டு காலமாகத் தம்மை அழகுபடுத்திக் கொள்ள அணிகலன்களை அணிந்து வருகிறார்கள். அவர்தம் அணிகலன்கள் விலை உயர்ந்தவை. நுட்பமான வேலைப்பாடு நிறைந்தவை. கலைநயம் மிக்கவை, கவர்ச்சியானவை"[38] என்கிறார் வெ.வரதராஜன்.

ஒவ்வொரு நிலத்திற்கு ஏற்ப மக்கள் அணியும் அணிகலன்கள் மாறுபடுகின்றன. இதைப் பற்றி அ.ராகவன், "தமிழர்கள் குறிஞ்சி நில வாழ்க்கையில் மலர் அணிகளையும், அரும்பு அணிகளையும் கண்டனர், முல்லை நில வாழ்க்கையில் இலை, ஓலை, கொடி போன்றவற்றை அணியாக அணிந்து வந்தனர். மருத நில வாழ்க்கையிலே மலர், அரும்பு, இலை, ஓலை, கொடி, பஞ்சு, காய், பழம், கொட்டை போன்றவற்றை அணியாக அணிந்து வந்தனர். நெய்தல் நில வாழ்க்கையிலே சிப்பி, சோவி, சங்கு, கோவஞ்சி, முத்து, பவளம் ஆகியவற்றைக் காதணியாகவும், கையணியாகவும், கழுத்தணியாகவும், தலையணியாகவும் அணிந்து வந்தனர்"[39] என்று கூறுகிறார்.

38. வெ. வரதராஜன், தமிழரின் ஒப்பனைக் கலைத்திறன், ப.53.
39. அ. ராகவன், தமிழ்நாட்டு அணிகலன்கள், ப.110.

தமிழர்கள் உலோகக் காலத்தை அடைந்த பின்னர் தான் குழை, தொடி, வளை, இழை போன்ற பலவிதமான அணிகலன்களை அணிந்து கொண்டனர் எனலாம். கடலும் கடல் சார்ந்த நிலப் பகுதியான நெய்தலில் கடல் வாணிகத்தின் செல்வச் செழிப்பால் பட்டினவர் விலை உயர்ந்த அணிகலன்களை அணிந்தனர். பரதவர்கள் சங்கு, முத்து போன்ற கடல்படு பொருள்களால் எளிமையான அணிகலன்களை அணிந்திருந்தனர்.

**இழை**

பொன்னை நுட்பமாக இழைத்துச் செய்யப்பெற்ற அணிகலனுக்கு 'இழை' என்று பெயர், மணிகளைப் பொன்னில் இழைத்து அழகுபெற செய்யப்பட்ட அணிகலன் 'அணியிழை' எனப்பட்டது. ஒளி பொருந்திய இழை 'ஒளியிழை' எனவும், பொன்னாலும், செம்மணிகளாலும் ஆன இழை 'சேயிழை' எனவும் வழங்கப்படும். பசும்பொன்னாலும், பசிய மணிகளாலும் ஆன இழை 'பாசிழை' எனவும், இழைகளுள் ஆராய்ந்து எடுக்கப்பெற்ற இழை 'ஆயிழை' எனவும் அழைக்கபெற்றது. வின்சுலோவின் தமிழ் ஆங்கில அகராதி "இழை-A Jewel Ornamnet + ஆபரணம்"[40] எனக் குறிப்பிடுகின்றது.

**"மணங்கமழ் பொழிற்குறி நல்கின ணுணங்கிழை"**[41]

**"நறுநுதல் அரிவை பாசிழை விலையே"**[42]

என்ற பாடலடிகளில், பலவிதமான இழைகளை நெய்தல் நிலமகளிர் அணிந்துள்ளனர். இவை அனைத்தையும் உற்றுநோக்கும் போது இழை என்னும் அணிகலனைச் சங்கப்புலவர்கள் பலவிதமான பொருளில் அழைத்துள்ளதை அறிய முடிகின்றது.

**வளை**

நெய்தல் நிலப்பெண்கள் விரும்பி அணிந்த அணிகலன்களில் வளையும் ஒன்றாகும். இது சங்கு, ஆமை ஓடு, பித்தளை, செம்பு, வெள்ளி, பொன் ஆகியவற்றால் செய்யப்பட்டது. சங்ககாலத்தில் வளை அணிந்த பெண்டிர் 'வளையோர்' என அழைக்கப்பட்டனர்,

**"வார்கோல் எல்வளை உடைய வாங்கி"**[43]

---

40. எம். வின்சுலோ, வின்சுலோவின் தமிழ் ஆங்கில அகராதி, ப.110.
41. உ.வே. சாமிநாதஐயர்(உ.ஆ.), ஐங்குறுநூறு, ப.174.
42. ந.மு. வேங்கடசாமிநாட்டார்(உ.ஆ.), அகநானூறு, களிற்றியானை நிரை, ப.232.
43. பின்னத்தூர் நாராயணசாமி ஐயர்(உ.ஆ.), நற்றிணை நானூறு, ப.41.

**"இலங்குவளை தெளிர்ப்ப வலவனாட்டி"**[44]

எனப் பலவிதமான வளைகளைச் சங்க இலக்கியப் பாடலடிகளால் அறியலாம். வளை சங்கிற்கு வழங்கப்பெறும் சிறப்புப் பெயராகும். சங்கு அறுத்து வளையல் செய்வது சங்ககாலத்தில் மிகப்பெரிய கைவினைத் தொழிலாக விளங்கியிருக்கின்றது. அக்காலத்தில் நெய்தல் நிலமகளிர் மட்டுமின்றிப் பிற நில மகளிரும் வளையல்கள் அணிந்துள்ளனர்.

**தொடி**

"தொடி என்பது முன்னங்கைகளில் அணியப்பெறும் அணிகலன் ஆகும். கங்கணம், கைவளை, பூண், தோள்வளை, வீரவளை ஆகியவற்றைக் குறிப்பதாக அமைகின்றது"[45] என்கிறது கழகத்தமிழ் அகராதி.

கைகளிலும், தோளிலும் தொடுத்து அணியப்பெற்ற அணிகலன், 'தொடி' என அழைக்கப்பட்டது. ஆராய்ந்து அணியப்பெற்ற தொடி, 'ஆய்தொடி' எனவும், ஒளி பொருந்திய தொடி, 'ஒண்தொடி' என்றும் வழங்கப்பட்டது. இறுக அணியப்பெற்ற தொடி 'செறி தொடி' எனவும், பசும்பொன்னாலும், பசிய மணிகளாலும் ஆன தொடி 'பைந்தொடி' எனவும் அழைக்கப்பெற்றது. சங்க காலத்தில் தொடி அணிந்த மகளிர் 'தொடியோர்' எனப்பட்டனர்.

தொண்டை நாட்டுப் பட்டினத்துச் (பிற்கால மாமல்லபுரம்) செல்வமகளிர் 'குறுந்தொடி' அணிந்திருந்தனர், காவிரிப்பூம் பட்டினத்து மகளிர் 'செறிதொடி' அணிந்திருந்தனர். மருங்கூர்ப்பட்டினத்து நெய்தல் மகளிர் பொன்னால் ஆன தொடி அணிந்திருந்ததை,

**"பொற்றொடி மகளிர் புறங்கடை உகுத்த**
**கொக்கு உகிர் நிமிரல் மாந்தி எல்பட"**[46]

என்று நற்றிணைப் பாடல் அடிகள் விளக்குகின்றன. சங்க காலத்தில் நெய்தல் நில மகளிர் பல வகையான தொடிகளை அணிந்து தம்மை அழகு படுத்தியிருக்கின்றனர் எனலாம்.

---

44. பொ.வே. சோமசுந்தனார்(உ.ஆ.), ஐங்குறுநூறு, ப.280.
45. அ.கி. மூர்த்தி(தொ.ஆ.), கழகத்தமிழ் அகராதி, ப.581.
46. பின்னத்தூர் நாராயணசாமி ஐயர்(உ.ஆ.), நற்றிணை நானூறு, ப.320.

**பிற அணிகள்**

தொண்டை நாட்டுப் பட்டினத்துச் செல்வ மகளிர் பைங்காழ் என்னும் அணிகலனை அரையில் அணிந்திருந்தனர். பைங்காழ் என்பது பசிய மணிகள் கோத்த வடமாகும். உமணருடைய புதல்வர்கள் கிளர்பூண் என்னும் அணிகலனை அணிந்திருந்தனர். இந்தப்பூண் என்பது கை விரல்களில் இறுகிய நிலையில் அணியப்படும் அணிகலனாகும். பவத்திரி என்னும் கடற்கரை நகரத்திற்குத் தலைவனான திரையன் பொன்னால் ஆன பூண் அணிந்திருந்ததை,

**"செல்லா நல்இசை பொலம்பூண் திரையன்**

**பல்பூங் கானற் பவத்திரி அன்னஇவள்"**[47]

என்ற அகநானூற்றுப் பாடல் அடிகள் இயம்புகின்றன. இதனால் நெய்தல் நிலத்தில் ஆடவரை விட மகளிரே பலவகையான அணிகலன்களை அணிந்திருக்கின்றனர் என்று அறியமுடிகின்றது.

## நெய்தல் நிலத்தார் ஒப்பனை

ஆயகலைகள் அறுபத்தி நான்கினுள் அழகுக் கலையான ஒப்பனைக் கலையும் ஒன்றாகும். மனிதனது உடலில் தலை மிகவும் முக்கியமானதாகும். அதனால் தான் தமிழ்ப் பழமொழி ஒன்று 'என் சாண் உடம்பிற்குத் தலையே பிரதானம் ' எனக் குறிப்பிடுகிறது. தலையிலும் முகம் சிறப்பானது. கண், காது, மூக்கு, புருவம், நெற்றி, உதடுகள் கொண்ட முகத்தில் முக ஒப்பனை என்பது இவ்வுறுப்புகளின் ஒப்பனையாகவே அமைகின்றது.

சங்ககாலத் தமிழர் அகில், சந்தனம், நறைக்கொடி, கத்தூரி, சுண்ணம், பனிநீர், மணநெய், கருப்பூரம் போன்ற பொருள்களில் சிலவற்றை அரைத்துச் சாந்தாகவும், சிலவற்றை எரித்துக் கூந்தலுக்கு மணமூட்டினர், பலவகையான மலர்களைச் சூடிக் கொண்டு தங்களை அழகுபட ஒப்பனை செய்து கொண்டனர். நெய்தல் நில ஆடவரை விடப் பெண்டிரே தங்களை ஒப்பனை செய்து கொள்வதில் தனிக்கவனம் செலுத்தினர். சங்க இலக்கியம் சான்றுகளும் இதனை உறுதிப் படுத்துகின்றன.

---

47. ந.மு. வேங்கடசாமி நாட்டார்(உ.ஆ.), அகநானூறு, நித்திலக்கோவை, ப.736.

**ஐம்பால்**

நெய்தல் நிலப் பெண்கள் தங்களது கூந்தலினை ஐந்து வகையாக முடித்துக் கொண்டனர். இதுவே ஐம்பால் எனப்பெயர் பெற்றது. ஐவகையான கூந்தல் என்பது முடி, கொண்டை, சுருள், குழல், பனிச்சையாகும் என்பதை,

**"குழல் அழகம் கொண்டை பனிச்சை**

**துஞ்சை என்பன ஐம்பால்"**[48]

எனச் சீவகசிந்தாமணிப் பாடல் அடிகளால் அறியமுடிகின்றது. முடி - உச்சியில் முடித்தல், கொண்டை - பக்கத்தில் முடிதல், சுருள் - பின்னிச் செருகல், குழல் - சுருட்டி முடிதல், பனிச்சை - சடையாகப் பின்னல் போன்றனவாகும்.

அசையும் இயல்பும், ஐம்பால் மயிரினையுடைய உப்பு வணிகத்தியரை,

**"தோள்புறம் மறைக்கு நல்கூர் நுசுப்பின்**

**உளரியல் ஐம்பால் உமட்டியர் ஈன்ற"**[49]

என்று சிறுபாணாற்றுப்படை கூறும். இத்தகைய சங்கப் பாடலடிகளினால் நெய்தல் நிலப் பெண்களின் ஐந்து வகையான கூந்தல் வகைகளை அறிய முடிகின்றது.

**ஒப்பனையில் மலர்கள்**

குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என ஐவகை நிலங்களிலும் மலர்ந்த பல்வேறு மணங்களையும், வண்ணங்களையும் உடைய மலர்களைச் சங்ககாலத் தமிழர் விரும்பி அணிந்தனர். சேர, சோழ, பாண்டியரும், குறுநில மன்னர்களும், செல்வர்களும் மலர்களைச் சூடிக் கொண்டு தங்களை அலங்கரித்துக் கொள்வதில் மிகுந்த ஆர்வம் காட்டினர். சங்க காலத்தில் நெய்தல் நில மகளிர் மலர்களை விரும்பியதுடன் அதனைக் கூந்தல் ஒப்பனைக்கும் பயன்படுத்தினர்.

அழகு மிகுதியான மலர்களை உடையது கழிமுள்ளி, அவற்றில் ஆய்ந்தெடுத்த மலர்களாலே தொடுக்கப்பட்டது பூமாலை. அப்பூமாலையினை நெய்தல் நிலத் தலைவி நீலமணி போன்ற கூந்தலில் வண்டுகள் வந்து மொய்க்கும் படியாகச் சூடிக் கொண்டதை நற்றிணைப் பாடலொன்றில் அல்லங்கீரனார்,

---

48. நச்சினார்க்கினியர்(உ.ஆ.), சீவகசிந்தாமணி, ப.202.

49. பொ.வே. சோமசுந்தரனார்(உ.ஆ.), சிறுபாணாற்றுப்படை, ப.18.

**"அணிமலர் முண்டகத்து ஆய்பூங் கோதை**

**மணிமருள் ஐம்பால் வண்டு பட"**[50]

என்று குறிப்பிட்டுள்ளார். இவ்வாறு நெய்தல் நில மகளிர் தம் கூந்தலில் பலவிதமான மலர்களைச் சூடி மகிழ்ந்தனர்.

நெய்தல் நில மக்கள் பொன்னாலும், மணியாலும் அணிகலன்கள் செய்து அணிந்தாலும், மலர்களையும் அவற்றில் செய்யப்படும் மாலைகளையும் விரும்பி அணிந்தனர். நெய்தல் நிலத் தலைவன் ஒருவன் நெய்தலின் நறிய மலரைச் செருந்தி மலரோடு மார்பில் மாலையாக அணிந்திருந்ததை,

**"நெய்தல் நறுமலர் செருந்தியொரு விரைஇக்**

**கைபுனை நறுந்தார் கமழும் மார்பன்"**[51]

என்ற ஐங்குறுநூற்றுப் பாடல் அடிகள் கூறுகின்றன. இப்பாடலிலிருந்து, நெய்தல் நில மக்கள் நெய்தல் நிலத்தில் வளரும் மலர்களான கழிமுள்ளி, அடும்பு, ஞாழல், தாழம்பூ, செருந்தி, நெய்தல் போன்றவற்றை ஒப்பனையில் பயன்படுத்தியுள்ளதை அறியலாம்.

## நெய்தல் நில வாழிடங்கள்

மனிதனின் அடிப்படைத் தேவைகளுள் மூன்றாவதாக அமைவது உறைவிடமாகும். வரலாற்றுக்கு முற்பட்ட காலத்தில் ஆதி மனிதன் மலைகளிலும், காடுகளிலும் அலைந்து திரிந்தான். ஆற்றங்கரைப் பகுதியில் நாகரிகம் தோன்ற ஆரம்பித்த காலகட்டத்தில் தான் பண்டைய மனிதன் நிலையாக ஓரிடத்தில் தங்கிவாழ முற்பட்டான். நாடோடி வாழ்க்கை நிலையிலிருந்து நிலையாக ஓரிடத்தில் தங்கி வாழ வேண்டும் என்ற எண்ணம் தோன்றிய போது தான் வாழிடம் அமைக்கும் எண்ணம் மனிதனுக்குத் தோன்றியிருக்க வேண்டும் எனலாம்.

"மனிதன் தனது முதன்மைத் தேவைகளான உணவு, உடை என்பவற்றின் தேடலில் காலத்தைக் கழித்து வாழ்ந்த நிலையைக் கடந்து தனக்கென ஒரு வாழ்விடத்தினை அமைத்துக் கொள்ள முயன்ற போது அவனது உறையுள் உருவானது.

---

50. த. கோவேந்தன், அன்பொடு புணர்ந்த ஐந்திணை(நெய்தல்), ப.133.
51. உ.வே.சாமிநாதஐயர்(உ.ஆ.), ஐங்குறுநூறு, ப.252.

இந்நிலையான வளர்ச்சி உலக மக்கள் அனைவர் வாழ்வியலும் பொதுவானதென இன்று கணிக்கப்படுகிறது"[52] என்கிறார் மனோன்மணி சண்முகதாஸ்.

சங்க இலக்கியப் பாடல்களில் தமிழரின் வாழிடம் குறித்த செய்திகள் பல உள்ளன. அவற்றையெல்லாம் காணும் போது அகம், இல், இல்லம், உறையுள், உறைவிடம், கல்லளை, குடில், குரம்பை, குறும்பு, நெடுநகர், புக்கில், மனை, மாடம் எனப் பல்வேறு தங்குமிடங்களின் பெயர்கள் வேறுபட்டுள்ளதை அறியலாம். சங்க காலத்தில் நிலவியல், வாழும் சூழல், தொழில், செல்வ வளமை இவற்றிற்கேற்ப தமிழரின் இருப்பிடங்கள் அமைந்திருந்தன. பழந்தமிழர் குடிலும், குரம்பும் அமைத்து வாழ்ந்த நிலையிலிருந்து விண்ணை முட்டும் அளவு மாடமாளிகை கட்டி வாழ்ந்ததைப் பார்க்கும் போது தமிழரின் கட்டிடத் தொழில் நுட்பத்தையும், செயல் திறனையும் அறிந்து கொள்ள முடிகின்றது.

கடலும் கடல் சார்ந்த நிலப்பகுதியில் பரதவமக்கள் வாழ்ந்த வாழிடங்கள் சேரி, சிறுகுடி, பாக்கம், பட்டினம், சீறூர் எனப் பலவாறு அழைக்கப்பட்டன. பரதவ மக்கள் கடலை அடுத்த வெண்மணல் பரப்பில் சிறுசிறு குடிசைகளை அமைத்துக் கொண்டு வாழ்ந்தனர். சிறு சிறு குடில்கள் கும்பல் கும்பலாக அமைந்த குடியிருப்புகளை,

**"கானல் நண்ணிய சிறுகுடி முன்றில்**

**திரை வந்து பெயரும் என்ப"**[53]

என்று குறுந்தொகைப் பாடல் அடிகள் பகர்கின்றன. இவ்வாறு பரதவர் வாழும் குடியிருப்புகள் சிறுகுடி என்று அழைக்கப்படுகிறது.

**சீறூர்**

நெய்தல் நிலத்தில் சிறுகுடிகளை அடுத்து அமைந்திருந்த சீறூர் பகுதியிலும் பரதவர்களது குடியிருப்புகள் இருந்தன. சீறூர்கள் கடற்கரை மணல்மேட்டில் அமைந்தவை. பனை மரங்களால் சூழப்பட்டவை. புலால் நாற்றம் வீசுபவை. நீரினை வேலியாகச் சூழ்ந்து ஆரவாரம் மிக்கதாக இருப்பதை,

---

52. கலாநிதி மனோன்மணிசண்முகதாஸ், பண்டைத் தமிழர் வாழ்வியற் கோலம், ப.4.
53. பொ. வே. சோமசுந்தரனார்(உ.ஆ.), குறுந்தொகை, ப.408.

**"பணைகொள் வெம்முலை பாடுபெற்று உவக்கும்**

**பெண்ணை வேலி உழைகண் சீறூர்"**[54]

என்னும் நற்றிணைப் பாடல் அடிகளால் அறியலாம். இதனால் கடற்கரை ஒட்டி பனை மரங்களால் சூழப்பட்டவை சீறூர் என்பது புலனாகிறது.

**மூதூர்**

பரதவ மக்கள் நெய்தல் நிலத்தில் அமைந்திருந்த குடியிருப்புகளில் புலம் பெயராமல் தலைமுறை தலைமுறையாக வாழ்ந்து வருவதால் அக்குடியிருப்புகள் மூதூர் என்று வழங்கப் படுவதை,

**"இருங்கழிச் செறுவின் வெள்உப்பு விளையும்**

**அழியா மரபின் நம் மூதூர்"**[55]

என்னும் சங்க இலக்கிய அடிகள் சான்று கூறுகின்றன.

**பாக்கம்**

நெய்தல் நிலத்தில் அமைந்திருந்த ஊர்கள் பாக்கம் என்றும், பட்டினம் என்றும் அழைக்கப்பட்டன. பிங்கல நிகண்டு 'பாக்கம், பட்டினம் நெய்தல் நிலத்து ஊரே' எனக் குறிப்பிடுகிறது. சங்க இலக்கியத்திலும் நெய்தல் நில ஊர்கள் பாக்கம் என்ற பெயரில் பல இடங்களில் வழங்கப்பட்டு வருகிறது. இப்பாக்கத்திலும் பரதவரது குடியிருப்புகளே இருந்தன.

தழைத்த முற்றிய பனையோலைகளையும், முள்களையும் சேர்த்துக் கட்டப்பட்ட வேலிக்குள், உயர்ந்த பனை மரங்கள் சூழ்ந்த வெண்மணல் மேட்டிலுள்ள ஊர்ப்பரதவர் பாக்கம் என்பதை,

**"ஒலிகா வோலை முள்மிடை வேலி**
**பெண்ணை இவரும் ஆங்கண்**
**வெண்மணல் படப்பை எம்அழுங்கல் ஊரே"**[56]

---

54. பின்னத்தூர் நாராயணசாமி ஐயர்(உ.ஆ.), நற்றிணை நானூறு, ப.482.
55. மேலது, ப.364.
56. த.கோவேந்தன், அன்பொடு புணர்ந்த ஐந்திணை(நெய்தல்), ப.90.

என்று நற்றிணைப் பாடல் அடிகள் கூறுகின்றன. இவற்றால் பரதவர் பாக்கம் கடற்கரை வெண்மணல் மேட்டில் பனைமரச் சூழலில் உள்ளது என்பதை அறியலாம். பாக்கம் என்ற பெயரால் இன்றும் பரதவர் குடியிருப்புகள் வழங்கி வருகின்றன. அவற்றுள் கொட்டில் பாக்கம், கல்பாக்கம், கடப்பாக்கம், கத்திப்பாக்கம், சேப்பாக்கம், ஈஞ்சம்பாக்கம் என்பன சிலவாகும்.

**பட்டினம்**

பட்டினம் என்பது துறைமுகத்தோடு கூடிய நகரமாகும். கடல் வாணிகச் செழிப்பால் நெய்தல் நிலத்திலிருந்த பட்டினங்கள் (துறைமுகங்கள்) பன்னாட்டு நகரங்களாக விளங்கின. உள்நாட்டு வாணிகர்களும், வெளிநாட்டு வாணிகர்களும் இப்பகுதியில் வாழ்ந்தனர். கடல் வாணிகத்தின் செல்வச் செழிப்பால் பட்டினங்களில் வானளாவிய வீடுகள் கட்டப்பட்டிருந்தன. ஆகவே பட்டினம் என்பது ஏழைப் பரதவர்கள் வாழும் இடமன்று, வானளாவிய மாட மாளிகைகள் நிறைந்தது. அகன்ற அழகிய தெருக்களை உடையது. வெளிநாடுகளிலிருந்தும், உள்நாடுகளிலிருந்தும் கொண்டு வரப்பட்ட பண்டங்கள் விற்கும் நாளங்காடியும், அல்லங்காடியும் கொண்டது. பண்டகசாலையும், சுங்கசாவடியும், மரக்கலங்கள் வந்து போகும் துறைமுகத்தையும் உடையது என்பதை,

**"மணிநீர் வைப்பு மதிலொடு பெயரிய**

**பணிநீர்ப் படுவின் பட்டினம்"**[57]

என்ற பாடல் அடிகள் உரைக்கின்றன. இதனால் துறைமுகங்கள் உள்ள கடற்கரை நகரங்களே பட்டினங்களாகும் என்பதை அறியலாம். தற்காலத்திலும் சென்னைப்பட்டினம், தூத்துக்குடிப்பட்டினம், நாகப்பட்டினம், விசாகப்பட்டினம், மசூலிப்பட்டினம் போன்றவை துறைமுகத்தோடு கூடிய நகரங்களாக விளங்குவது குறிப்பிடத்தக்கது.

**பரதவர் குடில்கள்**

பரதவர் இல்லங்கள் கடற்கரையை ஒட்டியே அமைக்கப்பட்டு இருந்தன. பரதவர் குடிலின் அமைப்பினையும், தோற்றத்தினையும் கடியலூர் உருத்திரங்கண்ணனார்,

---

57. ம. திருமலை(உ.ஆ.), சிறுபாணாற்றுப்படை, ப.78.

**"வேழ நிரைத்து வெண்கோடு விரைஇத்**

**தாழை முடித்துத் தருப்பை வேய்ந்த**

**குறியிறைக் குரம்பைப் பறியுடை முன்றில்**

**கொடுங்காற் புன்னை கோடுதுமித்து இயற்றிய**

**பைங்காய் தூங்கும் பாய்மமணற் பந்தர்"**[58]

என்று பெரும்பாணாற்றுப் படையில் சிறப்பாகச் சித்திரித்துள்ளார். பரதவர்கள் இல்லம் மூங்கில் கோல்களை வரிசையாகச் சார்த்தி வஞ்சி, காஞ்சி ஆகிய மரங்களின் வெண்மையான கொம்புகளை இடையிடையே கலந்து தாழை நாரினால் கட்டித் தருப்பைப் புல்லால் கூரையை வேய்ந்திருப்பர். குறுகிய கூரையை உடைய வீடுகளின் முன் தூண்டில் கம்புகள் வைக்கப்பட்டிருக்கும். இதைப் பார்ப்பதற்குக் கேடயமும், வாளும் வைத்த நடுகல்லின் தோற்றம் போலக் காணப்படும். குடிசைகளின் முற்றத்தில் மீன்பிடிக்கும் வலைகள் இருக்கும். அங்கு இளையவரும், முதியவரும் நிறைந்திருப்பர், வலைஞர் இல்லம் கடற்கரையில் இருப்பதால் குடிக்கும் நீருக்காகக் குளம் தோண்டுவர். கடற்கரை நிலத்துக் கிடைக்கும் மூங்கில், கருப்பந்தட்டை, வெள்ளிமரக் கொம்பு, நாணற்புல், தாழை ஆகியவற்றைக் கொண்டு பரதவர்கள் குரம்பைகளை அமைத்தனர். புன்னை மரக் கொம்புகளால் குரம்பையின் முன்னால் பந்தல் அமைக்கப்பட்டுப் பந்தரின் மேல் சுரை, பாகல் கொடிகள் படர்ந்து, காய்கள் தொங்கிக் கொண்டிருந்தன.

இவற்றின் வழியாகப் பரதவர்கள் மேற்கொண்ட மீன் பிடித்தொழிலால் அவர்களது இருப்பிடம் தனித்துவம் கொண்டு காணப்படுவதை அறியமுடிகின்றது. மீன்பிடிக் கருவிகள் பரதவர் இருப்பிட அமைப்பில் முக்கிய இடம்பெற்றுள்ளன. வலை உணங்கும் பரந்த முற்றம் பரதவர் இருப்பிடத்தின் பரப்பளவைக் காட்டுகின்றது. கடலோரப் பகுதியில் வீசும் பெருங்காற்றிற்கும், பேரலைகளுக்கும் ஈடுதரக்கூடிய வகையிலேயே பரதவரது இல்லங்கள் புல்லாலும், கொடியாலும்(மூங்கில், பனைமட்டை, தென்னங்கீற்று) எளிமையாக அமைக்கப் பட்டிருக்கின்றன.

## நெய்தல் நிலத்தார் திருமணம்

மனித இன வரலாற்றில் காட்டுமிராண்டி நிலையில் குழு மணமும், நாகரிக நிலையில் ஒருதார மணமும் இடம் பெற்றிருந்தது. ஒரு தார மணம் என்பது இனக்குழு

58. கலாநிதி மனோன்மணி சண்முகதாஸ், பண்டைத்தமிழர் வாழ்வியற் கோலம் (இருப்பிடம்), ப.4.

வாழ்வின் ஒரு கூறாகும். இத்தகைய ஒருதார மணமே குடும்பம் என்ற அமைப்புத் தோன்ற அடிப்படையாக அமைந்தது. திருமணம் என்பது அடிப்படையில் ஆணும், பெண்ணுமாகச் சேர்ந்து அவர்களது சமூக மரப்பிற்கும், சமய விதிகளுக்கும் உட்பட்டு நடக்கும் ஒரு மங்கலகரமான நிகழ்ச்சியாகும்.

வாழ்வியற் களஞ்சியம், "ஓர் ஆணும், பெண்ணும் கணவன் மனைவியாகத் திருமணத்தின் வழியாகத் தான் இணைய முடியும் என்று சமூகம் வரையறுத்து அதை நிலை நிறுத்தியிருக்கிறது. இந்த வகையில் திருமணம் ஓர் அடிப்படை நிறுவனமாக அமைந்து குடும்பம் தோன்ற வழி வகுக்கிறது"[59] என்கிறது.

"மணம் என்பதே தமிழரின் பழைய மரபுதான். ஒரு கன்னிப் பெண்ணின் கூந்தலிலே மலர்சூட்டி அவளை ஊரும், உறவும் அறிய தன் மனத்திற்கு இனியாளாக, வாழ்க்கைத் துணைவியாக ஒருவன் ஏற்றுக் கொள்வதனாலே தான் மணம், திருமணம் என்ற பெயர்கள் அச்சடங்கிற்கு ஏற்பட்டது. இவ்வாறு கணவனும், மனைவியுமாய் வாழத் தொடங்கும் நிகழ்ச்சிக்குத் திருமணம் என்று பெயர்"[60] என்கிறார் சசிவல்லி.

தொல்காப்பியர் திருமணத் தோற்றத்தைப் பற்றிக் குறிப்பிடுகையில், தலைவியோடு கூடிக் களவு வாழ்வில் ஈடுப்பட்ட தலைவன், தலைவியைத் திருமணம் செய்து கொள்ள வேண்டுமென்ற நிலை வரும் போது மாறுபடுகிறான். தலைவியைத் தெரியாதெனப் பொய் கூறி வேறு பெண்ணை மணம் புரிய விழைகிறான். இப்படிப்பட்ட பொய்யும், வழுவுமான குற்றங்களைத் தலைவன் மேற்கொள்ளும் போது பெரியோர் சில சடங்குகளைச் செய்து திருமணத்தை நிகழ்த்துவதாக,

**"பொய்யும் வழுவும் தோன்றிய பின்னர்**

**ஐயர் யாத்தனர் கரணம் என்ப"**[61]

என்று தொல்காப்பியம் குறிப்பிடுகின்றது. இவ்வாறு தலைமக்களிடையே பொய்யும், வழுவும் தோன்றிய பின்னர் ஆன்றோரும், சான்றோரும் சடங்கு முறைகளை வகுத்து, வரையறைகளையும் அமைத்தனர்.

---

59. வெ. சுப்பிரமணியம்(பதி.ஆ.), வாழ்வியற் களஞ்சியம்(தொகுதி-10), ப.483.
60. சசிவல்லி, தமிழர் திருமணம், ப.7.
61. இளம்பூரணர்(உ.ஆ.), தொல்காப்பியம், பொருளதிகாரம், ப.247.

கற்பு வாழ்வின் தொடக்கமாகத் திருமணம் இருந்தது என்றாலும் தலைவனும், தலைவியும் கொடுப்பாரும் அடுப்பாருமின்றித் தாங்களே சந்தித்துக் களவு வாழ்வில் பழகிப் பின்னர் மணந்து கணவனும், மனைவியுமாய் இல்லற வாழ்வில் ஈடுபடுவதும் உண்டு. இது 'களவு வழித் திருமணம்' எனப்பட்டது.

கற்பு வழித் திருமணமானது, பெற்றோரால் ஏற்படுத்தப்பட்டும் பலர் அறிய நடைபெறும் நிகழ்வாகும். இக்கற்பு வழித் திருமணத்தில் பத்து வகைப் பொருத்தங்களும் பார்க்கப்பட்டதை,

**"பிறப்பே குடிமை ஆண்மை ஆண்டோடு**

**உருவு நிறுத்த காம வாயில்**

**நிறையே அருளே உணர்வோடு திருஎன**

**முறையுறக் கிளந்த ஒப்பினது வகையே"**[62]

என்ற தொல்காப்பிய நூற்பாவால் அறியலாம். ஆகவே தொல்காப்பியர் காலத் தமிழகத்தில் நடைபெற்ற திருமணங்களை இரு வகைப்படுத்தலாம். களவு கற்பாக மலர்வது ஒரு வகை. களவு இன்றித் தலைவியின் பெற்றோர் கொடுப்ப மணம் நிகழ்வது மற்றொரு வகை, காதல் மணம், பெற்றோர்களால் நிச்சியக்கப்பட்டுச் செய்விக்கும் மணம் ஆகிய இரண்டும் அக்காலத் தமிழ்ச் சமுதாயத்தில் ஏற்றுக் கொள்ளப் பெற்றிருந்தது.

**பொருள் கொடுத்து மணத்தல்**

நெய்தல் நில மக்களின் திருமண முறைகளில் பெண் வீட்டாருக்கு மணமகன் வீட்டார் பொருள் கொடுத்துப் பெண் எடுக்கும் பரிசத் திருமண முறை காணப்பட்டது. பரதவர் மரபில் ஆண்மகன் தான் விரும்பும் கன்னியை மணப்பதெனின் பரிசமாகப் பொன்னும், திரண்ட பொருளும், அளவற்ற அணிகலன்களும் கொடுக்கும் வழக்கம் உண்டு. "நெய்தல் நிலத்தின் மணமகளின் பெற்றோர் கேட்கும் பரிசுத் தொகை எவ்வளவோ அதைக் கொடுத்தால் தான் திருமணம் நடக்க ஒப்புதல் அளிக்கப்படும்."[63]

பரதவ ஆடவன் ஒருவன், தான் விரும்பும் மங்கை ஒருத்தியை மணக்க நினைக்கிறான். பொன்னும், பொருளும், அருங்கலம் பலவும் எவ்வளவு அளித்தாலும் அவள் தந்தை அவனுக்கு அவளை மணமுடிக்க மறுக்கிறாள் என்பதை,

---

62. பேராசிரியர் (உ.ஆ.), தொல்காப்பியம், பொருளாதிகாரம், ப.75.
63. வி.சி. சசிவல்லி, தமிழர் திருமணம், ப.51.

**"இரும்பு இடம் படுத்த வடுவுடை முகத்தர்**

**கடுங்கண் கோசர் நியமம் ஆயினும்**

**உறுமெனக் கொள்ளுநர் அல்லர்**

**நறுநுதல் அரிவை பாசிழை விலையே"**[64]

என்னும் அகநானூற்றுப் பாடல் அடிகள் கூறுகின்றன. அதாவது தலைவியின் தந்தை இவளது பசிய அணிகளுக்கு, யவனர்கள் வாழும் நியமம் என்னும் ஊரினைக் கொடுப்பினும் கொள்வார் அல்லர் என்கிறது. ஏனெனில் அப்பொருளிலும் சிறந்தவள் மகள் என்ற கருத்துப் பெறப்படுகிறது. ஆகவே பொருள் கொடுத்து மணப்பது சங்கச் சமுதாய நடவடிக்கைகளில் ஒன்றாக இருந்துள்ளதை இந்தச் சான்றுகள் உறுதிப்படுத்துகின்றன. பொருளைக் குறிப்பிட்டவர்கள் மட்டுமே அதாவது மணத்தற்குரிய தகுதிபாடு உடையவர், குலமரபில் ஒத்தவர் மட்டுமே தர வேண்டும் என்பதைத் சங்க இலக்கியப் பாடல்கள் வெளிப்படுத்துகின்றன.

**சேவை மணம்**

பெண் வீட்டில் தங்கியிருந்து அவர்களுக்காக உழைத்துப் பெண்ணைத் திருமணம் செய்து கொள்வது சேவை மணமாகும். உரிய பெண்ணை மணக்க விரும்பும் ஆண், தான் விரும்பிய பெண் வீட்டில் தங்கி அவர்கள் செய்யும் வேலைகளில் தானும் ஈடுபட்டு உழைத்துப் பின் அவர்தம் பெண்ணை மணப்பதும் ஒரு சமுதாயச் செயலாக இருந்ததற்குச் சங்கப் பாடல்களில் சான்றுகள் உள்ளன. பெண்ணை விரும்பியவன் அவளை மணக்க இயலாது என்பதைத் தீர்மானித்துக் கொண்டபின் பெண்ணின் தந்தையுடன் இணைந்து அவன் செய்யும் எல்லா வேலைகளிலும் ஈடுபடவும், அவனுக்குப் பணிந்து இருக்கவும் விரும்பும் விருப்பத்தைத் தெரிவிக்கின்றது.

நெய்தல் நிலப்பரப்பின் பெரிய கடற்துறையை உடைய பரதவன், பொருளும், அணிகலன்களும் நிறையக் கொடுப்பினும் தலைவி பெறுதற்கு அரியவள் என்று நினைக்கின்றான். ஆகவே தலைவியின் தந்தையோடு சென்று பெரிய நீர்ப்பரப்பாகிய கடற்கரையில் உப்பு விளைவித்தலில் அவனோடு உதவி செய்தும், அவனோடு கடலில் தோணியில் சென்று மீன் பிடித்தும், அவனுக்கு இரக்கம் வரும்படி வணங்கியும், தாழ்ந்தும், பணிந்தும் தொண்டாற்றினால் அறத்திணை நினைத்துத் தன் மகளை வழங்குவான் என்று எண்ணுவதை,

---

64. ந.சி. கந்தையா பிள்ளை(உ.ஆ), அகநானூறு,ப.86.

**"பெறலருங் குரையள் ஆயின் அறந்தெறிந்து**

**நாமுறை தேஎம் மரூஉப் பெயர்ந்த தவனொடு**

**இருநீர்ச் சேர்ப்பின் உப்புடன் உழந்தும்**

**பெருநீர்க் குட்டம் புனையொடு புக்கும்**

**படுத்தனம் பணிந்தனம் அடுத்தனம் இருப்பில்**

**தருகுவன் கொல்லோ தானே விரித்திரை"**[65]

என்னும் பாடல்அடிகள் சுட்டிக்காட்டுகின்றன. இவ்வாறு பொருள்களைப் பரிசமாகக் கொடுப்பது மட்டுமின்றி மணமகளின் பெற்றோர்க்குப் பலவகையில் உதவிகள் செய்தும் மணமுடிப்பதுண்டு. பெற்றோர்க்கும் மணமகன் குறித்து அறிய இம்முறையானது உதவுகின்றது. திருமணம் முடிக்கும் பொழுது தலைவன், தலைவிக்குக் கூரைப்புடவை கொடுத்தலும், பரிசம் என்ற பொன் வழங்கலும் இன்றும் நடைமுறையில் உள்ளது.

**மடல் மணம்**

தான் விரும்பிய பெண் தனக்குக் கிடைக்காத சூழலில் ஆண், பனங்கருக்கால் செய்த குதிரை உருவின் மீதமர்ந்து கருக்குகள் உடலை அறுக்க ஊர்வலமாக வருவது மடலேறுதல் எனப்படும். மடலேறுதலினால் தலைவனுக்கு ஏற்பட்ட நிலைமாற்றம் கண்டு தலைவியின் பெற்றோர் அஞ்சி தலைவனுக்குத் தலைவியைக் கொடுத்தமையை மடல்மணம் எடுத்துரைக்கின்றது. இவ்வகைமையைக் "காதலுலகில் களவினைக் கற்பாக்குவதற்குரிய வழிமுறைகள் சில உண்டு. அவை அறத்தொடு நிற்றல். உடன்போக்கு போன்றவை. இவை போன்று மடலேறுதலும் ஓர் உத்தியாகக் கையாளப்பட்டு உள்ளது"[66] என்று சு.தமிழ்வேலு கூறுகின்றார்.

தலைவன் மடல் ஏறுதல் கண்ட தலைவியின் பெற்றோர் அவன் செயலுக்கு அஞ்சியும், அவன் தலைவி மீது கொண்ட அன்பின் மிகுதியை மனதிற் கொண்டும் தலைவியைத் தலைவனுக்கு அளிக்க இசைந்தமையை,

**"வருத்தமா ஊர்ந்து மறுகின்கண் பாடத்**

**திருந்திழைக் கொத்த கிளவிகேட்டாங்கே**

---

65. ந.மு.வேங்கடசாமிநாட்டார்(உ.ஆ), அகநானூறு, மணிமிடைபவளம், ப.378.

66. சு. தமிழ்வேலு(க.ஆ.), மடலேறுதல் மரபு மாற்றம் தேடல் (தொகுதி-6), ப.70.

**பொருந்தாதார் போர்வல் வழுதிக் கருந்திறை**

**போலக் கொடுத்தார் தமர்”**[67]

என்னும் கலித்தொகைப் பாடல் அடிகள் விளக்குகின்றன. மடல் ஊர்ந்தவனுக்குப் பெற்றோர் தாமாகவே முன்வந்து தம் பெண்ணைக் கொடுத்த நிலையை வெளிப்படுகின்றது. தான் காதலித்தவளைப் பெற விரும்பும் தன் விருப்பத்தைக் கூறிக் கொண்டு தெருவில் வருவது கேட்டுப் பெற்றோர் பெண்ணை அவனுக்கே கொடுக்கும் பழக்கமும் சங்ககாலத்தில் இருந்துள்ளமைக்கு இப்பாடல் சான்றாக உள்ளது.

இதனின்று பண்டையப் பரதவரின் மணமுறைச் செய்திகளை ஒருவாறு அறிந்துணர முடிகின்றது. இவ்வாறு தன்னையடைந்து தமக்கு உறுதுணையாய் உழைக்கும் இளைஞர்களுக்குத் தம் மகளிரையே மணம் முடித்தும் தம் இல்லதோடு வைத்துக் கொள்ளும் வழக்கம் இன்றும் நிலவி வருவது குறிப்பிடத்தக்கதாகும்.

## நெய்தல் நிலக் கடவுள்

வரலாற்றுக்கு முற்பட்ட காலகட்டத்தில் ஆதி மனிதன் மலைக் குகைகளில் வாழ்ந்து வந்தான். பஞ்சபூதங்களான நிலம், நீர், காற்று, வானம், நெருப்பு ஆகியன அம்மனிதனுக்கு நன்மையும் செய்தன, தீமையும் செய்தன, நிலத்தால் பூகம்பமும், நீரால் வெள்ளப் பெருக்கும், நெருப்பால் காட்டுத்தீயும், காற்றால் சூறாவளியும், வானத்தால் மழையும் அவனுக்குப் பெரும் பாதிப்பை ஏற்படுத்தின. இத்தகைய இயற்கைச் சீற்றங்களால் தோன்றிய அச்ச உணர்வே ஆதி மனிதனுக்குக் கடவுள் பற்றிய சிந்தனை தோன்றக் காரணமாக அமைந்தது.

"உடல் மற்றும் கருவிகளின் போதாமையை ஈடுகட்ட மனிதன் முயன்ற முயற்சியில் இயற்கை மற்றும் இயற்கை இகந்த சக்திகளைக் கண்டு அஞ்சி, அடங்கி பணிந்து, சாந்தி செய்வித்து, பலி கொடுத்து அதன் வழியாக மனிதர்கள் தங்களுக்கும், அவற்றிற்கும் இடையில் பௌதீக ரீதியில் இல்லாமல் மாந்தரீக சமய ரீதியிலான உறவைக் கட்டமைத்துக் கொண்டார்கள், கடவுள் மற்றும் கடவுள் சார்ந்த கற்பனைகள், கருத்துக்கள், சடங்குகள், விழாக்கள், போர்கள் எல்லாம் இவ்வாறு உருவாக்கம் பெற்றதாகக் கொள்ளலாம்”[68] என்று ராஜ்கௌதமன் கூறுகிறார்.

---

67. வீ.இளவழுதி(உ.ஆ), நெய்தற்கலி மூலமும் உரையும்,ப.153.
68. ராஜ் கௌதமன், பாட்டும் தொகையும் தொல்காப்பியமும் தமிழ்ச் சமூக உருவாக்கமும், ப.175.

பரதவர்கள் பௌர்ணமியன்று தங்களது குடியிருப்பின் முற்றத்தில் சினை உடைய சுறாமீனின் கொம்பை நட்டு வழிபட்டார்கள் என்பதை,

**"சினைச் சுறாவின் கோடு நட்டு**

**மனைச் சேர்த்திய வல்லணங்கினால்"**[69]

என்ற பட்டினப்பாலைப் பாடல் அடிகள் குறிப்பிடுகின்றன. சினை என்பது செழிப்பின் சின்னமாகும். மீன் வளத்தை விரும்பிய பரதவர் கடல் செழிப்பின் சின்னமாகச் சினைச் சுறாமீனின் கோட்டை நட்டு வழிபட்டனர், வருணன் என்ற சொல்லாட்சி தொல்காப்பியம் தவிர வேறு சங்க இலக்கிய நூல்களில் காணப்படவில்லை, மாறாகக் கடல் தெய்வம் என்ற சொல்லாட்சி மட்டுமே காணப்படுகின்றது. பரதவர்கள் கடலைத் தெய்வமாக வழிபட்டனர் என்பதை,

**"பெருங்கடல் தெய்வநீர் நோக்கித் தெளித்தென்**

**திருந்தழை மென்தோள் மணந்தவன் செய்த"**[70]

என்ற பாடல் அடிகள் விளக்குகின்றன. ஆகவே வருண வழிபாடு கடைச்சங்க காலத்திலேயே மறைந்து போனதாகக் கருத வாய்ப்புள்ளது.

மயிலை சீனி வேங்கடசாமி, "கி.மு. மூன்றாம் நூற்றாண்டிலேயே பௌத்த மதம் தமிழ்நாட்டில் இடம்பெற்றது. பௌத்த மதத்தின் சிறு தெய்வங்களில் மணிமேகலா தெய்வமும் ஒன்று. மணிமேகலை கடல் காவல் தெய்வம், கடலில் செல்பவர்களுக்கு இடுக்கண் நேராமல் பாதுகாக்க வேண்டியது மணிமேகலையின் கடமை. ஆகவே பௌத்த சமய மணிமேகலை வந்த பிறகு பழைய வருணன் வணக்கம் பையப்பைய மறைந்து போயிற்று"[71] என்கின்றார்.

பௌத்த மதக் கடற்காவல் தெய்வமான மணிமேகலா தெய்வத்தால் பழந்தமிழ் நாட்டில் கி.பி.2 ஆம் நூற்றாண்டிலேயே வருணன் வழிபாடு மறைந்துவிட்டது. அதனால் தான் சங்க இலக்கிய நூல்களில் வருணனைப் பற்றிய செய்திகள் இடம் பெறவில்லை. ஆனால் இலங்கையின் தென்கோடி கடற்பகுதியில் தற்போதும் வருண வழிபாடு

69. பொ.வே. சோமசுந்தரனார்(உ.ஆ.), பட்டினப்பாலை, ப.49.
70. நச்சினார்க்கினியர்(உ.ஆ), கலித்தொகை மூலமும் உரையும்,ப.809.
71. ப. சரவணன்(தொ.ஆ.), மயிலை சீனி வேங்கடசாமி ஆய்வுக்கட்டுரைகள் (தொகுதி-6), ப.115.

நடைபெறுவதால் கடலோர நிலப் பகுதிக்குத் தெய்வம் வருணன் என்பது உண்மையாகிறது. கி.பி.16 ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் போர்ச்சுசீசியர்களின் வரவால் தமிழ்ப் பரதவர்கள் பெரும்பாலானோர் கத்தோலிக்கக் கிறித்துவ மதத்திற்கு மாறினார்கள். தற்காலத்தில் சிறுபான்மையாக இந்துப் பரதவர்கள் சிவன், முருகன், மாரியம்மன் போன்ற தெய்வங்களை வழிபாடு செய்கின்றார்களேயொழிய வருணனை வழிபட்டதற்குச் சான்றுகள் இல்லை. தற்போது மழை வேண்டி மட்டுமே வருணக் கடவுகளுக்கு வழிபாடு நடத்தப்படுகிறது.

இந்தியக் கடற்கரையில் போர்க்கப்பல் பூமத்திய ரேகையைக் கடக்கும் போது வருணக் கடவுளுக்குச் சடங்கு நிகழ்த்தப்படுகின்றது. "யுத்தக்கப்பல் பூமத்திய ரேகையைக் கடக்கும் போது 'கோடுதாண்டுதல்' என்ற சடங்கு அலாதியானது. வருணனும், அவனது ராணியும் அரசவையினருடன் தேர்ந்தெடுக்கப்படுவார்கள். அவர்கள் ஏற்கனவே இந்தச் சடங்கில் பங்கேற்றவர்களாய் இருப்பார்கள்"[72] என்று ஆர்.என்.குலாடி கூறுகின்றார். இந்தியாவில் கடற்காவல் தெய்வம் வருணன். ஆகையால் தற்போது யுத்தக்கப்பல் பூமத்திய ரேகையைக் கடக்கும் போது 'கோடு தாண்டுதல்' (Crossing Line Cermoney) என்னும் சடங்கு வருணக் கடவுளை முன்வைத்து நிகழ்த்தப்படுகிறது.

தமிழ்நாட்டில் இன்றைக்கும் கடல் தெய்வத்தை வழிபாடு செய்யும் வழக்கம் மீனவர்களிடையே இருந்து வருகிறது. "ஒவ்வொரு ஆண்டும் பொங்கல் நாளில் ஏழு சிறுமியரைப் பொங்கல் வைக்கச் செய்து, தங்களுக்கு மீன் வளம் தரும் கடல் தாயை வழிபடுகின்றனர். தென்னம் பாளையில் அழகிய வண்ணம் பூசப்பட்டுத் தயாரிக்கப்பட்ட சிறிய பாய் மரப்படகின் உள்ளே பூஜைப் பொருள்களோடு இலையில் பொங்கல் வைத்து, அதன் நடுவில் நெய் ஊற்றித் திரியிட்டு விளக்கு ஏற்றுகிறார்கள். அந்தப் பாய் மரப் படகைக் கிராமத் தலைவர் கைகளில் ஏந்திக் கொண்டு முன் செல்ல, சப்த கன்னியர்களான ஏழு சிறுமிகள் கரகச் செம்பைத் தலையில் ஏந்திப்பின் செல்கிறார்கள். மேளதாளத்துடன் கடலை நோக்கிச் செல்லும் இவர்கள் கழுத்தளவு தண்ணீர் உள்ள இடத்துக்குச் சென்று பாய்மரப் படகை கடலில் விட்டு விட்டு, கரகச் செம்பில் உள்ள மஞ்சள் கலந்த பாலைக் கடலில் கொட்டி வழிபடுகிறார்கள்."[73] பாய்மரக் கப்பல் கடலில் காற்று அடிக்கும் திசையில் அடித்து ஆழ்கடல் பகுதிக்குச் சென்று படகில் உள்ள

---

72. கி.ராஜேந்திரன்(மொ.ஆ), நமது கடற்படை,ப.58.
73. கடல் தாய்க்கு ஒரு பொங்கல், திஇந்து, ஜனவரி14 (2018), மதுரைப் பதிப்பு, ப.16.

பூஜைப் பொருள்களைக் கடல் தாயிடம் கொண்டு சேர்ப்பதாக மீனவ மக்கள் நம்புகிறார்கள்.

இந்த விழா, மீனவர்களால் தங்கள் வாழ்வை வளமாக்கும் கடல் தாய்க்கு நன்றி செலுத்தும் வகையில் தலைமுறை, தலைமுறையாக இன்றும் நடந்து வருகிறது.

**நெய்தல் நிலச் சடங்குகள்**

உலகின் எல்லாப் பகுதி மக்களிடையேயும் எல்லாக் காலங்களிலும் சடங்குகள் நிகழ்த்தப்பட்டு வந்துள்ளன. சடங்குகளை நிகழ்த்தாவிட்டால் எடுத்த காரியம் நன்கு நிறைவேறாது என்றும், தீமைகள் நிகழுமென்றும் மக்கள் பொதுவாக நம்பிக்கை வைத்திருந்தனர். உணவு சேகரிக்கும் காலம், வேட்டைக்காலம், வேட்டையும் விவசாயமும் செய்த காலம், கால்நடை வளர்ப்பு ஆகிய காலகட்டங்களில் இனக்குழு மக்களது வாழ்வில் சடங்கிற்குப் பெரும் பங்கிருந்தது.

சடங்கைப் பற்றிக் கா.சுப்பிரமணியம், "இனக்குழுச் சமுதாயத்தில் சடங்கே வாழ்க்கையாகவும், வாழ்க்கையே சடங்காகவும் அமைந்தன"[74] என்று குறிப்பிடுகின்றார்.

ஐந்திணை மக்களது வாழ்வில் சடங்குகள் தொழில் முறைக்கும், பொருள் உற்பத்திக்கும் உறுதுணையாக அமைந்தன. நம்பிக்கையுடன் செயல்படத் தூண்டின. சங்ககாலத் தமிழர் திருமணம், வேளாண்மை, உற்பத்தி, போர், கடவுள் வழிபாடு, விழாக்கள் போன்ற நிகழ்வின் போது சடங்குகளைச் செய்தனர். பொதுவாகச் சடங்குகளை மூவகைப்படுத்தலாம். 1.மந்திரச் சடங்குகள், 2. மந்திரமும் சமயமும் கலந்த சடங்குகள், 3. சமயச்சடங்குகள் போன்றனவாகும். காலப் போக்கில் மந்திரங்கள் மறைந்து போயின. ஆயினும் மக்களது வாழ்வில் சடங்குகள் இருந்தன. இவை நம்பிக்கைகளின் அடிப்படையில் செய்யப்பட்டன.

நெய்தல் நிலப்பகுதியில் மழை வேண்டியும், மீன்வளம் வேண்டியும், வளமையின் அடிப்படையில் சடங்குகள் நிகழ்த்தப்பட்டன. கொற்கையில் பழையர் மகளிர்(பரதவர் மகளிர்) முழுமதி நாளன்று (பௌர்ணமி) சூரியன் மறையும் அந்தி வேளையில் தழையுடை அணிந்து ஒளியினையுடைய முத்துக்களுடன், வலம்புரிச் சங்கினையும் வணங்கியதை,

---

74. கா.சுப்பிரமணியம், சங்ககாலச் சமுதாயம், ப.18.

**"புகழ்மலி சிறப்பிற் கொற்கை முன்துறை**

**அவிர்கதிர் முத்தமொடு வலம்புரி சொரிந்து**

**தழையணிப் பொலிந்த கோடேந்து அல்குல்**

**பழையர் மகளிர் பனித்துறைப் பரவ"**[75]

என்னும் அகநானூற்றுப் பாடல் அடிகள் உணர்த்துகின்றன. கொற்கையில் மழை வேண்டி செய்யப்பட்ட சடங்கானது பௌர்ணமி நாளன்று சூரியன் மறையும் அந்தி வேளையில் நிகழ்த்தப்பட்டதை அறியும் போது அந்நாளே சடங்கு நிகழ்த்த நல்ல நாளாகப் பரதவர்கள் கருதினர். இச்சடங்கில் பரவப்படும் துறையே கடவுளாகக் கொள்ளப்பட்டு முத்து, வலம்புரிச்சங்கு போன்ற சிறப்பான கடல்படு பொருள்களால் சடங்கு நிகழ்த்தப் பட்டதை அறியும் போது நீரோடு தொடர்புடைய வளமையான பொருள்களே மழையைப் பொழிய வைக்கும் என்ற நம்பிக்கையில் தான் அப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டன எனலாம்.

பண்டைத் தமிழரின் வாழ்வியலைச் சங்க இலக்கியங்களின் வாயிலாக அறியும்போது அவர்கள் இயற்கைக்கு அப்பாற்பட்ட புறசக்திகளின் பால் நம்பிக்கை உடையவர்களாக இருந்தனர் என்பது புலப்படுகின்றது. தமது வாழ்க்கையின் சகலவிதமான இயக்கங்களுக்கும் இவ்வகைச் சக்திகளே காரணம் என்று நம்பினர். இவ்வகை புறச்சக்திகளை அணங்கு, சூர்,பேய், கடவுள், தெய்வம் என்று கூறினர். பரதவ ஆடவர்கள் இரவு நேரத்தில் மீன்பிடிக்கச் சென்ற பின்னர் அவர்கள் பாதுகாப்பாகக் கரைக்குத் திரும்ப பரதவ மகளிர் அணங்கு உறையும் கடல் துறையைத் தொழுவதை,

**"அணங்குடைப் பனித்துறை கைதொழுத தேத்தி**

**யாயும் ஆயமோ டயமே"**[76]

என்ற பாடல் அடிகள் விளக்குகின்றன. புற சக்தியான அணங்கு சூர், பேய் போன்றன மலை, காடு, கடல் போன்றவற்றில் குடி கொண்டிருக்கின்றன என்று பழந்தமிழர் நம்பிக்கைக் கொண்டிருந்தனர். அவற்றின் இடர் உண்டாக்கும் தன்மையைக் கருத்தில் கொண்டு அச்சக்திகளைத் தங்களுக்குச் சாதகமாகப் பயன்படுத்த வேண்டிய நிலை வந்த போதே சடங்கு செய்தனர்.

75. ரா.வேங்கடாசலம் பிள்ளை(உ.ஆ), அகநானூறு, மணிமிடைபவளம், ப.192.
76. த.கோவேந்தன், அன்பொடு புணர்ந்த ஐந்திணை(நெய்தல்), ப.195.

## நெய்தல் நிலத்தார் நம்பிக்கைகள்

சமூகத் தேவைகள் மற்றும் குறிக்கோளின் அடிப்படையில் நம்பிக்கைகள் தோன்றுகின்றன. மனிதனின் தன்னல உணர்வும், சமுதாய உணர்வுமே நம்பிக்கைகளை வளர்த்து வருகின்றன. நம்பிக்கைகள் பெரும்பாலும் மனிதனின் அச்ச உணர்வினை அடிப்படையாகக் கொண்டு தோன்றியவைகளாகவே காணப்படுகின்றன. இயற்கையின் புதிரான செயல்களை உணர இயலாத போதும், மனித வாழ்வில் நிகழும் துன்பங்களுக்குக் காரணம் கற்பிக்க இயலாத போதும், மனித இனம் சிலவற்றைப் படைத்துக் காரணம் கற்பித்துக் கொள்கிறது. அவை நம்பிக்கைகளாக உருப்பெறுகின்றன. அச்சத்தின் காரணமாக மனித இயற்கையின் தோற்றத்தினையும், செயல்பாடுகளையும் தனது வாழ்வியல் நடப்புக்களோடு இணைத்து நோக்கிய நிலையில் நம்பிக்கைகள் தோற்றம் கொண்டன.

தீமைகளிலிருந்து தன்னைப் பாதுகாத்துக் கொள்ள முயலும் தற்காப்பு முயற்சியும், நன்மை விளைய வேண்டும் என்ற விருப்பமும் நம்பிக்கைகளை நிலைநிறுத்துகின்றன. "மனிதனின் நலவுணர்வு காரண காரியத்தைக் காண முனைவதில்லை. ஆதலால் நம்பிக்கைகளை மனித இனம் ஏற்றுக் கொள்கிறது. பொதுவாக நம்பிக்கைகளை உள உருவாக்கம்(Mental Creation) என்பர்."[77]

நம்பிக்கைகள் மக்களால் உருவாக்கப்படுவன ஆகும். அவை வழக்கில் மிகுதியாகவும், இலக்கியங்களில் குறைந்தும் காணப்படும். ஆகவே இலக்கியங்கள் சுட்டும் நம்பிக்கைகள் அச்சமுதாயத்தின் நம்பிக்கைகள் அனைத்தையும் கூறும் என்று சொல்ல இயலாது. இலக்கியங்களில் இடம்பெறும் நம்பிக்கைகள் அன்றைய மக்களிடையே சமுதாயச் செல்வாக்குப் பெற்றக் குறிப்பிடத்தக்க நம்பிக்கைகளாக அமையும். "ஒரு வளர்ச்சியடைந்த மனிதனிடம் பத்தாயிரக்கணக்கான நம்பிக்கைகளும், நூற்றுக்கணக்கான வழக்கங்களும், எண்ணிக்கைக்குட்பட்ட சில குறிக்கோள்களும்"[78] இருப்பதாகச் சமூக அறிவியல் கலைக்களஞ்சியம் குறிப்பிடுகின்றது. இலக்கியத்தில் இடம்பெறும் நிமித்தங்களும், நம்பிக்கைகளும் பொதுவாக மனிதமனம் கிளர்ச்சிக்கு உள்ளாக்கப்பட்டுள்ள தடுமாற்ற நிலைகளிலும், நன்மை விளைய வேண்டும் என்ற விருப்பத்தின் காரணமாகவும் தோன்றியதாகவே தெரிகின்றது.

---

77. L.B. Brown, The Psychology of Religious Belief, p.32.
78. L. Sills David(Ed.), International Encyclopaedia of the Social Sciences, p.455.

நாகரிகமற்ற பழங்குடி மக்களிடத்தும், நாகரிகமிக்க மக்களிடத்தும் நம்பிக்கைகள் காணப்படுகின்றன. அவை மரபு வழியில் காலங்காலமாக ஒரு தலைமுறை இனரிடமிருந்து மற்றொரு தலைமுறையினருக்குப் பரவுகின்றன. மனிதன் பிறப்பு முதல் இறப்பு வரை பலவித நம்பிக்கைகளைக் கைக்கொண்டிருக்கிறான். நம்பிக்கைகளே மனித வாழ்வை இயக்குகின்றன என்று கூறும் அளவிற்கு அவை மனித வாழ்வில் முக்கியப் பங்கு வகிக்கின்றன.

தொல்காப்பியத்தில் நம்பு என்ற சொல் விருப்பம் என்ற பொருளில் வழங்கப்பட்டதை,

**"நம்பும் மேவும் நசையா கும்மே"**[79]

என்ற நூற்பாவால் அறியலாம். இங்கு உரிச்சொல் அடியாகப் பிறந்த எச்சமாகக் காணப்படுகிறது. நற்றிணையில் நம்பி, நம்புதல் என்ற சொல்லாட்சி நம்பிக்கை என்ற பொருளில் கையாளப்பட்டுள்ளது என்பதை,

**"நாடல் சான்றோர் நம்புதல் பழிஎனின்**

**பாடுஇல கலுழும் கண்ணொடு சாஅய்ச்"**[80]

என்ற பாடல் அடிகள் விளக்குகின்றன. இச்சான்றுகளிலிருந்து நம்பு என்ற சொல் தொடக்கத்தில் விருப்பம் என்ற பொருளிலும், பின்னர் நம்பிக்கை என்ற பொருளிலும் பயின்று வந்துள்ளது எனலாம். காலப் போக்கில் இச்சொல் நம்பிக்கையை மட்டும் குறிப்பதற்குப் பயன்பட்டது.

**மரங்களை வழிபடல்**

பரதவர்கள், மிகுந்த தெய்வ நம்பிக்கை உடையவர்கள். அவர்கள் தங்கள் பாக்கத்தினைப் பொது இடமாக ஓர் மன்றத்தின் அருகில் இருக்கும் பனை, புன்னை போன்ற மரங்களில் தெய்வம் உறைந்திருக்கும் என்ற நம்பிக்கையினைக் கொண்டிருப்பதை,

**"தொன்று உறைகடவுள் சேர்ந்த பராரை**

**மன்றப் பெண்ணை வாங்கு மடற் குடம்பை"**[81]

என்ற நற்றிணைப் பாடல் அடிகள் உறுதிப்படுத்துகின்றன.

---

79. சேனாவரையர்(உ.ஆ.), தொல்காப்பியம், சொல்லதிகாரம், ப.228.
80. பின்னத்தூர் நாராயணசாமி ஐயர் (உ.ஆ.), நற்றிணை நானூறு, ப.552.
81. த.கோவேந்தன்(உ.ஆ.), அன்பொடு புணர்ந்த ஐந்திணை(நெய்தல்), ப.145.

பனை, புன்னை மரங்களில் உறைந்திருக்கும் தெய்வத்தை ஊர்ப்பொதுத் தெய்வமாக நம்பி வழிபடும் வழக்கம் சங்ககாலம் தொட்டுத் தற்காலம் வரை தமிழ்ப் பரதவர்களிடையே காணப்படுகின்றது. "தற்காலத்தில் மீனவர்கள் ஊர்ப் பொதுவில் உறைந்திருக்கும் தெய்வத்திற்குப் பலி கொடுத்து வழிபடுகின்றனர். இவ்வாறு வழிபடுவதன் வழியாக ஊர்ப்பொதுத் தெய்வம் எவ்விதக்கெடுதலும் புரியாது காக்கும் என்ற நம்பிக்கையினைப் பரதவர்கள் கொண்டுள்ளனர். இவ்வழிபாட்டு நம்பிக்கையே குலதெய்வ வழிபாட்டு முறை தோன்றக் காரணமாக இருந்தது"[82] என்ற கருத்து மானிடவியல் ஆய்வாளர்களிடையே நிலவுகின்றது.

**மீன்படகு - பாதுகாப்பு**

பரதவர்கள் தங்களது மீன்பிடிப் படகுகளுக்கு அடிக்கடி நறுமணப் புகைக்காட்டித் தொழுவர். அலைகளின் தாக்குதலினால் பழுதாகிப் போன பழைய படகுகளை, இனி தொழிலுக்குப் பயன்படாது என்றெண்ணி, அதற்கு நறுமணப் புகை காட்டாது புன்னை மரத்தின் அடியில் கட்டியிருப்பதை,

**"நறுவிரை நன்புகை கொடா அர் சிறுவீ**
**ஞாழலொடு கெழீஇய புன்னையங் கொழுநிழல்**
**முழவுமுதற் பிணிக்குந்த துறைவ"**[83]

என்ற பாடல் அடிகள் இயம்புகின்றன. பரதவ மக்கள் படகுகளுக்கும், கட்டுமரங்களுக்கும் நறுமணம் கமழும் நற்புகையூட்டிக் கற்பூர ஒளிகாட்டி வலம் வந்து வழிபடும் வழக்கம் இன்று நடைமுறையில் இருப்பது குறிப்பிடத்தக்கது. அவ்வாறு செய்வதால் படகுகளுக்கு எத்தகைய தீமையும், குறைபாடுகளும், தெய்வக் குற்றங்களும், தொல்லைகளும் ஏற்படாது. நலமுடன் இயங்கிக் குடியை வளமுறச் செய்யும் என்பது அவர்களது நம்பிக்கை. இதனைப் பரதவர் மொழியில் 'காற்று, கருப்பு அண்டாது காப்பாற்றப்படும்' என்று கூறுவர்.

**நிமித்தம் பார்த்தல்**

பரதவர்கள் வலையையும், கட்டுமரத்தையும் நல்ல நாள் பார்த்தே கடலில் விடுவர். அகநானூற்றில் உலோச்சனார்,

---

82. க. இராமநாதன், "நெய்தல் திணை மக்களின் வாழ்வியல் பண்பாட்டுக் கட்டமைப்பு", பி.எச்டி. ஆய்வேடு (2012), ப.292.
83. பின்னத்தூர் நாராயணசாமி ஐயர்(உ.ஆ.), நற்றிணை நானூறு, ப.389.

**"நாள்வலை முகந்த கோள்வல் பரதவர்**

**நுணங்கு மணல் ஆங்கண் உணங்கப் பெயம்மார்"**[84]

எனக் குறிப்பிடுகின்றார். இவ்வாறு நல்ல நாளில் வலையையும், கட்டுமரத்தையும் கடலில் விடுவதன் வழியாக மீன்பிடித் தொழில் சிறப்பாக நடைபெறும் என்ற நம்பிக்கையினைப் பரதவர்கள் கொண்டிருந்தனர். தற்காலத்திலும் தமிழ்ப் பரதவர்கள் கட்டு மரத்தினை நல்ல நாள் பார்த்து அலங்கரித்து நறுமணப் புகைக் காட்டிக் கற்பூரம் ஏற்றி வழிபட்டுக் கடலுக்குள் இறக்குவது குறிப்பிடத்தக்கது.

**ஆழியிழைத்தல்**

ஆழியிழைத்தல் என்பது தலைவனைப் பிரிந்து தனிமையுற்று இருக்கும் தலைவி, தலைவனது வருகையை எதிர்நோக்கித் தானே குறிபார்க்கும் நம்பிக்கைக் குறிமுறையாகும். இது பிற்காலத்தில் 'கூடலிழைத்தல், நிமித்தம் பார்க்கும் குறி' என்று கூறுவர். "தலைவனைப் பிரிந்த தலைவி அவன் வரும் நிமித்தம் அறியத் தரையில் சுழி வரைதல்"[85] என்று தமிழ் அகரமுதலி பொருள் கூறுகின்றது. சங்க இலக்கியத்தில் அகநானூற்றிலும், கலித்தொகையிலும் கூடலிழைத்தல் பற்றியக் குறிப்புக்கள் காணப்படுகின்றன.

நெய்தல் நிலத் தலைவியொருத்தி, தலைவன் வருவானோ என்று காணக் கூடல் இழைத்ததை,

**"கோடுவாய் கூடாப் பிறையைப் பிறிதொன்று**

**நாடுவேன் கண்டனென் சிற்றிலும் கண்டாங்கே"**[86]

என்ற கலித்தொகைப் பாடல் அடிகளால் உணரமுடிகிறது. இவ்வாறு தலைவனைப் பிரிந்த தலைவி அவர் தம் வருகையினை அறியப் பார்க்கும் நிமித்தக் குறியே ஆழியிழைத்தல் எனப்படும். மரங்களை வழிபடல், மீன்படகு பாதுகாத்தல், நிமித்தம் பார்த்தல், ஆழியிழைத்தல் போன்ற பல நம்பிக்கைகள் நெய்தல் நில மக்களிடம் காணப்படுவதை அறியலாம்.

---

84. ந.மு. வேங்கடசாமிநாட்டார்(உ.ஆ.), அகநானூறு, மணிமிடைபவளம், ப.426.
85. மு. சண்முகம் பிள்ளை(தொ.ஆ.), தமிழ் தமிழ் அகரமுதலி, ப.1068.
86. நச்சினார்க்கினியர்(உ.ஆ.), கலித்தொகை, ப.437.

## நெய்தல் நிலத்தார் பழக்க வழக்கங்கள்

பழக்கம் என்ற சொல், 'பழகுதல் அல்லது பயிற்சியாதல்' என்ற பொருளில் தமிழிலக்கியத்தில் பழங்காலந்தொட்டு ஆட்சி பெற்று வந்துள்ளது. பழக்கம் என்பது ஒரு கற்கும் செயலாகும். பழக்கம் வளர்ச்சிக்கு இன்றியமையாத கூறாகக் கருதப்படுகிறது. "நனவுடன் தொடங்கிய செயல் நாளடைவில் நனவின்றியே நிகழக் கூடியதாக ஆகிவிடும் செயலையே பழக்கம்"[87] என்பர். பழக்கம் செயல்களை எளிய முறையில் பிழையின்றி நடைபெறச் செய்வதுடன் முயற்சி, காலம் ஆகியவற்றை மிச்சப்படுத்துகின்றது. இதற்கு "நல்ல பழக்கங்களை அமைத்துக் கொள்ள குழந்தைப் பருவமே ஏற்றது"[88] என்ற உளவியலாரின் கூற்றுப் பொருத்தமானதாகும்.

பழக்கத்தின் தொடர்ந்த நிலையே வழக்கமாகும். வழக்கம் சமூகம் சார்ந்த ஒன்றாகும். ஓர் இனத்தின் சிறுபகுதியைச் சார்ந்தோரோ, சில நாட்டினர் மட்டிலுமோ அல்லது அவருள்ளும் ஒரு சிறு வகுப்பினரோ அல்லது தனித்தனியான ஆள்கள் மட்டிலுமோ செயல்களை ஒழுங்காகச் செய்து வருவதையே வழக்கம் என்று கூறுகிறோம். அது ஒழுக்கத்தாலும், செயலாலும் உருவாவதாகும். சமூகத்தில் அதிகமாகப் பின்பற்றப்படும் பழக்கமான நடவடிக்கையே வழக்கமாகும். "வழக்கத்தின் முக்கியப் பண்புகளாக ஒரு நிலையான நடவடிக்கை, வழிமுறை, சமூகப் பண்பு, சரி, தவறு என்ற மதிப்புத் தீர்ப்பு ஆகிய மூன்று காரணிகளைச்"[89] சமூகவியலார் சுட்டுவர்.

பழக்கவழக்கங்களைத் தனிமனிதனும், சமுதாயம் என்ற அமைப்பும் இணைந்து உருவாக்கின்றன. அவை சமுதாயத்தால் ஏற்றுக் கொள்ளப்படுகின்ற நிலையில் வழக்கங்களாக உருப்பெறுகின்றன. "தனிமனிதன் ஒருவன் பழகிப்போன முறையில் திரும்ப திரும்பச் செய்துவரும் ஒரு குறிப்பிட்ட செயலைப் பல மனிதர் ஒன்றாகச் சேர்ந்து செய்கின்ற பொழுது அது வழக்கம் எனப் போற்றப்படுகிறது."[90] இந்தத் தன்மைகளைக் கருத்தில் கொண்டு ஆராயும் பொழுது பழக்கம் என்பது தனி மனிதனைச் சார்ந்த தொடக்க நிலை என்றும், வழக்கம் சமுதாயம் சார்ந்த தொடர்நிலை எனவும் கருதலாம்.

### காக்கைக்குச் சோறு படைத்தல்

பரதவ மக்களிடம் காக்கைக்கு உணவிடம் பழக்கம் சங்ககாலத்தில் இருந்ததைக் காணமுடிகின்றது.

---

87. ம.ப.பெரியசாமித்தூரன்(தொ.ஆ.), கலைக்களஞ்சியம்(தொகுதி-7), பக்.29-30.
88. எஸ்.பி. ஆதிநாராயணன், மனித உள்ளம், ப.171.
89. பாஸ்கல் கில்பர்ட், சமூகவியலின் அடிப்படைக் கோட்பாடுகள், ப.54.
90. க.த. திருநாவுக்கரசு, வள்ளுவர் கண்ட மனிதர்(Journal of Tamil Studio), ப.60.

காய்கின்ற கதிர் வாட்டும் கடுமையான பகற்பொழுது, விருந்தினர் பேணலில் வேட்கை மிகுந்த பரதவர் மகளிர், செல்வம் கொழிக்கும் தம் மனையில் கொக்கின் நகம் போன்ற சோறு சமைத்து முற்றத்தில் குவித்து வைப்பர். முதலில் காக்கைக்கு வயிறாரப் படைத்துப் பின்னர் வரும் விருந்தினரை மகிழ்வுடன் உண்பித்ததை,

**"பொற்றொடி மகளிர் புறங்கண்ட உகுத்த**

**கொக்குகிர் நிமிரல் மாந்தி ஏற்பட**

**அகலங்காடி அசைநிழற் குவித்த**

**பச்சிறாக் கவர்ந்த பசுங்கண் காக்கை"**[91]

என்ற பாடல் அடிகள் கூறுகின்றன. இதனால் காக்கைக்குச் சோறு படைக்கும் வழக்கம் மிகவும் பழமையானது என்பதனை உணர முடிகின்றது.

**ஊர்க்காவல்**

நெய்தல் நிலத்தில் யாமத்தில் காவலர்கள் ஊரைக் காத்து எச்சரிக்கும் முறையும் இருந்துவந்துள்ளது.

இரவு வேளையில் காவலர்கள் யாமந்தோறும் ஊரைச் சுற்றிக் காவல் காத்து வந்தனர். ஒவ்வொரு யாமத்தும், அக்காவலர்கள் ஒலிமிக்க பெருமணியடித்து, ஓசையெழுப்பி, 'கதவுகளை நன்கு தாழிட்டுக் காத்துக் கொள்வீராக' என மக்களுக்கு எச்சரிக்கை விடுத்துக் காவல் புரிந்தனர் என்ற செய்தியை,

**"காப்புஉடை வாயில் போற்று ஓஎன்னும்**

**யாமம் கொள்பவர் நெடுநா ஒண்மணி**

**ஒன்றுஎறி பாணியின் இரட்டும்"**[92]

என்ற நற்றிணை கூறுகின்றது. இவ்வாறு சங்க இலக்கியங்கள் அந்நாளில் காவலர்கள் யாமந்தோறும் மணியடித்து உணர்த்தி, விழிப்புறச் செய்து காவல் புரியும் சிறந்த பழக்கம் நடை முறையில் இருந்து வந்துள்ளது. காக்கைக்குச் சோறு படைக்கும் பழக்கமும், ஊர்க்காவல் புரியும் வழக்கமும் இன்றளவும் நடைமுறையில் உள்ளது குறிப்பிடத்தக்கதாகும்.

---

91. பின்னத்தூர் நாராயணசாமி ஐயர்(உ.ஆ.), நற்றிணை நானூறு, ப.320.
92. மேலது, ப.228.

## நெய்தல் நில விழாக்கள்

மக்களிடையே ஒற்றுமை உணர்வு மேலோங்க விழாக்கள் முக்கியப் பங்கு வகிக்கின்றன. மக்கள் திரளாகக் கூடிப் பழக வேண்டும் என்ற உணர்வை தோற்றுவிப்பவை விழாக்களே எனலாம். சங்க காலத் தமிழகம் விழாக்களுக்குப் பெயர் பெற்றது. தமிழர் கொண்டாடிய விழாக்களை மூவகைப் படுத்தலாம். ஆவை: 1.அரசியல் விழாக்கள், 2. சமய விழாக்கள், 3. பொது விழாக்கள் போன்றனவாகும்.

சங்க காலத் தமிழர் அரசனின் பிறந்த நாளினையும், முடிசூட்டுதலையும், போர் வெற்றியினையும் அரசியல் விழாவாகக் கொண்டாடினர். கார்த்திகை விழா, ஓணவிழா, முந்நீர் விழா, இந்திர விழா, திருவாதரை விழா போன்ற விழாக்களைச் சமய விழாவாகக் கொண்டாடினர். பொங்கல், புதுப்புனல் போன்ற நிகழ்வுகளைப் பொது விழாவாகக் கொண்டாடினர்.

"மக்களின் வாழ்வின் சோர்வினைப் போக்கி இன்பமும், மலர்ச்சியும், புத்துணர்ச்சியும் ஊட்டுவன விழாக்களே. மனித இனத்தை ஒன்றுபடுத்தி மகிழ்ச்சியில் திளைக்க வைப்பதே விழாக்களின் செயற்பாடுகளாகும். சடங்குகளின் அடிப்படையில் தோன்றிச் சமுதாய நம்பிக்கையின் காரணமாகச் செல்வாக்குப் பெற்று வளர்ந்தும், வாழ்ந்தும், மறுமலர்ச்சியடைந்தும் மக்களினங்களிடையே தொன்று தொட்டு நிலவி வருகின்றன"[93] என்கிறார் கா.காந்தி.

"விழாக்கள் அறிவூட்டுவனவாயும் சமுதாயம் மற்றும் சமயம் சார்ந்த தன்மைகளை உள்ளடக்கியதாகவும் கருதப்படுகின்றன"[94] என்கிறது பிரிட்டானிக்கா களஞ்சியம்.

விழாக்கள் என்பன மக்கள் ஒன்று சேர்ந்து நடத்தும் கூட்டுச் சடங்குகளிலிருந்து தோன்றியனவாகவே விளங்கின்றன. பொதுவாகச் சடங்குகள் வாழ்வோடும், விழாக்கள் மீவியற்கைக் கூறுகளோடும் நெருங்கிய தொடர்படையனவாகக் காணப்படுகின்றன. ஒரு சமுதாயத்தின் வளர்ச்சி, வீழ்ச்சிப் போக்கு, மறுமலர்ச்சி ஆகியவற்றை அச்சமுதாயம் காலம் காலமாகப் போற்றிக் கொண்டாடிக் கொண்டிருக்கும் விழாக்களின் வழியாக அறியமுடிகின்றது. சமுதாயத்தின் எண்ணப் போக்கிற்கு ஏற்ப விழாக்கள் உருவாகியும், மறைந்தும் வருகின்றன. ஆகவே விழாக்களின் வாயிலாக ஒரு சமுதாயத்தின் பண்பாட்டினை இனங்காண முடிகின்றது

93. கா. காந்தி, தமிழர் பழக்கவழக்கங்களும் நம்பிக்கைகளும், ப.51.

94. James Millar, The New Encylopeida Britannica(Vol-4), p.708.

**விழா - சொற்பொருள் விளக்கம்**

விழாக்கள் உடலுக்கு ஓய்வும், உள்ளத்திற்கு இன்பமும் தரவல்லன. ஆகவே மக்கள் விரும்பி ஏற்றுக் கொண்டாடுவதால், 'விழா' என்று அழைக்கப்படுகிறது. "விழா என்னும் சொல் விழை என்ற சொல்லின் அடியாகத் தோன்றியது. இதற்கு விருப்பம், பற்று ஆகிய பொருள்கள் உள,குறுகிய பற்று விரியும் போது விழா என்றும், கொண்டாட்டம் என்று விளங்குகிறது"[95] என்கிறார் மு.அருணாசலம்.

விழா, விழவு ஆகியன ஒரு பொருள் குறித்த இரு சொற்களாகும். விழா என்பதற்குத் திருவிழா, மங்கலச் சடங்கு"[96] எனக் கழகத்தமிழ் அகராதியும், "விழவு என்பதற்குத் திருவிழா, விளையாட்டு, அவா"[97] என மதுரைத் தமிழ்ப் பேரகராதியும் பொருள் கூறுகின்றன. இவ்வாறு அகராதிகள் விழா என்பதற்குப் பலவிதமான விளக்கங்களைக் கூறுகின்றன. சங்க காலத்தில் விழாவை விழவு, சாறு என்ற பெயர்களில் அழைத்ததை,

> **"அழியா விழவின் அஞ்சுவரு மூதூர்**
>
> **சாறு கொண்ட கனம் போல்"**[98]

என்ற பாடல் அடிகள் விளக்குகின்றன. இதனால், விழாக்கள் சடங்குகளின் ஒன்றிணைக்கப்பட்ட கூறுகளாக விளங்கியதையும், சங்க காலத்தில் மக்கள் விழாவினைப் பல பெயர்களில் கொண்டாடியதையும் அறியலாம்.

**கொடியேற்றம்**

"விழா நடைபெறப் போகிறது என்பதை முன்கூட்டியே மக்களுக்கு அறிவிப்பதற்காகவும், அவ்விழா நல்லமுறையில் நடைபெற வேண்டும் எனக் காலையில் நல்ல நேரத்தைப் பார்த்துக் கொடியேற்றுவர். அக்கொடி, விழா முடியும் வரை இருக்கும். பண்டையக் காலத்திலிருந்தே கொடியேற்றும் வழக்கம் இருந்தது என்பதை இன்றும் கோயில்களில் கொடிமரம் இருப்பதைக் கண்டு தெளியலாம்"[99] என்கிறார் மு.பாபுஜி.

---

95. M. Arunachalam, Festivals of the Tamil Nadu Introduction, p.9.
96. அ.கி. மூர்த்தி(தொ.ஆ.), கழகத் தமிழ் அகராதி, ப.858.
97. சந்தியா நடராஜன், மதுரைத் தமிழ்ப் பேரகராதி (பாகம்-2), ப.610.
98. ந.சி. கந்தையாபிள்ளை(உ.ஆ.), அகநானூறு, ப.106.
99. மு. பாபுஜி. சிலப்பதிகாரத்தில் விழாக்கள், ப.11.

அக்காலத்தில் விழா தொடங்கியதற்கு அடையாளமாகக் கொடி ஏற்றப்பட்டது. பலவிதமான இசைக்கருவிகள் இசைக்கப் பெற்று ஊரெங்கும் பேரொலி எழுப்பப்பட்டது. விழாவில் ஆடல், பாடல்கள் நிகழ்த்தும் கலைஞர்களான கூத்தர். விறலியர் அழைக்கப்பட்டனர். விழாவின் போது இல்லங்கள், ஊர்கள் அலங்கரிக்கப்பட்டன. குறிப்பாக, பெண்கள் தங்களைச் சிறப்பாக ஒப்பனை செய்து கொண்டனர், விழாவில் நீராடுதல் மரபாகப் பின்பற்றப்பட்டது. விழாவின் போது ஆடவரும், பெண்டிரும் கைகோர்த்து ஆடும் பழக்கம் இருந்தது. கடலும் கடல் சார்ந்த நெய்தல் நிலத்தில் விழாக்கள் இசைக் கருவிகள் இசைத்து ஆரவாரமாக மகிழ்ச்சியுடன் கொண்டாடப்பட்டன.

**இசை**

கோ. கண்ணன், "கடலும் கடல் சார்ந்த இடமுமாகிய நெய்தலில் செய்தொழில் அடிப்படையில் இடம் பெறாமல் விழாப் பின்னணியிலேயே இசைக் கருவிகள் பற்றியக் குறிப்புக்கள் கிடைக்கின்றன"[100] என்கிறார்.

விழாவில் குழல், யாழ், முழவு, முரசு ஆகிய இசைக் கருவிகள் முழங்கின. தொண்டியில் விழாக் கொண்டாட்டத்தின் போது முழவிசை முழங்கி விழா கொண்டாடப்பட்டதை,

**"முழவிமிழ் இன்னிசை மறுகுதொ றிசைக்கும்**

**தொண்டி அன்ன பணைத் தோள்"**[101]

என்று ஐங்குறுநூற்றுப் பாடல் அடிகள் இயம்புகின்றன. இவ்வாறு செல்வச் செழிப்பு, நாகரிக வளர்ச்சியின் அடையாளமாக விழாவில் இசைக் கருவிகள் இசைக்கப்பட்டிருக்கின்றன.

**கூத்து**

நெய்தல் நில விழாக்களின் போது குரவைக் கூத்தும், துணங்கைக் கூத்தும் நிகழ்ந்துள்ளன. பாண்டிய நாட்டுப் பரதவ மகளிர் விழாவின் போது கழிமுள்ளி மலர்களைச் சூடி ஆரவார ஒலி எழுப்பிக் குரவைக் கூத்தாடியதை மதுரைக்காஞ்சி,

---

100. கோ. கண்ணன், பண்டைத்தமிழரின் ஒலி உணர்வும் இசை உணர்வும், ப.78.
101. உ.வே. சாமிநாத ஐயர்(உ.ஆ.), ஐங்குறுநூறு, ப.171.

**"பரதவர் மகளிர் குரவையொ டொலிப்ப**

**ஒருசார் விழவு நின்ற வியல் ஆங்கண்"**[102]

எனக் குறிப்பிடுகின்றது. இத்தகைய கூத்துகளை ஆணும், பெண்ணும் இணைந்தும், தனித்தும் ஆடினர் என்பதை அறியலாம்.

**அலங்கரித்தல்**

விழா நாள்களில் மக்கள் தங்களைப் பலவிதமாக அழகுபடுத்திக் கொள்வர். இவ்வழக்கம் சங்ககாலம் முதல் தொடர்ந்து இருந்து வருகிறது. விழாவிற்குச் சென்ற நெய்தல் நில மகளிர் தழையுடையை அணிந்து சென்றனர் என்பதை,

**"பிணையல் அம்தழைத் தைஇத் துணையிலள்**

**விழவுக்களம் பொலிய வந்துநின் றனளே"**[103]

என்ற நற்றிணைப் பாடல் அடிகளால் அறிய முடிகிறது. இன்றைய நாள்களிலும் மாரியம்மன் திருவிழாவில் வேம்புத் தழை உடையாக அணிந்து செல்வதைக் கிராமபுரங்களில் காணலாம். இது இன்று வேண்டுதலாக மாறிவிட்டது.

**முந்நீர் விழா**

முந்நீர் விழா என்பது கடல் தெய்வத்திற்கு எடுக்கப்படும் விழாவாகும். பாண்டியன் பல்யாக சாலை முதுகுடிப் பெருவழுதினை, நெட்டிமையார் வாழ்த்திப் பாடியப் பாடலில் இவ்விழாப் பற்றியக் குறிப்பு உள்ளது.

**"முந்நீர் விழவின் நெடியோன்**

**தண்ணீர் பஃறுளி மணலினும் பலவே"**[104]

என்னும் பாடல் அடிகளில் நிலத்தரு திருவிற் பாண்டியன் காலத்தில் பஃறுளியாறு கடலில் கலக்குமிடத்தில் முந்நீர் விழா எடுக்கப்பட்டதை அறிய முடிகின்றது.

**கடலாடு விழா**

கடலாடு விழாவில் மக்கள் திரளாக வந்து கடலில் நீராடுவது மரபாகும். நீரால் நிலம் வளமடைவது போல, மனிதனும் வளமடைய விரும்பினான். நீரினால் பொருள்கள்

---

102. பொ.வே.சோமசுந்தரனார்(உ.ஆ.), மதுரைக்காஞ்சி, ப.68.
103. பின்னத்தூர் நாராயணசாமிஐயர்(உ.ஆ), நற்றிணை நானூறு, ப.214.
104. உ.வே.சாமிநாதஐயர்(உ.ஆ), புறநானூறு,ப.26.

புனிதமடைகின்றன. அதுபோல தீது நீங்கக் கடலாடினால் புனிதமடையலாம் என்ற நம்பிக்கையினால் இவ்விழா கொண்டாடப்பட்டது எனலாம்.

காவிரிப்பூம்பட்டினத்து மக்கள் காவிரியாறு கடலோடு சங்கமிக்கும் துறையில் தங்களின் தீவினை நீங்கக் குளித்தப் பின்னர் கடல் நீரின் பிசுக்குப் போக நல்ல நீரிலே உடலைத் தூய்மை செய்து கொண்டதை,

**"தீது நீங்க கடலாடியும்**

**மாசுபோகப் புனல் படிந்தும்"**[105]

என்று பட்டினப்பாலைப் பாடல் அடிகள் இயம்புகின்றன. அதே போன்று சாலி என்பவள் செய்த தவறுக்காகப் பாவம் நீங்கக் குமரியில் நீராடியதை மணிமேகலை,

**"பார்ப்பனி சாலி காப்புக் கடைகழிந்து**

**கொண்டோற் பிழைத்த தண்டம் அஞ்சி**

**தென்திசைக் குமரி ஆடிய வருவோள்"**[106]

எனக் குறிப்பிடுகிறது. ஆகவே பாவம் செய்தோர் தங்களது பாவம் நீங்கக் கடலாடுவர். இந்நிகழ்வு அக்காலத்தில் விழா போல நிகழ்த்தப்பட்டது எனலாம்.

**புதுப்புனல் விழா**

'புதுப்புனல் விழா' ஆற்றில் வெள்ளப் பெருக்கு ஏற்படும் போது கொண்டாடப்பட்டது. இது நீரணிவிழா எனவும் அழைக்கப்படும். புதுப்புனல் கொண்டாடப்படும் முதல் நாளில் அரசர் முன் நின்று இவ்விழாவினைத் தொடங்கி வைப்பது மரபாகும்.

காவிரியில் வெள்ளப்பெருக்கு ஏற்படும் போது காவிரியாறு கடலோடு சங்கமிக்கும் 'நெய்தலங்கானல்' என்னுமிடத்தில், கடற்சோலை சூழ்ந்த ஓர் இருப்பிடத்திலே அரசிளங்குமரரும். அவருடைய உரிமை சுற்றமும், பரதவ குமரரும். அவரது ஆய மகளிரும் கூடியிருந்தனர். அப்போது புதுப்புனல் விழாவினை, கரிகால் வளவன் தொடங்கி வைத்தான். அப்பகுதியே ஆரவாரம் மிக்கதாகவும், பல விழாக்கள் கொண்டாடும் களமாகவும் இருந்ததை,

---

105. நச்சினார்க்கினியர் (உ.ஆ.), பத்துப்பாட்டு மூலமும் உரையும், ப.519.
106. ஒளவை சு.துரைசாமிப்பிள்ளை(உ.ஆ.), மணிமேகலை, ப.172.

**"விண்பொரு பெரும் புகழ்க்கரிகால் வளவன்**

**தண்பதம் கொள்ளும் தலைநாள் போல**

**வேறுவேறு கோலத்து வேறுவேறு கம்பலை**

**சாறு அயர் களத்து வீறுபெறத் தோன்றிக்**

**கடற்கரை மெலிக்கும் காவிரிப் பேரியாற்று"**[107]

என்ற சிலப்பதிகாரப் பாடல் அடிகளால் அறியலாம். மழை பொழிந்து ஆற்றில் வெள்ளப்பெருக்கு ஏற்படும் போது அதனை வரவேற்கும் விதமாக மகிழ்ச்சிப் பெருக்கால் புதுப்புனல் விழா கொண்டாடுவது அக்கால மரபாகும்.

**இந்திர விழா**

இந்திர விழா என்பது பழந்தமிழ் நாட்டில் பெரிய அளவில் நடத்தப்பட்ட அரச விழாக்களில் ஒன்றாகும். இந்திரன் மருத நிலத்திற்குக் கடவுளேயானாலும், இவரை மையமாகக் கொண்ட விழாகடற்கரைப் பகுதிகளிலும் கொண்டாடப்பட்டது. சோழ நாட்டுக் கடற்கரை நகரான புகாரில் கெண்டாடப்பட்ட இந்திரவிழா பற்றியக் குறிப்புக்கள் சிலப்பதிகாரத்தில் உள்ளன.

காவிரிப்பூம்பட்டினத்தில் ஆண்டுதோறும் இந்திரவிழா 28 நாள்கள் கொண்டாடப்பட்டன. இந்திர விழாவின் போது, ஐம்பெரும் குழுவினரும், எண்பேராயத்தினரும், அரசகுமரரும், வாணிக இளைஞரும் தத்தமக்கு உரிய தேர்களில் ஏறிச் சென்று, 'அரசன் வெற்றி கொள்வானாக' என்று வாழ்த்துக் கூறி, இந்திரனுக்கு நீராட்டு விழா நடத்தினர். குறுநில மன்னர்கள் குடங்களில் காவிரி நீர் கொண்டு வந்து இந்திரனுக்கு மஞ்சனம் ஆட்டி நீர் முழக்குச் செய்வித்ததை,

**"புண்ணிய நன்னீர் பொற்குடந் தேந்தி**

**மண்ணக மருள் வானகம் வியப்ப**

**விண்ணவர் தலைவனை விழுநீராட்டி"**[108]

என்று சிலப்பதிகாரம் கூறுகின்றது. இந்த நீராட்டுதலே தலைமை விழாவாகக் கருதப்பட்டது. அதனால் இவ்விழா நீராட்டு விழா எனவும் சிறப்பித்துக் கூறப்பட்டது.

---

107. ரா. சீனிவாசன்(உ.ஆ.), சிலப்பதிகாரம் மூலமும் திறனாய்வும், ப.26.
108. கா.ம.பாபுஜி, சிலப்பதிகாரத்தில் விழாக்கள், ப.70.

ஊரில் பெரிய விழா நடைபெறுகின்ற காலங்களில் ஊரிலுள்ள பிறதெய்வங்களையும் வணங்கி விழா எடுப்பது ஒரு பழக்கமாகும். இதே போன்று இந்திர விழாவின் போது பிற தெய்வங்களுக்கும் விழா நடைபெற்றுள்ளது.

இந்திர விழா ஒரு குறிப்பிட்ட மக்களுக்கேயன்றி அனைத்து மதத்தினர்க்கும் உரிய விழாவாகவே காட்சி அளிக்கிறது. இவ்விழாவின் போது ஊரில் மற்ற தெய்வங்களான சிவன், முருகன், திருமால், பலராமன், மன்னர் ஆகியோர்களின் கோயில்களில் பிரம தேவன் அருளிய நான்மறை மரபுகளின் படியே தீமுறை வேள்விகள் நிகழ்த்தி விழா நடைப்பெற்றதை,

**"பிறவா யாக்கைப் பெரியோன் கோயிலும்**
**அறுமுகச் செவ்வேள் அணிதிகழ் கோயிலும்**
**வால்வளை மேனி வாலியோன் கோயிலும்**
**நீல மேனி நெடியோன் கோயிலும்**
**மாலை வெண்கொடை மன்னவன் கோயிலும்**
**மாமுது முதல்வன் வாய்மையின் வழாஅ**
**நான்மறை மரபின் தீமுறை யொருபால்"**[109]

என்று சிலப்பதிகாரம் கூறுகின்றது. இவற்றோடு நால்வகைத் தேவருக்கும், பதினெண் வகைக் கணங்களுக்கும், வேறுவேறு கடவுளர்களுக்கும் சிறப்பாக விழா நடைபெற்றது.

இந்திர விழாவின் போது, இந்திரனால் அனுப்பபட்ட பூதத்திற்கும், மண்டபங்களிலும், ஐவகை மன்றங்களிலும், கோட்டங்களிலும், பிற தெய்வங்களாகிய முருகன், திருமால் போன்றோரின் கோயில்களிலும் விழா நடைபெற்றது. இதனால் இந்திரவிழா ஒரு பொதுவிழா ஆகும்.

**உணவு வகைகள்**

நெய்தல் நில மக்கள் விழா நாள்களில் இன்புற்று இருப்பர். அதற்கு ஏற்ப அவர்களுடைய உணவும் சிறப்பான முறையில் அமையும், விழாவிற்கு ஏற்ப மரக்கறி உணவு, ஊன்கலந்த உணவு, தின்பண்டங்கள் ஆகியவற்றை உண்டு தம் சுற்றத்துடன் மகிழ்ந்து இருப்பர்.

---

109. ந.மு. வேங்கடசாமிநாட்டார்(உ.ஆ.), சிலப்பதிகாரம், ப.261.

உயர்ந்த அலைகளையுடைய கடற்பரப்பில் சென்று தமையன்மார் வலிய மீன்களைப்பிடித்து வருவர். அம்மீன்களை அவர்களது தங்கைமார் விழாக்கள் நிகழுகின்ற ஊர்த் தெருக்களில் கொண்டு சென்று விற்பதை,

**"திமிலோன் தந்த கடுங்கண் வயமீன்**

**தழையணி அல்குற் செல்வத் தங்கையர்**

**விழவயர் மறுகின் விலையெனப் பகரும்"**[110]

என்று அகநானூறு கூறுகின்றது. இப்பாடலின் வழியாக விழாவின் போது, மீன் வாணிகம் நடைபெற்றதைக் காணலாம். அக்கால மக்கள் விழா நாளில் மீன் போன்ற புலால் உணவினைச் சிறப்பு உணவாகக் கருதி உண்டிருந்ததை அறிய முடிகின்றது.

## நெய்தல் நிலத்தார் விளையாட்டுக்கள்

மனிதன் எப்பொழுதுமே வேலை செய்து கொண்டிருப்பது இல்லை. ஓரளவு உழைத்த பிறகு ஓய்வு நேரம் தேவைப்படுகிறது. உடலுழைப்புகள் எல்லாம் ஒரே வகையாகவும் அமைவதில்லை. உழைப்புக்கும், ஓய்வுக்கும் இடையே பொழுதுபோக்கு என்பது மனிதனுக்கு அடிப்படைத் தேவையாகிறது. அதனால், மனிதனே விளைவித்துக் கொண்டு - படைத்துக் கொண்டு தம் பொழுதைப் போக்கினான். அவ்வாறு விளைவித்துக் கொள்கின்றவற்றை விளையாட்டுக்கள் என்று கூறுவர். தனி ஒரு மனிதனால் விளையாட முடியாது. குறைந்தது இரண்டு பேராவது கூடியாடுதல் வேண்டும். இரண்டு பேரிலிருந்து பல பேர்களைக் கொண்டதாக விளையாட்டுக்கள் சமுதாயத்தில் ஏற்படுத்தப்பட்டுள்ளன. மன மகிழ்ச்சிக்கும், கூடிப் பழகுவதற்கும் அறிஞர்கள் கண்டுபிடித்த கருவிகளில் விளையாட்டும் ஒன்றாகும். ஒவ்வொரு சமுதாயமும் தான் கைக்கொண்டு வரும் விளையாட்டுக்களை ஆராய்ந்தால் அந்தச் சமுதாயத்தின் நாகரிக நிலை, அறிவு நிலை ஆகியவற்றை நன்கு அறியலாம்.

சி. சிவகாமசுந்தரி, "வீரத்தை வளர்க்க, பயத்தை விரட்ட, நம்பிக்கையை ஊட்ட, நண்பர்களைப் பெருக்க, பொழுது போக்க, வரவேற்க, முரண் பாட்டை உணர்த்த, வாழ்க்கையினையும், தொழிலினையும் எதிரொலிக்க எனப் பல நிலைகளில் விளையாட்டுக்கள் தோன்றலாயின"[111] எனக் குறிப்பிடுகின்றார்.

---

110. ரா. வேங்கடாசலம் பிள்ளை(உ.ஆ.), அகநானூறு, நித்திலக்கோவை, ப.48.
111. சு. சிவகாமசுந்தரி,சங்க இலக்கிய விளையாட்டுக் களஞ்சியம், பக்.5-6.

தொல்காப்பியம் விளையாட்டால் உவகை கிடைக்கும் என்று கூறுகின்றது.

**"செல்வம் புலனே புணர்வு விளையாட்டு என்று**

**அல்லல் நீத்த உவகை நான்கே"**[112]

என்ற தொல்காப்பிய நூற்பா இன்பம் தருவதே விளையாட்டின் நோக்கம் என்கிறது. சங்க இலக்கிய நூல்களில் காணப்படும் பெரும்பாலான விளையாட்டுக்கள் இன்பம் விளைவிப்பதையே நோக்கமாகக் கொண்டுள்ளது.

"விளையாட்டு என்ற சொல்லில் 'விழை' என்பதன் பொருள் விருப்பம் ஆகும். விருப்பமுடன் ஆடும் ஆட்டம் 'விளையாட்டு' என வழங்கப்பட்டது. விளையாட்டு உணர்வு மனிதனுக்கு மட்டும் உரியதல்ல, விலங்கினங்களும், பறவையினங்களும் விளையாட்டில் விருப்பமுடன் ஈடுபடுகின்றன, விளையாட்டினால் மன மகிழ்ச்சியும், உடலுக்குப் புத்துணர்வும் கிடைப்பதினால் எல்லா உயிர்களும் மகிழ்ச்சியுடன் இதில் ஈடுபடுகின்றன"[113] என்கிறார் அ.அருணாச்சலம்.

க்ரியாவின் தமிழ் அகராதி விளையாட்டு என்பதற்கு, "விளையாட்டு பொழுது போக்கிற்காகவும், திறமையை வெளிப்படுத்தும் விதமாகவும் நிகழ்த்தப்படும் விதிமுறைகளை உடையசெயல்பாடு, ஆட்டம், Game, Sports"[114] என்ற பொருளைத் தருகிறது.

பொதுவாக விளையாட்டை ஆட்டம் என்றும், இன்பம் விளைவிக்கும் ஆட்டம் என்றும், விதிகளை வகுத்துக் கொண்டு ஆடும் ஆட்டம் என்றும் பொருள் கொள்ளலாம். விளையாட்டு என்பது, "மகிழ்ச்சி உணர்ச்சியோடு தொடங்கி, மகிழ்ச்சி உணர்ச்சியோடு நிகழ்ந்து, மகிழ்ச்சி உணர்ச்சியோடு முடிவது ஆகும்"[115] என்கிறார் க.பெருமாள்.

விளையாட்டுக்கள் உடல் திறனையும், அறிவுத் திறனையும் வளர்க்க உதவுகின்றன. பெருமணல் நிலப்பகுதியான நெய்தலில் கடற்கரைச் சூழலிலே ஆடவர்களாலும், பெண்களாலும் பலவிதமான விளையாட்டுக்கள் விளையாடப்பட்டன எனலாம்.

---

112. க. வெள்ளைவாரணர்(உ.ஆ.), தொல்காப்பியம் மெய்ப்பாட்டியல் உரைவளம், ப.73.
113. அ. அருணாசலம், தமிழர் வீர விளையாட்டு, ப.7
114. ரா. சுப்பிரமணியன்(ஆ.), க்ரியாவின் தமிழ் அகராதி, ப.948.
115. க. பெருமாள், விளையாட்டுக்கலை, கலைக்கதிர்(மலர் -3, இதழ்-12), ப.9.

**அலவன் ஆட்டம்**

இலக்கியங்களில் அலவன் என்றும், ஞெண்டு என்றும் வழங்கப்படுகிற இக்கரைவாழ் உயிரினம் இப்போது நண்டு என்றே வழங்கப்படுகிறது. கடற்கரைப் பகுதிகளில் ஒதுங்கும் அலவன்களைக் கைகளில் பிடித்தும், ஆட்டியும் நெய்தல் நில மகளிர் விளையாடுவர். இவ்விளையாட்டின் களமாகக் கடற்கரை அமைகின்றது. இவ்விளையாட்டு 'அலவன் ஆட்டம்' எனப்படும்.

நெய்தல் நில இளமகள் மணல் நிறைந்துள்ள கடற்கரையில் அலவனை(நண்டு) ஓட்டி விளையாடியதை,

**"பன்மலர் வேய்ந்த நலம்பெறு கோதையள்**

**திணிமணல் அடைகரை அலவன் ஆட்டி"**[116]

என்று அகநானூற்றுப் பாடல் அடிகள் விளக்குகின்றன. இவ்விளையாட்டு பகல் பொழுதில், பொழுது போக்கிற்காக நெய்தல் நில மக்களால் கடற்கரைப் பகுதியில் விளையாடப்பட்டதை அறிய முடிகின்றது.

**ஊசல் விளையாட்டு**

நெய்தல் நில மகளிர் பெரிய மரக்கிளைகளில் நீண்ட கயிற்றைக் கட்டி, ஊசலை அமைத்து, அதில் அமர்ந்தும் முன்னும், பின்னும் ஆட்டி விளையாடுவர். இவ்விளையாட்டானது மனத்திற்கு மகிழ்ச்சி தருவனவாகவும், பயத்தைப் போக்கவனவாகவும் அமைகின்றது.

எறிசுறா மீனின் வெண்மருப்பினால் பலகை அமைத்துப் புறவிதழ் நீக்கி, ஒழுங்குபடுத்திய நெய்தல் மலர்களை, நீண்ட நாரிலே இணைத்து, ஊசல் கயிறுகள் செய்தனர். பின் அதனைப் புன்னை மரத்தில் கட்டி மகளிர் ஆடியதைக் கலித்தொகையில் நல்லந்துவனார்,

**"எறிசுறா வான்மருப்புக் கோத்து நெறிசெய்த**

**நெய்தல் நெடுநார்ப் பிணித்தியாத்துக் கையுளர்வின்**

**யாழ் இசை கொண்ட இனவண் டிமிர்ந்தார்ப்பத்**

---

116. ந.மு. வேங்கடசாமி நாட்டார்(உ.ஆ.), அகநானூறு, மணிமிடைபவளம், ப.378.

**தாழா துறைக்குந் தடமலர்த் தண்டாழை**

**வீழ் ஊசல் தூங்கப் பெறின்”**[117]

எனக் குறிப்பிட்டுக் காட்டுகின்றார். இதனால் ஊசலின் நடுவில் அமைக்கும் பலகையானது சுறா மருப்பினால் செய்யப்பட்டது என்றும், ஊசலுக்கு இருபுறமும் கட்டப்படும் கயிறானது நெய்தலின்(பூவின்) நெடிய நாரினால் அமைக்கப்பட்டது என்பதையும் அறியலாம். நெய்தல் மக்கள், “ஊசலுக்கு நெய்தல் நார் மட்டுமின்றி தாழையின் விழுதால் திரித்த கயிற்றினையும் பயன்படுத்தினர், நெய்தல் மலர்களை நாரால் கட்டி ஊசலை அழகு செய்தனர்”[118] என்று ஹரிவிஜயதீபா குறிப்பிடுகின்றார்.

புலிநகக் கொன்றையின் உயர்ந்த கிளையில் கயிற்றினைக் கட்டித் தொங்கவிடப் பெற்ற ஊசலில் நெய்தல் நிலத் தலைவியும், தோழியும் ஆடியதை,

**“ஞாழல் ஓங்குசினைத் தொடுத்த கொடுங்கழித்**

**தாழை வீழ்கயிற் ஊசல் தூங்கி”**[119]

என்ற பாடல் அடிகள் சுட்டிகாட்டுகின்றன. இதனால் ஊசல் விளையாட்டானது வீட்டிற்கு வெளியே கடற்கரைச் சோலைகளில் நடைபெற்றது. கயிறுகளை மறைக்க நெய்தல் மலர்க் கொடிகள் கயிறுகளுக்கு இடையே படரவிடப்பட்டிருந்தன எனலாம்.

இவ்விளையாட்டானது இயற்கைச் சூழலை அனுபவித்து மகிழ்ச்சியாகப் பொழுது போக்கவும், உடன் இருப்பவருடன் கூடி விளையாடவும் வகை செய்தது. விட்டுக் கொடுத்து விளையாடும் மனப்பாங்கையும், உதவி செய்யும் மனப்பாங்கையும் ஊசல் விளையாட்டு வளர்த்துள்ளது.

**எண்ணி விளையாடல்**

ஒன்று, இரண்டு என விரல் விட்டு எண்ணி விளையாடுவது எண்ணி விளையாடல் விளையாட்டாகும். இவ்விளையாட்டில் படகுகள், விளக்குப் பந்தங்கள் போன்றவற்றை நெய்தல் நில மகளிர் தங்களது இல்லத்தில் இருந்தவாறு எண்ணி விளையாடுவர். இதனைத் தி.முத்துகண்ணப்பன், “புலால் வீசும் மீன்களை உலர்த்திப்

---

117. நச்சினார்க்கினியர்(உ.ஆ.), கலித்தொகை, ப.809.
118. வி. ஹரிவிஜயதீபா, சங்க இலக்கியத்தில் புழங்குபொருள் பண்பாடு, ப.233.
119. ந.சி. கந்தையா பிள்ளை, அகநானூறு, ப.21.

பறவைகளை விரட்டும் பரதவப் பெண்கள், அருகில் குன்றெனக் கிடக்கும் வெள்ளுப்புக் குவியலில், சரியான பக்கத்தே ஏறி நின்று, கடலில் இருக்கும் படகுகளைச் சுட்டி, 'இது எம் தந்தை திமில்; அது நும் தந்தை திமில்' எனக் கூறிக் கடல் வேட்டையாடும் தம் உறவினர் படகுகளை எண்ணி வேடிக்கையாக விளையாடுவர்"[120] என்கிறார்.

இரவு நேரத்தில் மீன்பிடிக்கச் சென்றிருக்கும் பரதவர்களது வலிமையான மீன்பிடிப் படகிலிருந்து ஒளிரும் விளக்குகளைப் பரதவ மகளிர் வீட்டிலிருந்த படி எண்ணுவதை,

**"..............மனையிலிருந்து**

**இருங்கழி துழவும் பனித்தலைப் பரதவர்**

**திண்திமில் விளக்கம் எண்ணும்"**[121]

என்ற நற்றிணைப் பாடல் அடிகள் விளக்குகின்றன. இதனால் பரதவ மகளிர் தம் மனையில் இருந்து கொண்டு கடலில் செல்லும் படகுகள், விளக்குப் பந்தங்கள் போன்றவற்றை எண்ணி விளையாடுவர் என்பது தெரிகின்றது.

இவ்விளையாட்டில் பொழுது போக்கு உணர்வு மேலோங்கி இருப்பினும், குறிப்பிட்டவர்களின் வருகையை எதிர்பார்த்துக் காத்திருக்கும் உணர்வு அதிகம் காணப்படுகிறது. இவ்விளையாட்டின் களமாக இல்லம் இடம் பெறுகிறது.

**நீர் விளையாட்டு**

நீர் விளையாட்டு என்பது, நீரில் பொழுது போக்கிற்காகவோ அல்லது போட்டி போட்டுக் கொண்டோ விளையாடுவதாகும். இவ்விளையாட்டினை நீச்சலடித்தும், படகுகளை நீரில் விட்டும் விளையாடுவர். இவ்விளையாட்டானது பகல் பொழுதில் நீரினைக் களமாகக் கொண்டு ஆண், பெண் என இரு பாலராலும் விளையாடப்பட்டது. சங்க காலத்தில் நீர் விளையாட்டு ஒரு விழாவாகவும் நடைபெற்றதை,

**"நின் மலைப் பிறந்து, நின் கடல் மண்டும்**

**மலிபுணல் நிகழ்தரும் தீம் நீர் விழவின்"**[122]

---

120. தி. முத்துகண்ணப்பன், சங்க இலக்கியத்தில் நெய்தல் நிலம், ப.198.
121. த. கோவேந்தன், அன்பொடு புணர்ந்த ஐந்திணை(நெய்தல்), ப.160.
122. ஔவை சு.துரைசாமிப்பிள்ளை(உ.ஆ), பதிற்றுப்பத்து, ப.218.

என்ற பாடல் அடிகள் பகர்கின்றன. இதனால் நீர் விளையாட்டு ஒரு விழாவாக நடைபெற்றிருக்கின்றது எனலாம். நீர் விளையாட்டைப் பற்றி இரா. சந்திரசேகரன், "மரக்கலங்களையுடைய பரதவர்கள் பல்வகை இசைக் கருவிகளால் எழுப்பும் ஓசையும், பரதவ சிறுவர்கள் கடல் நீரில் துள்ளி விளையாடும் போது எழுப்பும் ஓசையும், கடல் அலைகளின் ஓசையும், நெய்தல் நிலப் பகுதியில் பரவியிருக்கும். இது சிறுவர்களின் மகிழ்வுத் துள்ளலின் வெளிப்பாடு ஆகும்"[123] என்கிறார்.

அலைகள் உயர்ந்து வரும் கடலில் துணிச்சலுடன் பாய்ந்து விளையாடும் பெண்கள், பல வகையான மலர்களைச் சூடி, பின் அவற்றைக் கழித்து எறிவர், நீரில் விளையாடுவதால் கலைந்து போகும் கூந்தலைத் தண்ணீர் போகப் பிழிந்து, வடித்துத் துவட்டித் தமது ஊருக்குத் திரும்புவதை,

**"நீரலை கலைஇய கூழை வடியாச்**

**சாஅய் அவ்வயிறு அலைப்ப உடனியைந்து**

**ஒரை மகளிரும் ஊரெய் தினரே"**[124]

என்ற நற்றிணைப் பாடல் அடிகள் விளக்குகின்றன. நீர் விளையாட்டானது பலரும் பார்க்கத் தங்களது தனித்திறமையைக் காட்டவும், மகிழ்ச்சிக்காகவும் விளையாடியதை அறியலாம்.

**சிற்றில் இழைத்தல்**

சிற்றில் என்பது சிறிய இல் என்று பொருள்படும். சிறிய இல்லத்தினை மணற் கொண்டு இழைத்து விளையாடும் விளையாட்டே சிற்றில் இழைத்தலாகும். இது மகளிர் ஆடும் விளையாட்டாகும். சிற்றில் இழைத்தலுக்கும் மணலே முதன்மையான மூலப் பொருளாக அமைகின்றது. நெய்தல் நில மகளிர் கடற்கரை மணலிலும், தெருவிடத்தில் உள்ள மணலிலும் சிற்றில் இழைத்து விளையாடுவர். அப்போது மணலில் உணவு சமைத்தும் விளையாடியுள்ளனர்.

நெய்தல் நிலத் தலைவி நெருங்கிய தோழியரோடு கடற்கானலிலே சிற்றில் இழைத்தும், சிறு சோறு ஆக்கியும் விளையாடியுள்ளனர் என்பதை,

---

123. இரா. சந்திரசேகரன், தமிழிலக்கியம் கருத்தாக்கச் சீர்மை, ப.26.

124. பின்னத்தூர் நாராயணசாமிஐயர்(உ.ஆ.), நற்றிணை நானூறு, ப.489.

**"தொடலை ஆயமொடு கடலுடன் ஆடியும்**

**சிற்றில் இழைத்தும் சிறுசோறு குவைஇயும்"**[125]

என்ற அகநானூற்றுப் பாடல் அடிகள் அறிவுறுத்துகின்றன. ஆகவே சிற்றில் இழைத்தல் என்பது ஆற்றுமணல், தெருமணல் இவற்றைக் கொண்டு வீட்டின் பல கட்டுகளை மனத்திற் கொண்டு, சிறிது உயரம் கொண்ட சுவர் போன்று மணலைக் கட்டி எழுப்புவதாகும். இதில் சமையலறை என்று ஒதுக்கப்பட்டிருக்கும் இடத்தில் மணலால் ஆன உணவு மாதிரிகளைச் சமைத்திருக்கின்றனர்.

இவ்விளையாட்டானது நெய்தல் நில மகளிரின் ஆற்றல் திறனையும், கற்பனைத் திறனையும் வெளிப்படுத்துவதாக அமைகின்றது.

**தாயக்கட்டம் ஆடல்**

நெய்தல் நில மகளிர் மணலில் கோடு கிழித்துச் சொக்கட்டான், தாயக்கட்டம் என்று கூறும் ஆட்டம் ஆடுவர். இவ்விளையாட்டுக்குப் பலகறை, புள்ளிகள் வைத்த காய்கள், சதுரக்கருவிகள் போன்றவை தேவையாகும். ஒரு கட்டையில் ஒன்று, இரண்டு, மூன்று, நான்கு என்று 4 பக்கங்களில், 3 பக்கங்கள் குழிக்கப்பட்டிருக்கும். ஒன்று விழுந்தால் தாயம் விழுந்தது என்று பொருள். தாயம் விழுந்தால் தாயக்கட்டைகளை மீண்டும் உருட்டும் வாய்ப்புக் கிடைக்கும்.

இலக்கியத்தில் இவ்விளையாட்டுக் கருவி 'கவறு' என வழங்கப் பெறும்.

கடற்கரை மணலில் தாயக்கட்டம் ஆடிய மகளிர், தேய்ந்து போன கட்டையை அப்படியே விட்டுவிட்டுப் போய் விட்டனர். அதைக் கண்ட வெள்ளி நண்டு, அந்தக் கட்டையைப் பற்றிக் கொண்டு அங்குமிங்கும் உருட்டி அழகுற ஆடியதை,

**"இவர்திமில் எறிதிரை ஈண்டிவந் தலைத்தக்கால்**

**உவறுநீர் உயரெக்கர் அலவனா டளைவரித்**

**தவலில்தண் கழகத்துத் தவிராது வட்டிப்பக்**

**கவறுற்ற வடுவேய்க்குங் காமர்பூங் கடற்சேர்ப்ப"**[126]

என்ற பாடல் அடிகளால் அறியலாம். இவ்வாறு நெய்தல் நில மகளிர் தாயக்கட்டம் ஆடியதைக் காண முடிகின்றது.

125. ரா. வேங்கடாசலம்பிள்ளை(உ.ஆ), அகநானூறு, களிற்றியானை நிரை, ப.280.
126. நச்சினார்க்கினியர்(உ.ஆ.), கலித்தொகை, ப.420.

### விலங்கு மோதல் விளையாட்டு

காவிரிப்பூம்பட்டினத்துப் பரதவரது குழந்தைகள் தங்களது குடியிருப்புப் பகுதியிலே ஆட்டுக்கிடா மோதலையும், கவுதாரி மோதலையும் கண்டு களித்து விளையாடியதைப் பட்டினப்பாலை,

**"மேழகத் தகரொடு சிவல் விளையாடக்**

**கிடுகு நிரைக் தெஃகூன்றி"**[127]

எனக் குறிப்பிடுகின்றது. விலங்கு மோதல் விளையாட்டானது ஒரு வகை வீர விளையாட்டாகும். பலர் முன்னிலையில் நிகழ்வது; சேவலுடன் சேவலையும், ஆடுகளுடன் ஆடுகளையும் மோதவிட்டுப் பொழுது போக்காகவும், பந்தயம் கட்டியும் விளையாடுவது ஆகும். இவ்விளையாட்டில் போட்டி போட்டு வெற்றி பெற வேண்டும்என்பதற்காக விலங்குகளுக்கு நல்ல ஊட்ட உணவு அளிக்கப்பட்டது. ஆட்டத்தில் வெற்றி பெற போட்டி இருந்ததே தவிர, பெறாமை உணர்ச்சிகளுக்கு இடம் அளிக்கப்படவில்லை. இவ்விளையாட்டானது நெய்தல் நில மன்றப் பகுதியில் நடைபெற்றது.

இதனால் சங்க காலத்தில் வீரவுணர்வு மிக்கத் தமிழர்கள் ஆட்டுக்கிடாய்களையும், காடை, கவுதாரி, கோழி போன்ற பறவைகளையும் பழக்கிப் போரிடச் செய்து மகிழ்வதில் நாட்டம் கொண்டிருந்தனர் என்பதை அறியலாம். இவ்வாறு நெய்தல் நிலத்தில் பலவகையான விளையாட்டுக்கள் இடம் பெற்றிருந்ததை அறிய முடிகின்றது.

### முடிபுகள்

தொடக்க காலத்தில் தனித்தனியாக வாழ்ந்த மனிதன் பின்பு கூட்டங்கூட்டமாக வாழத் தொடங்கிய நிலையே சமுதாயத்தின் தோற்றமாக அமைகிறது. சமுதாயம் என்பது மனித இனத்தின் சமூக, பொருளாதார, அரசியல் ஈடுபாடுகளினால், தொடர்புகளினால் இயங்கி வரும் ஓர் அமைப்பாகும். இவ்வமைப்பு ஒரு குறிப்பிட்ட நாகரிக அமைப்புக்குள் இயங்கி வருகிறது என்று சமூகவியலார் குறிப்பிடுகின்றனர்.

---

127. உ.வே.சாமிநாதஐயர்(உ.ஆ.), பத்துப்பாட்டு, ப.518.

சங்க காலத்தில் நிலத்தின் அடிப்படையில் வாழ்க்கையை மேற்கொண்டிருந்த மக்களிடம் உயர்ந்தவன், தாழ்ந்தவன் என்று அடையாளப்படுத்தும் நோக்குடன் இனப்பகுப்பு இல்லை என்றாலும், நிலத்தின் அடிப்படையில், அந்நிலங்களில் மேற்கொண்ட தொழிலின் அடிப்படையிலும் பாகுபாடுகள் இருந்திருக்கின்றன. தனித்தனி நிலங்களாகப் பிரிந்திருந்த சங்ககாலச் சமுதாய அமைப்பானது. காலங்கள் மாறிக் கொண்டே வருகையில் நில அடிப்படையான சமுதாய முறையில் மாற்றம் ஏற்பட்டுப் பொதுவுடைமைச் சமூகமாக, ஒன்று பட்ட சமூகமாக மாறுகின்ற பொழுது தனித்தனி நிலங்களாகப் பிரிந்திருந்தவர்கள், தனித்தனி இனங்களாக வளர்ச்சியுற்றிருக்கின்றனர். அதற்குப் பிற நாடுகளிலிருந்து வந்த வாணிகர்களின் பங்கும் குறிப்பிடத்தக்கதாகும்.

நெய்தல் நிலப்பகுதியில் வாழ்ந்த பரதவ மக்கள் மீன் பிடித்தலை முதன்மையான தொழிலாகக் கொண்டிருந்ததால், அவர்களது உணவில் பலவகையான மீன்கள் இடம் பெற்றன. பரதவர்கள் புரிந்த தொழிலுக்கேற்ப அவர்களது உணவுப்பழக்கமும் அமைந்திருந்தது எனலாம்.

பரதவர்கள் ஆழ்கடலுக்குள் சென்று மீன் பிடிக்கும் கடின உழைப்பாளிகள். ஆகவே உடல் களைப்பு நீங்க கள்ளினைப் பருகினர். நெய்தல் நிலத்தில் வாழ்ந்த பரதவ மக்கள் தங்கள் இல்லம் நாடி வரும் விருந்தினரை அன்புடன் வரவேற்று விருந்தோம்பும் பண்பாட்டினைக் கொண்டிருந்தனர். வெண்சோறு, பழையகள், சுட்ட குழல் மீன் போன்றவற்றைத் தங்கள் இல்லம் நாடி வந்த விருந்தினருக்கு நெய்தல் நிலத்தார் அளித்தனர்.

நெய்தல் நில மக்களின் உடையானது இவை என்று குறிப்பிட முடியாவிட்டாலும், மீன் தொழிலுக்கு ஏற்றவாறு எளிமையான ஆடைகளை அணிந்தனர். நெய்தல் நிலப் பெண்டிர் தழையுடையும், பட்டின மகளிர் பட்டு, துகில் போன்ற ஆடைகளை அணிந்தனர். இவர்கள் இழை, தொடி, வளை போன்ற பலவகையான அணிகலன்களை அணிந்திருந்தனர். அணிகளினாலும், மலர்களினாலும் தம்மை ஒப்பனை செய்து கொள்வதில் மகளிர் ஆர்வம் காட்டினர்.

நெய்தல் நிலத்தாரின் வாழிடங்கள் குடம்பை, சேரி, பாக்கம், பட்டினம், சிறுகுடி, சீறூர் எனப் பலவாறு அழைக்கப்பட்டன. பரதவர் குடிசைகள் பனை ஓலைகளால் எளிமையாகக் கட்டப்பட்டிருந்தன. செல்வவளம் மிக்கப் பரதவர்கள் மாடமாளிகையில் வசித்தனர்.

பரதவர் சமூகத்தில் ஆண்மகன் தான் விரும்பும் பெண்ணை மணப்பதற்குப் பரிசாகப் பொன்னும், பொருளும், அளவற்ற அணிகலன்களும் கொடுக்கும் வழக்கம் உண்டென்பதும், மடல் மணம், சேவை மணம் போன்ற பல மணங்கள் காணப்படுவதைத் அறியமுடிகின்றது.

பரதவர் தெய்வ நம்பிக்கையுடையவர்கள், தங்கள் பாக்கத்தின் பொதுவிடத்தில் உள்ள பனை, புன்னை போன்ற மரங்களில் பழம்பெரும் தெய்வத்தை ஏற்றியும் வழிபட்டுள்ளனர். கடவுள் வழிபாடு மீது நம்பிக்கை கொண்டு சுறா முள்ளினை நட்டு, அவற்றைக் கடவுளாக வழிபட்ட செய்தியினைக் காண முடிகின்றது. இலக்கியத்தில் பரதவர் வழிபடும் தெய்வமாகக் குறிப்பிடப்படும் பாட்டுக்கள் தவிர, ஏனைய பாட்டுகளில் வருணன் என்ற தெய்வத்தின் பெயர் தெளிவாகக் குறிப்பிடப்படாமல் பெருங்கடல் தெய்வம் எனப் பொதுவாகவே குறிப்பிடப்பட்டுள்ளது.

கொற்கையில் மழைவேண்டியும், காவிரிப் பூம்பட்டினத்தில் மீன்வளம் வேண்டியும் பௌர்ணமி நாளன்று சடங்கு செய்தனர். பரதவர்கள் படகுகளுக்கும், கட்டுமரங்களுக்கும் நறுமணங்கமழும் நற்புகையூட்டி வழிபடும் வழக்கமும், நிமித்தம் பார்த்துக் கடலில் விடும் வழக்கமும் உடையவர்கள். பரதவர் மகளிர் செல்வம் கொழிக்கும் தம் சீர் மிகு மனையில் வெண்சோறு சமைத்து, முதலில் காக்கைக்கு வயிறாரப் படைத்துப் பின்னர் வரும் விருந்தினரை மகிழ்வுடன் உண்பிக்கும் வழக்கம் உடையவர்களாக இருந்திருக்கின்றனர்.

நெய்தல் நில விழாக்கள் கொடியேற்றதுடன் தொடங்கி இசை,கூத்து, சிறப்பு உணவுகள் என்று சிறப்பாகக் கொண்டாடப்பட்டன. நெய்தல் நிலத்தில் முந்நீர் விழா, கடலாடு விழா, புதுப்புனல் விழா, இந்திர விழா போன்ற விழாக்கள் கொண்டாடப்பட்டன.

நெய்தலில் கடற்கரைச் சூழலியே அலவன் ஆட்டம், எண்ணி விளையாடல், ஊசல் விளையாட்டு, சிற்றில் இழைத்தல், நீர் விளையாட்டு, தாயக்கட்டம் ஆடல் போன்ற விளையாட்டுக்கள் நெய்தல் நில மக்களால் விளையாடப்பட்டன.

# இயல் - நான்கு
# நெய்தல் நிலத்து வாணிகம்

- வாணிகம்
  - நெய்தல் நிலத்து வாணிகம்
- வாணிகத்தின் வகைகள்
  - உள்நாட்டு வாணிகம்
  - தரை வாணிகம்
  - எட்டிப் பட்டம்
  - கடல் வாணிகம்
    - கரையோர வாணிகம்
    - நடுக்கடல் வாணிகம்
  - தமிழகம் அயல்நாட்டுடன் கொண்ட வாணிகத் தொடர்புகள்
    - ஏற்றுமதிப் பொருள்கள்
    - இறக்குமதிப் பொருள்கள்
- துறைமுகங்கள்
  - எயிற்பட்டினத் துறைமுகம்
  - காவிரிப்பூம்பட்டினத் துறைமுகம்
  - கொற்கைத் துறைமுகம்
  - தொண்டித் துறைமுகம்
  - தொண்டி (சேரநாடு)
  - முசிறித் துறைமுகம்
- கலங்கரை விளக்கம்
- பண்டக சாலைகள்

# இயல் - நான்கு
# நெய்தல் நிலத்து வாணிகம்

"திரை கடலோடியும் திரவியம் தேடு"[1] என்னும் பழமொழிக்கேற்ப சங்க காலத்தில் பழந்தமிழர் மேல்திசை, கீழ்த்திசை நாடுகளுடன் மிக வளமானதொரு கடல் வாணிகம் புரிந்தனர். குறிப்பாக, சங்க காலத்தில் ஆற்றின் முகத்துவாரங்களில் அமைந்திருக்கும் துறைமுகங்கள் பண்டைத் தமிழர் மரக்கலம் ஏறிச் சென்று கடல் வாணிகம் புரிய முக்கியப் பங்காற்றின.

சங்க இலக்கிய நூல்களும், வெளிநாட்டார் குறிப்புக்களாகக் கருதப்படும் பெரிப்ளூசின் எரித்ரியக் கடற் செலவு(Periplus of Erythrean Sea), தாலமியின் நிலவியல் கையேடு (Geography of Ptolemy), பிளினியின் இயற்கை வரலாறு (Natural History), ஆகியன சங்ககாலத் தமிழகப் பொருளியலின் ஓர் அங்கமான கடல் வாணிகம் பற்றியும், இதனுடன் தொடர்புடைய துறைமுகங்களையும் (Ports), வாணிக மையங்களையும் (Trade Centre) பற்றிய குறிப்புக்களைத் தருகின்றன. இவற்றிற்குத் துணை சேர்க்கும் வகையில் தமிழ்நாட்டில் நடைபெற்ற தொல்லியல் ஆய்வுகளும் அக்காலக் கீழை மற்றும் மேலை நாடுகளுடன் நடைபெற்ற வாணிகத் தொடர்பை மெய்ப்பிப்பவனவாக உள்ளன. அத்தகு பழந்தமிழர் வாணிகம், வாணிகத்தின் வகைகள், வாணிகத்தின் சிறப்புக்கள் ஆகியவற்றை விளக்குவதாக இவ்வியல் அமைகின்றது.

**வாணிகம்**

ஒரு நாட்டின் தொழில்களிலே உழவும், வாணிகமுமே தலை சிறந்தன என்பது அறிஞர் கொள்கை, ஒரு நாட்டின் மேம்பாடிற்கு இவ்விரு தொழில்களும் ஒருங்கு செழித்திருத்தல் இன்றியமையாததாகிறது. தமிழகமும் சங்க காலத்தில் இவ்விரு தொழிலையும் குறைவறப் பெற்றிருந்ததை,

**"வியன் மேவன் விழுச்செல்வத்து**
**இருவகையான் இசைசான்ற**
**சிறுகுடிப் பொருந்தொழுவர்**
**சூடி கெழீஇய நானிலவரொடு"**[2]

---

1. ந.மு. வேங்கடசாமி நாட்டார் (உ.ஆ.), கொன்றை வெந்தன், ப.29.
2. பொ.வே. சோமசுந்தரனார்(உ.ஆ.), பத்துப்பாட்டு (பகுதி-2), ப.74.

என வரும் மதுரைக்காஞ்சி அடிகளால் அறியலாம். இப்பாடல் அடிகளுக்கு உரை எழுதிய நச்சினார்க்கினியர், "உலகில் காணப்படும் தொழில்களில் உயர்வாகப் பேசப்படுவன உழவு, வாணிகம் என்ற இரு தொழில்களாகும்"[3] எனக் கூறுவதிலிருந்து தமிழ்நாட்டில் இவ்விரு தொழிலும் செல்வாக்குப் பெற்றிருந்ததை உணரமுடிகின்றது.

ஆதிமனிதன் உணவு சேகரிப்பதில் அதிகளவு கவனம் செலுத்தி வரவில்லை என்றாலும் ஆதிகுடிகளாகிய தமிழர் உணவு சேகரிப்பதில் ஆர்வம் காட்டினர். ஆதியில் இயற்கையாகக் கிடைத்த காய்கனிகளையும், கிழங்குகளையும் விவசாயம் செய்யாமல் உண்டு வாழ்ந்தனர். அக்காலத்தில் மக்களின் எண்ணிக்கை குறைவு, ஆகையால் பற்றாக்குறையோ, உணவு பஞ்சமோ இல்லை எனலாம். "சோழ வளநாடு சோறுடைத்து" என்ற பழமொழி இதற்குச் சான்றாகக் கூறப்படுகிறது. அதன்பின் தமிழகத்தில் உணவு மற்றும் உற்பத்திகள் மிக அதிகமானதால் தேவைக்கு அதிகமானதை மற்றவர்க்குக் கொடுப்பது கட்டாயமானது. அதைத் தானமாகவும் கொடுத்து வந்தனர்.

தமிழகத்தில் அக்காலத்தில் மக்கள் இடம் விட்டு இடம் வாழும் சூழல் ஏற்பட்டது. உற்பத்திப் பொருள்களும் இருக்கும் இடம் விட்டு வேறு இடத்துக்கு எடுத்துச் செல்லும் அவசியம் ஏற்பட்டது. குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்ற ஐவகை நிலங்களிலும் உற்பத்தியாகும் பொருள்கள் பண்டமாற்று முறையில் ஓரிடத்திலிருந்து மற்றொரு இடத்திற்குக் கொண்டு செல்லப்பட்டன. மருதநில நெல்லும், நெய்தல் நில உப்பும் தமிழ் மக்களால் பகிர்ந்து கொள்ளப்பட்டன. மக்கள் தனித்தனிக் குழுக்களாகவும், பகுதிக் கூட்டமாகவும் குடியிருந்தனர். உற்பத்திப் பொருள்களைப் பெற ஒருவரை ஒருவர் சார்ந்து வாழ வேண்டியதால் மனித உறவிலும் மாற்றம் ஏற்பட்டது. இதை அடிப்படையாக வைத்தே பிராமணன், வாணிகர், சத்திரியர், சூத்திரர் என இனப் பாகுபாடு உண்டானது. இதனால், வட இந்தியரின் வரவும் தமிழகத்தில் பெருகி வந்தன.விரிவடைந்த உழைப்புத்திறன் இல்லாத ஒரு சமூகத்தினர் இந்நிலையில் வாணிபத்தில் ஈடுபட்டனர். கடல் தாண்டி வாணிகம் செய்ய புதிய இனமும் உருவாகி வழுவடைந்தது எனலாம்.

**நெய்தல் நிலத்து வாணிகம்**

நெய்தல் நிலத்து மக்கள் மீன்பிடித்தல், உப்பெடுத்தல் போன்ற தொழிலாற்றி வந்தனர். இவ்விரு தொழிலும் நாட்டின் வருவாயை மிகுதியாகப் பெருக்கியது. மீன்களைத் தானியத்திற்குப் பண்டமாற்றாக விற்றனர். மீனிலிருந்து எண்ணெய்

---

3. நச்சினார்க்கினியர் (உ.ஆ.), மதுரைக்காஞ்சி, ப.295.

எடுக்கப்பட்டது. இதனை விளக்கெரிக்கப் பயன்படுத்தினர். கிளிஞ்சல், சிப்பிகளை அகலாகப் பயன்படுத்தினார்கள். கடல் நீரைத் தேக்கி உப்பெடுத்து உள்நாட்டில் விற்பனைக்கு அனுப்பிய செய்தியை,

**"கொண்டுஞ் செல்வர்கொல் தோழி உமணர்**

**வெண்கல் உப்பின் கொள்ளை சாற்றிக்**

**கணநிறை கிளர்க்கும் நெடுநெறிச் சகடம்**

**மணல் மடுத் தூறும் ஓசை கழனி"**[4]

என்ற நற்றிணைப் பாடல் அடிகள் விளக்குகின்றன. இவ்வாறு கிடைக்கும் பொருள்களைத் தேவையுள்ளவர்களிடம் கொடுத்து அவர்களிடமுள்ள பொருள்களை அதற்கு ஈடாகப் பெறும் பண்டமாற்று முறையே வாணிகத்தின் அடிப்படையாயிற்று.

"சங்க காலத் தமிழரின் வாணிபத்திற்குச் சங்க இலக்கியங்கள் சான்றளிக்கின்றன. உழவும், தொழிலும் உற்பத்தி செய்த பொருள்களை வகுத்து வழங்கும் வல்லவராக வாணிகர்கள் விளங்கினர். கூலவாணிகர், பொன்வாணிகர், அறுவை வாணிகர், மணி வாணிகர் என வாணிகர்கள் விற்பனை செய்யும் பொருளால் பெயர் பெற்று விளங்கினர். சங்கத்தமிழர் உள்நாடு மட்டுமல்லாது வெளிநாட்டு வாணிகத்திலும் சிறந்து விளங்கினர்"[5] என்று மு.அலியார் குறிப்பிடுகின்றார்.

சங்க கால மக்களின் வாணிகம் அவர்கள் வாழ்க்கையோடு பின்னிப் பிணைந்தது என்றும், அவர்கள் வாழ்ந்த நிலத்திற்கு ஏற்பத் தொழில் மாறுபட்டு, அதனால் வாணிகம் வேறுபட்டுக் காணப்படுவதையும் அறிய முடிகின்றது.

**வாணிகத்தின் வகைகள்**

வாணிகத்தை ஒரு நாட்டின் பொருளாதார நிலையை மதிப்பிட உதவும் ஒரு சிறந்த அளவுகோலாகக் கருதலாம். சங்ககால வாணிகத்தை,

1. உள்நாட்டு வாணிகம்
2. வெளிநாட்டு வாணிகம்(கடல்வழி வாணிகம்)

---

4. பின்னத்தூர் நாராயணசாமிஐயர்(உ.ஆ.), நற்றிணை நானூறு, ப.7.
5. மு. அலியார், சங்கத்தமிழ்ச் சொல்லும் வாணிகம், ப.36.

என இரு வகையாகப் பிரிக்கலாம். உள்நாட்டு வாணிகத்தைப் பற்றி அறிந்து கொள்ள முழுவதும் இலக்கியச் சான்றுகளே பயன்படுகின்றன. வெளிநாட்டு வாணிகத்தைப் பற்றிச் சிறிது விளக்கமாகவே அறிந்து கொள்ளும் வகையில் யவனக் கடற்பயணிகளின் குறிப்புக்கள் உள்ளன.

**உள்நாட்டு வாணிகம்**

உள்நாட்டு வாணிகத்தின் பெரும்பகுதி பண்டமாற்றாகவே நடைபெற்று வந்தது. உப்பு, நெல்லுக்குப் பதிலாகவும், தேனும் கிழங்கும், மீன், எண்ணெய்கள் என்பனவற்றோடும். கரும்பு, அவல், மான் இறைச்சி, மது என்பனவற்றோடும் பண்ட மாற்றிக் கொண்டனர்.

"பெரிய நகரங்களில் நிறுவப்பட்ட சந்தைகளும், அங்காடிகளும் இருந்தன. மற்ற இடங்களில் கூடைக்காரர்கள் பொருள்களைத் தலைச் சுமையாகக் கொண்டு சென்று நுகர்வோர் வாழுமிடங்களில் வியாபாரம் செய்தனர். சில சமயங்களில் பொருள்கள் உற்பத்தி செய்யப்பட்ட இடங்களிலேயே விற்கப்பட்டன"[6] என்று ந.சுப்பிரமணியன் உள்நாட்டு வாணிகம் பற்றி விளக்கம் அளிக்கிறார்.

உள்நாட்டு வாணிகரில் பொருள்களை உற்பத்தி, செய்து அந்த இடத்திலேயே விற்போரும், பொருள்களை ஆங்காங்கு கொண்டு சென்று விற்போரும் என இருபிரிவினர் இருந்தனர்.

**தரை வாணிகம்**

சங்க காலத்து வாணிகம் தரை வழியாகவும், கடல் வழியாகவும் நடந்தது. கடலில் சென்று வாணிகம் செய்தது போலவே தரை வழியாகவும் பல நாடுகளுக்குச் சென்று வாணிகம் செய்தார்கள். தமிழ் நாட்டில் மட்டும் அல்லாமல் தரைவழியாக வடஇந்திய நகரங்களுக்கும் சென்று வாணிகம் செய்தனர். பெரிய வாணிகம் செய்தவர்களைப் 'பெருங்குடி வாணிகர்' என்று அழைத்தனர்.

அயல் நாடுகளுக்குத் தரை வழியாகச் சென்று வாணிகம் செய்த சாத்தர் கழுதைகள், எருதுகள், வண்டிகள் ஆகியவற்றில் வாணிகப் பொருள்களை ஏற்றிக் கொண்டு கூட்டமாகச் சென்றார்கள். அவர்கள் போகிற வழிகளில் மனித வாசம் இல்லாத பாலை நிலங்களில் வழிப்பறிக் கொள்ளைக்காரர்கள் வந்து

---

6. ந. சுப்பிரமணியன், சங்க கால வாழ்வியல், ப.338.

கொள்ளையடித்தார்கள், அவர்களை அடித்து ஓட்டுவதற்காக வாணிகச் சாத்தர் தங்களோடு வில் வீரர்களையும், வாள் வீரர்களையும் அழைத்துச் சென்றனர். வாணிகர் சாத்தை வேடர்கள் கொள்ளையடித்ததைச் சங்க நூல்கள் கூறுகின்றன.

பாலை நிலத்தின் வழியே சென்ற வாணிகச் சாத்தைக் கொள்ளையிட்ட வேடரைக் கடியலூர் உருத்திரங்கண்ணனார்,

**"சாத்தெறிந்து அதர் கூட்டு ண்ணும்**

**அணங்குடைப் பகழிக் கொடுவில் ஆடவர்"**[7]

என்று கூறுகின்றார். இவ்வாறு வேறு நாடுகளுடன் வாணிகம் செய்த வாணிகச் சாத்துக்கு அக்காலத்தில் துன்பங்கள் பல இருந்தன. அந்த ஆபத்துக்களையும் கருதாமல் அவர்கள் வாணிபம் செய்தார்கள்.

சாத்துக்களின் தலைவனான வாணிகனுக்கு, 'மாசாத்துவன்' என்று பெயர். காவிரிப்பூம்பட்டினத்தில் இருந்த கோவலனுடைய தந்தையாகிய மாசாத்துவன், சோழ அரசனுக்கு அடுத்த நிலையில் பெருங்குடி மக்களில் முதல் குடிமகனாக இருந்ததை,

**"பெருநிலம் முழுதாளும் பெருமகன் தலைவைத்த**

**ஒரு தனிக் குடிகளோடு உயர்ந்தோங்கு செல்வத்தான்**

**வருநிதி பிறர்க்காற்றும் மாசாத்துவா னென்பான்**

**இருநிதிக் கிழவன் மகன் ஈரெட்டாண் டகவையான்"**[8]

என்று சிலப்பதிகாரப் பாடல் அடிகள் விளக்குகின்றன. இதனால் வாணிகர் அரசருக்கு அடுத்த நிலையில் பெருங்குடி மக்களாய்ச் செல்வச் செழிப்புடன் வாழ்ந்திருக்கின்றனர்.

**எட்டிப்பட்டம்**

வாணிகத் துறையில் இவ்வளவு துன்பங்கள் இருந்தும் அக்காலத்துத் தமிழ் வாணிகர், வாணிகத் தொழிலை அயல் நாடுகளோடு தரை வழியாகவும், கடல் வழியாகவும் சென்று நடத்திப் பொருள் ஈட்டினார்கள், சேர, சோழ, பாண்டிய அரசர்களும் அவ்வாணிகர்களுக்கு உறுதுணையாக இருந்தனர். சங்ககால அரசர்கள்

---

7. ந.மு. வேங்கடசாமிநாட்டார்(உ.ஆ.), அகநானூறு, மணிமிடைபவளம், ப.166.
8. ரா. சீனிவாசன், சிலப்பதிகாரம் மூலமும் திறனாய்வும், ப.244.

வாணிகத்தில் பெருஞ்செல்வத்தை ஈட்டின மாசாத்துவர்களுக்கும், மாநாய்கர்களுக்கும் எட்டிப் பட்டமும், எட்டிப் பூவும் அளித்துச் சிறப்புச் செய்தார்கள். 'எட்டிப் பூ' என்பது பொன்னால் செய்யப்பட்ட தங்கப் பதக்கம் போன்ற அணியாகும்.

காவிரிப்பூம்பட்டினத்தில் எட்டிப்பட்டம் பெற்றிருந்த சாயலன் என்னும் வாணிகனைச் சிலப்பதிகாரம்,

**"எட்டி சாயலன் இருந்தோ தனது**

**பட்டினி நோன்பிகள் பலர்புகு மனையில்"**[9]

என்று குறிப்பிடுகிறது. இதனால் எட்டிப்பட்டம் என்பது வாணிகர் தலைவன் பெறும் பட்டம் எனலாம்.

**கடல் வாணிகம்**

தரை வாணிகத்தோடு தமிழர்கள் கடல் வாணிகத்தினையும் மேற்கொண்டனர். கடல் வாணிகத்தில் கரையோர வாணிகம், நடுக்கடல் வாணிகம் என இருவகை உண்டு. மரக்கலங்களாகிய நாவாய்களில் உள்நாட்டுச் சரக்குகளை ஏற்றிக் கொண்டு போய் அயல் நாடுகளில் விற்று. அந்நாடுகளிலிருந்து வேறு பொருள்களை ஏற்றிக் கொண்டு வந்தார்கள். தமிழ்நாட்டுக்குக் கிழக்கே வெகு தூரத்தில் ஆயிரம் மைலுக்கு அப்பால் இருந்த காழகம், கடாரம் போன்ற கடல் கடந்த நாடுகளுக்குச் சென்ற போது நடுக்கடலில் கப்பல்களை ஓட்டிச் சென்றனர்.

பண்டையக் காலத்தில் தமிழர்கள் சிறந்த கடலோடிகளாகவும், கடல் வாணிகர்களாகவும் விளங்கினர். "கிறிஸ்து பிறப்பதற்குப் பன்னூறாண்டுகளுக்கு முன்பே தமிழர் மேற்கே கீரிசு, உரோம், எகிப்து முதல் கிழக்கே சீனம் வரையில் கடல் வாணிகத் தொடர்பு கொண்டிருந்தனர். எகிப்து, பாலத்தீனம், மெசபடோமியா, பாபிலோனியா, சீனம் ஆகிய நாடுகள் தமிழரின் பொருள்களை விரும்பிப் பெற்றன. ஏலமும், இலவங்கமும், இஞ்சியும், மிளகும் மேற்காசிய நாடுகளில் நல்ல விலைக்கு விற்கப்பட்டன"[10] என்று தட்சிணாமூர்த்தி தெரிவிக்கிறார். இதனால் பண்டைத் தமிழர் பல்லாயிரக்கணக்கான ஆண்டுகளுக்கு முன்பே மரக்கலம் ஏறி கடல் கடந்து வாணிகம் செய்ததை அறிய முடிகின்றது. சங்ககாலத் தமிழகத்தில் நிகழ்ந்த கடல்வழி

9. ந. மு. வேங்கடசாமிநாட்டார்(உ.ஆ.), சிலப்பதிகாரம், ப.136.

10. அ. தட்சிணாமூர்த்தி, தமிழர் நாகரிகமும் பண்பாடும், ப.95.

வாணிகத்தில் சேரநாட்டு நறவு, மங்களூர், சோழநாட்டுப்பூம்புகார், நாகப்பட்டினம், பாண்டிய நாட்டுக் கொற்கை, தொண்டி, மருங்கூர்ப்பட்டினம், குமரி, விழிஞம், தொண்டை நாட்டு வீரை(அரிக்கமேடு) நீர்ப்பெயற்று, எயிற்பட்டினம், கொல்லத்துறை போன்ற துறை முகங்கள் மிக முக்கியப் பங்கு வகித்தன.

**கரையோர வாணிகம்**

கொற்கை, தொண்டி, பூம்புகார், சோபட்டினம் போன்ற தமிழ்நாட்டுத் துறைமுகப் பட்டினங்களிலிருந்து நாவாய்களில் புறப்பட்டுச் சென்ற தமிழ் வாணிகர் கிழக்குக் கடல் ஓரமாகவே நாவாய்களைச் செலுத்தி நெல்லூர், கலிங்கப் பட்டினம், தம்ரலிப்தி (வங்காளத் துறைமுகம்) போன்ற பட்டினங்களுக்குச் சென்றனர். பிறகு கங்கையாறு கடலில் கலக்கிற புகர் முகத்தின் ஊடே கங்கையாற்றில் நுழைந்து கங்கைக் கரையில் இருந்த பாடலிபுரம், காசி (வாரணாசி) போன்ற ஊர்களில் வாணிகம் செய்து திரும்பியதை,

**"நரம்பிசைத் தன்ன இன்குரல் குருகின்**
**கங்கை வங்கம் போகுவர் கொல்லே"**[11]

என்ற நற்றிணைப் பாடல் அடிகள் கூறுகின்றன. இவ்வாறு தமிழ் வாணிகர்கள் கரையோர மாகவே சென்று வாணிகம் மேற்கொண்டனர்,

கங்கைக் கரையில் உள்ள பாடலிபுரத்தில் தமிழர் வாணிகம் செய்தனர். அப்பொழுது கி.மு. 4ஆம் நூற்றாண்டில் மகத நாட்டை அரசாண்ட நந்த அரசர். தங்களுடைய தலைநகரமான பாடலிபுரத்தில் கங்கையாற்றின் கீழே பெருஞ்செல்வத்தைப் புதைத்து வைத்திருந்தார். அதனை அங்கே சென்று வாணிகம் புரிந்த தமிழ் வாணிகரின் வாயிலாகத் தமிழ் நாட்டார் அக்காலத்தில் அறிந்திருந்தனர். நந்த அரசரின் செல்வப் புதையலை,

**"பல்புகழ் நிறைந்த வெல்போர் நந்தர்**
**சீர்மிகு பாடலிக் குழீஇக் கங்கை**
**நீர்முதற் கரந்த நிதியங் கொல்லே"**[12]

என்ற அகநானூற்றுப் பாடல் அடிகளில் மாமூலனார் குறிப்பிட்டுள்ளார்.

---

11. பின்னத்தூர் நாராயணசாமிஐயர்(உ.ஆ.), நற்றிணை நானூறு, ப.237.
12. ந. மு. வேங்கடசாமிநாட்டார்(உ.ஆ.), அகநானூறு, மணிமிடைபவளம், ப.341.

சங்க காலத்தில் தமிழ் வாணிகர்கள் கிழக்குக் கடல் வழியாக ஆந்திர மாநிலம் அமராவதியில் வாணிகம் புரிந்ததற்குச் சான்றாக அங்குக் கட்டப்பட்டுள்ள அமராவதி ஸ்தூபி விளங்குகிறது. "அமராவதி பௌத்த ஸ்தூபிக் கட்டத்திலிருந்து கிடைத்த தூண்கல் ஒன்றில் தமிழன் கண்ணனும். அவன் தம்பி இளங்கண்ணனும், அவன் தங்கை நாகை (நாகம்மாள்) என்பவளும் சேர்ந்து அந்தத் தூண் திருப்பணியைச் செய்ததாக எழுதப்பட்டுள்ளது. இந்தச் சாசனக் கல்லின் அளவு 2 அடி 8 அங்குல அகலமும், 3 அடி 6 அங்குல உயரமும் கொண்டதாகும். இதில் எழுதப்பட்டுள்ள எழுத்து, பழைய பிராமி எழுத்தாகவும், மொழி பாலிமொழியாகவும் உள்ளன. இப்பொழுது இந்தக்கல் இங்கிலாந்து தேசத்துக்குக் கொண்டு போகப்பட்டு அங்கு இலண்டன் மாநகரத்துக் காட்சி சாலையில் வைக்கப் பட்டிருக்கிறது"[13] என்கிறார் பர்கிஸ்.

தமிழர்கள் கரையோரமாகவே பாடலிபுரம், கலிங்கம், ஆந்திரா போன்ற பல இடங்களுக்குச் சென்று வாணிகம் புரிந்துள்ளனர். இவையனைத்தும் தமிழர்களின் கரையோர வாணிகத்திற்குச் சிறந்த எடுத்துக்காட்டுகளாக விளங்குகின்றன.

**நடுக்கடல் வாணிகம்**

தமிழகத்திற்குக் கிழக்கே வெகுதூரத்தில் வங்காள விரிகுடா கடலுக்கும் அப்பால் பிசிபிக் மகாசமுத்திரத்தில் பெருந்தீவுகள் உள்ளன. இக்காலத்தில் அத்தீவுகள் கிழக்கிந்தியத் தீவுகள் என்றும், இந்தோனேஷியத்தீவுகள் என்றும் அழைக்கப்படுகின்றன. சங்க காலத்தில் இத்தீவுக்கூட்டம் சாவகம் என்றும், சாவகநாடு என்றும் வழங்கப்பட்டது. தமிழ்நாட்டிலிருந்து ஆயிரம் மைல்களுக்கு அப்பால் உள்ள சாவகத்தீவுகளுக்கு வங்காளவிரிகுடாக் கடலைக் கடந்து போய் நடுக்கடலில் கப்பலோட்டிப் பழந்தமிழர் வாணிகம் புரிந்துள்ளனர். இவ்வாணிகமே நடுக்கடல் வாணிகம் என அழைக்கப்பட்டது.

**தமிழகம் அயல்நாட்டுடன் கொண்ட வாணிகத் தொடர்புகள்**

பழந்தமிழகம் அயல்நாட்டுடன் கொண்ட வாணிகத் தொடர்பை அந்நாடுகளின் அடிப்படையில் மேற்காசிய நாடுகளுடன் கொண்ட கடல் வாணிகத் தொடர்பு (எகிப்து, பாபிலோன், சுமேரியா, அசிரியா, கிரேக்கம், உரோம், அரேபியா), கிழக்காசிய நாடுகளுடன் கொண்ட கடல் வாணிகத் தொடர்பு (சீனம், மலேசியா, சாவகம்,

---

13. J. Bargees, Notes on the Amaravati Stupa, p.20.

வடபோர்னியா) என இரு வகைப்படுத்தலாம். இது தவிர அருகிலிருந்த இலங்கைத் தீவுடனும், இந்தியாவின் உள்நாட்டுப் பகுதிகளிலும் தமிழகம் கடல் வாணிகத்தில் தொடர்பு கொண்டிருந்தது.

**ஏற்றுமதிப் பொருள்கள்**

தமிழ்நாட்டில் இருந்து ஏற்றுமதி செய்யப்பட்ட பொருள்கள் இவையெனச் சங்க இலக்கியமான மதுரைக்காஞ்சி கூறுகின்றது. கடலில் விளைந்த முத்துக்களும், அரத்தால் அறுத்துச் செய்ய பெற்ற சங்கு வளையல்கள், பரதர் தந்த பல்வேறு பண்டங்கள், கழிகளில் விளைந்த உப்பையும், இனிய புளியினையும் பரதவரால் மணலிலே பரப்பிச் செய்யப்பட்ட கருவாட்டையும் வேற்று நாடுகளுக்கு ஏற்றுமதி செய்தனர். இவற்றுடன் அருங்கலன்களும் ஏற்றுமதி செய்யப்பட்டதை,

**"முழங்குகடல் தந்த விளங்குகதிர் முத்தம்**
**அரம்போழ்ந் தறுத்த கண்ணேர் இலங்குவளை**
**பரதர் தந்த பல்வேறு கூலம்**
**இருங்கழிச் செறுவில் தீம்புளி வெள்ளுப்புப்**
**பரந்தோங்கு வரைப்பின் வன்கைத் திமிலர்**
**கொழுமீன் குறைஇய துடிக்கண் துணியல்**
**விழுமிய நாவாய் பெருநீர் ஓச்சுநர்**
**நனந்தலைத் தேயத்த நன்கலன் உய்ம்மார்**
**புணர்ந்துடன் கொணர்ந்த புரவியொ டனைத்தும்**
**வைகல் தோறும் வழிவழிச் சிறப்ப"**[14]

என்ற பாடல் அடிகள் எடுத்துக்கூறுகின்றன. இவ்வாணிகப் பொருள்களை ஏற்றிய வங்கம் இரவு, பகலாக எங்கும் தங்காது அது செல்ல வேண்டிய இடத்தைச் சென்றடைந்து விடும்.

சங்க காலத்தில் வெளிநாட்டு வாணிகத்தில் முத்து முக்கிய ஏற்றுமதிப் பொருளாக இருந்தது. பாண்டிய நாட்டுக் கொற்கைத் துறைமுகத்தில் எடுக்கப்பட்ட

---

14. நச்சினார்க்கினியர்(உ.ஆ.), மதுரைக்காஞ்சி, ப.310.

முத்து, தரத்தில் உயர்வாக இருந்ததால் உலகளவில் பெயர் பெற்றிருந்தது. உரோம நாட்டுப் பெண்கள் தமிழ்நாட்டு முத்துக்களை மிகவும் விரும்பி அணிந்தனர். "கையசு என்னும் பேரரசனின் மனைவியாகிய பௌலீனா(Paulina) என்பவள் 40,000,000 பொன் பெறுமதியான இரத்தினங்களாலும், முத்துக்களாலும் தன்னை அழகு செய்திருந்தாள்"[15] என்று பிளினி கூறுவர். அக்காலத்தில் "முத்துப் பெறும் இடமாகவே தென்னிந்தியாவைக் கருதினர்"[16] எனலாம்.

தமிழர் பிறநாடுகளை விட ரோம் நாட்டினருடன் மிகுதியான அளவில் வாணிகம் செய்துள்ளனர். தமிழ்நாட்டிலிருந்து மேற்காசிய நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்பட்ட பொருள்களுள் நான்கில் மூன்று பகுதி மிளகாகும். "கிழக்கிலிருந்து உரோமுக்குச் சென்ற பொருள்களுள் முக்காற் பகுதி மிளகு, அக்கால வாணிபத்திற்குத் தேவைப்பட்ட மிளகு முழுமையும் மலையாளக் கரையிலிருந்து சென்றது. மிகப் பழங்காலந்தொட்டு மிளகு ஐரோப்பிய நாடுகளில் இறைச்சியைப் பழுதுபடாமற் பாதுகாக்கவும், உணவில் சேர்த்தும் பயன்படுத்தினர். கிப்போக்கிறேற்சு(Hippocraoes) என்பவர் இதனை இந்திய மருந்து எனக் குறிப்பிட்டுள்ளார்."[17] மிளகைத் தவிர சுக்கு, ஏலக்காய் ஆகிய பொருள்களும் சேலைகளும், உயர்ந்த வகைப்பஞ்சும் ரோம் நாட்டு மக்களால் விரும்பி வாங்கப்பட்டன.

எகிப்து, பாலஸ்தீனம், ரோம் போன்ற நாடுகளுக்குத் தமிழகத்திலிருந்து ஏற்றுமதிசெய்யப்பட்ட பொருள்களுள் யானைக் கோடும் ஒன்றாகும். அக்காலத்தில் யானைத் தந்தத்தால் சீப்பு, சிமிழ், கட்டில் எனப் பலவகையான பொருள்கள் செய்யப்பட்டன. யானைக் கோட்டை ஈர்வாளினால் அறுத்தும், கடைந்தும் பொருள்கள் செய்யப்பட்ட தொழில் மதுரையில் நடைபெற்றதை,

**"வம்பின் முடிநவும், மாலையின் புனைநவும்,**

**வேதினத் துப்பவும், கோடுகடை தொழிலவும்"**[18]

என்று சிலப்பதிகாரம் குறிப்பிடுகின்றது. யானைத் தந்தங்களையும் தந்திலான பொருள்களையும் யவன வாணிகர்கள் வாங்கிச் சென்றனர்.

---

15. Warmington, The Commerce between the Roman Empire and India, Pp.54-58.
16. Cambridge, Histroy of India(Vol-I), p.423.
17. கே. தேவராஜன்(தொ.ஆ.), தமிழ் இந்தியா, ப.151.
18. ந.மு. வேங்கடசாமிநாட்டார்(உ.ஆ.), சிலப்பதிகாரம், ப.433.

"கி.மு.1580 - 1350 இல் எகிப்து நாடாண்ட பதினேழாவது அரசர்கள் தந்தம், தந்தத்தால் செய்யப் பெற்ற மேசை, நாற்காலி, பெட்டி, உருவச்சிலை போன்ற பொருள்களைத் தமிழகத்தின் மேற்குப் பகுதியில் இருந்து பெற்று மகிழ்ந்தனர்"[19] என்கிறார் கா.கோவிந்தன். ஆகவே சங்ககாலத்தில் யானைத்தந்தம் வாணிக ஏற்றுமதிப் பொருளாக இருந்தது எனலாம்.

தென்னிந்தியாவிலிருந்து ஏற்றுமதியான பொருள்களுள் முத்து, வைரம், இரத்தினக்கற்கள், மிளகு, கருங்காலி, கருமருது, தேக்கு, சந்தனம், வெண்துகில், அரிசி, ஏலக்காய், இலவங்கப்பட்டை, இஞ்சி போன்றவை சிறப்பானவை. சிங்கம், கடுவாய்ப்புலி, குரங்கு போன்ற விலங்குகளும், மயில், கிளி போன்ற பறவைகளும் ஏற்றுமதியாயின. இவ்வாறாக நம் நாட்டுப்பறவைகள், விலங்குகள், பிறபொருள்கள் வெளிநாடுகள் பலவற்றிற்கும் ஏற்றுமதி செய்யப்பட்டன.

**இறக்குமதிப் பொருள்கள்**

குதிரை, மணி, பொன், ஈழத்து உணவு, காழகத்துப் பொருள்கள் போன்றன தமிழகத்தில் இறக்குமதி செய்யப்பட்ட பொருள்களாகும். குதிரைகள் சங்க காலத்தில் கிழக்குக்கரைத் துறைமுகமான காவிரிப் பூம்பட்டினத்தில் பாரசீகம், சிந்து போன்ற நாடுகளிலிருந்து இறக்குமதி செய்யப்பட்டன.

அக்காலத்தில் சேர, சோழ, பாண்டியர் மூவரும் நால்வகை படைகளை வைத்திருந்தனர். அதில் குதிரைப் படையும் ஒன்றாகும், தேர்ப்படையும் குதிரைகள் கொண்டு இயக்கப்பட்டன. மன்னர்கள் மூவரும் குதிரைப் படையைப் பெருக்குவதில் ஆர்வம் உடையவர்களாக இருந்துள்ளனர். ஆகவே வெளிநாடுகளிலிருந்து குதிரைகள் மரக்கலம் வழியாகக் கொண்டு வரப் பட்டதை,

**"வால் உளைப் புரவியொடு வடவளம் தரூஉம்**

**நாவாய் சூழ்ந்த நளநீர்ப் படப்பை"**[20]

என்று பெரும்பாணாற்றுப்படைப் பாடல் அடிகள் சுட்டுகின்றன. வெளிநாடுகளிலிருந்து கடல் வழியாகத் தமிழகம் கொண்டு வரப்பட்ட குதிரைக் கன்றைத் தமிழ் வாணிகர்கள் வாங்கி இலங்கையில் விற்பனை செய்தனர். கி.மு. இரண்டாம் நூற்றாண்டில் சேனன்,

---

19. கா. கோவிந்தன், தமிழர் வாணிகம், பக்.12-13.

20. நச்சினார்க்கினியர்(உ.ஆ.), பெரும்பாணாற்றுப்படை, ப.199.

குட்டகன் என்ற இரு தமிழ் வாணிகர்கள் இலங்கை அரசனை வென்று, இருபது ஆண்டுகள் இலங்கையை அரசாண்டார்கள் என்றும், அவர்கள் அசுவ (அசுவம்-குதிரை) வாணிகர்களின் மக்கள் என்று மகாவம்சம் என்ற சிங்கள வரலாற்று நூல் கூறுகின்றது.

சங்க காலத்தில் யவன தேசத்திலிருந்து (கிரேக்கம், உரோம்) வாணிகத்தின் பொருட்டு யவனத்தேறல், யவனவிளக்கு (ஓதிம விளக்கு), கன்னல் போன்ற யவனப் பொருள்கள் தமிழகம் கொண்டு வரப்பட்டன. யவனதேசத்திலிருந்து உயர்ரக மது இறக்குமதி செய்யப்பட்டது, அம்மதுவிற்கு 'யவனத்தேறல்' என்று பெயர், தேறல் என்றால் தெளிவு என்பது பொருளாகும். தெளிந்தகள் எனவும், இனிமையான தேன் எனவும் பொருள் கொள்ளலாம். யவன நாட்டிலிருந்து இறக்குமதி செய்யப்பட்டதால் அது யவனத் தேறலாயிற்று.

யவனர்களால் தமிழகத்தில் இறக்குமதி செய்யப்பட்ட இம்மதுவானது திராட்சைப் பழச்சாற்றினால் (wine) செய்யப்பட்டது. இதன் விலை அதிகமானதால் அக்காலத்தில் அரசர்கள் மட்டுமே வாங்கி அருந்தினர். பாண்டியன் நன்மாறன் யவனத்திலிருந்து வந்திறங்கிய சுவைமிக்கத் தேறலைப் பொன்னினால் செய்த அழகிய மணிக்கிண்ணத்தில் ஏந்திவந்து அழகு மகளிர் கொடுக்க அதனை உண்டு மகிழ்ந்ததை,

**"யவனர் நன்கலம் தந்த தண்தமிழ் தேறல்**

**பொன்செய் புனைகலத் தேந்தி நாளும்**

**ஒண்தொடி மகளிர் மடுப்ப மகிழ்சிறந்து"**[21]

என்ற புறநானூற்றுப் பாடல் அடிகள் கூறுகின்றன. இதனால் யவனத் தேறல் தமிழகத்தில் இறக்குமதி செய்யப்பட்டதை அறியமுடிகிறது.

யவன தேசத்திலிருந்து அன்னப் பறவையின் உருவமாக அமைக்கப்பட்ட 'ஓதிமவிளக்கும்', பெண் வடிவமாக அமைக்கப்பட்ட பாவை விளக்கும் தமிழகத்தில் இறக்குமதி செய்யப்பட்டன. ஓதிம விளக்கு என்பது அன்னப்பறவை வடிவில் இருந்ததாகவும், விடியற்காலைப் பொழுதில் தோன்றும் விடிவெள்ளி போல விட்டு விட்டு ஒளிவீசியதாகவும் கடியலூர் உருத்திரங்கண்ணனார்,

---

21. ஔவை சு. துரைசாமிப்பிள்ளை(உ.ஆ.), புறநானூறு மூலமும் உரையும் (பகுதி-I), ப.146.

**"வேள்வித் தூணத் தசைஇ யவனர்**

**ஓதிமவிளக்கின் உயர்மிசைக் கொண்ட**

**வைகுறு மீனின் பைபயத் தோன்றும்"**[22]

என்று பெரும்பாணாற்றுப் படையில் குறிப்பிட்டுள்ளார். இவ்வாறு யவன நாட்டிலிருந்து தமிழகத்திற்குப் பல பொருள்கள் இறக்குமதி செய்யப்பட்டன. சங்ககாலத் தமிழகத்தில் உள்நாட்டு வாணிகமும். வெளிநாட்டு வாணிகமாகிய கடல்வழி வாணிகமும் சிறந்திருந்தமையைக் காணலாம்.

**துறைமுகங்கள்**

கப்பல்களை நிறுத்தும் இடங்கள் துறைமுகங்கள் எனப்படுகின்றன. வாழ்வியற் களஞ்சியம், "நிலப்பரப்பையும், கடலையும் இணைக்கும் பாலமே துறைமுகமாகும்"[23] என்கிறது. ஓர் நாட்டிலிருந்து பொருள்களை மற்றொரு நாட்டிற்கு இறக்குமதி, ஏற்றுமதி செய்வதற்கு அந்தந்த நாடுகளில் துறைமுகங்கள் தேவை. ஆகவே ஒவ்வொரு நாட்டிலும் துறைமுகப்பட்டினங்கள் ஏற்பட்டிருந்தன.

பெரும்பாலும் துறைமுகப் பட்டினங்கள், ஆறுகள் கடலில் சேர்கின்ற புகர் முகங்களில் இருந்தன. ஆற்று முகத்துவாரங்கள் இல்லாத துறைமுகப் பட்டினங்களும் சில இருந்தன. ஒவ்வொரு பெரிய துறைமுகங்களிலும் கலங்கரை விளக்குகள் அமைக்கப்பட்டிருந்தன. துறைமுகங்களில் ஏற்றுமதி, இறக்குமதியாகும் பொருள்களுக்குச் சுங்கம் வசூலிக்கப்பட்டது. அந்த சுங்கப்பணம் நாட்டையாளும் அரசர்களுக்குரியது.

தமிழகத்தில் பல துறைமுகங்கள் இருந்தன என்பதற்குச் சங்க இலக்கியங்களில் சான்றுகள் உள்ளன. யவன ஆசிரியர் குறிப்புக்களும் இதனை உறுதிப்படுத்துகின்றன. "மேற்குக் கடற்கரையில் முசிறி, பந்தர், கொடுமணம், தொண்டி ஆகிய துறைமுகங்களும், கிழக்குக் கடற்கரையில் கொற்கை, மருங்கூர்ப்பட்டினம், காவிரிப்பூம்பட்டினம், எயிற்பட்டினம், தொண்டி ஆகியனவும் இலக்கியங்களில் குறிப்பிடப்படுகின்றன."[24] கப்பல் வழிப் பயணத்திற்குப் பட்டினங்கள், துறைமுகங்கள் பெரும் வகையில் பயன்பட்டு வருந்துள்ளன.

---

22.பொ. வே. சோமசுந்தரனார்(உ.ஆ.), பெரும்பாணாற்றுப்படை, ப.139.
23. வெ. சுப்பிரமணியம்(பதி.ஆ.), வாழ்வியற் களஞ்சியம் (தொகுதி-10), ப.700.
24. வெ. கிருட்டிணசாமி, தமிழ் இலக்கியத்தில் பயணச் செய்திகள், ப.40.

சங்ககாலத் தமிழகப் பொருளாதார வளர்ச்சியில் கடல் வாணிகம் மிக முக்கிய பங்கு வகித்தது. இக்கடல் வழி வாணிகத்திற்குத் துறைமுகம் இன்றியாமையாத ஒன்றாக விளங்கியது. சங்ககால நகர மயமாக்கத்தின் மிக முக்கிய காரணியாக விளங்கியது துறைமுகம் சார்ந்த கடல் வாணிகமாகும். இதனால் சங்ககாலத் தமிழகக் கடற்கரையிலிருந்த துறைமுகங்கள் பன்னாட்டு வாணிக மையங்களாகவும் விளங்கின. இவ்வகையில் கி.மு. 3ஆம் நூற்றாண்டிலிருந்து கி.பி. 3ஆம் நூற்றாண்டு வரை தமிழகத்தின் மேற்குக் கடற்கரையிலிருந்த சேரநாட்டுத் தொண்டி, முசிறி, சோழநாட்டுக் காவிரிப்பூம்பட்டினம், பாண்டியநாட்டுக் கொற்கை, மருங்கூர்ப்பட்டினம், நடுநாட்டு அரிக்கமேடு போன்ற துறைமுகங்கள் தமிழகக் கடல் வாணிகத்தில் முக்கிய பங்கு வகித்தன.

கா. அப்பாத்துரை, "தொல் பழங்காலத்திலிருந்தே உலக வாணிகக் களங்களாக எண்ணற்ற பல துறைமுகப் பட்டினங்கள் தென்னக் கரையெங்கும் நிரம்பியிருந்தன. ஐயாயிரம் ஆண்டுகளுக்கு முன்னிருந்து தென்கரை உவரியும், மூவாயிர ஆண்டுகளுக்கு முன்னிருந்து தென்கரைக் கொற்கையும், காயலும், மேல்கரை முசிறியும், சேரன் தொண்டியும், கீழ்க்கரை மரக்காணம், மல்லை, பொதுசா, காவிரிப்பூம்பட்டினம், நாகப்பட்டினம், சோழன் தொண்டி போன்ற துறைமுகங்கள் உலக வாணிகக் களங்களாக விளங்கின"[25] என்கிறார்.

இதனால் துறைமுகங்கள் கடல் வாணிகப் போக்குவரத்துக்கு ஆதாரமாக விளங்குவது, கப்பல்கள் மற்றும் படகுகள் வந்து தங்கிச் செல்வதற்குரிய இடம் என்றும், ஒரு நாட்டின் பொருளாதாரத்தைப் பறைசாற்றும் களமாகவும் விளங்குகின்றது.

**எயிற்பட்டினத் துறைமுகம்**

சங்ககாலத்தில் தொண்டை நாட்டின் முக்கியத் துறைமுகப்பட்டினமாக இருந்தது எயிற்பட்டினமாகும். இதற்குச் சோபட்டினம் என்னும் பெயரும் இருந்தது. எயில் என்றாலும், சோ என்றாலும் மதில் என்பது பொருளாகும். இத்துறைமுகப் பட்டினத்தைச் சூழ்ந்து மதில் இருந்தபடியால் இப்பெயர் பெற்றது எனலாம். எரித்திரியக் கடலின் பெரிப்ளூஸ் என்னும் நூல் இந்தப் பட்டினத்தைச் 'சோபட்மா' என்று குறிப்பிடுகிறது. 'சோபட்மா' என்பது சோபட்டினம் என்பதன் மரூஉ ஆகும். மதிலைக் கொண்ட கடற்கரைப் பட்டினம் எயிற்பட்டினம் என்று ஆயிற்று.

---

25. கா. அப்பாத்துரை, தென்னகப் பண்பு, ப.23.

எயிற்பட்டினம் சங்க காலத்தில் ஓய்மா நாட்டின் துறைமுகப் பட்டினமாகவும், புகழ் பெற்ற கடல் வாணிக நகராகவும் விளங்கியது. இவ்வூர் கோப்பட்டினம், மதிற்பட்டினம் ஆகிய பெயர்களில் அழைக்கப்பட்டுள்ளன. சிறுபாணாற்றுப்படை உரையாசிரியர் இவ்வூரை எயிற்பட்டினம் என்றே தன் உரையில் சுட்டுகிறார்.

**"அலைநீர் தாழை அன்னம் பூப்பவும்**

**தலைநாள் செருந்தி தமனியம் மருட்டவும்**

**கடுஞ்சூல் முண்டகம் கதிர்மணி கழாஅலவும்**

**நெடுங்கால் புன்னை நித்திலம் வைப்பவும்,**

**கானல் வெண்மணல் கடல் உலாய் நிமிர்தர**

**பாடல் சான்ற நெய்தல் நெடுவழி**

**மணிநீர் வைப்பு மதிலொடு பெயரிய**

**பனிநீர்ப் படுவின் பட்டினம் படரின்"**[26]

என்னும் சிறுபாணாற்றுப்படை பாடலில் கிடங்கில் கோமான் என்று புகழப்படும் நல்லியக்கோடன் வாழும் கிடங்கிலுக்குச் செல்ல வேண்டும் என்றால் நெய்தல் நிலப்பெருவழி வழியாகக் கடந்து செல்ல வேண்டும். அவ்வாறு சென்றால் நீலநிறக் கடலின் மணியைப் போன்ற நீர் சூழ்ந்த நிலத்தில் குளிர்ந்த நன்னீருடன் கூடிய குளங்களை உடைய எயிற்பட்டினத்தைச் சென்றடையலாம். இந்த எயிற்பட்டினத்து துறைமுகத்தில் விரைந்து செல்லும் மரக்கலங்கள் ஒட்டகங்கள் தூங்குவது போல் நிற்பதைக் காணலாம் என்கிறார். இதனால் இந்தப் பட்டினம் கிடங்கிற் கோமானாகிய நல்லியக்கோடனுக்கு உரியது எனலாம்.

ஓய்மா நாட்டுக் கடற்கரையில் பட்டினம் என்ற ஊர் இருந்ததாகவும், அந்த ஊரின் பெயராலேயே இக்கடற்கரைப் பகுதி பட்டினநாடு என்று அழைக்கப்பட்டது. பட்டினநாடு ஓய்மா நாட்டில் இடம்பெற்றிருந்தது. முதலாம் இராசராசனின் கல்வெட்டுகளில் இப்பகுதியை ஓய்மாநாட்டு, பட்டினநாட்டு, தேவதானம் என்றும், முதலாம் இராசேந்திரன் கல்வெட்டில் ஓய்மாநாட்டுப் பட்டினநாட்டுப் பட்டினம் என்றும் குறிக்கப்பட்டு இருப்பதையும் காணலாம். முதலாம் குலோத்துங்கச் சோழனின் கல்வெட்டில் எயிற்பட்டினம் என்று வருவதைக் காணமுடிகிறது.

---

26. பொ.வே. சோமசுந்தரனார்(உ.ஆ.), சிறுபாணாற்றுப்படை, ப.35.

சங்க காலத்தில் வளம் கொழிக்கும் துறைமுகமாக விளங்கிய எயிற்பட்டினம், இயற்கைச் சீற்றத்தால் வங்கக் கடலில் மூழ்கியது. இவை பிற்காலத்தில் 'மரக்காணம்' என்று பெயர் பெற்றது. மரங்கள் நிறைந்திருந்த பகுதி என்பதால் மரக்காணம் என்ற பெயர் பெற்றது எனலாம். இவ்வூரில் உள்ள பூமீஸ்வரர் கோவிலில் பொறிக்கப்பட்ட முதலாம் இராஜராஜ சோழனின் கல்வெட்டில் 'மனக்கானம்' என்ற பெயர் இடம்பெற்றுள்ளது. "மணற்கானம்(மணற்காடு) என்ற சொல்லே மனக்கானம் என்று திரிந்திருக்கலாம்"[27] என்று மா. இராசமாணிக்கனார் கூறுகிறார். "விஜயநகரப் பேரரசின் காலத்தில் மனக்கானம், மரக்காணம் என்று திரிபுற்று வழங்கலாயிற்று"[28] என்றும் இவர் குறிப்பிட்டுள்ளார்.

மரக்காணம் ஊருக்கு வடக்கே சுமார் 2 - 3 கி.மீ. தொலைவில் கடல்நீரை உப்பளங்களுக்குக் கொண்டு செல்லும் கழிமுகம் உள்ளது. கடற்கரைக்கும், உப்பளங்களுக்கும் இடைப்பட்ட நிலத்தில் உள்ள பல குப்பங்களில் இன்றும் பரதவர் வாழ்கின்றனர். ஆகையால் இன்றைய மரக்காணம் பண்டைக் காலத்திலிருந்து எயிற் பட்டினம், சோபட்டினம், சோபட்மா, மனக்கானம் போன்ற பல்வேறு பெயர்களால் அழைக்கப்பட்டுள்ளதை அறியமுடிகின்றது.

**காவிரிப்பூம்பட்டினத் துறைமுகம்**

சங்ககாலத் தமிழகத்தில் இருந்த துறைமுகங்களில் கிழக்குக் கடற்கரையில் சோழர்களின் உலகத்தரம் வாய்ந்த துறைமுகமாகக் காவிரிப்பூம்பட்டினம் விளங்கியது. சங்க இலக்கியங்கள் புகார், பூம்புகார், பட்டினம், காவிரிப்பூம்பட்டினம் என பல பெயர்களில் சுட்டும் இத்துறைமுக நகரம் காவிரி ஆறு வங்கக் கடலில் புகுகின்ற இடத்தில் அமைந்ததால் இப்பெயர்களைப் பெற்றது எனலாம். இலக்கியங்கள் சுட்டுவது போல சங்ககாலத்தில் தமிழகம் வந்து சென்ற மேலை நாட்டுக் கடல் பயணிகளும் இந்நகர் குறித்த சிறப்புகளைப் பதிவு செய்யத் தவறவில்லை. இப்பட்டினத்தைப் பெரிப்ளுசு 'கமரா' எனவும், தாலமி 'கபேரிஸ் எம்போரியான்' (Kaberis Emporion) எனவும் குறிப்பிடுகின்றனர். மணிமேகலை காவிரிப்பூம்பட்டினத்தின் பிற பெயர்களாகக் குறிப்பனவற்றில் 'காகந்தி' என்பதும் ஒன்றாகும். "கி.பி. 5ஆம் நூற்றாண்டில் புத்ததத்தர் இங்கிருந்த புத்தவிகாரையில் தங்கியிருந்து பிராகிருத மொழியில் 'அபிதம்மவதாரம்' என்னும் இலக்கியத்தை இயற்றினார். இதில் இவ்வூர் 'கவேரபட்டினம்' எனக் குறிப்பிடப்படுவதோடு இதன் எழில்மிகு தோற்றம், அமைப்பு, அங்கு வாழ்ந்த உயர்குடி

27. மா. இராசமாணிக்கனார், பத்துப்பாட்டு ஆராய்ச்சி, ப.155.
28. மேலது, ப.157.

மக்கள் மற்றும் அரிய வைரக்கற்கள் விற்கப்பட்ட பெரிய கடைத்தெருக்கள் வரை பேசுவதை ஆய்வாளர்கள் பதிவு செய்துள்ளனர்."[29] இவ்வாறு காவிரிப்பூம்பட்டினம் சங்க காலத்தில் பல பெயர்களில் வழங்கப்பட்டன.

காவிரிப்பூம்பட்டினத் துறைமுகம் அகலமும், ஆழமும் கொண்டு விளங்கியதால் பாரம் ஏற்றிய கப்பல்கள் பாய் சுருக்காது நேரே ஆற்றினுள் புகுந்து துறைமுகத்தை அடைந்தன. அதன் கரைகளில் வெளிநாட்டிலிருந்து கொண்டு வந்த பண்டங்களை இறக்கின. அத்துறைமுகத்தின் கரையருகே உயர்ந்த மேடைகளும், பண்டக சாலைகளும் இருந்தன. அவ்விடத்தில் குவிந்திருந்த பொருள்களில் சோழர் முத்திரை பொறிக்கப் பட்டிருந்தன. சாவடியில் ஏற்றுமதி, இறக்குமதி செய்வதற்கான பொருள்கள் மலைபோல் குவிந்திருந்ததை,

**"மீப்பாய் களையாது மிசைப் பரம் தோண்டாது**
**புகாஅர்ப் புகுந்த பெருங்கலம் தகாஅர்**
**இடைப் புலப் பெரு வழிச் சொரியும்**
**கடற்பல் தாரத்த நாடு கிழவோயே"**[30]

என்ற புறநானூற்றுப் பாடல் அடிகளால் தெரியலாம். இதனால் இத்துறைமுகத்திலிருந்து அரசுக்கு நிறைய வருவாய் வரப்பெற்றதோடு வாணிபம் வளர்ச்சியடைந்திருந்தால் புகார் நகரமும் செல்வச் செழிப்போடு காணப்பட்டது என்பதையும் உணரமுடிகிறது.

நாகப்பட்டினம் மாவட்டம் சீர்காழி வட்டத்தில் காவிரிப்பூம்பட்டினம் இன்று ஒரு சிறிய மீனவக் கிராமமாகக் கடற்கரையில் அமைந்துள்ளது. இப்பூம்புகார் நகரம் பண்டைக்காலத்தில் கடல் சீற்றத்தால் அழிக்கப்பட்டு என்பதைக் கடல் சார் ஆய்வுகள் உறுதிப்படுத்துகின்றன.

இன்றும் கடலினுள் இடிந்த கட்டடங்களின் எச்சங்களையும், நகர அமைப்புகளையும் காணமுடிகிறது. பூம்புகார் பகுதியில் 1901ஆம் ஆண்டில் நடைபெற்ற அகழாய்வில் பல உறை கிணறுகள் கண்டுபிடிக்கப்பட்டன. 1962-73 ஆம் ஆண்டுகளில்

---

29. கே.வி. ராமன், பூம்புகாரில் அகழ்வாராய்ச்சி, இரண்டாம் சர்வதேச தமிழ் மாநாடு, (1968), ப.60.

30. ஔவை சு. துரைசாமிப்பிள்ளை(உ.ஆ.), புறநானூறு மூலமும் உரையும், ப.86.

நடைபெற்ற அகழாய்வில் மட்கல ஓடுகள், கட்டடப்பகுதியின் செங்கற்கள், அரிய கல்மணிகள், செப்பு நாணயங்கள், ரௌலட் மட்கல ஓடுகள், சுடுமண் பொம்மைகள் முதலானவை கிடைத்துள்ளன. இப்பகுதியில் 40-க்கும் மேற்பட்ட தொன்மையான இடங்கள் உள்ளன என்பதை ஆய்வின் வழி தெரியவருகின்றது.

காவிரிப்பூம்பட்டினப் பகுதியில் அமைந்துள்ள வானகிரி, நெய்தவாசல் போன்ற இடங்களில் நடத்தப்பட்ட அகழாய்வில் செங்கற்களால் கட்டப்பட்ட மேடையும், அதனருகில் ஒரு மூலையில் பாழடைந்த மரத்தூண்களும் கண்டுபிடிக்கப்பட்டன. இது படகுகள் வந்து நங்கூரம் இட்டுப் பொருள்களை ஏற்றவும், இறக்கவும் பயன்படுத்தப்பட்ட படகுத்துறை என ஆய்வில் கண்டறியப்பட்டது. இதனால் சங்க காலத்தில் இருந்த காவிரிப்பூம்பட்டின நிலப்பகுதியின் பல இடங்கள் கடலுக்கு இரையாகி உள்ளது என்பதை அறியலாம்.

**கொற்கைத் துறைமுகம்**

தமிழகத்தின் கிழக்குக் கடற்கரையில் தாமிரபரணி ஆற்றின் முகத்துவாரத்தில் சங்ககாலப் பாண்டியர்களின் இயற்கைத் துறைமுகமாகக் கொற்கை விளங்கியது. "கொற்கைப்பட்டினம் பண்டைக் காலத்திலிருந்து பாண்டிய மன்னர்களின் கடல் துறையாகவும், இந்தியாவிலே தலைசிறந்த வாணிக மையமாகவும் இருந்தது"[31] என்கிறார். அ. ராகவன்.

"கொற்கை என்பதற்குப் படை அல்லது படைவீடு என்று பொருள் கொள்ளப்படுகிறது. கொல்கை அல்லது கொல்கீஸ் என்பது சங்ககாலத் துறைமுக நகரான கொற்கையைத்தான் குறிக்கிறது. இன்றைய இலக்கியத் தமிழில் கொல்கை என்பதில் லகரம் றகரமாகத் திரிந்து கொற்கை ஆகியிருக்கிறது என்றும், கொற்கைப் பாண்டியர்களின் மதுரைக்கு முந்திய தலைநகர் மற்றும் துறைமுகமாக மட்டுமல்லாமல், தென்னிந்திய நாகரிகத்தின் தொட்டிலாகவும் ( The Cradle of Soth Indian Civilization) விளங்கியது என்றும் கால்டுவெல் குறிப்பிடுகிறார்"[32] எனப் பா. ஜெயக்குமார் தமிழகத் துறைமுகங்கள் என்ற நூலில் தெரிவிக்கிறார்.

சங்க காலத்தில் கொற்கைத் துறைமுகத்தில் முத்துக்குளித்தல் மிகச் சிறப்பாக நடந்தது. ஏற்றுமதிப் பொருள்களில் முத்தே தலைமையிடம் பெற்றிருந்தது. தமிழகம்

31. அ. இராகவன், கோநகர் கொற்கை, ப.24.
32. பா. ஜெயக்குமார், தமிழகத்துறைமுகங்கள், பக்.33-34.

மேலை நாடுகளுடன் வாணிகத் தொடர்பு கொண்டு ஈட்டிய பெரும்பொருளில் மிகப் பெரும்பகுதி கொற்கை முத்தினால் கிடைத்ததே எனலாம். கொற்கை முத்தால் புகழ்பெற்று விளங்கியதைச் சங்க இலக்கியங்கள் எடுத்தியம்புகின்றன.

பரதவ நாட்டிலுள்ள முக்கிய நகரமான கொற்கை, முத்துக் குளிப்புத் தொழிலுக்கு உரிய ஒரு நடுவிடம். இந்நகர மக்களில் பெரும்பாலோர் முத்துக் குளிப்போராகவும், சங்கறுப்போராகவும் இருந்தனர். முத்துக் குளித்தல் பாண்டிய நாட்டின் அரசியல் வருவாயில் ஒருபெரும் பகுதியாக இருந்த காரணத்தினாலேயே பட்டத்து இளவரசர் அங்கேயே தங்கியிருப்பது வழக்கமாயிருந்ததை,

**"வினைநவில் யானைவிறற் போர்ப் பாண்டியன்**

**புகழ்மலி சிறப்பின் கொற்கை முன்துறை"**[33]

என்ற அகநானூற்றுப் பாடல் அடிகள் எடுத்துரைக்கின்றன. இதனால் கொற்கையானது சங்ககாலப் பாண்டியர்களின் துறைமுகமாகவும், பன்னாட்டு வாணிக மையமாகவும், முத்துக்குளிக்கும் இடமாகவும் விளங்கியிருக்கிறது என்று உணரலாம்.

சிறப்புப் பெற்று விளங்கிய கொற்கை கி.பி.10ஆம் நூற்றாண்டில் மண்மேடாகிப் போய்விட்டது. கொற்கைப் பகுதி நிலமாக மாறிப்போனதற்குக் காரணம் தாமிரபரணி ஆறு அடித்துக் கொண்டு வந்த மணலும், கடல் அலை அடித்துக் கொண்டுவந்த மணலுமாக இரண்டு புறத்திலும் மணல் தூர்ந்த படியினால் கடல் பின் வாங்கி நிலமாக மாறிப்போய்விட்டது. கொற்கைப் பட்டினம் இருந்த இடம் இப்போது கடற்கரைக்கு மேற்கே மூன்று மைல் தூரத்தில் 'மாறமங்கலம்' எனப்பெயர் பெற்றிருக்கின்றது. இப்பகுதி திருநெல்வேலி மாவட்டத்தில் உள்ள திருச்செந்தூர் வட்டத்தில் உள்ளது.

முதன்முதலாக, கொற்கைப் பகுதியில் அகழாய்வு செய்து வரலாற்றுச் சிறப்புக்களை வெளிக் கொண்டு வந்த பெருமை அயர்லாந்து நாட்டைச் சேர்ந்த கிறிஸ்துவ மதபோதகர் கால்டுவெல் என்பவரையே சாரும். இவர் 1866 இல் இப்பகுதியில் கள ஆய்வு மேற்கொண்டு பல முதுமக்கள் தாழிகளைக் கண்டுபிடித்தார். இவருக்குப்பின் இப்பகுதியில் அகழாய்வு மேற்கொண்ட 'லொவந்தல்'(Lovennal 1888) , ரோமானிய மன்னர்களான அகஸ்டஸ், நீரோ ஆகியோர் காலத்து நாணயங்களைக் கண்டுபிடித்தார். இதன் பின்பு, "தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறை 1968-69 ஆம் ஆண்டு முறையான அகழாய்வினை இவ்வூரில் மேற்கொண்டது. இவ்வகழாய்வில்

---

33. ரா. வேங்கடாசலம் பிள்ளை(உ.ஆ.), அகநானூறு, மணிமிடைபவளம், ப.192.

முதுமக்கள் தாழிகள், கருப்பு, சிவப்பு மட்கலன்கள் போன்றவை கிடைத்தன."[34] இக்கண்டுபிடிப்புக்களின் வாயிலாக கொற்கையின் கடல் வாணிகச் சிறப்பை அறியலாம்.

**தொண்டித் துறைமுகம்**

சங்க காலத்திலே கிழக்குக் கரையிலும், மேற்குக் கரையிலுமாகத் 'தொண்டி' என்னும் பெயரில் இரண்டு ஊர்கள் இருந்தன. இதில் சிறப்பம்சம் என்னவென்றால் இரண்டுமே துறைமுகப்பட்டினங்கள் ஆகும். ஒன்று மேற்குக் கடற்கரையில் சேரர்களுக்கு உரியதாக இருந்தது. மற்றொன்று கிழக்குக் கரையில் பாண்டியர்களுக்கு உரியதாக இருந்தது. அம்மூவனார் என்ற சங்கப்புலவர் அகநானூற்றுப் பாடலொன்றில் பாண்டிய நாட்டுத் தொண்டியினை,

**"மணங்கமழ் பாக்கத்துப் பகுக்கும்**

**வளங்கெழு தொண்டி"**[35]

எனப் பாடியுள்ளார். கிழக்குத் திசைக் கடற்பகுதியிலிருந்து வீசும் காற்றிற்குக் 'கொண்டல்' என்று பெயர். கொண்டல் காற்று வீசுகிற தொண்டி என்று அம்மூவனார் பாடுவதால் இத்தொண்டிப் பட்டினம் கிழக்குக் கடற்பகுதியில் (பாண்டிய நாட்டில்) பாண்டியர்க்கு உரியதாக இருந்தது என்பது புலனாகிறது.

வாழ்வியற் களஞ்சியம், "தொண்டி இராமநாதபுரம் மாவட்டம் திருவாடானை வட்டத்தில் திருவாடனைக்குக் கிழக்கே 13 கி.மீ. தொலைவில் கிழக்குக் கடற்கரையில் அமைந்துள்ள ஊர், தமிழ்நாட்டில் பாண்டிய நாட்டின் புகழ்பெற்ற துறைமுகங்களுள் ஒன்றாக இது விளங்கியது"[36] என்று குறிப்பிடுகிறது. தொண்டித் துறைமுகப் பட்டினம் பிற்காலத்தில் சிறப்புக்குன்றி இக்காலத்தில் குக்கிராமமாக இருக்கிறது.

இந்தத் தொண்டித் துறைமுகத்தைச் சிலப்பதிகாரக் காவியமும் கூறுகின்றது. கடல் கடந்த நாடுகளிலிருந்து அகிற்கட்டை, சந்தனக்கட்டை, பட்டுத்துணி, சாதிக்காய், இலவங்கம், குங்குமப்பூ, கருப்பூரம் போன்ற வாசனைப் பொருள்களை ஏற்றி வந்த நாவாய்கள் கொண்டல் காற்றின் உதவியால் தொண்டித் துறைமுகத்துக்கு வந்ததையும்,

---

34. க. இராசவேலு, கோ. திருமூர்த்தி, தமிழ்நாட்டில் தொல்லியல் அகழாய்வுகள். ப.92.
35. ந.மு. வேங்கடசாமி நாட்டார்(உ.ஆ.), அகநானூறு, களிற்றியானை நிரை, ப.38.
36. வெ. சுப்பிரமணியம்(பதி.ஆ.), வாழ்வியற் களஞ்சியம்(தொகுதி-9), ப.913.

இறக்குமதியான அந்தப் பொருள்களைத் தொண்டியிலிருந்து பாண்டியனின் தலை நகரான மதுரைக்கு அனுப்பபட்டதையும்,

**"வங்க ஈட்டத்துத் தொண்டியோர் இட்ட**

**அகிலும் துகிலும் ஆரமும் வாசமும்**

**தொகு கருப்பூரமும் சுமந்துடன் வந்த**

**கொண்டலொடு புகுந்து கோமகன் கூடல்"**[37]

என்று சிலப்பதிகாரம் கூறுகிறது. இதனால் கீழ்க்கடல் தீவுகளிலிருந்து கொண்டு வரப்பட்டுத் தொண்டித் துறைமுகத்தில் இறக்குமதியான பொருள்கள் அகில், துகில், ஆரம், கருப்பூரம் என்று அறியமுடிகின்றது.

**தொண்டி (சேரநாடு)**

பழந்தமிழகத்தின் மேற்குக் கடற்கரையில் பூழி நாட்டில் (North Malabar) சேரருக்கு உரியதாக இத்தொண்டிப் பட்டினம் இருந்தது. சேரன் தொண்டி என வழங்கப்படும் இந்நகரம் கடலுண்டி அல்லது குயிலாண்டி(Quilandy) என்றும் அழைக்கப்படும். இவ்வூர் தற்போது பேபூர் (Bepore) என்ற ஊருக்கு அருகிலுள்ளது. பிளினி, தாலமி போன்றோர் இவ்வூரை 'திண்டிஸ்' (Tyndis) என்று தங்களுடைய நூல்களில் குறிப்பிட்டுள்ளனர்.

ஐங்குறுநூற்றில் நெய்தற்பத்தைப் பாடியுள்ள அம்மூவனார் தொண்டிப் பத்து என்னும் தலைப்பில் இவ்வூரினைப் பற்றிப் பத்துப் பாடல்கள் பாடியுள்ளார். பரந்த கடலிலிருந்து தோன்றும் அலைகள் எப்போதும் தொண்டியின் கரைப்பகுதியை மோதி ஒலி எழுப்பிக் கொண்டிருப்பதை,

**"வண்டுஇமிர் பனித்துறைத் தொண்டி ஆங்கண்**

**உரக்கடல் ஒலித்திரை போல"**[38]

என்று ஐங்குறுநூற்றுப் பாடல் அடிகள் கூறுகின்றது. இதனால் இத்தொண்டிப் பட்டினம் சேர அரசனுக்கு உரியதாக இருந்ததை அறியலாம்.

---

37. ந.மு. வேங்கடசாமி நாட்டார்(உ.ஆ.), சிலப்பதிகாரம், ப.720.
38. உ.வே. சாமிநாதஐயர்(உ.ஆ.), ஐங்குறுநூறு, ப.172.

உரோமர்கள், கிரேக்கர்கள், அரேப்பியர்கள், எகிப்தியர்கள் இத்துறைமுகத்தில் வாணிகத்தின் பொருட்டுப் பெருவாரியாகக் குழுமியிருந்தனர். அதனால் திண்டிஸ் என்று அழைக்கப்படும் தொண்டி பழங்காலத்தில் மிகச் சிறந்த பன்னாட்டு வாணிகத் துறைமுகமாக (International Port City) விளங்கியது.

**முசிறித் துறைமுகம்**

முசிறி மேற்குக் கடற்கரையில் சேரன் செங்குட்டுவனுக்கு உரிய கடற்கரை நகரமாகும். சுள்ளி என்னும் பேரியாறு மேற்குக் கடலில் கலக்குமிடத்தில் முசிறித் துறைமுகம் அமைந்திருந்தது. முசிறியைக் கிரேக்கர்கள் முசிறிஸ்(Muziris) என்றழைத்தனர். வடமொழி வால்மீகி இராமாயணத்தில் முசிறித் துறைமுகம் 'முரசீப்பதனம்' என்று குறிப்பிடப்பட்டுள்ளது. பரணர் புறப்பாடலொன்றில் பொன்மாலை அணிந்த குட்டுவனுடைய முசிறி நகரம் என்று குறிப்பிடுவதை,

**"புனலங்கள்ளின் பொலந்தார்க் குட்டுவன்**
**முழங்குகடல் முழவில் முசிறியன்ன"**[39]

என்ற பாடல் அடிகள் விளக்குகின்றன.

முசிறித் துறைமுகத்தில் கிரேக்கர், உரோமர், அரேபியர், யூதர், பாரசீகர் எனப் பல நாட்டைச் சேர்ந்தவர்களும் வந்து வாணிகம் புரிந்துள்ளனர். ஆகவே பல்வேறு நாட்டைச் சேர்ந்த வாணிகர்களும் இத்துறைமுகப் பட்டினத்தில் வந்து தங்கியதால் இப்பட்டினம் 'முசர்பரிஸ்' என்று முன்னர் அழைக்கப்பட்டது. முசர்பரி என்பது அரபுச் சொல்லாகும். இதன் தமிழாக்கம் 'பயணிகள் தங்குமிடம்' என்பதாகும். பயணிகள் தங்கும் விடுதியை 'முசாபரி பங்களா' என்று கூறும் வழக்கம் தமிழகத்தில் இன்று உண்டு. முசாபரிஸ் என்ற அரேபியச் சொல்லைத் தான் கிரேக்கர்கள் 'முசிறிஸ்' என்று வழங்கினர். இவ்வாறு சங்க காலத்தில் முசிறித் துறைமுகம் பல பெயர்களில் அழைக்கப்பட்டதை அறியலாம்.

யவனக் கப்பல்கள் பவளம், கண்ணாடி, செம்பு, தகரம், ஈயம் போன்ற பொருள்களைக் கொண்டு வந்து முசிறியில் இறக்குமதி செய்து இங்கிருந்து பல பொருள்களை ஏற்றுமதி செய்து கொண்டு போயின. ஏற்றுமதியான பொருள்களில் முக்கியமானதும், அதிகமாகவும் இருந்தது மிளகுதான். யவன வாணிகர்கள்

39. ஔவை சு. துரைசாமிப்பிள்ளை(உ.ஆ.), புறநானூறு மூலமும் உரையும் (பகுதி-2), ப.286.

வேலைப்பாடமைந்த சிறந்த மரக்கலன்களில் வந்து மிகுந்த பொன்னைத் தந்து மிளகைப் பெற்றுச் சென்றதை,

**"சுள்ளிஅம் பேரியாற்று வெண்நுரை கலங்க**
**யவனர் தந்த வினைமாண் நன்கலம்**
**பொன்னொடு வந்து கறியொடு பெயரும்**
**வளங்கெழு முசிறி"**[40]

என்ற அகநானூற்றுப் பாடல் அடிகள் இயம்புகின்றன. இதனால் சேர நாட்டில் மிகுதியாக விளையும் மிளகு ஏற்றுமதியில் புகழ்பெற்று விளங்கியது எனலாம்.

மேற்குத் தொடர்ச்சி மலையிலிருந்து உண்டான சுள்ளி என்னும் பேரியாறு (தற்போது பெரியாறு) கடலுடன் கலக்குமிடத்தில் இருந்த முசிறித் துறைமுகம் "கி.பி. 882 ஆம் ஆண்டில் ஏற்பட்ட கடற்கோளால் அழிந்துவிட்டது. முசிறி அழிந்த பிறகு, அதன் அருகே இருந்த கொடுங்களூரே துறைமுகமாக விளங்கியது. கொடுங்களூரின் கிரேக்க உச்சரிப்பு கோவ்ரலூர் ( Coverellore) என்பதாகும். இப்பொழுது இது கிராங்கனூர் (Cranganore) என்று வழங்கப்படுகிறது"[41] என்கிறார் வி.என். சாமி. இவ்வாறு முசிறி, சேரப் பெரு நாட்டின் துறைமுகப்பட்டினமாகச் சிறந்து விளங்கியதை அறியலாம்.

கடற்கரை வாணிகத்தில் எயிற்பட்டினம், காவிரிப்பூம்பட்டினம், கொற்கை, தொண்டி, முசிறி போன்ற துறைமுகப் பட்டினங்கள் பண்டைத் தமிழகத்தில் பெருஞ்சிறப்போடு விளங்கியுள்ளன என்பதை அறியமுடிகிறது.

**கலங்கரை விளக்கம்**

பெருங்கப்பல்களும், செழித்த வாணிகமும் அக்காலத்தில் இருந்தமையால் நடுக்கடலிற் கப்பல்கள் சென்று திரியும் இராக் காலத்தில் திசை தடுமாறாது கரை சேர்வதற்குத் துணையாகக் கடற்கரைப் பட்டினங்களில் கலங்கரை விளக்கங்களை அமைத்தனர்.

---

40. ந.மு. வேங்கடசாமி நாட்டார்(உ.ஆ.), அகநானூறு, மணிமிடைபவளம், ப.60.
41. வி.என். சாமி, புகழ்பெற்ற கடற்போர்கள், ப.67.

கலம் – மரக்கலம், கரை – அழைக்கிற, விளக்கம் – விளக்கு நிலையம் என்பது பொருளாகும். கடலில் செல்லும் மரக்கலங்களுக்குக் கரை இருக்கின்ற இடத்தையோ அல்லது துறைமுகம் அமைந்துள்ள இடத்தையோ ஒளி மூலமாக உணர்த்துவதுதான் கலங்கரை விளக்கமாகும். மனிதன் கடற்பயணம் மேற்கொண்ட பழங்காலத்தில் திசை காட்டியாகவும், வழிகாட்டியாகவும் கலங்கரை விளக்கம் திகழ்ந்தது எனலாம்.

அபிதான சிந்தாமணி கலங்கரை விளக்கம் என்பதற்குக் "கப்பல் யாத்திரை செய்த பண்டையோர்க்குக் கரை தெரியும் வகையில் கடற்கரையில் கட்டப்பட்ட ஒளித்தம்பம்"[42] எனக் குறிப்பிடுகிறது.

தொண்டை நாட்டு எயிற்பட்டினத்தில் அமைக்கப்பட்டு இருந்த கலங்கரை விளக்கம் உயரமான கட்டிடமாக இருந்தது. அக்கட்டிடமானது சாந்து பூசப்பட்டுப் பல தளவரிசைகளைக் கொண்டது. இரவில் அதன் உச்சியில் தீயிட்டு எரித்தார்கள். உச்சியில் ஏறி, விளக்கு ஏற்றுவதற்கு ஏணிப் படிகள் இருந்ததை,

**"வானம் ஊன்றிய மதலை போல**

**ஏணி சாத்திய வேற்றருஞ் சென்னி**

**விண்பொர நிவந்த வேயா மாடத்து**

**இரவின் மாட்டிய இலங்குசுடர் ஞெகிழி**

**உரவுநீர் அழுவத்து ஓடுகலம் கரையும் துறை"**[43]

என்று பெரும்பாணாற்றுப்படைப் பாடல் அடிகள் விளக்குகின்றன. இவ்வாறு கலங்கரை விளக்கின் அமைப்புக் கூறப்படுகின்றது.

சங்ககாலத்தில் காவிரிப்பூம்பட்டினம் துறைமுகத்திலும் கலங்கரை விளக்கம் அமைக்கப்பட்டிருந்தது. புகார்த் துறைக்கு வரும் கலங்களுக்கு் வழிகாட்டும் விதமாகப் பெரிய கலங்கரை விளக்கம் ஒளி வீசிக் கொண்டிருந்ததை,

"இலங்குநீர் வரைப்பில் கலங்கரை விளக்கமும்

விலங்குவலைப் பரதவர் மீன்திமில் விளக்கமும்"[44]

---

42. ஆ. சிங்காரவேலு முதலியார், அபிதான சிந்தாமணி, ப.365.
43. நச்சினார்க்கினியர்(உ.ஆ.), பெரும்பாணாற்றுப்படை, ப.201.
44. ரா. சீனிவாசன், சிலப்பதிகாரம் மூலமும் திறனாய்வும், ப.39.

என்று இளங்கோவடிகள் சிலப்பதிகாரத்தில் கூறுகிறார். இதற்கு உரை கூற வந்த அரும்பத உரையாசிரியர், "கலங்கரை விளக்கம் - திக்குக் குறிக்காட்டிக் கலத்தை (நாவாய்களை) அழைக்கிற விளக்கம்"[45] என்றும், அடியார்க்கு நல்லார், "நிலையறியாத ஓடுங்கலங்களை அழைத்ததற்கு இட்ட விளக்கு"[46] என்றும் உரை செய்துள்ளனர். இதனால் கலங்கள் திசைமாறிச் செல்லாமல் இருப்பதற்கும், துறைமுகம் அல்லது கடற்கரை உள்ள இடத்தை அறிவதற்கும் கலங்கரை விளக்கம் உதவியிருக்கலாம்.

பழங்காலத்தில் கலங்கரை விளக்கமானது தமிழகத் துறைமுகங்களில் மட்டுமின்றி இந்தியாவின் பிறபகுதி துறைமுகங்களிலும், எகிப்து, ரோம், கிரீஸ், அசிரியா போன்ற நாடுகளின் துறைமுகங்களிலும் இருந்தன. அக்காலத்தில் தமிழர், வடவர், கிரேக்கர், எகிப்தியர், பொனிசியர், அசிரியர் போன்றோர் தங்களது நாடுகளில் மிக உயரமாகக் கலங்கரை விளக்கத்தினை அமைத்துக் கடலில் செல்லும் மரக்கலங்களுக்கு வழிகாட்டினர். இக்காலத்தில் பட்டைக் கண்ணாடிக்குள் மின்சார விளக்கினை வைத்துக் கலங்கரை விளக்கம் அமைக்கப்பட்டிருப்பது குறிப்பிடத்தக்கது ஆகும்.

**பண்டக சாலைகள்**

வாணிகத்தின் பொருட்டு ஏற்றுமதி செய்யவேண்டிய பொருள்களையும், இறக்குமதி செய்யப்பட்ட பொருள்களையும் வைக்கப்படும் இடம் பண்டக சாலை எனப்படும். சங்ககாலத்தில் துறைமுகங்களில் பண்டங்கள் யாவும் பெரிய பண்டக சாலைகளில் வைக்கப்பட்டிருந்தன. கடலில் வந்தவற்றை உள் நாட்டிற்குச் செலுத்தும் முன்பும், உள்நாட்டில் நிலத்தில் விளைந்தவற்றைக் கடலின் மேல் செலுத்தும் முன்பும் அவை பண்டக சாலையிற் சேர்த்து வைக்கப்படும். அப்பண்டக சாலைகளில் குவிந்து கிடக்கும் மூட்டைகள் மேல் மன்னனது முத்திரையை இடுவர். அம்முத்திரை இடப்பட்ட மூட்டைகள் அகன்ற முற்றத்தில் ஏற்றுமதி, இறக்குமதிக்கு ஆயத்தமாக உயரமாய் அடுக்கி வைக்கப்பட்டு இருக்கும். அக்காலத்தில் சிறந்த காவலையுடைய பண்டக சாலை இருந்ததைப் பற்றிப் பல சங்க இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன.

இனிய ஓசையையுடைய அலைகள் ஒலிக்கும் கடலிலே வந்த நல்ல ஆபரணம் வைக்கப்பட்டுள்ள பண்டகசாலையை,

---

45. ந.மு. வேங்கடசாமி நாட்டார்(உ.ஆ.), சிலப்பதிகாரம், ப.317.

46. பொ. திருகூடசுந்தரம் (உ.ஆ.), சிலப்பதிகாரம், ப.46.

**"இன்னிசைப் புணரி இரங்கும் பௌவத்து**

**நன்கல வெறுக்கை துஞ்சும் பந்தர்"**[47]

என்று பதிற்றுப்பத்துப் பாடல் அடிகள் விளக்குகின்றன. இதனால் வாணிகப் பொருள்களின் தரம் மற்றும் தன்மை குறையாது சேமித்து வைக்குமிடமே பண்டகசாலை என்பது புலனாகிறது.

இதே போன்று சங்ககாலத்தில் அரிக்கமேட்டிலும் பண்டகசாலை இருந்தது. 1945-இல் மார்டிமர் வீலர் தலைமையில் மேற்கொள்ளப்பட்ட அகழ்வாய்வில் அரிக்கமேடு பண்டகசாலை கண்டுபிடிக்கப்பட்டது. "அரிக்கமேட்டில் 1945-ஆம் ஆண்டு இரண்டு இடங்களில் அகழாய்வுகள் மேற்கொள்ளப்பட்டன. வடக்கு மண்மேட்டில் பண்டகசாலை ஒன்று வெளிப்பட்டது. செவ்வக வடிவம் கொண்ட இப்பண்டகசாலை 45 மீட்டர் நீளமும், 11 மீட்டர் அகலமும் கொண்டது. இக்கட்டிடத்தின் வடக்கில் 18 மீட்டர் அளவுள்ள தானியக் கிடங்கு ஒன்றும் காணப்பட்டது. பருத்த சுவர்களைக் கொண்ட இக்கட்டடங்கள் மிக உறுதியான செங்கற்களைக் கொண்டு கட்டப்பட்டுள்ளன. களிமண்ணைக் குழைத்தச் செங்கற்சுவர்களை அமைத்துள்ளனர். சுவற்றின் வெளிப்பகுதி சுண்ணாம்பு காரையால் பூசப்பட்டுள்ளது. கட்டடத்தின் அடித்தளம் வலுவுடையதாக அமைத்து நன்கு எழுப்பியுள்ளனர். இக்கட்டடத்தின் தரைப்பகுதி அடித்தளத்திலிருந்து ஏறத்தாழ 1 $^1/_2$ மீ உயரமுடையது"[48] என்பதும் இங்குக் குறிப்பிடத் தக்கது. இவற்றால் துறைமுகங்களிலும், முக்கிய நகரங்களிலும் பண்டங்களைப் பாதுகாப்புடன் வைத்திருப்பதற்காகப் பண்டக சாலைகளை ஏற்படுத்தினர் என்பது தெளிவாகின்றது.

### வரி விதித்தல் (உல்கு)

பண்டைக் காலத்தில் ஒரு நாட்டின் பொருள் மற்றொரு நாட்டிற்குக் கொண்டு செல்லப்படும் பொழுது வழிகளிலே மன்னர்கள் சுங்கம் கொண்ட வழக்கம் இருந்தமையைச் சங்க இலக்கியப் பாடல்களால் அறியலாம். சுங்கம் என்பது 'உல்கு'[49] என்ற சொல்லால் குறிப்பிடப்பட்டுள்ளது. இன்று 'வரி' என்ற சொல்லால் வழங்கப்படுகிறது.

---

47. உ.வே. சாமிநாத ஐயர்(உ.ஆ.), பதிற்றுப்பத்து மூலமும் பழைய உரையும், ப.162.
48. க. இராசவேலு, கோ. மூர்த்தி, தமிழ்நாட்டில் தொல்லியல் அகழாய்வுகள், ப.123.
49. மாருதிதாசன் (உ.ஆ.), நர்மதாவின் தமிழ் அகராதி, ப.149.

பெரும்பாணாற்றுப் படையில் உருத்திரங்கண்ணனார், பலாப்பழம் அளவாகச் சிறு சிறு பொதிகளாகக் கட்டப்பட்ட மிளகு மூட்டைகளைக் கழுதைகளின் மேல் ஏற்றிக் கொண்டு வாணிகச் சாத்தர் வெளி ஊர்களுக்குப் பயணம் சென்றனர். அவ்வாறு வாணிகம் புரியச்சென்ற போது இடைவழியில் சுங்கச் சாவடிகளில் சுங்கம் செலுத்தியதை,

**"சிறுசுகளைப் பெரும்பழங் கடுப்பமிரியல்**

**புணர்ப்பொறை தாங்கிய வடுவாழ் நோன்புறத்து**

**அணர்ச்செவிக் கழுதை சாத்தொடு வழங்கும்**

**உல்குடைப் பெருவழிக் கவலை காக்கும்**

**வில்லுடை வைப்பின் வியன்காட்டி"**[50]

என்று குறிப்பிடுகின்றார். இதனால் இளந்திரையன் ஆண்ட தொண்டை நாட்டில் சுங்கச்சாவடி இருந்ததை அறியமுடிகின்றது.

கடற்கரை தெருவில் அரசனுடைய பொருளை பிறர் கொள்ளாமல் காவல் காக்கும் சுங்கம் கொள்ளும் தொழில் செய்வோர், குதிரைகள் போன்று நாள்தோறும் சோம்பி இராது சுங்கங் கொள்வர் என்பதை,

**"நல்லிறைவன் பொருள்காக்கும்**

**தொல்லிசைத் தொழில் மாக்கள்**

**காய்சினத்த கதிர்ச்செல்வன்**

**தேர்பூண்ட மாப்போல**

**வைகல்தோறும் அசைவின்றி**

**உல்குசெயக் குறைபடாது"**[51]

என்ற பட்டினப்பாலை பாடல் அடிகள் விளக்குகின்றன. இவற்றால் சுங்கம் கொள்ளும் தொழில் செய்வோரின் தொழில் திறனை அறியலாம்.

---

50. இரா. இராகவையங்கார்(உ.ஆ.), பெரும்பாணாற்றுப்படை ஆராய்ச்சியும் உரையும், ப.35.

51. நச்சினார்க்கினியர்(உ.ஆ.), பட்டினப்பாலை, ப.235.

சங்ககாலத்தில் கடல் வாணிகம் பெரிய அளவில் நடைபெற்ற நிலையில் ஏற்றுமதி, இறக்குமதிப் பொருள்களின் மீது அரசு விதித்த உல்கு எனப்படும் சுங்கவரி சேர, சோழ, பாண்டிய அரசுகளுக்குப் பெரும் வருவாயைத் தேடித் தந்தது எனலாம்.

**வாணிகப் புலவர்கள்**

வாணிகத்தின் பெருமையை நன்குணர்ந்து அதனைத் தம் தொழிலாகக் கொண்டு வாழ்ந்த புலவர்கள் பலர் அக்காலத்தில் இருந்தனர். அறுவை வாணிகன் இளவேட்டனார், மதுரைப் பண்ட வாணிகன் இளநத்தனார், மதுரைப் பெருங் கொல்லனார், உறையூர் இளம்பொன் வாணிகன், சாத்தன் கொற்றனார் போன்ற புலவர்களது பெயர்களே அவர்தம் தொழிலை உணர்த்துவனவாக உள்ளன.

"சீத்தலைச் சாத்தனார் குடும்பம் தானியங்கள் விற்கும் வாணிகக் குடும்பமாக இருந்தது. இவர் சீத்தலையில் பிறந்து, சாத்தனார் எனப் பெயரிடப்பெற்று வாழ்ந்தார். பின் மதுரை சென்று அங்கே நெல்லரிசி, புல்லரிசி, வரகு, திணை, சாமை, சோளம், தோரை, மூங்கில் நெல் போன்ற எண்வகைக் கூலங்களை விற்கும் வாணிபத் தொழில் மேற்கொண்டு வாழ்ந்தமையால், மதுரைக் கூலவாணிகன் சீத்தலைச் சாத்தனார் என அழைக்கப்பட்டார். தாமோதர சாத்தனார், பேரிசாத்தனார், பெருஞ்சாத்தனார் போன்றோரும் வாணிகத்தில் சிறப்பாக ஈடுபட்டிருந்தனர்"[52] என்று கா. கோவிந்தன் கூறுகின்றார். இதனால் தமிழகத்தில் பழந்தமிழ்ப் புலவர்கள் பெரும்பாலும் வாணிகக் குலத்தோராக இருந்திருக்கின்றனர் என்று உணர முடிகிறது.

**முடிபுகள்**

விற்பனையாளர்கள் உற்பத்திப் பொருளொன்றைத் தாம் இலாபம் ஈட்டும் வகையில் நுகர்வோரிடம் சேர்ப்பது வாணிகமாகும். உள்நாட்டு வாணிகம் பண்டமாற்று முறையில் நடைபெற்றது. தரைவாணிகம் தெருவில் சென்று விற்றல், அங்காடி அமைத்து விற்றல் என இரு வழிகளில் நடைபெற்று உள்ளது. சங்க காலத்தில் தரை வழியாக வாணிகம் செய்த பெரு வாணிகர்க்கு மாசாத்துவான் என்று பெயர். நாவாயில் (மரக்கலம்) ஏறி மிகப் பெருமளவில் வாணிகம் செய்த வாணிகர்களுக்கு மாநாய்கன் என்று பெயர். வாணிகத்தில் பெரும் செல்வம் ஈட்டின மாசாத்துவர்களுக்கும்,

---

52. கா. கோவிந்தன், சங்கத் தமிழ்ப் புலவர் வரிசை(வணிகரிற் புலவர்கள்), ப.29.

மாநாய்கர்களுக்கும், தமிழக அரசர்கள் எட்டிப்பூவும், எட்டிப்பட்டமும் அளித்துச் சிறப்புச் செய்தனர்.

தமிழர் புரிந்த கடல் வாணிகத்தை இரு வகைப்படுத்தலாம். 1. கரையோர வாணிகம், 2. நடுக்கடல் வாணிகம் போன்றனவாகும். சங்க காலத்தில் பழந்தமிழர் எகிப்து, பாலஸ்தீனம், சுமேரியா, அசிரியா, கிரேக்கம், ரோம், அரபியா, மடகாஸ்கர் போன்ற மேல்திசை நாடுகளுடனும், இலங்கை, சீனம், காழகம், சாவகம், மலாயா, வடபோர்னியா போன்ற கீழ்த்திசை நாடுகளுடனும் மிக வளமானதொரு கடல் வாணிகம் புரிந்துள்ளனர்.

அயல் நாடுகளுக்கு அகில், ஆரம், மிளகு, முத்து, மணிகள், உறையூர் பூந்துகில் போன்றவை தமிழகத்திலிருந்து ஏற்றுமதி செய்யப்பட்டன. கிராம்பு(இலவங்கம்), சாதிக்காய், குங்குமப்பூ, தக்கோலம், கருப்பூரம் போன்ற வாசனைப் பொருள்கள் சாவகத்திலிருந்து தமிழகத்திற்கு இறக்குமதி செய்யப்பட்ட பொருள்களாகும். குதிரை, பாரசீகம், சிந்து போன்ற நாடுகளிலிருந்து இறக்குமதி செய்யப்பட்டது. யவன தேசத்திலிருந்து யவனத்தேறல், ஓதிமவிளக்கு, யவனப்பொறிகள் போன்றவை இறக்குமதி செய்யப்பட்டுள்ளன.

சங்ககாலத்தில் நிகழ்ந்த கடல்வழி வாணிகத்தில் சேர நாட்டுத் தொண்டி, முசிறி, மாந்தை, நறவு, மங்களூர், சோழ நாட்டிலுள்ள பூம்புகார், நாகப்பட்டினம், பாண்டிய நாட்டுக் கொற்கை, தொண்டி, மருங்கூர்ப்பட்டினம், குமரி, தொண்டை நாட்டு நீர்ப்பெயற்று, எயிற்பட்டினம் போன்ற துறைமுகங்கள் முக்கியப் பங்கு வகித்திருக்கின்றன.

பொருள்களைப் பாதுகாக்கப் பண்டக சாலைகள் அமைக்கப்பட்டிருந்தன. வாணிகப் பொருள்கள் சுங்கவரிக்கு உட்படுத்தப்பெற்று அந்நாட்டரசனின் இலச்சினை பொறித்து அடையாளப்படுத்தப்பட்டு உள்ளன. தமிழகத்தில் வேற்று நாட்டு வாணிகர்களும், வாணிகத்தின் பெருமையை நன்குணர்ந்த வாணிகப் புலவர்களும் வாழ்ந்தனர் என்று சங்க இலக்கியங்கள் கூறுகின்றன.

# இயல் - ஐந்து
# வாழ்வியல் அறங்கள்

# இயல் - ஐந்து
# வாழ்வியல் அறங்கள்

பண்டைத் தமிழர் அறங்கரை நாவினராக விளங்கினர். வாழ்விலும் அறக்கொள்கையைப் பின்பற்றி வாழ்ந்தனர். அறம், பொருள், இன்பம், வீடு என்று வாழ்வியல் கொள்கைகளை வகுக்கும் பொழுதும் அறத்திற்கே முதன்மை கொடுத்தனர். வாழ்விலிருந்து முகிழ்க்கின்ற இலக்கியங்களும்.

**"அறம் பொருள் இன்பம் வீடடைதல் நூற் பயனே"**[1]

என்று அறத்தையே முதன்மைப்படுத்துகின்றன. வாழ்வின் இருவகை நிலையான இல்வாழ்வு, துறவு வாழ்வு இரண்டனையும் அறம் என்ற சொல்லோடு இணைத்து 'இல்லறம்', 'துறவறம்' என்றே அழைத்தனர். தலைவனும், தலைவியும் கூடி வாழும் அகவாழ்வாயினும், பிறருக்குக் கிளக்க முடிந்த புறவாழ்வாயினும் பற்றறுத்து வாழும் துறவு வாழ்வாயினும் அது அறத்தின் கண்ணதாக விளங்க வேண்டும் என்பதை மேற்காட்டிய சொற்கள் விளக்குகின்றன. இதனடிப்படையில் சங்க இலக்கியங்களில் நெய்தல் திணை அகமாந்தர்கள் பற்றியும், அவர்களின் வாழ்வியல் அறங்கள் பற்றியும் எடுத்துக்கூறுவதாக இவ்வியல் அமைந்துள்ளது.

**அகவாழ்வு**

சங்க கால மக்கள் இல்லற வாழ்க்கையையே பெரிதும் பாராட்டி வந்தனர். ஒருவனும், ஒருத்தியும் இணைந்து, வாழ்வாங்கு வாழ்வாராயின் அவர்களுக்கு வீடு பேறு தானாகக் கிடைக்கும் என நம்பினர், இக்காரணத்தினாலேயே திருவள்ளுவரும் அறம், பொருள், இன்பம் என்னும் முப்பாலை மட்டும் பாடினார். வீடுபேற்றைப்பாடவில்லை எனலாம்.

ஒத்த நலன்களையுடைய தலைவனும், தலைவியும் கூடுமிடத்துப் பிறப்பது இன்பமாகும். அதனைச் சொல்லால் விளக்க இயலாது. உள்ளத்தால் உணர முடியும். அத்தகைய இன்பமே அகம் என்பதாகும். ஏனைய இன்பங்கள் யாவும் புறமாகும். அகப்பொருளுக்குரிய திணைகளைத் தொல்காப்பியம், கைக்கிளை, குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை, பெருந்திணை என ஏழு வகைப்படுத்தியுள்ளது. இதில் கைக்கிளை என்பது ஒரு தலைக்காதலாகவும், பெருந்திணை என்பது பொருந்தாக்

---

1. சங்கர நமச்சிவாயர்(உ.ஆ.), நன்னூல், ப.124.

காதலாகவும் அமைகின்ற காரணத்தால், இவையிரண்டும் சிறப்பு நிலையற்றத் திணைகளாகக் குறிப்பிடப்பட்டுள்ளன. ஏனைய ஐந்தும் தலைவன், தலைவி ஆகிய இருவரின் உள்ளொத்த காதல் நிலையைச் சுட்டுவதால் ‘அன்பின் ஐந்திணை’ எனச் சான்றோரால் போற்றப்பட்டுள்ளன.

தொல்காப்பியப் பொருளதிகாரத்தின் முதல் இயலாக அகத்திணை இயல் அமைந்துள்ளதன் வழியாக அக வாழ்க்கையின் முக்கியத்துவத்தினையும், சிறப்பினையும் உணரலாம். அகப்பாடல்களில் தலைவன், தலைவி ஆகியோர் பெயர் தனி நாகரிகம் கருதி சுட்டப் பெறாத நிலை சிறப்புக்குரியதாகும்.

நச்சினார்க்கினியர், அகம் என்ற சொல்லிற்கு, “ஒத்த அன்பால் ஒருவனும், ஒருத்தியும் கூடுகின்ற காலத்துப் பிறந்த பேரின்பம். அக்கூட்டத்தின் பின்னர் அவ்விருவரும் ஒருவருக்கொருவர் தத்தமக்கு ஏற்பட்ட அனுபவங்களை உள்ளத்தால் உணர்ந்து இன்புற முடியுமே தவிரச் சொற்களால் புலப்படுத்துதல் இயலாது”[2] என்று கூறுகிறார்.

ஒத்த அன்பான ஒருவனும், ஒருத்தியும் கூடுகின்ற கூட்டத்திற் பிறந்த இன்பம் அகம் என்பதை,

**“அகமெனப்படுவது வகையொரு மூன்றனுள்**

**இன்பம் என்னும் இயல்பிற்று ஆகி**

**அகத்து நிகழொழுக்க மாதல் வேண்டும்”**[3]

என்று இலக்கண விளக்கம் உரைக்கின்றது.

அகவொழுக்கம் பிறருக்கு உணர்த்த முடியாதது, உணர்த்தவும் கூடாது என்று வரையறைக்குட்பட்டது ஆகும். மனத்தால் அனுபவித்து அடைய வேண்டிய இன்பமே அகமாக அமைகின்றது. ஒத்த அன்புடைய தலைவன், தலைவி ஆகியோர் உள்ளத்தில் ஏற்படும் உணர்ச்சி அனுபவங்களைத் தம் உள்ளத்திலிருந்து பிறருக்கு வெளிப்படுத்தாதவாறு தாமே நினைந்து நினைந்து மகிழும் வண்ணம் அமைவதாகும்.

அகத்திணை குறித்துச் சில அறிஞர்கள் பல்வேறு கருத்துக்களை வெளியிட்டுள்ளனர்.

---

2. க. வெள்ளைவாரணர், தமிழிலக்கிய வரலாறு தொல்காப்பியம், ப.79.
3. தி. வே. கோபாலையர்(பதி.ஆ.), இலக்கண விளக்கம், ப.30

"அகம் என்பது இன்பப்பொருள் இலக்கியம். காதல் இலக்கியம் எனவும் கூறலாம். ஒருவனும், ஒருத்தியும் கண்டு விழைந்து கூடி இல்வாழ்க்கையேற்று வாழும் ஒழுகலாறு அகப்பொருளாக அமைகிறது. மணமக்களாவதற்கு முன்னர் கூறப்படும் கூறுகளைக் களவொழுக்கம் எனவும், மணமான பின்னர் கூறப்படும் கூறுகளைக் கற்பொழுக்கம் என்னும் கொண்டுள்ளதாகத் தெரிகிறது"[4] என்று அ.மணவாளன் விளக்குகிறார்.

அகம் வாழ்வின் இன்றியமையாத கூறு என்பதனை, "அகம் சிறப்படையாவிடில் புறம் சிறக்கமுடியாது. பெரியதொரு மரமாக ஒரு பொருள் காட்சி நல்கினாலும் கண்ணுக்கே தெரியாத சிறிய வேர்களாலேயே மரத்தின் வாழ்வு நடைபெறுகிறது. இச்சிறிய வேர்கள் நன்கு அமையாவிடில் அப்பெரிய மரம் நன்கு வாழமுடியாது. அதே போலப் பிறர் அறியமுடியாத சூழ்நிலையில் சிறிய வீட்டில் நடைபெறும் இல்லறம் செம்மையாக அமைந்தால் தான் புறவாழ்வு செம்மைப்படும்"[5] என்று கூறுகின்ற அ.ச.ஞானசம்பந்தன் நம் வாழ்வின் இன்றிமையாத கூறாக அகம் விளங்குகிறது என்கிறார்.

அகவாழ்க்கையை இரண்டு வகையாகப் பிரிக்கலாம். ஒன்று களவு வாழ்க்கை, மற்றொன்று கற்பு வாழ்க்கை, திருமணத்திற்கு முந்தைய அகவாழ்க்கை களவு எனவும், திருமணத்திற்குப் பிந்தைய அகவாழ்க்கை கற்பு எனவும் கூறப்படுகிறது.

கற்பு வாழ்க்கையைக் கொண்டு செலுத்தும் கருவியாகக் களவு வாழ்க்கை திகழ்கிறது என்றுரைக்கின்ற வ.சுப. மாணிக்கனார், "கற்பு அன்பு பூண்ட தலைமக்கள் களவுக்காதல் கொண்டடொழுகி பின்னர் பலர் அறிய மணம் புரிந்து கொண்டு வாழும் வாழ்க்கையே கற்பு எனப்படும், களவு என்பது கற்பு வாழ்வுக்குக் கொண்டு செலுத்தும் நெறியாக அமையும்"[6] என்று கூறியுள்ளார்.

அகமென்பது உள்ளத்தால் சுவைத்து இன்புறுவது. சொற்களால் வெளிப்படையாக எடுத்துரைக்க இயலாது. ஆண், பெண் இருவரும் சேர்ந்து அடையும் இன்பத்தையே அகம் என்றனர் ஆன்றோர்.

---

4. அ.மணவாளன், இலக்கியக்கொள்கை (தொகுதி-5), ப.28.
5. அ.ச. ஞானசம்பந்தன், அகமும் புறமும், ப.13.
6. வ.சுப. மாணிக்கம், தமிழ்க் காதல், ப.11.

**அன்பும் அகமும்**

ஐந்திணையே அகத்திணைக்கு அடிப்படையாகும். இதில் உள்ளப் புணர்ச்சியும், மெய்யுறு புணர்ச்சியும் நிகழ்கின்றது. இவற்றுள்ளும் உள்ளப்புணர்ச்சி என்ற அன்பே முதலிடம் வகிக்கிறது. மெய்யுறு புணர்ச்சி என்ற புலனின்பம் இரண்டாமிடம் பெற்றுள்ளது.

சங்க இலக்கியப் பாடல்களில் மிகுதியான பாடல்கள் அக வாழ்க்கையின் ஆணிவேராக அமைவன. இல்லற வாழ்க்கையாகிய அன்பு, வாழ்க்கையின் அடித்தளமாகத் திகழ்வன. உயிரினத் தோற்றத்திற்கு நிலைக்களனாக அமையும் அன்பு கலந்த அக வாழ்க்கை, மன உணர்வின் மாட்சிமையைப் புலப்படுத்தும் கருவாக அமைந்துள்ளது.

**"அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை**
**பண்பும் பயனும் அது"**[7]

என்னும் திருக்குறள் அடிகள் சிறந்த இல்வாழ்க்கையாவது, அன்பினையும், அறத்தினையும் இருகண்களாகக் கொண்டது. அன்பும், அறமும் கலந்த வழிப்பண்பாகவும், பயனாகவும் திகழ்கிறது. இவ்வாறு அன்பு உடைய வாழ்க்கையே அகவாழ்க்கை என்று சான்றோர் கூற்றுக்கு அரண் சேர்ப்பதாகக் குறள் அமைந்துள்ளது எனலாம்.

**களவு வாழ்க்கை**

அகத்திணை ஒழுகலாறில் முதலிடம் வகிப்பது களவு வாழ்க்கை ஆகும். தலைவன், தலைவி ஆகிய இருவரும் ஒருவர் மீது ஒருவர் காதல் கொண்டு பிறர் அறியா வண்ணம் செயல்படுகின்ற வாழ்க்கை முறையே களவு வாழ்க்கை. தலைவியின் செயல்பாடுகள் களவு வாழ்க்கையின் போது மாறுபடும். இதனைக் கண்ட தோழி, தலைவி மனதில் காதல் அரும்பியுள்ளதை உணர்வாள்.

உலக நடைமுறையில், 'களவு' என்னும் சொல்லுக்கு ஒருவர் அறியாமல் அவர் பொருளை மற்றொருவர் திருடிச் செல்லுதல் எனப் பொருள் கூறுவர்."[8] அவ்வகையில் தலைவியின் மனதைத் தலைவனும், தலைவனின் மனதைத் தலைவியும் தன் வயப்படுத்திக் கொள்ளுதலால், 'களவு' என்னும் சொல் வழக்குத் தோன்றியது.

---

7. மு. வரதராசனார்(உ.ஆ.), திருக்குறள்தெளிவுரை, ப.11.
8. ந. சுப்புரெட்டியார், அகத்திணைக் கொள்கைகள், ப.39.

தொல்காப்பியர், பொருளதிகாரத்தில், 'அகத்திணையியல் என்ற இயலில் அகவாழ்க்கை முறைகள் பற்றிக் கூறியிருப்பினும், 'களவியல்', 'கற்பியல்' என்ற இரண்டு இயல்களில் அகவாழ்க்கை முறையினை வரையறை செய்துள்ளார். களவு, கற்பில் முடிவதே சிறப்பாகும் என்பதை,

**"இன்பமும் பொருளும் அறனும் என்றாங்கு**

**அன்போடு புணர்ந்த ஐந்திணை மருங்கின்**

**காமக் கூட்டம் காணுங் காலை**

**மறையோர் தேஎத்து மன்றல் எட்டனுள்**

**துறையமை நல்யாழ்த் துணைமையோர் இயல்பே"**[9]

என்று அறன்வழிப்பட்டதே களவு வாழ்க்கை என்பதை, நயம்படத் தொல்காப்பியர் வகுத்துள்ளார். இன்பத்தால் தோன்றி, பொருளால் மேன்மையுற்று, அறவழி நடப்பாக அமைவது களவு, தலைவி, தலைவனின் உள்ளமொத்த அன்பினை அடிப்படையாகக் கொண்டது. ஐந்திணையினுள் களவை ஆராயும் போது, மறையோதும் அந்தணர் நூலில் சுட்டப்பெறும் எண் வகை மணத்தனுள் ஒன்றாக அமையும் கந்தருவரது மணத்திற்கு ஒப்பாகும் எனக் கூறலாம்.

மனமொத்த காதலர்க்கிடையே நிகழும் 'களவு' பொருள்(செல்வம்) சார்ந்ததன்று, உணர்வு சார்ந்தது.

"களவாவது பிறர்க்குரிய பொருளை அவர் அறியா வகையால் கைப்பற்றுதல். அகப்பொருளில் களவாகிய இது அதுவன்று, தலைவன், தலைவியைத் தாய், தந்தையர் கொடுக்கக் கொள்ளாது தானும், அவளுமாய்த் திறந்த உள்ளத்தோடு எதிர்ப்பட்டுப் புணர்ந்து. அன்பைப் பரிமாறிக் கொள்ளுதல், புணர்ந்து பின்னும் அறநிலை வழாமல் நிற்பதினால் அறம் என்று போற்றப்படும்"[10] என்று இளம்பூரணர் கருத்துக் களவிற்குரிய செயல்பாடுகளைக் குறிப்பிட்டுள்ளன.

திருமணத்திற்கு முன்னர் நிகழும் இக்களவு வாழ்க்கை குறித்துத் தமிழண்ணல், "களவு, மறை, காமக் கூட்டம் என்றெல்லாம் அழைக்கப்படும் இது முதலில் தலைவனும், தலைவியும் மட்டுமே கொண்ட மறைபொருள் (இரகசியம்) ஆகும். பிறர் அறியாதபடி

---

9. தமிழண்ணல்(உ.ஆ.), தொல்காப்பியம், பொருளதிகாரம்(தொகுதி-1), ப.127.
10. இளம்பூரணர்(உ.ஆ.), தொல்காப்பியம், பொருளதிகாரம், ப.89.

நடக்கவே முயலும் பாலியல் உளவியல் இது. தமக்குள் தாமே நுகரும் உணர்வைப் பிறருக்குத் தெரியாமல் மறைந்து செய்யும் களவு எனப்பட்டது”[11] என்று கூறுகின்றார்.

அறிஞர்கள் மற்றும் உரையாசிரியரின் விளக்கங்கள் வாயிலாகக் களவு ஒழுக்கம் என்பது பெற்றோர் அறியாமல் ஊழ் கூட்டுவிக்கத் தலைவனும், தலைவியும் ஒழுகுகின்ற ஒழுக்கமே என்பது அறியப்படுகின்றது.

**கற்பு வாழ்க்கை**

கற்பென்பது உயிரை விட மேலாகப் போற்றப்படக் கூடியது. இது இல்லற வாழ்க்கையில் பின்பற்றக் கூடிய நெறி ஆகும். கற்பு நிலை உடலோடு மட்டும் தொடர்புடையதாகக் கருதுகின்றனர். அது குலமகளிரது மனத்திண்மையாக அமைகின்றது.

கற்பு எனப்படுவது திருமணச் சடங்குகளுடன் தலைவியைக் கொள்ளுதற்குரிய சிறப்பினையுடைய தலைவன் கொடுத்தற்குரிய உரிமையுடைய தன்மையினரான தலைவியின் பெற்றோர் கொடுப்ப மணம் செய்து கொள்வதாகும் என்பதை,

**“கற்பெனப் படுவது கரணமொடு புணரக்**

**கொளற்குரிய மரபிற் கிழவன் கிழத்தியைக்**

**கொடைக்குரி மரபினோர் கொடுப்பக் கொள்வதுவே”**[12]

என்று தொல்காப்பியக் கற்பியல் நூற்பா உரைகின்றது.

பண்டைத் தமிழகத்தில் ஒருவனும், ஒருத்தியும் தனியே எதிர்ப்பட்டுக் காதல் கொண்டு சிறிதுகாலம் களவு வாழ்க்கை நடத்துவார்கள். பின்னர் பலர் அறிய மணம் செய்து கொண்டு கற்பு வாழ்வை மேற்கொள்வர். இவ்வாறு களவின் முடிவு கற்பு என்பது அகத்திணை வலியுறுத்தும் அறங்களுள் தலையானது என்பதை, “கற்பு வழக்காவது தலைவியைக் கொடுத்தற்குரியோர் கொடுப்பக் கரண முறையால் தலைவன் ஏற்றுக் கொள்வதாகும்”[13] என்று வ.சுப. மாணிக்கனார் உணர்த்துகின்றார்.

---

11. தமிழண்ணல் (உ.ஆ.), தொல்காப்பியம், பொருளதிகாரம் (தொகுதி-1), ப.114.
12. இளம்பூரணர்(உ.ஆ.), தொல்காப்பியம், பொருளதிகாரம், ப.245.
13. த.நடேசன், தொல்காப்பியர் கண்ட சமுதாயம், ப.46.

கற்பு என்னும் சொல் கல் என்ற வினையின் அடியாகத் தோன்றியது. இச்சொல்லுக்குக் கற்றல் என்பது பொருள். "கற்பு என்பதற்குக் கற்றபடி நடத்தல், மனத் திண்மை, சொன்ன சொல் தவறாதிருத்தல், மனம் ஒரே நிலையில் நிற்றல் என்றுபொருள் கொள்ளலாம்"[14] என்கிறார் ச.வே. சுப்பிரமணியன். அவரே கல்+வி = கல்வி, கல் + பு = கற்பு. கல்விக்கும், கற்பிற்கும் அடிச்சொல் கல் தான். கல்வி என்பதிலுள்ள கல் அறிவைத்தோண்டுதல், பயில்தல் போன்ற பொருள்களைத் தரும். கற்பு என்பதிலுள்ள கல் கற்பித்தல் என்ற பொருளைத் தருகிறது"[15] என்கிறார்.

கற்பு என்பதற்குப் பல்வேறு விளக்கங்கள் தந்தாலும் இச்சொல் கல் என்ற சொல்லை அடிப்படையாகக் கொண்டு எழுந்ததாகும். கல் என்பதற்குக் கற்றல், தோண்டுதல் எனப் பொருள் கூறுவதால் கற்றல் என்பது வாழ்வுக் கலையைக் கற்றலாகும். தோண்டுதல் எனக் கூறும் பொழுது உள்ளத்தின் உணர்வுகளைப் பண்பட்ட நிலையில் வெளிக்கொணர்வது எனக் கொள்ளலாம்,

நம்பியகப்பொருள் படைத்த நாற்கவிராச நம்பி கற்பியல் என்னும் பகுதியில் கற்பு வாழ்வின் இலக்கணத்தை,

**"பொற்பமை சிறப்பின் கற்பெனப் படுவது**
**மகிழ்வும் ஊடலும் ஊடலுணர்த்தலும்**
**பிரிவும் பிறவும் மருவிய தாகும்"**[16]

என்றும் குறிப்பிட்டுள்ளார். கற்பு என்பது பொலிவமைந்த சிறப்புடையது. இதில் மகிழ்ச்சியும், தலைவன் பிரிவால் தலைவி ஊடுதலும், தலைவன் அவளது ஊடலைத் தணிவித்தலும், பிரிவுகளும், பிறவும் பொருந்தியதே கற்பு வாழ்க்கை ஆகும் என்கிறார்.

திருமணத்திற்குப் பின் தலைவன், தலைவி வாழ்க்கையில் நடைபெறும் அனைத்துச் செயல்பாடுகளும் கற்பியலில் கூறப்பட்டுள்ளன.

இதனால் களவு நெறியில் ஒழுகி அன்புரிமை பூண்ட தலைமகன் தன்பால் அன்புடைய தலைவியைப் பெற்றோர் கொடுப்பப் பலரறிய மணந்து வாழும் மனை வாழ்க்கையே கற்பென வழங்கப்பெறும்.

---

14. ச.வே. சுப்பிரமணியன்(உ.ஆ.), தொல்காப்பிய உரைவளக்கோவை(கற்பு), ப.54.
15. மேலது.
16. கா.ர. கோவிந்தராச முதலியார்(உ.ஆ.), அகப்பொருள் விளக்கம், ப.246.

**நெய்தல் நில வாழ்வியல்**

நெய்தல் நிலத்தில் வாழும் மக்களுக்கு வாழ்வாதாரம் கடல் ஆகும். ஆண்கள் கடலுள் சென்று மீன், முத்து போன்றவற்றைக் கொண்டு வருவர். அவற்றைக் கொண்டு பண்டமாற்று முறையில் வேற்று நிலத்தில் வசிப்பவர்களிடம் தங்களுக்குத் தேவையான பொருள்களைப் பெற்று வாழ்க்கை நடத்தும் இயல்புடையவர்கள் நெய்தல் மக்கள். இவர்களின் வாழ்க்கையின் பெரும்பகுதி கடலைச் சார்ந்தே அமைகின்றது.

வாழ்க்கையில் உயர்ந்த நிலையில் இருப்பவர்கள் கடல் வாணிகத்தின் வழியாக ஏற்றுமதி, இறக்குமதி செய்து பெரும் பொருள் ஈட்டுவர். இவ்வாறு கடற்கரை ஒட்டிய சேரிப்பகுதிகளில் வசிக்கும் பரதவர்களுக்கு வாழ்வின் அனைத்து நிலைகளிலும் உற்ற துணையாகக் கடல் விளங்குகிறது.

நாம் வாழும் பூமியில் பெரும் பகுதி நீரால் சூழப்பட்டுள்ளது. மழை வருவதற்கு மரங்களும், கடல்களும் ஆதாரங்களாகத் திகழ்கின்றன."நெய்தல் நிலத்தில் வாழ்கின்றவர்க்கு இயற்கை நல்ல துணை புரிகின்றது. மழை பெய்தாலும், பெய்யாவிட்டாலும் நெய்தல் நிலத்து மக்கள் கவலை கொள்வதில்லை. எந்த நிலப்பகுதி நீர்வற்றினும் கடலில் நீர் வற்றுதல் இல்லை. வறட்சி என்பதைக் கடல் அறியாது. நெய்தல் நிலத்தார் கடலை உதவ வேண்டாமலே ஏர்பூட்டி, உழு தொழில் இல்லாமலே விளைபயன் அடைவர்"[17] எனக் கூறுவர்.

ஐந்திணைகளுள் இரங்கலும் இரங்கல் நிமித்தமும் என்ற உரிப்பொருள் நெய்தல் நிலத்திற்குரியது ஆகும். காலையில் கலத்திலேறிக் கடலில் சென்ற தலைவன் மீண்டும் வரும் மாலையளவும், கடலில் இடைவிடாது தோன்றும் அலை, தலைவியின் மனதிலும் இடைவிடாது தோன்றிக் கொண்டே இருக்கும்.

தலைவியைப் பிரிந்த தலைவனுக்கும் பிரிவுத்துயர் இருப்பினும் வினைமேற் சென்ற காரணத்தால், அப்பிரிவு நெடுந்துயரை அளிக்காது. தலைவிக்கோ முழுமையும் தலைவனைப் பிரிந்த துயரமே மேலோங்கியிருக்கும்.

தலைவனைப் பிரிந்த தலைவிக்குக் கடலுக்குச் சென்ற தலைவன் மீளும் வரை பெருந்துன்பம் நீடித்திருக்கும். வைகறைப் பொழுதில் கலமேறிச் சென்ற தலைவன் மீளுவதற்குப் பலமணி நேரங்கள் முதல் சில நாள்கள் வரை ஆகலாம். அச்சூழலில்

---

17. ச. சாம்பசிவன், தமிழ் இலக்கியத்தில் நெய்தல் திணை, ப.13.

இயற்கையின் பேரிடரால் தலைவனின் உயிருக்கு ஆபத்து நேர்ந்திருக்குமோ என அஞ்சுவாள். கண்ணீர் பெருகி தலைவி துன்பக் கடலில் உழன்று கொண்டிருப்பாள்.

**தலைவி துன்பமுறக் காரணங்கள்**

கண்ணீர் மல்கும் துன்பத்திற்குரிய இரங்கல் நிமித்தமும் நெய்தல் திணையின் உரிப்பொருள் ஆக்கப்பட்டதன் காரணத்தைக் க.ப. அறவாணன் பின்வருமாறு சுட்டுகிறார்.

"1. கடலிற்குள் செல்லும் தலைவன் திரும்பி வர ஆறுமணி நேரம் முதல் மூன்று நாட்கள் வரை ஆகும்.

2. கடற்காற்றுக் கடலுக்கு உள்ளே அடித்துச் சென்று விடும்.

3. கடலுக்கு உள்ளேயும் வெள்ளோட்டங்கள் இருக்கின்றன. அதன் ஓட்டத்திற்கு மாறாகப் படகைச் செலுத்தின் படகு திசைமாறிப் போய்விடும்.

4.சூறாவளி, புயல் ஆகியவை படகை அலைக்கழித்துக் கடலில் மூழ்கடித்துவிடும்.

5. கடலுக்கு உள்ளே பாறைக்குன்றுகள் உள்ளன. கடல் மரங்கள் உள்ளன. படகு இவற்றில் மோதிச் சிதறுவது உண்டு."[18]

மேற்கூறிய காரணங்களேயன்றி, கடலில் வாழும் திமிங்கலம் போன்ற உயிரினங்களால் படகில் செல்பவர்களுக்கு ஆபத்து நேர வாய்ப்புண்டு. இவ்வாறான சூழல்கள் இருப்பதால் தலைவன் வருகை உறுதிப்படாமல் இருக்கும். இச்சூழல் மிகப்பெரிய மனப்போராட்டத்தைத் தலைவிக்கு ஏற்படுத்தி விடுகிறது. மிகப்பெரிய துன்பம் மனதளவில் ஏற்பட்டு, துன்பத்திற்கு இலக்கானவளாக நெய்தற் தலைவி அமைந்திருப்பாள். வாழ்க்கை என்பது போராட்டம் எனச் சான்றோர் குறிப்பிடுவர். அது ஏனைய திணைகளை விட மிகுதியும் நெய்தற் திணைக்குப் பொருந்துவதாக அமைகிறது.

**முந்நீர் வழக்கம்**

மனிதன் தன் வாழ்க்கையில் இன்பமாக வாழப் பொருள் இன்றியமையாதது. பொருளைப் பெற, தலைவன், தலைவியைப் பிரிதல் தவிர்க்க முடியாதது ஆகும். பொருள்

18. க.ப. அறவாணன், தமிழ் மக்கள் வரலாறு, ப.15.

காரணமாக ஏற்படும் பிரிவில் காலிற்பிரிவு, கலத்திற்பிரிவு என இரு பிரிவுகள் உண்டு. காலிற்பிரிவு, குறிஞ்சி, முல்லை, மருதம், பாலை ஆகிய நான்கு நிலங்களிலும் நிகழும். கலத்திற்பிரிவு நெய்தல் நிலத்தில் மட்டுமே நிகழும்.

பொருள்வயின் பிரிவிற்கான இலக்கணத்தைத் தொல்காப்பியர்,

**"முந்நீர் வழக்கம் மகடூஉவோடு இல்லை"**[19]

எனக் குறிப்பிடுகிறார். மூன்று + நீர் = முந்நீர் ஆகும். ஆற்றுநீர், ஊற்றுநீர், மழைநீர் ஆகிய மூன்று கலந்த வழியே கடல் உருவாகிறது. ஆகவே, கடலை 'முந்நீர்' எனச் சான்றோர் வழங்கினார். 'மகடூஉ' என்னும் சொல் பெண்ணைக் குறிக்கும். மேற்கண்ட நூற்பாவின் வழியாகச் கலத்திற் பிரிவில் பெண்கள் உடன் வருவதில்லை.

காலிற் பிரிவு தலைமகளை உடன்கொண்டு பிரியவும் பெறும். எனினும் இவ்வாய்ப்பு நெய்தல் நிலத்தார்க்கு இல்லை என்பது தெற்றெனப் புரிகிறது. தலைவனுடன் தலைவி இணைந்து வாழ்ந்த காலத்தை விடத் தலைவனை நினைந்து வாழ்ந்த காலமே அதிகமாக இருப்பதாகத் தெரிகிறது.

களவுக் காலத்தில் ஊரலருக்கு அஞ்சி, தலைவனை யாரும் அறியாத வண்ணம் சந்தித்தல் அரிது. கற்புக் காலத்தில் தலைவனின் பொருள்வயிற்பிரிவு தலைவியைப் பெரிதும் பாதிக்கிறது. எச்சூழலிலும் அவலமே மேலோங்குவதாக நெய்தல் பாடல்கள் அமைகின்றன. ஆனால் ஆடவரோ,

**"துன்பம் உறவரினும் செய்க துணிவுஆற்றி**

**இன்பம் பயக்கும் வினை"**[20]

என்ற வள்ளுவர் கூற்றிற்கிணங்க எவ்வளவு துன்பம் நேரினும் மனந்தளராது. தாம் மேற்கொண்ட செயல் சிறப்பாக முடிய வினை மேற்கொள்வர். இவ்வாறாகத் தலைவன் துன்புறினும் வினைக்காக அதைத் தாங்கிக் கொள்வான்.

சங்க இலக்கிய அகப்பாடல்கள் பிரிவினைக் கூறுவதாக அமைகின்றன. அதிகமான பாடல்களில் பொருள் வயிற்பிரிவே, பிரிவிற்கான சூழல்களில் முதன்மை பெற்றிருந்ததை உணரலாம். தலைவன், தலைவி ஆகியோரின் இல்லற அன்பினைப்

---

19. தமிழண்ணல் (உ.ஆ.), தொல்காப்பியம், பொருளதிகாரம்(தொகுதி- I), ப.47.
20. மு. வரதராசனார், திருக்குறள் தெளிவுரை, ப.137.

பற்றி உணர்த்துவதாகப் பாடல் அமையினும், இணைவின் இன்பத்தை விடப் பிரிவின் துயரம் மிகுதியாகப் பேசப்படுகின்றது.

சங்க இலக்கியப் பாடல்கள் மனித உணர்வுகளுக்கு முதலிடம் கொடுப்பனவாக அமைகின்றன. அது மன உணர்வின் வெளிப்பாடு. எண்ண அலைகள் ஒருபோதும் மனிதனை விட்டு அகலாது. அதுபோலவே கடல் அலைகளும் விளங்குகின்றன.

அகப்பொருள் நிகழ்வில் ஆடவர், பெண்டிர் என்ற இருவரின் மனநிலைகளும் ஒருவரையொருவர் எவ்வளவிற்கு விரும்பியிருக்கின்றனர் என்ற அன்பின் வெளிப்பாடாக அமைகின்றன. தலைவியின் கோபம், வருத்தம், துயரம் தலைவனின் நெஞ்சுக்குச் சொல்லும் கூற்று அனைத்தும் அன்பின் தோற்றுவாய் எனக் கூறலாம்.

ஆகவே துன்ப வாழ்வே பெரும்பான்மையான சங்கப் பாடல்களின் பாடுபொருளாக அமைகின்றது.

**அக மாந்தர்கள்**

அக இலக்கியங்களில் இடம்பெறும் மாந்தர்களைத் தொல்காப்பியர்,

1. களவில் இடம் பெறும் மாந்தர்கள்
2. கற்பில் இடம் பெறும் மாந்தர்கள்

என இரண்டாகப் பகுத்துள்ளார். அகப்பொருள் பரந்துபட்ட வரலாறு உடையது; பல்வேறு சூழல்களைக் கொண்டது. ஒவ்வொரு சூழலிலும் பல்வேறு நிகழ்ச்சிகள் நிகழும். அவ்வாறு நிகழும் நிகழ்ச்சிகள் பலவற்றை ஒருங்கு சேர்த்து அகப்பாடலில் பாடுதல் கூடாது. குறிப்பிட்ட ஒரு சூழலில் குறிப்பிட்ட ஒரு நிகழ்ச்சி மட்டுமே அகப்பாடலில் பாடப் பெற வேண்டும் என்று தொல்காப்பியர் குறிப்பிடுகிறார். அகப்பொருள் நிகழ்ச்சியைக் கூறுவதற்கு என்றே மாந்தர் பலர் படைக்கப்பட்டுள்ளனர். அகமாந்தர் கூறுவது போல் அந்நிகழ்ச்சி பாடப்பெற வேண்டும் என்று விளக்கியுள்ளார்.

தலைவன், தலைவி இருவருக்கும், காதல் வாழ்விலும், கற்பு வாழ்விலும் உறுதுணையாகப் படைக்கப் பட்டுள்ளவர்களின் வகையினைத் தொல்காப்பியர்,

**"தோழி தாயே பார்ப்பான் பாங்கன்**

**பாணன் பாடினி இளையர் விருந்தினர்**

**கூத்தர் விறலியர் அறிவர் கண்டோர்**

**யாத்த சிறப்பின் வாயில்கள் என்ப"**[21]

என்ற நூற்பாவின் வாயிலாக விளக்கியுள்ளார்.

அகனைந்திணை ஒழுக்கத்தில் ஒழுகுபவர்கள் தலைமகனும், தலைமகளும் ஆவர். இவர்கள் ஒழுக்கம் செம்மையாக நடைபெறுவதற்குத் துணையாக நிற்பவர்கள், பல சந்தர்ப்பங்களில் அவ்விருவரும் சந்திக்க வாயில்களாக நின்று உதவுபவர்கள் பதின்நால்வர். அவர்கள் தோழி, நற்றாய், செவிலி, பாங்கன், பார்ப்பார், பாணன், விறலியர், அறிவர், பரத்தையர், கண்டோர், கூத்தர், இளையர், விருந்தினர், தேர்ப்பாகன் ஆகியோர். தலைவனும், தலைவியும் குறிக்கோள் வாழ்வு வாழ்வதற்கு இவர்கள் துணைபுரிகின்றனர் எனலாம்.

**களவில் இடம் பெறும் மாந்தர்கள்**

தலைவன், தலைவி, தோழி, செவிலி, பார்ப்பான், பாங்கன் ஆகிய ஆறுபேரும் களவில் இடம்பெறும் மாந்தர்கள் ஆவர். களவொழுக்கம் எய்தும் மாந்தர்கள் தலைமக்களாகவும், அவர்களுக்கு உறுதுணையாகச் செயலாற்றும் தலைவியின் நட்புத் துணை தோழி எனவும், தலைவியைப் பெற்றவர் நற்றாய் எனவும் கூறப்படுகின்றது. தலைவியை வளர்ப்பவர் செவிலி எனவும், செவிலியே தோழிக்குத் தாயெனவும் உடன்போக்குக் கொண்டிருக்கும் தலைமக்களைக் காணும் வழியிடை எதிர்ப்படுவோரான பெரியோர், அந்தணர், முதுபெண்டிர் ஆகியோர் கண்டோர் எனவும் அமைகின்றனர். இதனைத் தொல்காப்பியர்,

**"பார்ப்பான் பாங்கன் தோழி செவிலி**

**சீர்த்தகு சிறப்பிற் கிழவன் கிழத்தியொடு**

**அளவியல் மரபின் அறுவகை யோறாங்**

**களவினின் கிளவிக் குரியர் என்ப"**[22]

என்ற நூற்பாவின் வாயிலாக விளக்கியுள்ளார். இவர்கள் ஆறுபோரும் களவில் இடம் பெறும் மாந்தர்கள் ஆவர்.

---

21. ச. பாலசுந்தரம் (உ.ஆ.), தொல்காப்பியம், பொருளதிகாரம், ப.190.
22. இளம்பூரணர்(உ.ஆ.), தொல்காப்பியம், பொருளதிகாரம், ப.495.

**கற்பில் இடம் பெறும் மாந்தர்கள்**

தலைவன், தலைவி, தோழி, செவிலி, பார்ப்பான், பாங்கன், பாணன், கூத்தன், விறலி, பரத்தை, அறிவர், கண்டோர் ஆகிய பன்னிருவரும் கற்பில் இடம் பெறும் மாந்தர்கள் என்பதனை,

> **"பாணன் கூத்தன் விறலி பரத்தை**
>
> **யாணஞ் சான்ற வறிவர் கண்டோர்**
>
> **பேணுதகு சிறப்பிற் பார்ப்பான் முதலா**
>
> **முன்னுறக் கிளந்த அறுவரொடு தொகைஇத்**
>
> **தொன்னெறி மரபிற் கற்பிற்குரியர்"**[23]

என்ற நூற்பாவின் வாயிலாகத் தொல்காப்பியர் விளக்கியுள்ளதைக் காணலாம். இவர்கள் கற்பில் இடம் பெறும் மாந்தர்கள் எனலாம்.

களவிற் கூற்றுக்கு அறுவரையும், கற்பிற் கூற்றுக்குப் பன்னிருவரையும் அமைத்ததிலிருந்து தொல்காப்பியம் கற்பின் மேல் வைத்திருந்த சிறப்பைக் காணலாம். இன்னும் தலைவன், தலைவியர் களவோடு சேர்ந்த கற்பில் வழுவாது நின்று வாழ்வியலை நடத்த வேண்டும் என்று கூறுகின்றார்.

**அறம் என்னும் சொல்**

'அறு' என்ற வினைச்சொல் அடியாகப் பிறந்ததே'அறம்' என்னும் சொல். இச்சொல்லுக்கு அறுத்துச் செல், வழியை உண்டாக்கு, உருவாக்கு, துண்டி, வேறுபடுத்து என்ற பலவகைப் பொருள்கள் வழங்கப்படுகின்றன. மனிதன் தனக்கென வரையறுத்துக் கொண்ட ஒழுக்க முறைகளின் தொகுதியே - முழுநிறை வடிவமே அறம் என்று சமூகவியல் விளக்கமும். பிறவி தோறும் மனிதனைப் பற்றிக்கொண்டு வரும் தீவினையை அறுத்தெறிவதே அறம்' என்ற ஆன்மிக விளக்கமும் தரப்படுகிறது"[24] என்கிறார் க.த.திருநாவுகரசு.

நல்ல அல்லது தீய செயல்கள் வழியாகத் தானே வெளிப்படும் மக்களுடைய நடத்தையைப் பற்றிய ஆய்வியல் கலையே 'எதிக்ஸ்'(Ethics) என வழங்கப்படுகிறது. இது

---

23. பேராசிரியர்(உ.ஆ.), தொல்காப்பியம், பொருளதிகாரம், ப.581.
24. க.த. திருநாவுகரசு, திருக்குறள் - நீதிஇலக்கியம், ப.33.

தமிழில் 'அறவியல்' எனப்படுகிறது. 'எதிக்ஸ்' என்னும் இக்கிரேக்கச் சொல் முதன் முதலில் பழகிப்போன நடத்தை, வழக்கம், மரபு என்னும் பொருள்களை உணர்த்தியும் பின்னர் நடத்தை என்னும் பொருளையும் வழங்குவதாக உள்ளது.

தனிமனித நடத்தையின் சிறப்பால் அறம் பெரும்பாலோரால் பின்பற்றப்படுகிறது. நாளடைவில் அது ஒழுக்கமென்னும் பண்பாக மலர்ந்து, வாழ்க்கை நெறியாக பின்பற்றவும், வலியுறுத்தவும் படுகிறது. ஆகவே 'அறம்' என்பது மனித வாழ்வின் உயர் மதிப்பீடான விழுமியங்களை உருவாக்குவதாக அமைகிறது. அது மரபினருக்குத் தொடர்ந்து வழி வழியாகக் கற்பிக்கப்படுகிறது. அறத்தை மீறுவது சமூகக் குற்றமாக, தெய்வக் குற்றமாகக் கருதும் சூழல் உருவான நிலையில் 'சட்டம்' என்ற ஒன்று உருவானது எனலாம். இந்நிலையில், அறம் தவறிய சமூக ஒழுக்கச் செயல்களில் ஈடுபடுவோர் சட்டப்படி தண்டனைக்கு ஆளாகினர்.

**இலக்கியத்தில் அறம்**

இலக்கியத்தில் அறம் பல நிலைகளில் சுட்டப்படுகிறது. தனிமனித மற்றும் சமூகச் செயல்பாடுகளில் அறம் வலியுறுத்தப்பட்ட நிலையிலிருந்து, தனிமனிதர் எண்ணமும் அறத்தின் பாற்பட்டதாக இருக்க வலியுறுத்தப்பட்டது. மனம் தூய்மையானதாக இருக்க வேண்டும் என்பதை,

**"மனத்துக்கண் மாசிலனாதல் அனைத்து அறன்**

**ஆகுல நீர பிற"**[25]

என்கிறார் வள்ளுவர். இதற்கு உரை சொல்லிய பரிமேலழகரும், "அறம் என்ற சொல் நல்லொழுக்கத்தினையே குறிக்கும் என்பதான பொருளில், திருவள்ளுவரால் சிறப்புடைய ஒழுக்கமே அறம் என்று கொள்ளப்பட்டது"[26] என்று கூறுகின்றார்.

இதனால் அறம் என்பது தனிமனித வாழ்வின் ஒழுக்கத்தையும், சமுதாய வாழ்வின் செயல்பாட்டினையும் ஒட்டி எழுவது என்பது தெளிவாகின்றது.

**தலைவன்**

---

25. மு. வரதராசனார், திருக்குறள் தெளிவுரை, ப.4.
26. பரிமேலழகர்(உ.ஆ.), திருக்குறள், ப.24.

தலைமகன் என்பான் கல்வி, அறிவு, ஒழுக்கங்களால் சிறந்தவன், வழிவழியே வரும் உயர்குடியில் பிறந்தவன், பெருஞ்செல்வத்தினை உடையவன். இவனும் தலைவியும் ஒருயிரும், ஈருடலும் போன்ற நட்பினை உடையவர்கள். இவர்கள் தொடர்பு, பிறவி தோறும் தொடர்ந்து வருவதாகத் தொல்காப்பியர்,

**"ஒன்றே வேறே என்றிரு பால்வயின்**

**ஒன்றி உயர்ந்த பாலது ஆணையின்"**[27]

என்ற நூற்பாவில் குறிப்பிடுகிறார். தலைவனின் எண்ணங்களும், பெரும்பான்மையான செயல்பாடுகளும் தலைவியை மையமிட்டே அமைகின்றன. தலைவியோடு கூடித் களிக்கும் பொழுதும், அவனைப் பிரிந்து வாடும் பொழுதும் தலைவன் நிகழ்த்தும் கூற்றுக்கள் தலைவனுடைய எண்ணங்களை வெளிப்படுத்துகின்றன.

தலைமகனின் பெருமையைத் தொல்காப்பியம்,

**"பெருமையும் உரனும் ஆடுஉ மேன"**[28]

என்று சிறப்பித்துப் பேசுகின்றது. இதற்கு உரை கூறிய நச்சினார்க்கினியர், பெருமை என்பதற்கு அறிவு, ஆற்றல், புகழ், கொடை, ஆராய்ச்சி, பழி பாவங்களுக்கு அஞ்சுதல் ஆகிய பெருமைக்குரிய குணங்கள் என்றும், உரன் என்பதற்குப் பின்பற்றுதலும், நிறையும், கலங்காது துணிதல் ஆகிய வலிமையின் பகுதி"[29] என்றும் கூறுகின்றார்.

இறையனார் களவியல் உரையாசிரியர் அறிவு, நிறை, ஓர்ப்பு, கடைப்பிடி என்பவற்றைத் தலைமகனது குணங்களாகக் கூறுவர். "அறிவு என்பது, எப்பொருளாயினும் அப்பொருளின் மெய்ம்மையை அறிவது. நிறை என்பது, காப்பன காத்துக்கடிவன கடிந்தொழுகும் ஒழுக்கம், ஓர்ப்பு என்பது, ஒரு பொருளை ஆராய்ந்து உணர்தல், கடைப்பிடி என்பது, கொண்ட பொருள் மறவாமை"[30] என்று பொருள் உரைக்கிறார். இவ்வாறாக அனைத்துக் குணநலன்களைப் பெற்றவனாக அகத்திணைத் தலைவன் விளங்குகிறான்.

---

27. ஆ. சிவலிங்கனார்(பதி.ஆ.), தொல்காப்பியம் களவியல் உரைவளம், ப.21.
28. ச. சாம்பசிவனார்(பதி.ஆ.), தொல்காப்பியர் பொருட்படலப்புத்துரை, ப.411.
29. மேலது, ப.412.
30. நக்கீரர்(உ.ஆ.), இறையனார் களவியல், ப.28.

அக இலக்கியத்தில் சுட்டப்பெறும் தலைவன் தொழிலை உயிரினும் மேலாகப் போற்றியவன். தம்முடைய முன்னோர் சேர்த்து வைத்தப் பொருளைப் பயன்படுத்தவில்லை. பிறரின் உழைப்பிலிருந்து வந்த பொருளைப் பயன்படுத்துவதை இழிவு எனக் கருதுவதை,

**"வினையே ஆடவர்க்கு உயிரே வாள்நுதல்**

**மனைஉறை மகளிர்க்கு ஆடவர் உயிர்"**[31]

என்கிறது குறுந்தொகை, தாமே தேடிய பொருளைக் கொண்டு இல்லறம் நடத்துவதையே வாழ்க்கைக் கொள்கையாக வகுத்துக் கொண்டான் எனலாம்.

தலைவன் எந்தச் செயலைச் செய்தாலும் திறமையாகவும், செம்மையாகவும் செய்கின்ற மனவுறுதியைப் பெற்றிருக்கின்றான். இதனால் அவன் தலைவியிடம் கொண்டிருக்கும் காதல் உண்மையாகவும், உறுதியாகவும் இருந்தது. தலைவியின் இன்ப வாழ்க்கையைக் குறிக்கோளாகவும், இனிய நினைவுகளை இன்ப ஊற்றாகவும் கொள்வதை,

**"இன்பம் விழையான் வினை விழைவான் தன்கேளிர்**

**துன்பம் துடைத்தூன்றும் தூண்"**[32]

என்று திருக்குறள் கூறுகின்றது. இதனால், தலைவியின் மேல் அன்புகொண்டு அவளது இன்ப வாழ்க்கையில் பங்கேற்றுச் சிறந்த வாழ்க்கை வரன்முறைகளை உலகிற்குக் காட்டுபவனாகத் தலைவன் விளங்குகிறான். அவன் எந்நாளும் முன்னோர் பொருளை வைத்து அதிலிருந்து இன்பத்தை அனுபவிக்காதவன். தன் உழைப்பில் இருந்து ஈட்டிய பொருளின் வழிதான் இன்பத்தைப் பெற நினைப்பவன். தன் உழைப்பின் பயனை உறவினர்கள் அனுபவித்து அவர்கள் துன்பத்தைத் துடைக்கின்ற பேருள்ளம் படைத்தவன் தலைவன் எனலாம்.

### நெஞ்சுக்குச் சொல்லுதலும் நெய்தலும்

நெய்தல் திணையில் வினையின் காரணமாகச் செல்லும் தலைவன், தலைவியைக் குறித்த தம் எண்ணங்களைத் தனக்குத் தானே சொல்லிக் கொள்ளுதலே நெஞ்சுக்குச் சொல்லுதல் ஆகும். எட்டுத்தொகை நூல்களில் நற்றிணையில் ஒரு

31. பொ.வே. சோமசுந்தரனார்(உ.ஆ.), குறுந்தொகை, ப.248.
32. பரிமேலழகர் (உ.ஆ.), திருக்குறள், ப.250.

பாடலும், குறுந்தொகையில் இரண்டு பாடல்களும், ஐங்குறுநூற்றில் ஒரு பாடலும், அகநானூற்றில் இரண்டு பாடல்களும் மொத்தம் ஆறு பாடல்கள் நெய்தல் திணைக்குரிய தலைவன் நெஞ்சுக்குச் சொல்லுவதாக அமைந்துள்ளன.

அகப்பாடல்கள் உருவாகப் பிரிவே முதற்காரணமாக அமைகின்றது. வாழ்வியல் மரபில் அகவாழ்வு முக்கியமானதாகவும், முதன்மையானதாகவும் திகழ்கின்றது. அகவாழ்வின் இயல்பு பற்றிச் செந்துறைமுத்து, "அகம் என்பது தனியே இருந்து வாழ்க்கை நடத்துவதற்கு வேண்டிய மன வளர்ச்சியும், உடல் வளர்ச்சியும் ஒருங்கே பெற்ற ஒருவனும், ஒருத்தியும் ஒருவரை யொருவர் கண்டு காதலுறவு கொண்டு, உள்ளத்தால் ஒன்றுபட்டு மணம் புரிந்து கொண்டு மனையற வாழ்க்கையில் வாழ்தலாகும்"[33] எனக் குறிப்பிட்டுள்ளார்.

ஒருவனுடைய வாழ்க்கை, சிறப்பானதாக அமையப் பொருள் இன்றியமையாதது ஆகும். பொருளின்றி இவ்வுலகில் யாராலும் வாழ இயலாது. இப்பொருள் என்னும் செல்வம் பெறவும் பிரிவு நிகழ்கிறது. இக்கருத்து உலகில் வாழும் அனைவருக்கும் பொருந்தும். பொருள் இல்லாதவர்களுக்கு இவ்வுலகம் இல்லை என்பதை வள்ளுவர்,

**"அருளில்லார்க்கு அவ்வுலகம் இல்லை பொருளில்லார்க்கு**

**இவ்வுலகம் இல்லாகி யாங்கு"**[34]

என்ற குறட்பாவின் வழியாகத் தெளிவுபடுத்தியுள்ளார். இத்தகைய பொருளைப் பெறத் தலைவன் வினையாற்ற வேண்டும். அது ஆண் மகனின் அடையாளமாகவும் கருதப்படுகிறது. "தலைவன் தான் எண்ணிய வினையினை முடித்தபின் திரும்புவானேயன்றி இடையில் இல்லம் திரும்புவதில்லை. எல்லாப்பொழுதும் தலைவியின் அழகும், இளமையும், குணமும் தலைவனுக்கு நினைவில்லாது போகாது."[35] இச்சூழலில் தலைவியை நினைத்துத் தலைவன் தன் நெஞ்சிற்குச் சொல்லுவதாகப் பாடல்கள் அமைகின்றன. இவையின்றி களவில் தலைவியைச் சந்திக்க இயலாத காலத்தும், தலைவி இற்செறிக்கப்பட்ட சூழலிலும் தலைவன் நெஞ்சுக்குச் சொல்லுதல் நிகழும்.

---

33. புலவர் செந்துறைமுத்து, தமிழர் மரபுகள், ப.78.
34. மு. வரதராசனார், திருக்குறள் தெளிவுரை, ப.51.
35. மு. மணிவேல், தமிழ் இலக்கிய அகப்பொருள் மரபுகள், ப.13.

தலைவனால் தலைவியைச் சந்திக்க இயலாத சூழல் நிலவுகின்றது. எவ்வளவு முயன்றும் சந்திக்க இயலவில்லை. இச்சூழலில் வருந்திய தலைவன் நெஞ்சிற்குச் சொல்வதாக,

**"குணகடல் திரையது பறைதபு நாரை**

**திண்தேர்ப் பொறையன் தொண்டி முன்துறை**

**அயிரை ஆர்இரைக்கு அணவந் தாஅங்குச்**

**சேயள் அரியோட் படர்தி**

**நோயை நெஞ்சே நோய்ப்பா லோயே"**[36]

என்ற குறுந்தொகைப் பாடல் அடிகள் அமைந்துள்ளன. கிழக்கே உள்ள கடற்கரையில் வாழும் வலிமையிழந்த நாரையொன்று. மேற்குக் கடற்கரையான தொண்டி நகரின் முன் துறையில் உள்ள அயிரை மீனைக் கௌவத் தலையை மேலே தூக்கிப் பார்க்கிறது. அதைப்போல தலைவனும், தலைவியைப் பெற இயலாதவனாய்த் தவிக்கிறான். இதற்குக் காரணம் ஊழ்வினை ஆகும்.

**"ஊழ்வினை உருத்துவந்து ஊட்டும்"**[37]

என்ற சிலப்பதிகாரக் கூற்றினை உணர்த்துவதாகத் தலைவன் நெஞ்சிற்குக் கூறுவது வெளிப்பட்டுள்ளது. தன்னை நாரையாகவும், தலைவியை அரிய உணவாகிய அயிரை மீன் எனவும் தலைவன் உவமைப்படுத்திக் காட்டுகிறான். தன் துயர் கண்டு தானே இரங்குகின்ற நிலைப்பாடு உடையதாகத் தலைவன் கூற்று அமைந்துள்ளது.

தலைவனுக்குத் துயரம் அளிப்பது தலைவியன்று, பிரிவே என்பதைப் பாடல் வெளிப்படுத்தியுள்ளது. கற்புக் காலத்தில் பொருள் வயின் பிரிவை ஒருவாறு தள்ளிப்போட்டுப் பின்னர் தலைவன் செல்லலாம். ஆனால் களவுக்காலத்தில் இப்பிரிவு தவிர்க்க முடியாததாக அமைகின்றது.

**தலைவி**

அகத்திணை மாந்தர்களை இணைத்து நிற்கும் இணைப்புப்பாலம் தோழி எனில், அகத்திணை வட்டத்திற்கு அமைந்த மையப்புள்ளி தலைவி. குறிஞ்சி, முல்லை, மருதம்,

---

36. தமிழண்ணல்(உ.ஆ.), குறுந்தொகை, ப.168.
37. சிலம்பொலி சு.செல்லப்பன்(உ.ஆ.), சிலப்பதிகாரம், ப.22.

நெய்தல், பாலை ஆகிய ஐந்திணைகளின் உரிப்பொருளாகிய புணர்தல், இருத்தல், ஊடல், இரங்கல், பிரிதல் ஆகிய ஐவகை உணர்வுகளும் தலைவியை மையமாகக் கொண்டவை. தலைவியைத் தொல்காப்பியம் கிழவி, பெட்டை, பெடை, பெண்டிர், மகட்பால், மகடூஉ, கிழத்தி எனப் பல்வேறு சொற்களால் குறிப்பிடுகிறது. சங்க இலக்கியத்தில் தலைவனும், தலைவியும் ஒன்று பட்ட மனத்தினை உடையவராகத் திகழ்கின்றனர். இருவரும் ஒருங்கே இணைந்து இல்லறக் கடமைகளை ஆற்றுகின்றனர். அகப்பாடலில் தலைமை பெறும் தலைவி களவு வாழ்க்கையில் படும் துயர்கள் பல, தலைவனுக்கு நேரும் இடர்கள் குறித்து வருந்தும் தலைவி, தாய், செவிலி ஆகியோருக்குக் கட்டுப்பட்டு வாழ்கிறாள். கற்பு வாழ்க்கையில் இடம்பெறும் தலைவி, தலைவனைப் பிரிந்து வருந்தும் நிலையிலும் தனது பணிகளைச் செம்மையாகச் செய்கின்றாள். தலைவனின் பிரிவு பரத்தையின் காரணமாக நிகழும் பொழுது தலைவி அடையும் மனத்துயர் மிகுதி, இதனை, "அகத்திணை ஓர் பெண்ணிலக்கியம், அக மாந்தர்களுள் தலைமை தலைவிக்கே, பிற மாந்தர்கள் தலைவி வழிபட்டவர்கள் செவிலியும், அன்னையும் தலைவியின் நல் வாழ்விற்காக வாழ்பவர்கள், அகப்பாட்டிற்குத் தலைமையவள் தலைவி"[38] எனத் தலைவியின் சிறப்பைக் குறிக்கிறார் வ.சுப.மாணிக்கம்.

பெண்களுக்கு உரிய பண்புகளாகத் தொல்காப்பியர்,

**"அச்சமும் நாணமும் மடனு முந்துறத்த**
**நிச்சமும் பெண்பாற்குரிய என்ப"**[39]

என்று அச்சம், நாணம், மடம் போன்றவற்றைப் பெண்களின் அணிகலனாகக் குறிப்பிடுகிறார். இவற்றை நீங்காதவளாகத் தலைவி இருந்ததை,

**"அன்னயன பல பாராட்டி பையென**
**வலைவர் போல சோர் பதன் ஒற்றி**
**புலையர் போல புன்கண் நோக்கி**
**தொழலும் தொழுதான் தொடலும் தொட்டன்**
**காழ்வரை நில்லாக் கடுங்களிறு அன்னோன்"**[40]

---

38. வ.சுப. மாணிக்கம், தமிழ்க் காதல், ப.463.
39. ஆ. சிவலிங்கனார்(பதி.ஆ.), தொல்காப்பியம் உரைவளம் (களவியல்), ப.54.
40. நச்சினார்க்கினியர்(உ.ஆ.), கலித்தொகை, ப.160..

என்று இப்பாடலில் தலைவன் மெய்தொட்டுப் பழகுதல் போன்ற எட்டையும் செய்தும் நாணம் நீங்காதவளாக இருந்ததைக் கலித்தொகை குறிக்கிறது.

**கற்பின் செல்வி**

தலைவனைச் சுமந்த தலைவியின் மனது அவனை வரைந்து கொள்ளுவதிலேயே குறியாய் இருக்கிறது. ஒரு பெண்ணிற்குப் பலவழிகளில் இருந்து இன்பங்கள் பெருகினாலும் திருமண வாழ்க்கையைத் தவிர அவளுக்குப் பேரின்பம் வேறெதும் இல்லை. இந்நிலையை எதிர்பார்க்கும் தலைவியின் மனதில் குடும்பத்தின் தலைவி என்ற முறையில் மனைவி, இல்லாள் என்ற சொற்களுக்கு நிலைக்களனாக விளங்கும் தன்மையைக் கொண்டவளாகத் தலைவி விளங்குகிறாள். அகத்திணை நெறிகளிலிருந்து சிறிதும் விலகாது தற்காத்துத் தற்கொண்டாரைப் பேணிப்பாதுகாத்து அமையும் ஒழுக்கம் உடையவளாகத் தலைவி அக இலக்கியங்களில் படைக்கப்பட்டிருக்கிறாள்.

ஒரு பெண்ணின் கற்பு வாழ்க்கையில் திண்மை என்கின்ற உறுதிநிலை இருக்க வேண்டும். அவ்வாறு அமைந்து விட்டால் பெண்ணை விடவும் பெருமையுடையது இவ்வுலகில் வேறெதும் இல்லை என்பது,

**"பெண்ணின் பெருந்தக்க யாவுன் கற்பென்னும்**
**திண்மை உண்டாகப் பெறின்"**[41]

என்கிறார் திருவள்ளுவர். நாணம் என்பது பெண்களுக்கென்ற இயற்கையாக அமைந்த பண்பாகும். நாணம் பெண்களுக்கு அழகை மட்டுமல்லாமல் நல்லொழுக்கத்தையும், தூய்மையான எண்ணங்களையும் அளிக்க வல்லது. நாணம் என்ற அணிகலன் பெண்ணிடத்தில் இல்லையானால் அப்பெண் ஒழுக்கங்கெட்டுச் சீர்குலைவாள். ஒழுக்கக் கேட்டிற்கு நாணமின்மை வெளிப்படையானதொரு அடையாளமாகும். இதையே தொல்காப்பியனார்,

**"உயிரினும் சிறந்தன்று நாணே நாணினும்**
**சேயிர்தீர் காட்சிக் கற்புச்சிறந் தன்றென"**[42]

என்று குறிப்பிடுகிறார்.

---

41. ஞா. தேவநேயப் பாவாணர்(உ.ஆ.), திருக்குறள், ப.54.
42. ஆ. சிவலிங்கனார்(பதி.ஆ.), தொல்காப்பியம் உரைவளம் (களவியல்), ப.280.

அகத்திணை மாந்தருள் எக்குறையும் இன்றி குடும்பத்தில் ஆட்சிபுரியும் வேந்து போன்றவள் தலைவி, அவள் கற்பு என்னும் உன்னத அணிகலனைப் பூண்டவள், உயர்குடியில் பிறந்ததால் உயர்ந்த பண்புகளையும் பெற்றுள்ளாள். அத்தகைய தலைவியின் வாழ்க்கையில் வாயில் மறுத்தல், வாயில் நேர்தல் என்ற அகத்துறைகள் யாவும் கற்பின் செவ்வியான தலைவியின் உரிமையில் பிறந்ததை,

**"கற்புங் காமமும் நற்பா லொழுக்கமும்**

**மெல்லியற் பொறையும் நிறையும் வல்லிதின்**

**விருந்துபுறந் தருதலும் சுற்றம் ஓம்பலும்**

**பிறவு மன்ன கிழவோள் மாண்புகள்**

**முகம்புகல் முறைமையிற் கிழவோற் குரைத்தல்**

**அகம்புகல் மரபின் வாயிட்கட்குரிய"**[43]

என்று தலைவியின் குணநலன்களைத் தொல்காப்பியம் கூறுகின்றது. 'கற்பு என்பது கணவன் முதலியோர் கற்பித்த நிலையில் திரியாத நல்லொழுக்கம், காமம் என்பது அன்பு, நாற்பாலொழுக்கம் என்பது தன் குலத்திற்கு அற்றவாற்றான் ஒழுகும் ஒழுக்கம், மெல்லியற்பொறை என்பது மறைக்கக் கூடிய நெஞ்சு, வல்லிதின் விருந்து புறந்தருதல் என்பது வறுமையையோ, செல்வத்தையோ கருதாது இயன்ற வரை விருந்தினரைப் பாதுகாத்து. அவர்களை மனம் மகிழ்வித்தல், சுற்றம் ஓம்பல் என்பது தொடர்புள்ள மக்களைப் பாதுகாத்து. அவர்கள் உண்டபின் தான் உண்டல் என்று தலைவியின் பண்புகளை வரையறுக்கிறார். இவற்றால் தலைவியின் பண்பு மற்றும் சிறப்பினை அறியலாம்.

**தலைவியின் இரங்கல் கூறும் நெய்தல்**

தலைவியின் செயல்பாடுகளில் மாற்றம் கண்டு, அவள் காதல் வயப்பட்டதை அறிந்த தாயர் போன்றோர் அவளை வெளியே விடாமல் சிறைப்படுத்தினர். இச்சூழலில் ஆற்றாளாகிய தலைவி, தன் தோழியிடம் கூறிப் புலம்புவதை,

**"பூஇடைப் படினும் யாண்டுகழிற் தன்ன**

**நீர்உறை மகன்றிற் புணர்ச்சி போலப்**

43. இளம்பூரணர்(உ.ஆ.), தொல்காப்பியம், பொருளதிகாரம், ப.294.

**பிரிவுஅரி தாகிய தண்டாக் காமமொடு**

**உடன்உயிர் போகுக தில்ல, கடன் அறிந்த**

**இருவேம் ஆகிய உலகத்து**

**ஒருவே மாகிய புன்மைநாம் உயற்கே"**[44]

என்ற குறுந்தொகைப் பாடல் அடிகள் விளக்குகின்றன. இப்பாடலில் தலைவியின் துயர உணர்ச்சி புலப்பட்டுள்ளது. நீரிலே இணைந்து பயணிக்கும் மகன்றில் பறவைகள் கூடி வாழும் இயல்புடையன. அவற்றை ஒரு பூ பிரித்தது. அவை போன்று இல்லறக் கடமைகளை ஆற்றுதற்பொருட்டுப் பிரிந்து சென்ற தலைவரைச் சந்திக்க முடியாமல் வாழ்கின்ற வாழ்க்கை மிகவும் கடுமையானது. பிரிந்து வாழ்வதினும் இணைந்து இறப்பதே சிறப்பு எனத் தலைவி உரைக்கிறாள்.

தலைவனைப் பிரிந்ததால் ஏற்படும் இரங்கல் நிலையை உணர்த்தி நெய்தல் நில உரிப்பொருளான இரங்கலும், இரங்கல் நிமித்தமும் வெளிப்பட்டுள்ள சூழலை விளக்கியுள்ளது.

**நலனழிதல்**

தலைவனின் பிரிவினால் தலைவிக்கு ஏற்படும் நலனழிதல் தலைவி கூற்றிலும், தோழி கூற்றிலும் கூறப்படுதலைக்காணலாம். வரைவிற்காகவோ, வேறு காரணங்களுக்காகவோ தலைவன் பிரிகின்றான். அவ்வாறு அவன் பிரிந்த நிலையில் தலைவி வருந்துகின்றாள். தலைவன் பிரிவினைத் தாங்க முடியாத தலைவியின் நலனழிதல் ஆற்றாமை என்ற அடிக்கருத்தை அடிப்படையாகக் கொண்டு அமைந்துள்ளதை,

**"கையறு தோழி கண்ணீர் துடைப்பினும்**

**வெறியாட்டு இடத்து வெருவின் கண்ணும்"**[45]

என்ற நூற்பாவில் தொல்காப்பியர் விளக்கியுள்ளார். யாருக்கும் தெரியாமல் களவு வாழ்வில் ஈடுபட்ட தலைவன், தலைவியைக் காண வாராமல் இருக்கும் சூழலில் தலைவி நிலவிடம், 'என் கண்ணிற்குத் தெரியாத தொலைவில் தலைவன் இருக்கின்றான்.

---

44. தமிழண்ணல்(உ.ஆ.), குறுந்தொகை, ப.90.
45. ச. பாலசுந்தரம்(உ.ஆ.), தொல்காப்பியம், பொருளதிகாரம், ப.52.

உலகில் உன் பார்வையில் படாதவரில்லை. ஆகையால் எனக்கு என் தலைவனைக் காட்டு என்கிறாள். தலைவன் இருக்கும் உண்மை தெரிந்து நீ மறைப்பின் வாடிய என் தோள் போன்று வாட்டமுற்று நாள்தோறும் சிறுகச் சிறுகச் குறைந்து அழிந்து போவாய் என்கிறாள். தலைவி, தன் நலனழிவை நிலவுடன் ஒப்பிடும் திறன் குறிப்பிடத்தக்கதாகும்.

**"நிற்கரந்து உறையும் உலகம் இன்மையின்**

**எற்கரந் துறைவோர் உள்வழி காட்டாய்**

**நற்கவின் இழந்தவென் தோள்போற் சாஅய்ச்**

**சிறுகுபு சிறுகுடி செரீஇ**

**அறிகரி பொய்த்தலின் ஆகுமோ அதுவே"**[46]

என்ற நற்றிணைப் பாடலடிகளில் தலைவியின் ஆற்றாமை நிலவின் மேல் வைத்துக் கூறப்படுகின்றது.

தலைவியை வரைவதற்காகப் பொருள் தேடச் சென்ற தலைவன் பொருளீட்டி வருவதற்கு முன்பே அவ்விடைக்காலப் பிரிவினைத் தாங்கமுடியாத நிலையில் தலைவியின் கண், தோள், கூந்தல் போன்றவை தம் அழகினை இழந்தன. மேனி பசலை பாய்ந்தது, உடலில் இருந்து உயிர் பிரியும் நிலை உள்ளதை,

**"கண்ணுந் தோளுந் தண்நறுங் கதுப்பும்**

**பழநலம் இழந்து பசலைபாய**

**இன்னுயிர் பெரும்பிறி தாயினும் என்னதூஉம்"**[47]

என்ற பாடலடிகளால் அறியலாம். இவற்றால் பிரிவாற்றாமையால் ஏற்பட்ட தலைவியின் நலனழிதல் புலப்படுகின்றது.

**பிரிவுத்துயர்**

தலைவன் பிரிந்து செல்லுவதால் தலைவியின் துன்பம் அதிகமாகிறது. ஊர் அடங்கிய நடுயாமத்தில் மக்கள் அனைவரும் உறக்கத்தில் ஆழ்ந்துள்ளனர். தலைவியோ தலைவனை நினைத்து உறக்கம் கொள்ளாமல் வருந்துவதை,

---

46. பின்னத்தூர் நாராயணசாமி ஐயர்(உ.ஆ.), நற்றிணை நானூறு, ப.246.
47. மேலது, ப.274.

**"வன்கைப் பரதவர் இட்ட செங்கோல்**

**கொடுமுடி அவ்வலை பரியப் போகிக்**

**கடுமுரண் அறிசுறா வழங்கும்**

**நெடுநீர்ச் சேர்ப்பன்தன் நெஞ்சத் தானே"**[48]

என்ற பாடலடிகளில் தலைவியின் பிரிவுத்துயர் வெளிப்படுத்தப்படுகிறது. தலைவியின் தனிமைச் சூழலைக் காட்டி அச்சூழலில் அவள் மட்டும் பெரிதும் வருத்தமுறும் ஆற்றாமை அகப்பாடல்களில் புலம்பலாக வெளிப்படுத்தப்படுகின்றது. இவற்றில் நெய்தல் நில உரிப்பொருளான இரங்கல் நிமித்தம் வெளிப்படுகின்றது.

**தலைவி ஆற்றாமை**

தலைவனைப் பிரிந்த தலைவி தன் பிரிவுத் துயரினை ஆற்றாது புள், மேகம், நிலவு போன்ற பொருள்களிடத்தும் கூறிப் புலம்புவாள். கடல் ஒசையை ஓயாது எழுப்புகின்றது. துணையைப் பிரிந்த அன்றில் சோகக் குரல் எழுப்புகின்றது. விரலை மீட்டி வாசிக்கும் நல்ல யாழ் கூட நடுயாமத்தில் சோக இசையை வழங்கி தலைவிக்கு உயிர் போகும் அளவு துன்பம் தருகிறது. ஆனால் தலைவனோ அத்துன்பத்தை நீக்குவதற்கில்லை எனத் தலைவி புலம்புவதை,

**"அன்றிலும் என்புற நரலும், அன்றி**
**விரல் கவர்ந்து உழந்த கவர்வின் நல்யாழ்**
**யாமம் உய்யாமை நின்றன்று**
**காமம் பெரிதே களைஞரோ இலரே"**[49]

என்ற பாடல் அடிகள் விளக்குகின்றன. தலைவியின் பிரிவுத் துன்பம் மிகுதியாகிவிட்ட நிலையில் தனக்குத்தானே புலம்பும் நிலையை இத்தலைவியின் கூற்றால் அறியலாம். துன்பம் மீதுறும் போது இவ்வகையான புலம்பல் தனக்குத்தானே அல்லது அஃறிணைப் பொருளினை நோக்கிக் கூறுவதாக அமைகின்றது.

**தலைவி, தோழியை ஆற்றுவித்தல்**

களவில் இன்பம் துய்த்த தலைவன் சில நாட்கள் வரவில்லை, அப்பிரிவுக் காலத்து மாலை வேளைகளில் தலைவி படும் துயரம் கண்டு தோழி வருத்தமுற்றாள்.

---

48 த. கோவேந்தன், அன்பொடு புணர்ந்த ஐந்திணை(நெய்தல்), ப.145.
49. மேலது, ப.152.

தலைவியோ தோழியைத் தேற்றும் வகையில் தான் ஆற்றியிருப்பதாகக் கூறுகின்றாள். கானல் சோலையில் காணப்படும் நீர் மிகுதியாயிற்று, நெய்தல் பூ குவிந்துவிட்டது, பறவைகள் உணவருந்திய பின் கூடுகளில் இணைகின்றன. தலைவன் மீண்டு வருதலில் விருப்பம் இல்லாமல் இருக்கின்றான். அவன் பிரிவினால் உயிரே அழிந்து போவது ஆனாலும் கவலையில்லை. கடற்கரை ஊருக்கு உரியவனான தலைவன் வெட்கப்படும்படி அவனைத் தூற்றுகின்ற பழிச்சொல் நம்மைத் தாக்குகின்றது. அதனை எவ்வாறாயினும் மறைக்க வேண்டும் என்று தலைவி கூறுவதை,

**"ஆருயிர் அழிவது ஆயினும் நேரிழை**

**கரத்தல் வேண்டுமால் மற்றே பரப்பநீர்த்**

**தண்ணந் துறைவன் நாண**

**நண்ணார் தூற்றும் பழிதான் உண்டே"**[50]

என்ற நற்றிணைப் பாடல் அடிகள் கூறுகின்றன. தலைவி ஆற்றாமை உடையவளாக இருந்தாலும் தலைவன் மீண்டும் வருவான் என்ற நம்பிக்கையுடன் காத்திருப்பது உணர்த்தப்பட்டுள்ளது. தலைவி தலைவனின் பிரிவால் ஆற்றாமையால் வாடினாலும் அவனுடனான அன்பு அவளுக்கு நம்பிக்கையை ஏற்படுத்துகின்றது.

அன்பை மட்டும் முதன்மையாகக் கொண்டு வாழ்க்கையில் இன்பம், துன்பம் என எச்சூழ்நிலையிலும் தனித்தப் பண்புகளால் சிறப்புப் பெற்றவள் தலைவி. அக இலக்கியத்தில் அமையப்பெற்ற தலைவி மனிதச் சமுதாயத்திற்கு அறநூல்கள் காட்டும் அத்துணை நெறிமுறைகளையும் அறிந்தவளாக விளங்குகிறாள். தலைவனை விடத் தலைவி வாழ்க்கை நிலைகளில் மிகவும் நுணுக்கமாகவும், ஆழமாகவும், அகலமாகவும் சிந்தித்து நல்லனவற்றை ஏற்றுக்கொண்டு, தீமையைக் களைந்து இல்லறத்தை நடத்துபவளாக அமைவாள் என்பதை அக இலக்கியங்கள் காட்டும் தலைவியின் வாயிலாக உய்த்து உணரலாம்.

### தோழி

அக இலக்கியத்தில் இன்றியமையா இடம் பெறுபவள் தோழி, அகத்திணை மாந்தர்களுள் தோழிக்கெனத் தனிச் சிறப்பிடம் உண்டு, களவு, கற்பு இரு நிலைகளிலும் பெரும்பங்கு ஏற்பவள் தோழி. தலைவியின் குழந்தைப் பருவத்தில் உடலைப் போற்றி

---

50. பின்னத்தூர் நாராயணசாமி ஐயர்(உ.ஆ.), நற்றிணை நானூறு, ப.470.

வளர்ப்பவள் செவிலி, இளமைப் பருவத்தில் உள்ளத்தைப் போற்றிக் காப்பவள் தோழி. தோழியரே பின்னால் செவிலியர் என்ற நிலையை அடைகின்றனர். தலைவியின் விளையாட்டுப் பருவத்திலிருந்து தோழியாக இருந்து மகப்பேறு நிலையில் செவிலியாக மாறுகிறாள். செவிலியின் மகள்தான் தோழி என்பதை,

**"தோழி தானே செவிலி மகளே"**[51]

என்கிறார் தொல்காப்பியர்.

தலைவன், தலைவியரிடையே அரும்பும் காதல் மலர்ந்து காய்த்துக் கனிவதற்குத் தோழி உறுதுணையாகிறாள். தோழி தலைவிக்காவே தலைவியின் காதல் வெற்றிக்காகப் படைக்கப்பட்ட பாத்திரமாகக் காணப்படுகிறாள், களவு வாழ்க்கை என்ற தேரினது அச்சாணியுடன் கூடிய சக்கரம் போன்றவள் தோழி. அவளின் செயல்திறன் இல்லையானால் தலைவி தலைவனின் களவொழுக்கம் சிறப்பாக அமையாது. தோழியின் கூற்றில் அவளது தனிப்பட்ட வாழ்க்கையோ, பிற அகமாந்தர்களுடன் தொடர்பு கொள்ளாமல் அவளுக்கெனத் தோன்றும் தனிப்பட்ட மன உணர்வுகளோ சித்திரிக்கப்படவில்லை. பிற அகமாந்தர்களின் மன உணர்வுகள் தோழியினால் விளக்கமாக எடுத்துக் கூறப்படுகின்றன. தோழி அறிவில் ஓங்கி உயர்ந்த நிலையில் இருப்பதை,

**"செறிவும் நிறைவும் செம்மையும் செப்பும்**
**அறிவும் அருமையும் பெண்பாலான"**[52]

என்ற தொல்காப்பிய நூற்பா விளக்குகின்றது.

தோழியர் பலர் இருந்ததாக இலக்கியம் சுட்டுகிறது. இதனை, 'நன்னர் மாக்கள்' என்கிறது அகம், தோழியர் பலர் இருந்தாலும் தலைவிக்கு உயிர்த்தோழியே தோழியாகக் கருதப்படுவாள், மற்றவரெல்லாம் தோழியாகக் கருதப்பட்டாலும் தலைவி, தலைவன் களவு, கற்பு ஒழுக்கத்தில் ஈடுபடுவதற்கு உதவமாட்டார்கள். தலைவியின் வாழ்க்கையில் மிகுந்த பொறுப்பு உடையவள் தோழி அதனால் தலைமக்களது வாழ்க்கையில் தோழியே முதன்மை பெறுகின்றாள். தோழி இல்லையேல் தலைவியின் காதல் பாங்கற் கூட்டத்துடன் முடிந்துவிடும். தோழிதான் தலைவியின் காதல் அரும்பை மலர்வித்துக்

---

51. இளம்பூரணர்(உ.ஆ.), தொல்காப்பியம், பொருளதிகாரம், ப.240.
52. ச. பாலசுந்தரம்(உ.ஆ.), தொல்காப்பியம், பொருளதிகாரம், ப.211.

காயாக்கிக் கனிவிக்கிறாள். தலைவி என்னும் வித்து, செடியாகிக் குழந்தைக் கிளையுடைய குடும்பமாகத் தழைக்கச் செய்கிறாள். தோழி அம்மரத்தின் அடிமண்ணாக இருந்து பிறர் அறியாமல் செயல்படுகிறாள். தலைவியின் வாழ்வில் தோழியின் இடத்தை வேறு எந்தத் துணை மாந்தராலும் நிரப்ப முடியாது என்பதை உணர்ந்த தலைவி,

**"தோழி, நீ திறமை மிக்கவள்**

**இடமறிந்து காலமறிந்து**

**இன்சொல்லும் கடுஞ்சொல்லும் பேசும் கலையில் வல்லவள்**

**தலைவனின் உள்ளம் வருந்தாத வகையில்**

**அறிவுரை கூறித் தெருட்டும் நின்பணி**

**சிறப்பதாக நீ நெடிது வாழ்க"**[53]

என்று தோழியின் செயலைப் புகழ்ந்து அவள் நெடிது வாழ வேண்டும் எனத் தலைவி வாழ்த்துகிறாள்,தோழி இல்லையென்றால் தலைமக்களின் காதல் இல்லை என்று கூறும்படி முதன்மையான இடத்தைப் பெற்றிருப்பவள் தோழி எனலாம்.

**தோழி - சொல்லாராய்ச்சி**

தோழி என்ற சொல்லை தோழ் + இ எனப்பகுத்தனர். இ என்பது பெண்பால் விகுதியைக் குறிக்கின்றது. மனித உறுப்புகளில் தோள் தமக்கும், பிறர்க்கும் உதவும் முதன்மையான உறுப்பு, தோளோடு தோள் நின்று உழைத்தல், தோள் கொடுத்தல் என்பன உதவுதல் என்ற பொருளில் வழங்கி வருகிறது. உடல் உறுப்புகளில் கை என்பது முயற்சியைச் சுட்டுவது போல தோள் என்பது உடனிருந்து உதவும் தன்மையைச் சுட்டுகிறது. தோள் போன்றவன் தோழன், தோழி என்பது எடுத்துக்காட்டாக உள்ளன.

'தோழி' என்னும் சொல் குறித்துச் சொல்லாராய்ச்சி நிகழ்த்தும் சரளா இராசகோபாலன், "ஒரு பொருளைச் சுட்டப் பல சொற்கள் பிறந்தாலும், அடிப்படையில் அவற்றினுள், சிறிதளவேனும் வேற்றுமை உண்டு என்பதை அறிவுடையோர் உணர்வார். தலைவியுடன் சிறப்போடு இருந்த துணைப்பாத்திரத்தைச் சுட்ட தோழி, இகுளை, பாங்கி, சிலதி, இணங்கி, துணைவி, சேடி, சகி என்ற சொற்கள் பல்வேறு கால நிலையில் தோன்றி வழக்காற்றிலிருந்தன. இவற்றில் தோழி என்ற சொல்லே பழமைச்

---

53. ப. சண்முகராணி, சங்க இலக்கியம் உணர்த்தும் வாழ்வியல் சிந்தனைகள், ப.104.

சிறப்புடையது. தொல்காப்பியம், இறையனார் அகப்பொருள், வீரசோழியம் போன்ற இலக்கண நூல்களிலும், சங்க இலக்கியங்களிலும் தோழி என்ற சொல்லே பயன்பாட்டில் உள்ளது"[54] என்று கூறுகிறார். தோழி என்பதை,

**"தொழுது நிற்றலை யுடையவள் தோழி"**[55]

என்று குமாரசாமிப் புலவர் குறிப்பிடுகிறார். "தோளை வீசி ஆடும் தோளி என்ற வரிக்கூத்துக்குரிய பெண்டிருள் சிறந்தோள் தோழி ஆவாள் என்ற கருத்துக்கும் இடமுண்டு"[56] என்கிறார் இளங்குமரன்.

"கலித்தொகையில் 'தோழீஇ' என்று அளபெடுத்து வருமிடங்களில் உரையாசிரியர் 'காண்டற்றொழிலை உடையவள்"[57] என்று கூறுகிறார். இவ்வாறு தோழி என்ற சொல்லைப் பலரும் குறிப்பிடுகின்றனர்.

**தோழியின் இரங்கல் கூறும் நெய்தல்**

களவுக் காதலர்கள் வெளிப்படையாக மணந்து இல்லறம் நடத்தவேண்டும் என்பதே அகத்திணையின் நோக்கம், இதை நன்கு அறிந்தவள் தோழி. இந்த நோக்கத்தைப் பொறுப்புடன் நிறைவேற்றுபவள் இவளே. இக்காரணத்தினால் கற்பொழுக்கத்தைக் காட்டிலும் களவொழுக்கத்தில் இவள் பங்கு மிகவும் இன்றியமையாதது. அகத்திணைப் பாடல்களில் தோழி, தலைவனை அலையவைப்பது போல் தோன்றும். இவ்வாறான தோழியின் செயல்கள் யாவும் நாள் நீட்டிக்காமல் எப்படியானினும் தலைவியை மணம் முடித்துக் கொடுக்க வேண்டும் என்ற பொறுப்புணர்ச்சி காரணமாகத்தான், களவிலேயே வந்து தலைவியைக் கூடும் வழக்கத்தை விடுத்து விரைந்து மணம் செய்து கொள்ள வேண்டும் என்று தலைவனை வேண்டும் தோழியின் முயற்சியே வரைவுகடாதல் ஆகும்.

தலைவனிடம், தலைவியின் நிலையையும்,சுற்றுப் புறத்தையும் விளக்கி மணம் புரியுமாறு தோழி வேண்டுகிறாள். இது களவைக் கற்பாக்கத் தோழி எடுக்கும்

---

54. சரளா இராசகோபாலன், சங்க இலக்கியத்தில் தோழி, ப.11.
55. சுன்னாகம் குமாரசாமிப் புலவர் (உ.ஆ.), புறப்பொருள் விளக்கம், ப.50.
56. இரா. இளங்குமரன், உரையாசிரியர்கள் கண்ட சொற்பொருள் நுண்மை விளக்கம், ப.141.
57. நச்சினார்க்கினியர்(உ.ஆ.), கலித்தொகை, ப.315.

முன்ஏற்பாடு. தலைவியைக் குறியிடத்து வந்து புணர்ந்து நீங்கும் தலைமகனிடம் தோழி எதிர்ப்பட்டு வரைவு கடாவுதலை,

**"நல்குமதி வாழியோ நளிநீர்ச் சேர்ப்ப**

**அலவன் தாக்கத் துறைஇறாப் பிறழும்**

**இன்னொலித் தொண்டி அற்றே**

**நின் அலது இல்லாது இவள்சிறு நுதலே"**[58]

என்ற ஐங்குறுநூற்றுப் பாடல் அடிகள் விளக்குகின்றன. தோழி தலைவனிடம் உன்னையே உயிரெனக் கொண்டு வாழ்ந்து கொண்டிருக்கிறாள் தலைவி. நண்டு தாக்க, துறையில் வாழும் இறால் மீன் புரளும் இனிய ஓசையை உடையது தொண்டிநகர், தலைவியின் நெற்றியும் தொண்டி நகர் போல ஒளிபெற்றது. ஆதலால், நீ அதன் ஒளி கெடாமல் காப்பாயாக என்கிறாள் தோழி.

நண்டு தாக்கத் துறையில் வாழும் இறால் மீன் புரளும் என்பதால், தலைவியின் நெற்றி பசலை பாய்ந்து ஒளி கெட்டால், களவு வாழ்க்கை புறத்தார்க்குப் புலப்பட்டு விடும். நாணம் மிகுதியால் தலைவி உயிர் வாழ மாட்டாள் என்ற பொருள் உடையதாகப் பாடல் அமைந்துள்ளது.

ஊரினுள் அலர் நிகழ்வது தலைவியின் புறத்தோற்றத்தால் அமையும், களவின் வெளிப்பாடு தலைவியின் தோற்றத்தால் புலப்பட்டு விடும். ஆதலால் களவொழுக்கம் நீங்கி, தலைவி மகிழ விரைந்து மணம் செய்து கொள்ளுவதே சாலச்சிறந்தது எனக் கூறி வரைவினைத் தோழி வலியுறுத்துகிறாள்.

இப்பாடல் தலைவிக்காக இரங்கும் தோழியின் நிலையைத் தெளிவுப்பட விளக்கியுள்ளது. தோழியின் கூற்றுகளுள் பெரும்பான்மை தலைவிக்காக இரங்குவதாகவே அமைந்திருக்கின்றன.

**அறத்தொடு நிற்றல்**

அறத்தொடு நிற்றல் என்பது களவைக் கற்பாக்க முயல்வது. களவு,கற்பு என்னும் இருகரைகளுக்குமிடையே ஒரு பாலம் போல் அமைந்தது. கற்பின் வழி நின்று களவு ஒழுக்கத்தைப் பெற்றோருக்குத் தெரிவிக்கும் நிலை அறத்தொடு நிற்றல் எனப்படும்.

58. அர. சிங்காரவடிவேலன்(உ.ஆ.), ஐங்குறுநூறு, ப.215.

தலைவியின் களவு வாழ்க்கையை அவள் தம் பெற்றோருக்கு வலியுறுத்துவதே தோழியின் நோக்கமாகக் கொள்ளப்படுகிறது. இவ்வறத்தொடு நிற்றலை,

**"அறத்தொடு நிற்குங் காலத் தன்றி**

**அறத்தியல் மரபிலள் தோழி என்ப"**[59]

என்று தொல்காப்பியர் தலைவியின் உள்ளத்து உணர்வை உணர்த்தும் தோழி, அறத்தொடு நிற்க வேண்டிய இடம் பற்றிக் குறிப்பிடுகிறார். இது வரைவு கடாதல் போன்ற வழிகளெல்லாம் கையாளப்பட்ட பிறகு அறத்தொடு நிற்றல் என்னும் இந்நெறியை மேற்கொள்வர். தலைவியின் களவை வெளிப்படுத்திய பின்னர் மற்றவர்களின் மனநிலை என்ன என்பதை,

**"அறத்தொடு நின்றேனைக் கண்டு திறம்பட**

**என்னையர்க் குய்த்துரைத்தாள் யாய்**

**அவருந் தெரிகணை நோக்கிச் சிலைநோக்கிக் கண்சேந்**

**தொருபக லெல்லாம் உருத்தெழுந் தாறி**

**இருவர்கட் குற்றமும் இல்லையால் என்று**

**தெருமந்து சாய்த்தார் தலை"**[60]

என்ற கலித்தொகைப் பாடல் அடிகள் விளக்குகின்றன. தலைவியின் களவை அறிந்த தமர் முதலில் சினம் கொண்டு எழுந்தாலும், பின் உணர்ந்து அவர்களின் களவைக் கற்பாக்க முயல்வதை அறியமுடிகிறது.

தோழி தன்னுடைய அறிவுத்திறன் முழுவதையும் பயன்படுத்திச் செயல்படுவதற்குரிய பருவம் அறத்தொடு நிற்றல், இதில் தலைவியின் தாய், தந்தையர் மனப்பாங்கையும், தலைவன் எண்ணத்தையும், பிறவற்றையும் சீர்தூக்கிப் பார்க்கும் திறன் தோழியிடம் மட்டும் உள்ளது. அதனால் தலைவியின் நலன் கருதிக் களவைக் கற்பாக்க விரைவில் திருமணத்திற்கு வற்புறுத்துகின்றாள். "தலைவி தன் மனத்தால் விரும்பியவனையே மணம் புரிந்து கொள்வது தான் அறவழியல் நிற்பதாகும். விவரம் அறியாத பெற்றோர் வேறு எவனுக்கும் திருமணம் பேசவிடாமல் தடுத்து, தலைவியின்

59. இளம்பூரணர்(உ.ஆ.), தொல்காப்பியம் பொருளதிகாரம், ப.323.
60. நச்சினார்க்கினியர்(உ.ஆ.), கலித்தொகை, ப.108.

காதல் உண்மையை அறிவித்து, முதலில் சினம் கொண்டாலும் பிறகு பெற்றோரையும் ஒப்புக் கொள்ள வைத்து, தலைவி மனத்தால் ஏற்றுக்கொண்டவனைப் பாரறிய மணமேடையில் வரைந்து கொள்ளும் வழி செய்வதால் தான் இதற்கு அறத்தொடு நிற்றல் என்று பெயர்”[61] என்கிறார் தமிழண்ணல்.

களவாக இருந்த காதலைக் கற்பாக மாற்றும் துறை அறத்தோடு நிற்றல், தலைவியின் காதலைப் பெற்றோர் அறியச் செய்து, முறைப்படி தலைவனுடன் தலைவிக்குத் திருமணம் நடக்க வழி செய்வதாக அறத்தொடு நிற்றல் அமைகிறது.

அறத்தொடு நிற்றல் துறை குறிஞ்சி, மருதம், நெய்தல், பாலைத் திணைகளில் விரவி வருகின்றன. எவரும் எவரிடத்தும் குற்றம் காணாத வகையில் அறத்தொடு நிற்றலில் தோழி உரையாடுவாள். இவ்வறத்தொடு நிற்றல் வெறியாட்டு, நொது மலர்வரைவு, இற்செறிப்பு, அலரச்சம் போன்றவற்றால் தலைவிக்கு ஏற்படும் இன்னல்களைத் தடுக்கும் பொருட்டு நிகழ்கிறது.

**நொதுமலர் வரைவில் அறத்தொடு நிற்றல்**

மற்ற சூழ்நிலைகளில் தோழி அறத்தொடு நிற்காவிடில் தலைவியின் கற்பிற்கு இழுக்கு நேராது. ஆனால் நொதுமலர் வரைவில்(அயலவர் மணம்பேசி வரும்போது) அறத்தொடு நிற்காவிடில் தலைவியின் கற்புக்கு இழுக்கு நேரும். அதனால், தோழியால் அலட்சியமாக இருக்க இயலாது, தாய்க்குத் தலைவியின் நிலையை உணர்த்தியே தீர வேண்டும். தாயும் உணர வேண்டும் என்ற வகையில் பாடல்கள் அமைந்துள்ளன. இதற்கு,

**“முன்னிலை அறனெனப் படுதல் என்றிருவகைப்**
**புரைதீர் கிளவி தாயிடைப் புகுப்பினும்”**[62]

என்னும் விதியைத் தொல்காப்பியர் குறிப்பிடுகின்றார்.

நெய்தல் நிலத் தலைவி நொதுமலர் வரைவின் போது தன் எதிர்ப்பை அஞ்சாமல் தெரிவிக்கின்றாள், பால் உண்ணாமல் உறுதியோடு இருக்கிறாள். தோழியும் உறுதியாய் தண்ணந்துறைவனுக்குத் திருமணம் செய்வித்தால் தான், தலைவி பால் குடிப்பாள், இல்லையேல் உண்ணாமல் இருந்து இறந்துபடுவாள் என்று கூறுவதை,

**“பெருங்கடற் கரையது சிறுவெண் காக்கை**
**துறைபடி யம்பி யகமனை யீனுந்**

61. தமிழண்ணல், இலக்கியக் கொள்கை, ப.40.
62. ஆ. சிவலிங்கனார்(பதி.ஆ.) தொல்காப்பியம் உரைவளம்(களவியல்), ப.288.

**தண்ணந் துறைவ னல்கி**

**னொண்ணுத லரிவை பாலா ரும்மே"**[63]

என்ற ஐங்குறுநூற்றுப் பாடல் அடிகள் விளக்குகின்றன. இவை தலைவியின் அஞ்சாமைத் தெரிவிக்கும் புதுமையான பாடலாகும்.

காக்கை தன் முட்டையினைப் பாதுகாவலான தோணியில் உள்ள அகமனையில் இட்டு வைக்கும். அதுபோல தலைவியினுடைய உயிர் தலைவனுடன் இணைந்து விட்டது. அவனையன்றி வேறொருவனைத் தலைவி மணக்க விரும்பாத நிலையைக் கூறித் தலைவனுக்கே விரைந்து மணம் முடித்து கொடுக்க வேண்டும் என்று தோழி அறத்தோடு நிற்கின்றாள்.

**உடன்போக்கு**

உடன்போக்கு அகப்பொருள் இலக்கணத்தில் இடப்பெறும் ஒரு துறையாகும். உடன்போக்கு என்னும் சொல் 'உடன்போக்குகை' எனப் பொருள்படும். இவ்வுடன்போக்குத்தலைவன், தலைவியரிடையே தோன்றிய களவு வெளிப்படுதற்குரிய கிளவிகளுள் ஒன்றாகக் கருதப் பெறுகிறது. களவொழுக்கத்தில் ஈடுபட்ட தலைவி பெற்றோர் அறியாது தோழியின் உதவியால் தலைவனோடு வேற்றிடம் செல்வது உடன்போக்காகும்.

"இற்செறிப்பின் கடுமையான நிலையில் தலைவி செய்யக் கூடியது பெற்றோர் அறியாமல் தலைவனுடன் சென்றுவிடுதலேயாகும். இதுவே உடன்போக்கு"[64] என்று ஈ.கோ. பாஸ்கரதாஸ் குறிப்பிடுகின்றார்.

"உடன்போக்கு என்பது களவு மறுத்த போது எத்தனையோ ஆண்டுகள் தன்னைப் பெற்றுப் பேணி வளர்த்த பெற்றோர்களை விட்டுத் தன்னுடைய காதல் தலைவனுடன் தலைவி செல்வதைக் குறிக்கும். இது தலைவனுடன் போதல் என்றும், தலைவனுடன் உடன்பட்டுப் போதல்"[65] என்றும் பொருள் படுவதாக அகத்தியலிங்கம் கூறுகின்றார்.

---

63. பொ. வே. சோமசுந்தரனார்(உ.ஆ.), ஐங்குறுநூறு, ப.241.
64. ஈகோ. பாஸ்கரதாஸ், அகப்பாடல்களில் தோழி, ப.75.
65. ச. அகத்தியலிங்கம்,சங்க இலக்கியம் செவ்வியல் பார்வை, ப.55.

இவ்வாறு உடன்போக்கு என்பது தலைவனும், தலைவியும் தங்கள் காதல் தலைவியது ஊரில் நிறைவேறாத சூழலில் தலைவியின் பெற்றோர் அறியாவண்ணம் இரவோடு இரவாக ஊரைவிட்டுச் சென்ற தலைவனது ஊரில் மணமுடித்துக் கொள்ளுதலாகும் என்று கருதமுடிகிறது.

**தோழியும் உடன்போக்கும்**

தலைவனையும், தலைவியையும் அறத்தோடு நின்று திருமணப் பிணைப்பில் இணைக்கும் பணியைத் தோழி மேற்கொள்வாள். பெற்றோர் களவு வாழ்க்கை, கற்பில் முடிய இசைவு தெரிவிக்காத காலத்தில் உடன்போக்கில் அனுப்பி வைப்பாள். களவு வாழ்வில் அன்னை பற்றிய அச்சமும். அலர்ப்பெருக்கமும் உடன்போக்கை ஊக்குவிக்கும் களங்கள். இச்சூழ்களிலும் உடன்போக்கை ஊக்குவிப்பவள் தோழி, உடன்போக்குச் செல்லத்தலைவன் தயங்குவதற்குத் தலைவியின் மென்மையும், சுரத்தன்மையும் காரணம் காட்டப்படுகின்றன. தலைவி கொள்ளும் தயக்கத்திற்கு நாணம் அழிவு காரணம் காட்டப்படுகிறது. இருவர் மன ஊசலையும் ஒரு நிலைப்படுத்தி உடன்போக்கும் பணியைத் தோழி மேற்கொள்கிறாள். பகல், இரவுக்குறிகளில் சந்திக்க முடியாமை, நொதுமலர் வரைவு, அன்னை அலைத்தல், கடுஞ்சொற்களைக் கூறல், ஊரவரின் அலர் இன்னும் சில காரணங்களால் தலைவியை உடன்போக்கு மேற்கொள்ளத் தோழி வற்புறுத்துகிறாள்.

தலைவி வசிக்கின்ற ஊரில் வாழும் பெண்களுள் சிலர் தலைவியின் நடத்தை குறித்துப் பழிதூற்றுகின்றனர். அதனை உண்மை என்று கருதிய அன்னை, தலைவியை கோல் கொண்டு அடிக்கிறாள். அதைக் கண்ட தோழிக்குத் தாங்கிக் கொள்ள இயலவில்லை. ஆதலால், இனியும் இப்பழிப்பேச்சு எழாமல் இருக்கத்தலைவனுடன் தலைவி உடன்போக்கு நிகழவேண்டும். பின்னர் ஊர் என்ன செய்யும் எனக் கூறி பழிப்பேச்சுப் பேசுபவர்களுக்குத் தோழிச் சாபம் கொடுப்பதை,

**"சிலரும் பலரும் கடைக்கண் நோக்கி**
**மூக்கின் உச்சிச் சுட்டுவிரல் சேர்த்தி**
**மறுகின் பெண்டிர் அம்பல் தூற்றச்**
**சிறுகோல் வலந்தனள் அன்னை அலைப்ப**
**அலந்தனென் வாழி தோழி கானல்**

**புதுமலர் தீண்டிய பூநாறு குரூஉச்சுவல்**

**கடுமா பூண்ட நெடுந்தேர் கடைஇ**

**நடுநாள் வரூஉம் இயல்தேர்க் கொண்கனொடு**

**செலவயர்ந் திசினால் யானே**

**அலர்சுமந்து ஒழிகவில் அழுங்கல் ஊரே"**[66]

என்று நற்றிணைப் பாடல் அடிகள் இயம்புகின்றன. இப்பாடலில் தோழி தலைவியிடம், அன்பற்ற மகளிர் பிறரோடு புறங்கூறுதலைக் குற்றமாகக் கருதுதல் இல்லை. அவர்கள் சிலரும் பலருமாய்க் கூடி, தங்கள் கடைக்கண்ணால் ஒருவருக்கொருவர் குறிப்புடன் பார்த்து வியப்பால் தங்கள் மூக்கின் மேலே சுட்டுவிரலைச் சேர்த்து வைத்து ஊர்வம்புகளைப் பேசினர். இதனால் அன்னை உன்னைக் கோலால் அடித்தாள். நீ தலைவனுடன் செல், பின்னர் பழிப்பேச்சு பேசும் இவ்வூர் அலர் தூற்றி அழிந்து ஒழியட்டும் என்கிறாள் தோழி. தீர்வு எனக்கருதித் தலைவியிடம் தோழி உடன்போக்குச் செல்லக் கூறினாள்.

கடற்கரைப் பரப்பில் உள்ள மணல், காற்றால் தூற்றப்பட்டது போல, தலைவி குறித்து இவ்வூரில் பழிப்பேச்சான அலர் தூற்றப்பட்டது. இதனால் தலைவி துயரடைகிறாள் எனக் கூற விரைவில் மணம் முடிக்கத் தலைவனிடம் தோழி வேண்டுகிறாள். அலர் நீங்க மலர்மாலை சூட்ட அறிவுறுத்துகிறாள். இதன் வழித்தலைவிக்காக இரங்கும் தோழியின் நிலையினை உணரலாம். இரங்கலும் இரங்கல் நிமித்திமுமாகிய நெய்தல் திணையின் உரிப்பொருள் இவ்வாறு விளக்கப்படுகிறது.

**செலவழுங்குவித்தல்**

பொருளுக்காகப் பிரிந்து செல்லும் தலைவனைப் பிரியவிடாமல் அவன் செலவினைத் தோழி தடுப்பது, செலவழுங்குவித்தல் எனப்படுகிறது. தலைவன் களவில் வரைவு காரணமாகவும், கற்பில் பொருள், போர் காரணமாகவும் பிரிவது மரபு. தொல்காப்பியர் கற்பியலில் மட்டும் செலவழுங்குவித்தலைக் குறிப்பிடுகிறார். தலைவனின் பிரிவால் தலைவி பெறும் துன்பம், பொருள், இளமை, யாக்கை நிலையாமை, உடன்போகத் தூண்டல், அறிவுரை கூறல் என்னும் முறையில் தலைவனைச் செலவழுங்கவிக்கிறாள் தோழி. தலைவன், தலைவியைப் பிரிவதற்கு

---

66. கதிர். மகாதேவன்(உ.ஆ.), நற்றிணை, ப.15.

எண்ணும் போது தோழி, தலைவியையும் உடன் அழைத்துச் செல்லுமாறு வேண்டுகிறாள். தலைவன் பொருள் தேடச் செல்வது தோழிக்கு வருத்தம் தரவில்லை. தலைவியைத் தனித்துவிட்டுச் செல்வதே செலவழுங்குவிக்கக் காரணம் என்பதை,

**"தலைவி தன்னையும், தன்மனற் தன்னையும்**

**அலமர லொழிந்தற் கழுங்குவ தல்லது**

**செல்வத் தோன்றல் சொல்லா னல்லன்"**[67]

என்கிறது அகப்பொருள். தலைவனின் செலவை முழுமையாகத் தடுக்க வேண்டும் என்பது தோழியின் நோக்கமன்று, தலைவி பிரிவின் கொடுமையைத் தாங்கும் நிலைவரும் வரை மட்டும் தலைவனைச் செலவழுங்குவிக்க விரும்புகிறாள் தோழி.

**செலவழுங்குவித்தலில் தோழியின் பங்கு**

செலவழுங்குவித்தல், மருதம் ஒழிந்த குறிஞ்சி, முல்லை, நெய்தல், பாலை என்ற நான்கு திணைகளிலும் காணப்பெறுகிறது. இத்துறையில் தோழியின் கூற்றுக்கள் தலைவனிடம் பேசுவதாகவே அமைகின்றன.

தலைவியைப் பிரிந்து பொருள் தேடச் செல்வதனால் தலைவிக்கு உண்டாகும் பெருந்துன்பத்தினைத் தலைவன் அறிவான். ஆதலின், பொருளுக்காகப் பிரியவிருக்கும் அத்தலைவன் தன் பிரிவை வெளிப்படையாகத் தலைவியிடம் தெரிவிப்பதில்லை. சங்க இலக்கியத்திலும் அவ்வாறு செய்தி கூறப்படுவதில்லை. தோழியிடம் தன் பிரிவைத் தலைவன் சில நேரங்களில் தெரிவிப்பதுண்டு. பெரும்பான்மைத் தன் பிரிவைக் குறிப்பால் உணர்த்துவதும் உண்டு. அதனை உணரும் தலைவி அப்போதே பெருந்துன்பத்திற்கு உள்ளாவாள். தோழியோ பிரியக் கருதும் தலைவனின் செலவைத் தடுத்துத் தலைவிக்கு நேரவிருக்கும் துன்பத்தை நீக்க முற்படுவாள். இத்தன்மையில் பிரியக் கருதும் தலைவனின் செலவைத் தவிர்க்கும் படியாகக் கூறும் தோழியின் கூற்றால் அமைந்த அகப்பாடல்களைக் காண முடிகின்றது.

தலைவனைப் பிரிந்த தலைவிக்கு ஏற்படும் துன்பம் மிகக் கொடியது. தலைவன் பிரியும் காலத்து வருந்தும் தலைவியைத் தேற்றும் பொறுப்பும், கடமையும் தோழிக்கே உரியது. இதை உணர்ந்த தோழி, தலைவியின் புறநலன் அழிவைக் கூறித் தலைவனைச் செலவழுங்குவிக்கிறாள். தலைவனின் மனதில் இரக்க உணர்வைத் தூண்டவே தோழி இவ்வுத்தியைக் கையாளுகின்றாள்.

---

67. கா.ர. கோவிந்தராச முதலியார்(உ.ஆ.), அகப்பொருள்விளக்கம், ப.47.

தலைவன் பிரிந்து செல்லுதலால் தலைவியின் அழகு நலன் கெட்டு, உடல் மெலியும். நெற்றியில் பசலை பாயும், இரவும், பகலும் மயக்குதலுற்று, வென்ற வேலின் முனியில் அமைந்துள்ள இலை போலக் கண்ணில் நீர் பெருகி வழிய தனிமைத் துயரால் வருந்துவாள். இவளைப் பற்றி எண்ணாது பொருளீட்டும் வினைக் காரணமாக நீ பிரிந்து செல்லுதல் பொருந்தாது என்று கூறுவதை,

**"இன்று இவ்ஊர் அலர் தூற்ற எய்யாய் நீதுறத்தலின்**

**நின்றதன் எவ்வநோய் என்னையும் மறைத்தாள் மன்**

**வென்றவேல் நுதி ஏய்க்கும் விறன்நலன் இழந்துஇனி**

**நின்றுநீர் உகக்கலுழும் நெடும்பெரும் கண் அல்லாக்கால்"**[68]

என்ற கலித்தொகைப் பாடல் அடிகள் கூறுகின்றன. இவ்வாறு தலைவன் பிரிவால் இரவும், பகலும் தலைவி உறங்காது கண்ணீர் சிந்தி வருந்துவாள் என்று தலைவியின் ஆற்றாமையைத் தோழி கூறுகின்றாள். எதைக் கூறினால் தலைவனின் உள்ளம் நெகிழும் என்பதை அறிந்த தோழி, தலைவனின் பிரிவால் தலைவி இறந்துபடுவாள் என்று முடிவாகக் கூறிச் செலவழுங்குவிக்கின்றாள். தலைவியின் நிலையைக் கூறித் தலைவனின் மனதில் இரங்கவுணர்வைத் தூண்டுகிறாள். இப்பாடலில் நெய்தல் நில உரிப்பொருளான இரங்கல் நிமித்தம் வெளிப்படுவதைக் காணலாம்.

**ஆற்றுவித்தல்**

ஆற்றுவித்தல் என்பது சங்க அகப்பாடல்களின் வாயிலாக அறியப்படும் நிகழ்ச்சிக் கூறுகளில் ஒன்றாகும். இது தோழி என்னும் அகப்பொருள் மாந்தரின் செயல்வினைப் பற்றியது.

பெண்ணின் இதயம், ஆணின் அன்பையே நம்பிவாழ வேண்டும் என்று விரும்புகிறது. இது உலகியல் தன்மை, உலகைச் சுற்றி வரும் கணவன் பொருளிற்காகப் பிரியும்போது தன்னைவிடப் பொருள் முக்கியமா என்ற வினாவினை எழுப்பி ஏங்குகிறது தலைவியின் உள்ளம். இவ்வுள்ளத்தினை நன்கறிந்தவள் தோழி. இதனால் தலைவியை ஆற்றுவிப்பதற்குத் தோழி, தலைவனின் அன்பையே முதல் கருவியாகக் கொள்கிறாள்.

"தலைவியும், தோழியும் ஈருடல் ஓருயிர் போன்ற நட்பினர். ஒத்த பருவமுடைய தோழியால் தலைவியின் உள்ளத்துணர்ச்சியை இயல்பாகவே தெள்ளத்தெளிய

68. வீ. இளவழுதி(உ.ஆ.), கலித்தொகை(நெய்தற்கலி), ப.68.

உணர்ந்து கொள்ள முடியும். அதனால் தலைவியின் மனத்துன்பத்தை அருகில் இருந்து தேற்றி ஆற்றுவிக்கும் பொறுப்பினைத் தோழியைத் தவிர வேறு எந்த அகப்பொருள் மாந்தராலும் ஆற்ற இயலாது. ஒருவரைத் தேற்றி உளமகிழச் செய்யும் ஆற்றல் உள்ளத்தோடு ஒன்றிய தூய அன்பினாலேதான் இயலும்"[69] என்பர் அ.சீனிவாசன். தலைவியின் களவைப் பிறர் அறியாத நிலையில் தோழி மட்டும் ஆற்றுவித்தலின் சிறப்பைக் கருதி அதைக் களவியலில் கூறுகிறார் தொல்காப்பியர். தலைவன் பரத்தமை மேற்கொள்ளும் போது ஆற்றுவித்தலைக் கற்பியலில் கூறுகிறார். ஆற்றுவித்தல் என்னும் இத்துறை களவு, கற்பு என்னும் இருகைக்கோளுக்கும் பொருந்துமாயினும் அவர் இதைக் களவிலேயே வைக்கிறார். கற்பில் தோழியைத் தவிரச் செவிலி போன்றோரும் ஆற்றுவிக்கலாம். தலைவன் களவில் வரைவிடை வைத்துப் பிரிந்தபோது ஆற்றும் தோழியின் கூற்றிற்கும், கற்பில் பிரிவிடைவைத்துப் பிரிந்த போது ஆற்றும் கூற்றிற்கும் இடையே மெல்லிய வேறுபாடு காணப்படுகிறது. களவில் தோழி ஆற்றுவிக்கும் போது பொதுவாகத் தலைவன் வரைவான் என்றும், கற்பில் ஆற்றுவிக்கும் போது தலைவன் விரைவில் வருவான் என்றும் ஆற்றுவிக்கிறாள். தோழியை அறிவுடையவளாகப் படைத்ததின் நோக்கமே தலைவியின் துயரைப் போக்குவதற்குத் தான்"[70] என்பர் தொல்காப்பியர்.

**குன்றம் காட்டி ஆற்றுவித்தல்**

குறிஞ்சி, நெய்தல் திணைகளில் களவில் ஆற்றுவிக்கும் தன்மையைக் காணமுடிகின்றது. ஐங்குறுநூற்று நெய்தல் பாடலில், தலைவன் ஒருவழித் தணந்த போது ஆற்றாத தலைவியை நெடுமணல் ஏறித் தலைவன் நாட்டைக் காணலாம் வா என்று தோழி அழைப்பதை,

**"கானலம் பெருந்துறைக் கலிதிரை திளைக்கும்**
**வானுயர் நெடுமண லேறி யானாது**
**காண்கம் வம்மோ தோழி**
**செறிவளை நெகிழ்த்தோ னெறிகட னாடே"**[71]

69. அ. சீனிவாசன், முல்லை, ப.10.
70. ச. பாலசுந்தரம்(உ.ஆ.), தொல்காப்பியம், பொருளதிகாரம், ப.233.
71. பொ.வே. சோமசுந்தரனார்(உ.ஆ.), ஐங்குறுநூறு, ப.289.

என்ற பாடல் அடிகள் விளக்குகின்றன. எப்படியாவது தலைவியின் துயரைப் போக்கவே தோழி எண்ணுகின்றாள். ஆகவே தலைவனைக் காண முடியாத போது அவன் குன்றத்தையும், நாட்டையும் காட்டி ஆற்றுவிக்கின்றாள். காதல் கொண்ட இருவரில் ஒருவர் பிரியும் போது, பிரிந்தவர் பயன்படுத்திய பொருள்கள், அவரின் இருப்பிடம் ஆகியவற்றைக் காணுதல் மற்றவர்க்கு ஆறுதல் அளிக்கும். இதனை அறிந்து செயல்படும் தோழியின் மதிநுட்பம் இங்கு வெளிப்படுகின்றது.

**அலரில் ஆற்றுவித்தல்**

வெந்த புண்ணில் வேலெறிவதைப் போலத் தலைவனின் பிரிவால் வருந்தும் தலைவியை ஊரவரின் அலர் வருத்துகின்றது. தலைவனின் வரவால் ஊர் அலர் தூற்றத் தலைவி ஆற்றாத போது, தலைவன் உன்னை வரையும் நாள் அண்மையில் உள்ளது. இவ்வலரால் அஞ்சாதே, இவ்வலர் நன்மையே விளைவிக்கும் என்று கூறித் தோழி ஆற்றுவிப்பதை,

**"சிறுவீ ஞாழல் வேர்அளைப் பள்ளி**
**அலவன் சிறுமனை சிதையப் புணரி**
**குணில்வாய் முரசின் இயங்கும் துறைவன்**
**நல்கிய நாள்தவச் சிலவே அலரே**
**வில்கெழு தானை விச்சியர் பெருமகன்**
**வேந்தரொடு பொருந ஞான்றை பாணர்**
**புலிநோக்கு உறழ்நிலை கண்ட**
**கலிகெழு குறும்பர் ஆர்ப்பினும் பெரிதே"**[72]

என்னும் குறுந்தொகைப் பாடல் அடிகள் எடுத்தியம்புகின்றன. அலவனின் இருப்பிடம் அலைகளால் அழிக்கப்பெறுதல் போலத் தலைவனின் களவிற்கூட்டம் அலர் மொழிகளால் தடைப்பட்டது. தலைவன் வரையும் நாள் அருகில் உள்ளதைக் குறிக்கத் 'துறைவன் நல்கிய நாள் தவச்சிலவே' என்று கூறுகின்றாள். இவ்வாறு தோழி அலரில் ஆற்றுவிக்கின்றாள். இப்பாடலில் கடற்கரைச் சூழல், நண்டு ஆகிய கருப்பொருள்கள் நெய்தல் திணையை உணர்த்துகின்றன.

---

72. உ.வே.சாமிநாத ஐயர்(உ.ஆ.), குறுந்தொகை, ப.511.

**வாயில் மறுத்தல்**

கற்புக் காலத்தில் தலைவன் பரத்தையின் பொருட்டுத் தலைவியைப் பிரிந்து செல்கின்றான். அதனால் தலைவி ஊடல் கொள்கிறாள். பரத்தையிடம் இருந்து மீண்டு வரும் தலைவன், தலைவியின் ஊடலைத் தணிக்கும் பொருட்டுத் தோழி, பாணன், விறலி போன்றோரை வாயிலாக விடுகின்றான். இவ்வாயில்கள் தலைவியால் வாயில் மறுக்கப்படுகின்றனர். இத்தகைய நிகழ்ச்சிகளை உள்ளடக்கியதே ‘வாயில் மறுத்தல்’ என்னும் சங்க இலக்கிய அகத்துறையாகும். வாயில் மறுத்தல் என்னும் இத்துறையைப் பற்றி நம்பியகப்பொருள்,

**"வாயில் வேண்டல் வாயில் மறுத்தல்**

**வாயில் நேர்வித்தல் வாயில் நேர்தலென்று**

**ஆய பரத்தையின் அகற்சிநால் வகைத்தே"**[73]

என்று பரத்தையின் பிரிவு பற்றிக் குறிப்பிடும்போது நான்கு அகத்துறைகளை உள்ளடக்கிக் கூறுகின்றது.

களவில் ஒழுகும் தலைமக்களை அறத்தொடு நின்று இணைத்து வைக்கும் தோழி, தலைவனின் பரத்தையின் பிரிவைப் பெறாது வாயிலாய் வருவோரிடம் வாயில் மறுத்துக் கூறுகின்றாள், தான் வேறு, தலைவி வேறு என்று எண்ணாமல் தலைவியின் துயரைத்தன் துயராகக் கூறி வாயில் மறுத்துக் கூறும் உரிமை உடையவளாகத் தோழி திகழ்கின்றாள்.

"தலைவன் பரத்தையிடம் சென்று மீண்டும் வரும் பொழுது அவனுடைய பரத்தமை ஒழுக்கம் தவறானது என்று உணர்த்துவதற்காகத் தலைவனுக்கு வாயில் மறுக்கப்படுகின்றது. இத்துறை தலைவனும், பரத்தையும் ஒருபுறமாகவும், தோழியும், தலைவியும் மறுபுறமாகவும் நின்று கயிறு இழுக்கும் போராட்டமாக உள்ளது."[74] முன்பு தலைவிக்குரிய தலைவன் என்றிருந்தவன் பரத்தையின் தலைவனாக மாறுகின்றான். இத்துறையில் தலைவியோ அல்லது தோழியோ வாயில் மறுப்பவர்களாக உள்ளனர். தோழி மறுக்கும் போது மறுப்பதற்கான காரணங்களைத் தம் கூற்றின் வழிப் புலப்படுத்துகிறாள்.

---

73. கா.ர. கோவிந்தராச முதலியார்(உ.ஆ.), அகப்பொருள் விளக்கம், ப.116.
74. சரளா. இராசகோபாலன், சங்க இலக்கியத்தில் தோழி, ப.279.

**நெய்தல் திணையில் வாயில் மறுத்தல்**

நெய்தல் திணையில் தலைவன் பரத்தையின் பொருட்டுப் பிரிந்ததால் தலைவியின் நலனழிந்தது. இப்பொழுது மீண்டு வருவதால் தலைவி இழந்த நலம் மீண்டும் வரப்போவதில்லை எனக் காரணம் கூறி வாயில் மறுக்கின்றாள்.

தலைவன் பரத்தமை ஒழுக்கம் கொண்டதால் தலைவி ஊடல் கொண்டாள். இதை அறிந்த தலைவன், தலைவி ஊடலைத் தீர்த்தற்கு ஏனைப் பொழுதை காட்டிலும் உண்டிப்பொழுதே சிறந்தது என்று கருதி அப்பொழுது இல்லம் புகுந்தான், இதை அறிந்த தோழி உனக்குப்பசியொரு பொருட்டில்லை. இப்பொழுது உணவை உண்டு விட்டு மீண்டும் பரத்தை மனைக்குப் போய்விடுவாய். அப்படி போவதென்றால் தலைவிக்கு நீ சிதைத்த அழகை மீண்டும் கொடுத்துப் போ என்று கூறுவதை,

**"வெள்ளாங் குருகின் பிள்ளை செத்தெனக்**
**காணிய சென்ற மடநடை நாரை**
**பசிதின வல்கும் பனிநீர்ச் சேர்ப்ப**
**நின்னொன் றிரக்குவெ னல்லேன்**
**றந்தனை சென்மோ கொண்டவிவ ணலனே"**[75]

ஆகிய ஐங்குறுநூறுப் பாடல் அடிகள் குறிப்பிடுகின்றன. தலைவனை நம்பி அவன் பிரிந்ததால் தலைவி நலனிழந்தாள். அவன் மீண்டு வந்தாலும் மீண்டும் பரத்தையின் பொருட்டுப் பிரிவான் என்று கூறித் தோழி வாயில் மறுக்கின்றாள்.

தோழி, தலைவனிடம் உன்னால் கவர்ந்து கொண்ட இவளது பெண்மை நலத்தினை வழங்கி விட்டுப் போ இல்லையென்றால் இவள் இறந்து விடுவாள் என்று கூறுகின்றாள். இப்பாடலில் தலைவிக்காகத் தோழி இரங்கும் நெய்தல் உரிப்பொருள் அமைந்துள்ளது.

வெள்ளாங்குருகு - ஒரு நெய்தல் நிலப் பறவை. வெள்ளைக் கொக்கின் பிள்ளை இறந்து விட்டதாக அக்கொக்கினைக் காணச் சென்ற நாரை அங்கேயே தங்கியது. அது போல தலைவனும் தலைவியைப் போலச் சிறந்தவளாகப் பரத்தைத் தோன்றியாதலே அவளிடம் காமுற்றுச் சென்றான் என்று தோழி கூறுகின்றாள். இவற்றில்

75. பொ.வே. சோமசுந்தரனார்(உ.ஆ.), ஐங்குறுநூறு, ப.227.

வெள்ளாங்குருகு பரத்தையாகவும், பிள்ளை தலைவியாகவும், நாரை தலைவனாகவும் உவமிக்கப்படுகிறது. இவ்விடத்தில் நெய்தல் நிலக் கருப்பொருளான குருகு, நாரை போன்ற உயிரினங்கள் குறிப்பிடப்பட்டுள்ளன.

**வாயில் நேர்தல்**

வாயில் நேர்தல் என்பது தலைவனின் பரத்தமை ஒழுக்கத்தை மன்னித்து அவனை இல்லத்தில் தலைவியும், தோழியும் அனுமதிப்பார்கள். குறிஞ்சி, மருதம், நெய்தல் என்ற மூன்று திணைகளிலும் இத்துறைப் பாடல்களைக் காணமுடிகின்றன. எஞ்சிய திணைகளான முல்லையிலும், பாலையிலும் இத்துறை பற்றிய பாடல்கள் இடம் பெறவில்லை. தலைவன், தலைவி, பாணன், பாங்கன் ஆகியோர்களிடம் தோழியின் கூற்று அமைகிறது.

வாயில் மறுப்பில் மாயப் பொய்மொழி கூறும் தலைவன் வாயில் நேர்தலில் நாணியும், வருந்தியும் வருகின்றான். தலைவனுக்கு வாயில் நேரும் போது தலைவியின் துயர், தலைவி, தலைவனைச் சார்ந்திருக்கும் நிலை(தலைவனையன்றி வேறு துணையில்லை என்று கூறுதல்) ஆகியவற்றைக் கூறித்தோழி வாயில் நேர்கின்றாள். அதனால் தலைவன் மீண்டும் பரத்தமை மேற்கொள்ளாதவாறு அறிவுரை கூறுகின்றாள்.

பரத்தையிடம் இருந்து பிரிந்து வந்த தலைவனை இறை மகளுடன் எதிர் கொண்ட தோழி, தலைவி உன்னைப்பிரிந்து வருந்துவது அல்லாமல் அழகு அழிந்து காணப்படுவதை,

**"தடந்தாள் தாழைக் குடம்பை நோனாத்**
**தண்தலை கமழும் வண்டுபடு நாற்றத்து**
**இருள்புரை கூந்தல் பொங்குதுகள் ஆடி**
**உருள்பொலி போல எம்முனை வருந்தல்**
**அணித்தகை அல்லது பிணித்தல் தோற்றா"**[76]

என்னும் பாடல் அடிகள் விளக்குகின்றன. தாழை மரங்கள் நிறைந்த இல்லத்தில் வாழும் தலைவி, தன் நறுமணம் மிக்க கூந்தல் தூசு படும்படி தரையில் புரண்டு அழுது

---

76. பின்னத்தூர் நாராயணசாமி ஐயர்(உ.ஆ.), நற்றிணை நானூறு, ப.334.

கொண்டிருகிறாள் என்று தலைவனிடம், தோழி கூறுகின்றாள். இப்பாடலில் தலைவியின் இரங்கல் வழியாக நெய்தல் நில உரிப்பொருள் வெளிப்படுகின்றது.

தோழி, தலைவியின் துன்பத்தைக் கூறுவதோடு அறிவுரையும் கூறி வாயில் நேர்கின்றாள்.

தமிழிலக்கியத்தில் தலைவியின் மிக நெருங்கிய தோழியாக இருந்து பல சிறப்பான செயல்களைச் செய்து சிறப்புப் பெறுகிறாள் தோழி. அகமாந்தர் கொள்ளும் மன உணர்வுப் போராட்டங்களை அமைதிப்படுத்துகின்ற சூழல்களில் எல்லாம் தோழி காணப்படுகிறாள். அவள் களவை வரைவிற்கு ஆற்றுப்படுத்தும் வரைவுகடாதல் துறை, களவையும், கற்பையும் இணைத்து நிற்கும் அறத்தொடு நிற்றல், களவு, கற்பாக மாறும் சூழல் தெளிவில்லாதபோது தோன்றும் உடன்போக்கு, பிரியும் தலைவனைச் செலவழுங்குவித்தல், பிரிந்த தலைவியைத் தேற்றுதல், பரத்தையிற் பிரிதல், தலைவன் அல்லது வாயில்களுக்குத் தலைவியின் மனநிலை அறிந்து வாயில் நேர்தல் அல்லது மறுத்தல் ஆகிய அனைத்துத் துறைகளிலும் தோழி முன்னிலைப்படுத்தப்படுகிறாள்.

**நற்றாய்**

அகப்பொருள் இலக்கியங்களில் வரும் நற்றாய் என்பவள் தலைவியைப் பெற்றெடுத்த தாய், அக இலக்கியங்களில் இவளுடைய பங்கு மிகக் குறைவாகவே காணப்பெறுகின்றது. இவள் தன் மகளுடைய களவு ஒழுக்கத்தைச் செவியுற்றதும், அவ்வொழுக்கத்தின் போக்கையும், தன் மகள் தேர்ந்தெடுத்தத் தலைவனுடைய பொருத்தத்தையும் தன் தோழியுடன் (செவிலித் தாயுடன்) ஆராய்வதை,

**"கிழவோன் அறியா அறிவினள் இவள்என**
**மையறு சிறப்பின் உயர்ந்தோர் பாங்கின்**
**ஐயக் கிளவியின் அறிதலும் உரித்தே"**[77]

என்ற நூற்பா வழி விளக்குகிறார் தொல்காப்பியர். தலைவியின் பிற்கால வாழ்க்கையில் மிகவும் கருத்துடைய இவளைத் தலைவி தன் போக்கிற்கு இடையூறாக இருப்பதாக எண்ணி மனம் வருந்துவாள். இதனால் தலைவி, நற்றாய்க்குக் 'கடுஞ்சொல் அன்னை', 'அறனில்யாய்' என்றெல்லாம் பல பட்டங்கள் அளிப்பதுண்டு. தலைவி தனக்குத் தக்க தலைவனைத் தானே தேர்ந்து கொள்வது இவளுக்கு உடன்பாடே ஆயினும், உடனே

77. இளம்பூரணர்(உ.ஆ.), தொல்காப்பியம், பொருளதிகாரம், ப.237.

இவர்கள் வரைந்து கொண்டு வாழ்க்கை நடந்த வேண்டும் என்பதே இவள் எண்ணமாகும். தன் மகளது களவு ஒழுக்கத்தைச் செவிலியின் வழியாக நற்றாய் அறிவாள். தலைவியின் களவொழுக்கத்தின் விளைவால் அவளுடைய உடலில் ஏற்பட்ட மாறுதல்களைக் கண்டு இவளும், செவிலித்தாயும் வெறியாடும் வேலன், கட்டுவிச்சி போன்றவர்களைக் கொண்டு அவ்வேறுபாடுகளின் காரணத்தை அறிந்து கொள்ள முற்படுவர்.

இத்தகைய நற்றாய், தன் மகளைப் பற்றி அலர் எழும் பொழுது கடுஞ்சினம் கொள்வாள். இவள் எவ்வகையானும் அலரையோ, அம்பலையோ விரும்புவதில்லை. இதனைக் கேட்டவுடன் இவள் மனம் கொதித்தெழும் என்பதை,

**"கௌவை மேவல ராகி இவ்வூர்**

**நிரையப் பெண்டிர் இன்னா கூறுவ**

**புரைய அல்லவென் மகட்கு"**[78]

என்று அகநானூற்றுப் பாடல் அடிகள் இயம்புகின்றன. ஊரார் தன் மகளைப் பற்றிக் கூறும் பழிச்சொல் சிறிதும் பொருந்தாது என்று பெருமிதம் தோன்றக் கூறுவாள். அலர்த் துறைகளைப் பற்றிய சங்கப் பாடல்களில் வெகுளித் தோற்றத்துடன் கூடிய நற்றாயைக் காணலாம். தன் மகள் ஊர்வாய்ப் படுதல் கூடாது, தன் பழங்குடி ஒழுக்கம் வழுப்படுதல் கூடாது என்ற கவலையுடன் இருப்பவள் சங்க இலக்கிய நற்றாய். இக்காரணத்தால் தான் தன் மகளை இற்செறிப்புச் செய்கின்றாள்.

தலைவி வீட்டில் இற்செறிக்கப்பட்டாள். தலைவி முன்போ கடற்கரையில் தலைவனின் தேரினைக் கண்டு மனத்தைத் தேற்றிக் கொண்டாள். ஆனால் இன்றோ வெளியே வரமுடியாத நிலையில் அன்னையின் வீட்டுக் காவலில் உள்ளாள். பறவை ஒலித்தலைத் தலைவனின் தேரின் ஒலி என்று கேட்டு மகிழ்ந்த தலைவியின் நெஞ்சம் இன்றோ துன்பமாகக் காணப்படுவதை,

**"ஆடமை ஆக்கம் ஐதுபிசைந்து அன்ன**

**தோடமை தூவித் தடந்தாள் நாரை**

**நலனுணப் பட்ட நல்கூர் பேடை**

**கழிபெயர் மருங்கின் சிறுமீன் உண்ணாது**

78. ரா. வேங்கடாசலம் பிள்ளை(உ.ஆ.), அகநானூறு, களிற்றியானை நிரை, ப.243.

**கைதையம் படுசினைப் புலம்பொடு வதியும்**

**தண்ணந் துறைவன் தேரே கண்ணில்**

**காணவும் இயைந்தன்று மன்னே நாணி**

**நள்ளென் யாமத்துங் கண்படை பெறேஎன்**

**புள்ளொலி மணிச்செத்து ஓர்ப்ப**

**விளிந்தன்று மாதவத் தெளிந்த என் நெஞ்சே”**[79]

என்ற பாடல் அடிகள் கூறுகின்றன. இப்பாடலில் நாரையால் இன்பம் நுகரப் பெற்ற பேடை சேவலின்றி தனியே மீனும் உண்ணாமல் தாழை மரத்தின் கிளையிலே வருத்ததுடன் அமர்ந்திருக்கும். அது போல தலைவனால் இன்பம் நுகரப்பெற்ற தலைவி, அவனைக் காணாது உணவு உண்ணாமல். உறக்கம் இன்றி வருந்துகிறாள். இவ்வாறு தாயின் இற்செறிப்பு, தலைவிக்கு மிகுந்த துன்பத்தைத் தருகின்றது எனலாம். இப்பாடல் தலைவியின் இரங்கல் நிலையை வெளிப்படுத்துவதாக அமைந்துள்ளது. இவ்வாறு நற்றாய், தலைவன் மேல் கொண்ட களவொழுக்கம் வெளிப்படும் போதும், அக்களவொழுக்கத்தை அறிந்த மக்கள் அலர் தூற்றும் போதும் தலைவியை இற்செறிப்புச் செய்கின்றாள்.

**செவிலி**

பிறந்த நாள் தொட்டுத் தலைவியைச் சிறந்திட வளர்த்து வருபவள் செவிலி. தலைவியின் உயிர்த் தோழியாக இருப்பவளை ஈன்ற தாய், நற்றாய்க்குத் தோழி என்பதை,

**“செவிலி நற்றாய் தோழியாகி**

**அவல நீக்கி அறிவும் ஆசாரமும்**

**கொளுத்தித் தலைவியை வளர்த்த தாயே”**[80]

என்று கூறுவர் நாற்கவிராச நம்பி. இவள் தலைவியிடம் பேரன்பு கொண்டவள். தலைவிக்கு உணவு கொடுத்து, அவளைப் பாதுகாத்து, இரவிலும் தன் அருகே அவளைத் துயில் கொள்ளச் செய்து காவல் புரிவதை,

---

79. த. கோவேந்தன், அன்பொடு புணர்ந்த ஐந்திணை(நெய்தல்), ப.119.
80. கா.ர. கோவிந்தராச முதலியார்(உ.ஆ.), அகப்பொருள் விளக்கம், ப.56.

"ஆய் பெருஞ் சிறப்பின் அருமறை கிளர்த்தலின்

தாய் எனப் படுவாள் செவிலியாகும்"[81]

என்ற தொல்காப்பிய நூற்பா செவிலியின் கடமைகளைத் தெளிவுபடுத்துகிறது. தலைவியின் களவு வாழ்க்கையிலும், கற்பு வாழ்க்கையிலும் செவிலி அவளின் வாழ்க்கையைக் கூர்ந்து நோக்குகிறாள். தன் மகளின் வாழ்வு மிகவும் சிறப்புடையதாக இருக்க வேண்டுமென்று எல்லாத் தாயும் விரும்புவாள். இந்நிலை தந்தையை விடவும் மன எண்ணங்களின் அடிப்படையில் தாயின் மனநிலை மேலோங்கி நிற்கிறது. தலைவியின் மேல் செவிலி ஒவ்வொரு கட்டத்திலும் மிகுந்த ஈடுபாடு உடையவள். செவிலி, "தலைவியைப் பழியோடு இல்லா நிலையில் காத்தல், நன்னெறியில் மேவும் காதல் கூட்டத்தை ஏற்றல், அவளை நற்றாய்க்கு உரைத்துப் போற்றல், உடன் போக்கில் தேடி அலைதல், தலைவியின் வரைவிற்கு ஆவணம் செய்தல் போன்றவற்றைத் தலைவியின் களவு நெறியில் இவள் மேற்கொள்ளும் பொறுப்புக்களாகும்"[82] என்கிறார் ந.சுப்புரெட்டியார். செவிலி, தலைவிக்கு எல்லா நிலைகளிலும் உதவியாக இருப்பதோடு அவளின் இன்பதுன்ப நிகழ்ச்சிகளிலும் பங்கேற்கிறாள். செவிலி கூற்றாக அமைந்த ஒவ்வொரு பாடலிலும் தலைவியின் குணங்கள் வெளிக்காட்டப்படுகின்றன.

தலைவியின் களவொழுக்கத்தைத் தோழியின் வழியாகச் செவிலி அறிவாள். தலைவி, தலைவனுடன் உடன்போக்கும் காலத்து வருந்தி, அவளைத் தேடிச் செல்வாள். அவ்வாறு உப்பங்கழியிலும், கடலின் அலைகளிலும் தம் தோழியரோடு விளையாடியவள் நெய்தல் நிலத்தலைவி. மேகங்கள் தவழும் உச்சியையுடைய மலைகள் மிக்க நாட்டிற்குத் தன் அடியின் அழகு சிதையும் படி தலைவனோடு போயினாள். பாலை நிலத்தின் பரற்கற்களின் வழிச் சென்றதை எண்ணிச் செவிலித்தாய் வருத்தமடைவதை,

"கழிய காவி குற்றும் கடல

வெண்தலைப் புணரி ஆடியும் நன்றே

பிரிவுஇல் ஆயம் உரியது ஒன்று அயர

இவ்வழிப் படுதலும் ஒல்லாள் அவ்வழிப்

பால்பாழ் படுப்பச் சென்றனள் மாதோ

81. ச. பாலசுந்தரம்(உ.ஆ.), தொல்காப்பியம், பொருளதிகாரம், ப.104.
82. ந. சுப்புரெட்டியார், அகத்திணைக்கொள்கைகள், ப.353.

**சென்மழை தவழும் சென்னி**

**விண்ணுயர் பிறங்கல் விலங்கு மலை நாடே"**[83]

என்னும் குறுந்தொகைப் பாடல் அடிகள் சுட்டுகின்றன. கழி, கடல், உயர்மலை, பரல்நிலம் போன்ற முதற்பொருள்கள் கொண்டு தலைவி நெய்தல் நிலத்தவள் என்பதும், தலைவன் குறிஞ்சி நிலத்தவன். இருவரும் பாலை நிலம் வழியாக உடன்போக்குச் சென்றனர் என்பது அறிப்படுகிறது. இப்பாடலில் செவிலி தலைவியது மென்மைத் தன்னையையும், பாலையின் கொடுமையையும் நினைந்து இரங்குதலைக் காணலாம்.

**பாங்கன்**

தலைவிக்குத் தோழி உற்றதுணையாக அமைவதுபோல தலைவனுக்கும் பாங்கன் தோழனாக அமைகிறான். அக இலக்கியங்களில் பாங்கன் 'இடிக்கும் கேளிர்', சிறாஅரமறு நண்பன், தோழன் எனவும் அழைக்கப்படுகின்றான். தலைமை நிலையுடைய தலைவனும் இடித்துரைக்கும் பாங்கனை உடையவன் என்னும் செய்தி நட்பின் உயர்வைச் சான்றோர் அறிந்திருந்ததைப் புலப்படுத்துகிறது. பாங்கன் வேதத்தை அறிந்தவன். அவ்வேதத்தில் தலைவியை அடையும் தன்மை உண்டா என்று கேட்கிறான் தலைவன். பாங்கனோ இடித்துரைத்தல், தலைவனின் காமநோய் நீங்கும் என்று எண்ணுகிற நிலை, நட்பின் கேண்மையை விளக்குவதோடு பாங்கன் தலைவனுக்கு வாயிலாக விளங்குவதையும் காட்டுகிறது.

தலைவியைச் சந்தித்து அவளுடன் ஆன களவு ஒழுக்கத்தால் தலைவனின் உடல், மனம் போன்றவற்றில் பல்வேறு மாற்றம் நிகழ்கிறது. இவ்வேறுபாட்டை அறிந்து கொண்ட பாங்கன் தலைவனிடம் அவற்றிற்குரிய காரணத்தைக் கேட்கின்றான். அதற்குத் தலைமகன் தன் நெஞ்சத்தைக் கவர்ந்தவள். சங்கினால் ஆன வளையல்களை அணிந்தவள், நெய்தல் பூவை சூடிய கூந்தலை உடையவள், ஞாழல் இளந்தளிரால் ஆன ஆடையை அணிந்தவள், வரையர மகளிர் போன்று என்னால் எய்துவதற்கு அரியவள் என்று கூறுவதை,

**"கடற்கோடு செறிந்த வளைவார் முன்கைக்**

**கழிப்பூத் தொடர்ந்த விரும்பல் கூந்தற்**

**கானன் ஞாழற் கவின்பெறு தழையள்**

**வரையர மகளிரி னரியளென்**

---

83. பொ.வே. சோமசுந்தரனார்(உ.ஆ.), குறுந்தொகை, ப.264.

**நிறையரு நெஞ்சம் கொண்டொளித் தோளே"**[84]

என்ற ஐங்குறுநூற்றுப் பாடல் அடிகளால் அறியலாம். தலைவனின் காதல் உள்ளத்தை அறிந்து கொண்ட பாங்கன் உயிர்த் தோழனுக்குக் காதலின் பேதமையை உணர்த்த எண்ணினான். காதல் என்பது கண்முடித்தனமாக இல்லாமல் பகுத்தறிவு நிரம்பியதாக இருக்க வேண்டும் என்று நினைக்கிறான் பாங்கன். தலைவனது செயல்பாடுகளை உற்று நோக்கும் பாங்கன் அவனுக்கு அறிவிப்பாளனாகப் பயன்படுவதோடு மட்டும் அல்லாமல் அறிவுறுத்துபவனாகவும் விளங்குவதை,

**"மொழி எதிர் மொழிதல் பாங்கற் குறித்தே"**[85]

என்று பாங்கனின் தன்மை பற்றிக் கூறுகிறார் தொல்காப்பியர்.

"தலைவியானவளைப் பாங்கன் நேர்நின்று காணுவதும், முன்னின்று மொழிதலும், தமிழ் அகத்திணைக்கு ஒவ்வாது, தமிழகம் பெற்ற மகளிர் நாணத்துக்குத் தலைவி வந்து நிற்கின்றாளா என்பதைப் பார்த்துச் சொல்லும் ஒரு அறிவிப்பாளனே பாங்கன் ஆவான்"[86] என்கிறார் வ.சுப.மாணிக்கம்.

பாங்கனால் இடித்துரைக்கப்பட்ட தலைவனின் ஆற்றாமை மிகுதியையும், தலைவியது இன்றியாமையையும் தெரிவித்த பின் பாங்கன் உண்மை தெளிந்து தலைவனது நிலைகுறித்து இரங்குகிறான். பாங்கன், தலைமகன் கூறிய குறிவழிச் சென்று தலைவியைக் காண்கின்றான். கண்டவன் தன்னுள்ளே நெய்தல் போன்று இயற்கையிலே மணங்கமழும் இவளது கூந்தலை கண்ட பின்பு துயில் கொள்ளுதல் அரிது என்று எண்ணுவதை,

**"இரவி னானும் இன்துயில் அறியாது**

**அரவுறு துயரம் எய்துப தொண்டித்**

**தண்ணறு நெய்தல் நாறும்**

**பின்னிருங் கூந்தல் அணங்குற் றோரே"**[87]

என்ற பாடல் அடிகள் குறிப்பிடுகின்றன. இதனால் தலைவன் துயில் கொள்ளாது வருந்துதல் அவன் பிழையன்று என்பதை உணர்கின்றான். பாங்கன் முன்னர்

---

84. உ.வே. சாமிநாதஐயர்(உ.ஆ.),ஐங்குறுநூறு, ப.191.
85. ஆ.சிவலிங்கனார்(தொ.ஆ), தொல்காப்பியம் உரைவளம்(கற்பியல்), ப.272.
86. வ.சுப. மாணிக்கம், தமிழ்க் காதல், ப.330..
87. பொ. வே. சோமசுந்தரனார்(உ.ஆ.), ஐங்குறுநூறு, ப.249.

கழறியுரைத்தவன் இப்பொழுது உண்மையை உணர்ந்து இரங்குவதை நெய்தல் நிலக் கருப்பொருள்களால் அறியலாம்.

பாங்கன், தலைவனுடன் அன்பு கொண்டதோடு மட்டுமல்லாமல் அவன் செல்கின்ற வழியெல்லாம் நிழல்போலத் தொடரும் வழக்கமுடையவனாக அகப்பாடல்களில் காட்டப்படுகிறாள். தலைவனின் உணர்ச்சியையும், உறவையும் புரிந்து கொண்டு அவனது காதல் வாழ்க்கைக்குத் துணைபுரிபவனாகவும் விளங்குகிறான் பாங்கன்.

**பரத்தை**

புலவர்கள் கற்பின் பெருமையை விண்ணுக்கு உயர்த்திப் பாடிய போதும் நடைமுறை வாழ்க்கையில் பரத்தமை என்ற அவலம் நிறைந்து இருப்பதைச் சங்க இலக்கியங்கள் சுட்டுகின்றன. தலைவியின் குடும்ப வாழ்விற்கு இடையூறாக வரும் பரத்தை அவளின் சினத்திற்கு ஆளாவதும் இயற்கை. "விருப்பு வெறுப்பின்றிக் கண்டவாறு பணத்திற்காகவோ, பொருளுக்காகவோ உடலுறவு கொள்கின்ற செயல் பரத்தமை எனப்படுமென"[88] வாழ்வியல் களஞ்சியம் விளக்கம் தருகிறது.

பரத்தை என்பதற்கு, "ஒருவனுக்கு முறையான மனைவியாக வாழாமல் ஒழுகுபவள், பொதுமகள், விபச்சாரி, விலைமகள், ஒழுக்கக்கேடு அயன்மை, பிறன்மனைசேரல்"[89] என்று தமிழ் அகராதி கூறுகின்றது, "பரத்தை, கணிகை, சூளை, பொதுப்பெண்"[90] எனச் சேந்தன் திவாகர நிகண்டும், "பரத்தை, கணிகை, விலைமகள்,சூளை, வேசி"[91] என்று பிங்கல நிகண்டும் பொருள் தருகின்றன. இவ்வாறு இன்பமும், பொருளும் வேண்டி ஒருவர் மாட்டும் தங்காதவர் பரத்தையர் என்று பொருள்படுகின்றது.

அக இலக்கியங்களில் பல ஆண்களின் காமப்பசி தீர்க்கும் பெண்களைப் பரத்தை என அழைத்தனர். அவர்களை இற்பரத்தை, காதற்பரத்தை, காமக்கிழத்தி, சேரிப்பரத்தை

---

88. நா. பாலுசாமி(பதி.ஆ.), வாழ்வியற் களஞ்சியம்(தொகுதி-4), ப.10.
89. மு. சண்முகம் பிள்ளை(தொ.ஆ.), தமிழ் அகராதி, ப.222.
90. திவாகர முனிவர், சேந்தன் திவாகர நிகண்டு, ப.14.
91 பிங்கல முனிவர், பிங்கல நிகண்டு, ப.200.

என நான்கு வகையாகப் பிரித்தனர். பரத்தையரில் இற்பரத்தை, காதற்பரத்தை, காமக்கிழத்தி என்போர் தலைவனைத் தவிர வேறு எவர் ஒருவரையும் விரும்பாமல் தலைவனை அன்பினால் கூடுகிறவர்கள். இவர்களில் சேரிப்பரத்தை மட்டும் ஒருவனுக்கு உரிமையாகாமல் பணத்திற்காகப் பலருடன் கூடி மகிழ்கிறாள். ஆதலால் அவளைப் பொதுமகள் என்றும் அழைத்தனர். அவள் பணம் தருபவன் எத்தகையவனாய் இருக்க வேண்டும் என்று வரையறை செய்யாமல் எல்லோரிடமும் உடற்புணர்வு கொள்பவள். சேரியிலுள்ள தன் வீட்டிலேயே இருந்ததால் சேரிப்பரத்தை என்று அழைக்கப்பட்டாள்.

இற்பரத்தையாக விளங்குபவள் தலைவன் ஒருவனுக்கே அன்பு பூண்டு ஒழுகுபவள், சேரிப் பரத்தையர் பலரிடம் அன்பு கொள்பவளாக விளங்குவதை,

**"யாரையும் நயவா இயல்பிற் சிறந்த**

**சேரிப் பரத்தையர் மகளிராகிக்**

**காதலிற் புணர்வோர் காதற் பரத்தையர்"**[92]

என்று நம்பியகப் பொருள் கூறுகின்றது. இற்பரத்தையரைத் தலைவன் வரைந்து கொள்ளுதற்குரிய இடம் இருப்பதை,

**"அவருளும் வரைதற் குரியோர் உளரே"**[93]

என்கிறது அகப்பொருள். பரத்தையரில் காதற் பரத்தையர் சமுதாயத்தில் உயர்ந்த மதிப்போடு இருந்திருக்கிறார் என்றும், சேரிப்பரத்தையர் அவ்வளவு மதிப்பிற்குரியராகக் கருதப்படவில்லை என்பதும் தெளிவாகின்றது.

இக்காதற் பரத்தையர் தலைவியரோடு எத்தகைய பகையும் கொள்ளாது நெருங்கிப் பழக முயல்வர். இவர்களில் வயதில் மூத்தவராக இருந்தால் தலைவன், தலைவியரிடையே நிகழும் பிணக்குகளைத் தீர்த்து வைக்கவும் முன்வருவர். தலைவிக்கு அறிவுரைகள் கூறி, அவளைத் தலைமகனோடு கூட்டி வைத்து மகிழ்வதை,

**"காதல் சோர்விற் கடப்பாட் டாண்மையில்**

**தாய்போல் கழறித் தழீஇய மனைவியைக்**

---

92 நாற்கவிராச நம்பி, அகப்பொருள் விளக்கம், ப.18.
93. மேலது.

**காய்வின்று அவன்வயிற் பொறுத்தற் கண்ணும்"**[94]

என்னும் கற்பியல் நூற்பாவால் அறியலாம். இதனால் காதற் பரத்தையிடம் உயர்ந்த குணங்கள் காணப்பெறுதலை உணரலாம்.

பரதவர்கள் பல ஆண்டுகள் கழிந்த, தொழிலுக்கு உதவாத தோணியை கொண்டுபோய் புன்னை மரத்தில் கட்டிவைப்பர். நல்ல எருது முன்புள்ள நடை சிறப்பு நீங்கியது என்று உழவர்கள் தோட்டத்திலே தொழில் செய்யாதபடி விட்டொழிப்பர். அவை போன்று இவளும் முதிர்ந்தால் தான் ஏனையோரைப் போலக் கைவிடப்படுவாள், அவ்வாறு இன்றி இளமையிலேயே அவளைத்துறந்ததனால் எம்மைப்போல இவளும் மலர் முதிராது கருகிய தன்மையினள் ஆவாள் என்பதை,

**"ஈண்டு பெருந் தெய்வத்து யாண்டு பல கழிந்தெனப்**
**பார்த்துறைப் புணரி அலைத்தலிற் புடைகொண்டு**
**மூத்துவினை போகிய முரிவாய் அம்பி**
**நல்லெருது நடைவளம் வைத்தென உழவர்**
**புல்லுடைக் காவில் தொழில் விட்டாங்கு**
**நறுவிரை நன்புகை கொடாஅர் சிறுவீ**
**ஞாழலொடு கெழீஇய புன்னையங்கொழு நிழல்**
**முழவுமுதற் பிணிக்கும் துறைவ நன்றும்**
**விழுமிதிற் கொண்ட கேண்மை நொவ்விதில்**
**தவறுநன்கு அறியாயாயின் எம்போல்**
**ஞெகிழ்கோட் கலுழ்ந்த கண்ணர்**
**மலர்தீய்த்து அனையர் நின் நயந்தோரே"**[95]

என்ற நற்றிணைப் பாடல் அடிகள் விளக்குகின்றன. இவ்வாறு காதற் பரத்தை, தோணி, எருது போன்ற நெய்தல் நில கருப்பொருள்களைக் கூறித்தலைவன், தலைவி

---

94. இளம்பூரணர்(உ.ஆ.), தொல்காப்பியம், பொருளதிகாரம், ப.287.
95. பின்னத்தூர் நாராயணசாமி ஐயர்(உ.ஆ.), நற்றிணை நானூறு, ப.389.

ஊடலைத்தீர்கின்றாள். இதனால் காதற் பரத்தையரின் பொருள் பற்றில்லாத உள்ளப் பெருமையினையும், ஒழுக்க நெறிகளையும் உணரலாம்.

**பாணன்**

பண் இசைப்போன் பாணன் என்று அழைக்கப்பட்டான். இப்பாணன் கலைத்துறையில் ஈடுபட்டவுடன் இவனைக்குறுநில மன்னர்களும், வள்ளல்களும் ஆதரித்தனர். இவன் தம் கலைத்திறனால் பொன்னும், பொருளும் பெற்றாலும் அவற்றைத் தமக்கெனப் பாதுகாக்காது எல்லோருக்கும் வழங்கி வாழ்வித்தான். இப்பாணன் இல்லற வாழ்வில் இணையாதிருக்கும் தலைவன், தலைவிக்குத் தூதாகச் செல்கிறான். இவற்றில் தலைவியது ஆற்றாமை கண்டு தோழி தூது விடல், பருவ வரவின்கண் தலைவனின் தூதாக வருதல், தலைவனின் வரவு உணர்த்துதல், தலைவிக்கு அருளுமாறு தலைவனைப் பாணன் வேண்டுதல். இவை பாணன் தலைவனுக்கு உணர்த்தும் வாயில்கள். இல்லற வாழ்க்கை இனிதே நடைபெறத் தலைவியைப் பிரிந்து சென்ற தலைவன் குறித்த காலத்தில் திரும்பி வராதபோது, அவர்களிடம் தூதுசென்று தலைவியின் ஆற்றாமையைப் பாணர் எடுத்தரைப்பதும் பாணனின் கடமையாகும். தலைவனின் பரத்தையர் பிரிவால் ஆற்றாலாகிய தலைவி, தன் மெலிவு காட்டிக் கூறியதை,

**"காண்மதி பாணநீ யரைத்தற் குரியை**
**துறைகெழு கொண்கன் பிரிந்தென**
**விறைகே ழெல்வளை நீங்கிய நிலையே"**[96]

என்று ஐங்குறுநூற்றுப் பாடல் அடிகள் நவில்கின்றன. தலைவனைச் சார்ந்தவன் பாணன், ஆயினும் தலைவனிடம் சென்று, தன் மெலிவைப் பற்றிச் சொல்லி, அவனை இல்லத்திற்குத் திரும்புமாறு செய்வதற்கு வேண்டுகின்றாள் தலைவி. இப்பாடல் தலைவியின் இரங்கல் நிலையை வெளிப்படுத்துவதாக அமைந்துள்ளது.

தலைவனுக்குப் பாணன், அறத்தை உணர்த்த வேண்டும் என்பது தோழியின் எதிர்பார்ப்பு, பாணனை உறவு வளர்க்கும் இணைப்புப் பாலமாகத் தோழி மதித்தமை புலனாகிறது.

---

96. பொ.வே. சோமசுந்தரனார்(உ.ஆ.), ஐங்குறுநூறு, ப.198.

பாணன், தலைவனுக்கு அறம், அறமின்மை எனப் பாகுபடுத்தி நோக்காது அனைத்து நிலைகளிலும் தலைவனின் உறவை அவன் விரும்பும் இடத்தில் இணைத்து நிற்கும் இணைப்புப் பாலமாக அக இலக்கியங்கள் புனைகின்றன. தலைவியோடு மட்டுமன்றிப் பரத்தையோடும் தலைவனின் உறவை இணைப்பதில் பாணன் சமநிலை கொண்டு விளங்குகிறான். தனக்கென அறக்கோட்பாடுகளை வரையறுத்து அதன்படி ஒழுகாத பாணன், தலைவி, தோழியால் பழிக்கப்படுகிறான். பரத்தமை உறவிலேயே தலைவனுக்கு வேண்டியவற்றைச் செய்யும் வாயிலாகப் பாணன் செயல்படுகிறான். அவன் செயலால் புண்பட்ட தலைவி, தலைவனை அடைய விரும்பும் ஏக்கத்தின் மிகுதியினால் அந்தப் பாணனையே உதவுவதற்கு வேண்டும் அவலத்தைக் காணலாம்.

**கண்டோர்**

கண்டோர் அகத்திணை மாந்தர்களின் வாயில்களாக வருபவர்கள். தலைவனும், தலைவியும் தமரின் நீங்கி உடன்போன காலத்தில் எதிரே வந்தவர்கள் ஆவார். இவர்கள் தாயைக் காணும்போது கூற்று நிகழும். உடன்போகும் தலைவன், தலைவியரைக் கண்டு இரங்குவது, உடன்போய் இவர்களைப் பின் சென்று தேடும் தாயை ஆற்றுப்படுத்துவது, அமைதிப்படுத்தித் திரும்பச் செய்வது, உடன்போகிய இவர்கள் திரும்பியதைத் தாய்க்கு உரைப்பது ஆகியவை கண்டோர் கூற்று நிகழும் இடங்கள்.

நெய்தல் திணையில் தலைவியின் அகமலர்ச்சி கண்டும், மடலேறுவேன் என்று தலைவன் கூறும் இடத்தும், தலைவன் மடலேறியதைக் கண்டு தலைவியின் தாயார் அஞ்சி அவளைக் கொண்டு வந்து கொடுத்த இடத்தும், தலைவன் பிரிவால் ஆற்றாது கலங்கிய தலைவி, அவன் வந்து சேரத் தெளிந்தமையைக் கண்ட இடத்தில் கண்டோர் கூற்று நிகழும்.

பிரிந்து சென்ற காதலன் விரைந்து வந்ததால், கடலோடு புலம்பிய தலைவியின் மன வருத்தமும், பசலை நோயும் தீர்ந்தது என்று கண்டோர் கூறியதை,

**"கடலொடு புலம்புவோள் கலங்குஅஞர் தீரக்**

**கெடல் அரும் காதலர் துனை தரப் பிணி நீங்கி**

**அறன் அறிந்து ஒழுகும் அங்கணாளனைத்**

**திறன் இலார் எடுத்த தீ மொழி எல்லாம்**

**நல்லவையுள் படக்கெட்டு ஆங்க**

**இல்ஆகின்ற அவள் ஆய்நுதல் பசப்பே"**[97]

என்னும் கலித்தொகைப் பாடல் அடிகள் இயம்புகின்றன. தலைவனைப் பிரிந்து வருந்தும் தலைவியின் நிலைகண்டு இரங்கும் மனம் ஒருபுறம். அவள் வருத்தம் தலைவனால் நீங்கியது கண்டு மகிழும் மனம் மறுபுறம். இவை கண்டோர் மனதில் எழுந்தவை ஆகும். தலைவியின் நிலைகண்டு இரங்கும் கண்டோர் கூற்றில் நெய்தல் உரிப்பொருளான இரங்கல் நிமித்தம் வெளிப்படுகின்றது.

**தேர்ப்பாகன்**

தேர்ப்பாகன் என்பவன் தலைவனுடைய தேரோட்டி. அவன் தலைவியை விட்டுப் பிரியும் போதும், மீண்டும் தலைவன், தலைவியை நாடி வரும் போதும் தேரை நடத்தி வருபவன். குதிரையின் இயல்பை அறிந்து விரைவாக ஒட்டிச் செல்வதில் வல்லவன், தலைவியைப் பிரிந்திருக்கும் தலைவன், தேர்ப்பாகனிடம் மட்டுமே தன் கடமைகளை இனிதே முடித்த மகிழ்ச்சியையும், பிறவற்றையும் புலப்படுத்துவான் என்பதை,

**"பாசறைப் புலம்பலும் முடிந்த காலத்துப்**

**பாகனொடு விரும்பிய வினைத்திற வகையினும்"**[98]

என்ற தொல்காப்பியர் கூற்றால் அறியலாம். எட்டுத்தொகை நூல்களில் சிறப்பாக நற்றிணையிலும், அகநானூற்றிலும் தலைவன், தலைவியைச் சந்திக்க விரும்பும் தன் விருப்பத்தைப் புலப்படுத்தும் நிகழ்ச்சிகள் அடங்கிய பாடல்கள் பலவற்றைக் காணலாம்.

தலைவியைப் பிரிந்து வினைமேற் சென்ற தலைவன் தேரின் மீது திரும்பி வருகின்றான். தலைவன், தேர்ப்பாகனை நோக்கி, தலைவி என் கருத்தைக் கூறியபொழுது, விடைகூற இயலாதவளாய்த் துன்புற்று அவள் நின்றாள். ஆகவே தலைவி இருக்குமிடத்திற்கு விரைவில் தேரைச் செலுத்துவாயாக என்று கூறுவதை,

**"உயவினென் சென்றியான் உள்நோ யுரைப்ப**

**மறுமொழி பெயர்த்தல் ஆற்றான் நறுமலர்**

---

97. நச்சினார்க்கினியர்(உ.ஆ.),கலித்தொகை, ப.451.

98. ஆ.சிவலிங்கனார்(பதி.ஆ.), தொல்காப்பியம் உரைவளம் (அகத்திணையியல்), ப.320.

**ஞாழல் அஞ்சினைத் தாழிணர் கொழுதி**

**முறிதிமிர்ந்து உதிர்த்த கையள்**

**அறிவஞர் உறுவி ஆய்மட நிலையே”**[99]

என்ற நற்றிணைப் பாடல் அடிகள் விளக்குகின்றன. தலைவன், தலைவியிடம் வினைவயிற் செல்லவேண்டிய நிலையைக் கூறியவுடன் தலைவி ஞாழல் மரக்கிளையில் உள்ள இளந்தளிரைக் கையால் பிசைந்து மயக்க முற்று வருந்தினாள். நண்டு ஓடும் இடத்தைப்பின் தொடர்ந்து செல்ல ஆற்றாது களைப்படையும் மென்மைத் தன்மை உடையவள் தலைவி. அவள் என் பிரிவினை ஆற்றியிருத்தல் அரிது என்று கூறுகின்றான். இவற்றில் நண்டு, ஞாழல் போன்ற நெய்தல் நிலக் கருப்பொருள்கள் தலைவியின் இரங்கலைப் புலப்படுத்துகின்றன.

தலைவன், பாகனிடம் பேசும் பொழுதெல்லாம் தலைவியின் நற்பண்புகளைப் புகழ்வதுடன் தானும், அவளும் அன்புடன் இனிய வாழ்வு நடத்திய போது ஏற்பட்ட இனிய நிகழ்ச்சிகளைக் குறிப்பிட்டுப் பேசுவதைக் காணலாம். இதனால் தலைவன் தன் பாகன் மீது கொண்டுள்ள நம்பிக்கையும், மதிப்பும் புலனாகின்றன.

## முடிபுகள்

உலக மொழிகள் அனைத்தும் எழுத்து, சொல் ஆகியவற்றிற்கே இலக்கணம் கூறத் தமிழ் மொழி மட்டுமே வாழ்வியலுக்கும் சேர்த்து இலக்கணம் கூறுகிறது. அனைத்து இலக்கணங்களையும் குறைவறப் பெற்றுச் செம்மொழியாக நிகழும் தமிழ்மொழியின் உயர்தனிப் பண்புகளில் ஒன்றாகவும், தமிழரின் தனிநெறியாகவும் விளங்குவது இம்மொழியிலுள்ள அகத்திணை மரபாகும்.

அகத்திணை, காதல் சார்ந்த வாழ்வினையும், புறத்திணை அகமில்லாத வீர வாழ்வினையும் சுட்டுகின்றன. அகத்திணைப் பாடல்கள் அனைத்தும் களவு, கற்பு என்ற இருவகை கைகோளினை அடிப்படையாகக் கொண்டு குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்று ஐவகையாகப் பகுக்கப்பட்டுள்ளன. அன்பின் ஐந்திணை மட்டும் அகத்திணை ஆகாது. கைக்கிளை என்ற குறை ஒழுக்கமும், பெருந்திணை என்ற

---

99. பின்னத்தூர் நாராயணசாமி ஐயர்(உ.ஆ.), நற்றிணை நானூறு, ப.132.

பேரொழுக்கமும் சேர்ந்ததே அகத்திணையாம். வேட்கையின் இருவேறு குறிப்பு நிலைகளான இவை ஐந்திணையை ஒட்டி வரும் அகமரபுகளாகும்.

அகவாழ்வின் சிறப்பைத் தமிழர்கள் உணர்ந்ததால் இலக்கியத்திலும், வாழ்க்கையிலும் அறத்தையே முதன்மைப்படுத்தினர். ஆணும், பெண்ணும் உடலாலும், உள்ளத்தாலும் கூடி இன்பமடையும் வாழ்க்கையே அகம் எனப்படுகிறது. இது புறத்தாருக்கு வெளிப்படுத்த முடியாததாகும்.

பருவமடைந்த ஆணும், பெண்ணும் பெற்றோரும், உற்றாரும் அறியாமல் தாமே கூடி ஒழுகும் ஒழுக்கம் களவு என்று சுட்டப்பெறுகின்றது. தமிழர்களின் களவானது தலைவியை முன்நிறுத்தித் திருமணத்திற்கு முந்தைய காதல் ஒழுக்கம் 'களவு' எனப்படுகிறது. தலைவனும், தலைவியும் திருமணத்தின் வழியாக இணையும் இல்லற வாழ்வு 'கற்பு' என அழைக்கப்பட்டது.

நெய்தல் திணை சார்ந்த மக்களின் வாழ்க்கை முறைகளையும், இரங்கல் நிகழ்வதற்கான சூழலும், அதை எதிர்கொள்ள தலைவனும், தலைவியும் பல்வேறு இன்னல்களுக்கு ஆட்பட்டதையும் சங்க இலக்கியப் பாடல்களால் அறியலாம். நெய்தல் நில மக்களின் சிந்தனைகள் உளவியல் முறையில் விளக்கப் பெற்றுள்ளன.

சங்க அக இலக்கியம் இனிமையானது. கற்போரைக் கற்பனையில் ஆழ்த்துவது. விரிந்து இலக்கியப் பரப்பில் குறுகிய அடிகளைக் கொண்டு மிக உயர்ந்த கோட்பாட்டை நயமாக விரித்துரைக்கிறது. மலைகளைத் தழுவிய மரநிழல்களிலும், மாற்றாரின் தொல்லை ஏதும் இல்லாத முல்லை நிலங்களிலும், சேற்றுமணம் வீசுகின்ற ஆற்றங்கரை ஓரத்திலும், கடல் அலை மோதும் மணல் வெளிகளிலும், காலையரும்பி மாலை வரை வெயில் நீளும் பாலைவனங்களிலும் நிகழ்ந்திருந்த காதல் சங்கக்காதல், அக்காதல் நிறைந்திருப்பது அக இலக்கியம். அவ்வக இலக்கியங்களில் இடம்பெறும் மாந்தர்களின் வெளிப்பாடுகள் சிறப்பிடம் பெறுகின்றன.

தலைவன், தலைவி இருவருக்கும். காதல் வாழ்விலும், கற்பு வாழ்விலும் உறுதுணையாகப் படைக்கப்பட்டுள்ளவர்கள் வாயில்கள் என்றழைக்கப்பட்டனர். அக இலக்கியங்களில் இடம்பெறும் மாந்தர்களைத் தொல்காப்பியம் களவில் இடம் பெறும் மாந்தர்கள், கற்பில் இடம்பெறும் மாந்தர்கள் என இரண்டாகப் பகுத்துள்ளது. தலைவன், தலைவி, தோழி, செவிலி, பார்ப்பான், பாங்கன் ஆகிய ஆறுபோரும் களவில் இடம் பெறும் மாந்தர்கள் ஆவர். தலைவன், தலைவி, தோழி, செவிலி, பார்ப்பான், பாங்கன்,

பாணன், கூத்தன், விறலி, பரத்தை, கண்டோர், அறிவர் ஆகிய பன்னிருவரும் கற்பில் இடம்பெறும் மாந்தர்கள் ஆவர்.

அறம் என்ற சொல் விரிந்த பொருளையுடையது. மனிதன் புரியும் நற்செயல்கள் அனைத்தையும் இதில் அடக்கிக் கூறலாம். தமிழர் வாழ்க்கையில், அகவாழ்க்கையிலும், புறவாழ்க்கையிலும் அறம் கடைப்பிடிக்கப் பட்டு வருதலைத் தமிழ் இலக்கியங்களில் குறிப்பாகவும், தெளிவாகவும் புலப்படுத்தியிருப்பதைக் கண்டு மகிழலாம். அவ்வகையில், புறநிலையில் அரசன், ஆட்சிமுறை போன்றவற்றிற்கான 'அரசு' சார்ந்த அறங்கள் பரவலாகவும், தனிமனித அறமும், அவற்றின்வழிக் குடும்ப அறமும் வலியுறுத்தப்படுகின்றன. அகநிலையில் மாந்தர்களான தலைவன், தாய்(நற்றாய், செவிலி) போன்றோரோடு நேரடியாக அறம் என்ற சொற்கள் பயின்று வருவதைக் காண முடிகிறது.

தன்னிகரில்லாத் தலைவனின் அகவாழ்வில் தலைவியின் மேல் கொண்ட காதல், அக்காதலின் காரணமாகத் தலைவன் மடலேறும் நிலை, உடன்போகும் நிலை பற்றிக் கூறப்படுகின்றன. தலைவியைப் பிரிந்து துயருறும் நிலை, வினை முடிந்து திரும்பி வரும் போது தலைவி மீது கொண்ட காதலால் விரைந்து வரும் மனநிலை ஆகியவற்றில் தலைவனின் பண்புகளை மற்றும் வாழ்வியல் அறங்கள் நிறைந்திருப்பதைக் காணமுடிகின்றன.

அகத்திணை இலக்கியத்திற்கு மையப்புள்ளியாக விளங்குபவள் தலைவி, அவளது களவு, கற்பு வாழ்க்கை பற்றியும், தலைவனிடத்துக் கொண்ட காதல், தலைவனைப் பிரியும் பிரிவுத் துன்பம், தலைவனை உயிராகக் கருதும் தலைவியின் கற்பு வாழ்க்கை போன்றவை விளக்கப்பட்டுள்ளன. தலைவனைக் காணமுடியாத கண்டிப்புத் தன் இல்லத்தின் ஏற்பட்ட போது இறந்து விடுதலே மேல் எனத் தலைவி கருதிய உளப்பாங்கினை உணர முடிகிறது.

அகத்திணை மாந்தர்களில் தோழி இல்லையேல் காதல் இல்லை, அகப்பொருளும் இல்லை என்று சுட்டும் அளவிற்குச் சிறப்புப் பெற்றவள் தோழி. தலைவிக்கு உற்ற துணையாக விளங்குபவள், அவள் கொண்ட காதலுக்கு உதவியாகக் களவு வாழ்வை நீட்டிக்க விரும்பும் தலைவனின் மனநிலையைத் தலைவிக்கு எடுத்துக் கூறிக் குறைநயப்பிக்கிறாள். தலைவியின் நிலையையும், சுற்றுப்புறத்தையும் எடுத்துக்கூறித் தலைவனிடம் விரைவில் மணம் புரியுமாறு வரைவு கடாதல் செய்கிறாள். தலைவியின் களவு வாழ்வைப் பெற்றோரிடம் கூறிக் கற்பாக்க முற்படுகிறாள். களவு, கற்பு என

இருநிலைகளிலும் தலைவியைத் தலைவன் பிரியாமல் இருக்கச் செலவழுங்குவிக்கிறாள். அப்படியும் தலைவன் பொருள் காரணமாகவோ, பரத்தையர் காரணமாகவோ பிரியும் நிலையில் தலைவியை ஆற்றுவிக்கிறாள். திரும்பி வந்த தலைவனைத் தலைவியுடன் சேர்த்து வைப்பதற்கு வாயிலாக இருப்பது என முக்கியமான, முதன்மைப் பாத்திரமாக விளங்கும் தோழியின் அறிவாற்றல் எடுத்துரைக்கப்பட்டுள்ளது.

அகத்திணை மாந்தர்களில் தலைவி மீது மாறாத அன்பு கொண்டவர்கள் நற்றாயும், செவிலித்தாயும். இவர்கள் தலைவி பிறந்தது முதல் சிறப்புச் செய்தவர்கள். கற்பு வாழ்வில் தலைவியைப் பிரிந்த போதும், அவள் தலைவனுடன் இல்லறம் நடத்தும் நிலையைக் கண்டு மகிழ்ந்தவர்கள்.

அக இலக்கியத்தின் மையப்புள்ளி தலைவி என்றால் கரும்புள்ளி பரத்தை. இப்பரத்தையர் தோன்றுவதனால் தலைவியின் வாழ்வில் ஏற்படும் துன்பங்கள் இப்பரத்தையர் தோன்றக் காரணமாக அமைந்த சமுதாய நிலை எடுத்துரைக்கப்பட்டுள்ளது. அவர்களிடம் நல்ல பண்பும், மனமும் நிறைந்திருந்தாலும், அவர்கள் தலைவியாக வாழ்வதற்கும், குழந்தை பெறுவதற்கும் மறுக்கப்படுகின்ற நிலைகள் காணப்பெறுகின்றன.

அகமாந்தர்களான தலைவனும், தலைவியும் களவு வாழ்விலிருந்து கற்பு நிலைக்கு வருவதற்கு உதவிய பாங்கன், பாணன், கண்டோர், தேர்ப்பாகன் ஆகியோரின் பண்புகள் துணை நிற்கின்றன எனலாம்.

# ஆய்வு முடிவுரை

பழந்தமிழ் மக்களின் எண்ண ஓட்டங்களையும், பண்பாட்டுச் சிறப்புக்களையும் உலகம் கண்டுகொள்ள உதவும் ஒப்பற்றக் கருவூமாகச் சங்க இலக்கியங்கள் விளங்குகின்றன. இவ்விலக்கியங்கள் தமிழ்மொழியின் பழைமைக்கும், வளத்திற்கும் சான்றுகளாக உள்ளன. வாழ்வியலுக்குரிய அகம், புறம் ஆகிய நெறிமுறைகளை வகுத்துக் கூறுகின்றன. ஆங்காங்கே மனம் மாசற்று வாழ்வதற்குரிய அருளியல் கூறுகளையும் நுட்பமாகச் சுட்டிச் செல்கின்றன.

தமிழ் மொழிக்கே உரிய திணை இலக்கியக் கோட்பாட்டின் அடிப்படையில் பாகுபாடு செய்யப்பட்டுள்ளன சங்க இலக்கியங்கள். திணை என்ற சொல் சங்க இலக்கியத்தில் நிலம், வீடு, குடிமை(அ) குலம், ஒழுக்கம் என்ற பல பொருண்மைகளிலும், தொல்காப்பியத்தில் இலக்கண மற்றும் இலக்கியக் கலைச் சொல்லாகவும் வந்துள்ளது. அகத்திணை, காதல் சார்ந்த வாழ்வினையும், புறத்திணை அகமல்லாத வீர வாழ்வினையும் சுட்டுகின்றன. அகத்திணைப் பாடல்கள் அனைத்தும் களவு, கற்பு என்ற இருவகை கைக்கோளினை அடிப்படையாகக் கொண்டு குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்று ஐவகையாகப் பகுக்கப்பட்டுள்ளன. அன்பின் ஐந்திணை மட்டும் அகத்திணை ஆகாது. கைக்கிளை என்ற குறை ஒழுக்கமும், பெருந்திணை என்ற பேரொழுக்கமும் சேர்ந்தே அகத்திணையாகும். வேட்கையின் இருவேறு குறிப்பு நிலைகளான இவை ஐந்திணையை ஒட்டி வரும் அகமரபுகளாகும்.

குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என்று நானிலத்தை மட்டுமே தொல்காப்பியர் கூறியதிலிருந்து பாலைக்கு எனத் தனி நிலத்தை வரையறுக்கவில்லை. சிலப்பதிகாரம் திரிநிலம் உண்டென்று குறிப்பாகச் சொல்லிச் செல்வதைக் கொண்டு முல்லையும், குறிஞ்சியும் கோடையில் தன்னியல்பு மாறுகின்ற நிலமாகப் பாலை அறியப்பட்டுள்ளது.

ஐந்து நிலங்களுக்கும் அந்தந்த நிலத்தில் மலர்ந்த கருப்பொருள்களுள் ஒன்றாகிய சிறந்த மலரைக் கொண்டே பெயரிடப்பட்டுள்ளது. தமிழரின் அகத்திணை மரபு முதல், கரு, உரி என்ற முப்பொருள்களால் கட்டமைக்கப்பட்டுள்ளது. திணை வாழ்வியலில் திணைகளின் அமைப்பு முறைகளையும், அவற்றின் இலக்கணக் கூறுகளையும் ஆராய்வதுடன் அன்பின் ஐந்திணையில் முதற்பொருள், கருப்பொருள், உரிப்பொருள் என வகைப்படுத்தப்பட்டிருக்கும். இப்பொருள் கூறுகளைப் பற்றியும் ஆராய்வதில் தான் திணை வாழ்வியலின் முழுமையை அறிந்துகொள்ள முடிகின்றது.

நிலமும், பொழுதும் இணைந்ததே முதற்பொருள். இம்முதற்பொருளில் தோன்றியங்கும் இயற்கை, செயற்கைப் பொருள்கள் அனைத்தும் கருப் பொருள்களாகும். மக்களுக்கே உரிய மக்களின் வாழ்க்கையை ஒட்டி அமையக் கூடியவை உரிப்பொருள்கள். இவை புணர்தல், பிரிதல், இருத்தல், இரங்கல், ஊடல் என்ற அகநிகழ்வுகளின் அடிப்படையில் அமைந்துள்ளன.

முதற்பொருள் என்னும் பகுதியில், நெய்தலுக்கான பெயர் விளக்கம் கூறப்படுகின்றது. ஒவ்வொரு நிலத்தில் காணப்படும் மலர்கள், மரங்களின் அடிப்படையிலேயே அந்தந்த நிலங்களுக்குப் பெயர்கள் அமைந்துள்ளன. இதனடிப்படையில் நெய்தல் நிலத்தில் நெய்தல் மலர்கள் அதிகமாகக் காணப்படுவதினால் அந்நிலத்திற்கு நெய்தல் எனப்பெயர் வழங்கப்பட்டுள்ளது.

மற்றொரு முதற்பொருளான பொழுதைப் பெரும் பொழுது, சிறுபொழுது என்றும் பிரித்துக் கூறுவர். நெய்தல் திணைக்கான சிறுபொழுது எற்பாடு ஆகும். இது மாலை வருணனைப் பின்னணியில் கூறப்படுகின்றது. சூரியன் வீழ்படுகின்ற பொழுதை எற்பாடு என்பர். நெய்தலுக்கான பெரும் பொழுதினைக் குறிப்பிடும்போது ஆறுவகை பொழுதுகளும் நெய்தலுக்குப் பொருந்தி வருவதாகக் காணப்படுகின்றது.

தொல்காப்பியர் குறிப்பிட்ட ஏழு கருப்பொருள்களுடன் நச்சினார்க்கினியர் குறிப்பிட்ட இருவகை மக்களையும், இளம்பூரணர் குறிப்பிட்ட பூவும், நீரும் ஆகிய கருப்பொருள்களையும் சேர்த்துக் கொண்டதோடு ஊர், பறை, பண் ஆகிய பொருள்களையும் சேர்த்து மொத்தம் பதினான்கு கருப்பொருள்களும் இங்கு விளக்கப்பட்டு உள்ளன.

திணைக்கு உரிய பொருள் உரிப்பொருளாகும். முதற்பொருள், கருப்பொருள் ஆகிய இரண்டின் பின்னணியில் உரிப்பொருளானது அமைகின்றது. நெய்தலுக்கான உரிப்பொருள் இரங்கலும் இரங்கல் நிமித்தமும் ஆகும். இத்தகைய இரங்கல் உணர்வினை வெளிப்படுத்தும் விதமாக நெய்தல் பாடல்கள் அமைந்துள்ளன.

ஒரு திணையின் எல்லைக்குட்பட்ட சில கூறுகள் பிறிதொரு திணையில் கட்டுக் கோப்போடு கலந்து வருவது திணை மயக்கமாகும். தொல்காப்பியர் திணை ஒழுக்கத்தின் புறனடையே திணை மயக்கம் என்று விளக்குகிறார். முதற்பொருள் மயக்கமானது நிலம், சிறுபொழுது, பெரும்பொழுது என்ற மூன்றின் அடிப்படையில் நிகழ்ந்திருந்தாலும், சிறுபொழுதுகளே முதற்பொருள் மயக்கத்திற்குப் பெரும்பான்மை காரணமாக அமைந்திருப்பதாகச் சங்கப் பாடல்கள் உணர்த்துகின்றன. சங்க

அகப்புலவர்கள் திணையினை வரையறுத்துக் கொண்டு பாடல்களில் அந்தந்தத் திணைக்குரிய முதற்பொருளையே பெரிதும் பாடினர் என்றாலும், 'திணை மயக்குறுதலும் கடிநிலை இலவே' என்ற தொல்காப்பியக் கருத்திற்கேற்ப வேற்று நிலத்திற்குரிய முதற்பொருளையும் தாம் எடுத்துக் கொண்ட திணையின் பின்புலத்தில் பாடியுள்ளனர். நெய்தல் திணையில் குறிஞ்சி, முல்லை நிலங்கள் தவிர மருதம், பாலை நிலங்களின் முதற்பொருள்கள் மயங்கி வந்துள்ளன.

கருப்பொருள்களாகிய தெய்வம், அல்லோர், நீர், யாழ், பண் ஆகியன நீங்கலாக மற்ற ஒன்பது கருப்பொருள்களும் மற்ற திணைகளில் மயங்கி வருவது கருப்பொருள் மயக்கமாகும். நெய்தல் திணையில் குறிஞ்சி, முல்லை, மருதத்திணைகளின் யாழ், பண் ஆகியன இடம்பெறாமல் மற்ற அனைத்துக் கருப்பொருள்களும் இடம் பெற்றிருக்கின்றன. உரிப்பொருள் மயக்கமாக நெய்தல் திணையில் குறிஞ்சி, முல்லை, மருதத் திணைப் பாடல்களில் உரிப்பொருள் கூறுகள் கலந்து வந்துள்ளன.

சங்ககாலத்தில் நெய்தல் நிலப் பகுதியில் வாழ்ந்த மக்கள் பரதவர் என்றும், பட்டினவர் என்றும் அழைக்கப்பட்டனர். கொண்கன், துறைவன், சேர்ப்பன், மெல்லம் புலம்பன் ஆகியோர் நெய்தல் நிலத்தலைமக்களாவர். பரதவர், திமிலர், திமிலோன், நுளையர் ஆகியோர் நெய்தல் நிலப்பொது மக்களாவர். பரதவர் மகளிர், நுளைமகள், பரதவர்மகள், பாண்மகள் ஆகியோர் நெய்தல் நிலமகளிர் ஆவர். வலைஞர், பாணர் என்போர் உள்நாட்டுப் பகுதியில் மீன்பிடித்து வாழ்ந்த உள்நாட்டுப் பரதவர்களாவர்.

சங்ககாலத்தில் பரதவர்களுக்குக் கடற்செலவில் இருந்த திறமையும், அனுபவமும் அவர்களை உயர் தலைமையாளராகவும், பேராற்றல் பெற்றவர்களாகவும் மிளிரச் செய்தன. அவர்களுக்குள் முறையான அரசபரம்பரையும் இருந்தது. சோழ நாட்டில் பரதவர்களின் குறுநிலத் தலைவனாக விளங்கிய மத்தி என்ற அரசனைப் பற்றி அகநானூறு வாயிலாக அறியலாம். தித்தன் வெளியன், திதியன், மூவன் என்போர் நெய்தல் நிலத்தின் உயர்ந்த அல்லது ஆளும் வகையினராகக் காணப்படுகிறார்கள்.

தென் பரதவர்கள் என்போர் சங்ககாலத்தில் பாண்டிய, சோழப் பேரரசுகளுடன் முரண்பட்ட போது அவர்களால் வெல்லப்பட்டதாக மதுரைக்காஞ்சி, புறநானூறு நூல்கள் தெரிவிக்கின்றன. இதன் வாயிலாகப் போர் புரிவதில் பரதவர்கள் பேராற்றல் பெற்றிருந்ததை அறிய முடிகின்றது.

மீன் பிடித்தல், சங்கெடுத்தல், முத்துக்குளித்தல், உப்பு விளைவித்தல் போன்ற தொழில்கள் சங்ககாலத் தமிழ்ப் பரதவர்களின் முதன்மையான தொழில்களாக

விளங்கின. பரதவர்கள் கடலில் சென்று மீன்பிடிக்கக் கட்டு மரங்களையும், படகுகளையும் பயன்படுத்தினார்கள். பழங்காலத்தில் தமிழர் தேக்கு, புன்னை, அயனிப்பலா, வேம்பு போன்ற மரங்களைக் கொண்டு கலங்களைக் கட்டினர். நீரில் மூழ்கியிருக்கும் மரக்கலத்தின் வெளிப்புறப் பகுதியினை தேக்கு மரத்தினால் கட்டியிருந்தனர். ஏனெனில் தேக்கு மரமானது எவ்வளவு காலம் நீரில் மூழ்கியிருந்தாலும் சிதையாததே அதற்குக் காரணமாகும்.

மிதவை, தெப்பம், ஓடம், கட்டுமரம், அம்பி, தோணி, திமில், ப/றி, நாவாய், வங்கம் எனப் பலவகையான மரக்கலன்களைக் கட்டும் திறனை, சங்கத் தமிழர் பெற்றிருந்தனர். இவற்றுள் அம்பி, தோணி, ப/றி, திமில் போன்றவற்றை ஆறுகளையும், ஏரிகளையும், கழிமுகங்களையும் கடந்து செல்லப் பயன்படுத்தினர். கலம், வங்கம், நாவாய் போன்ற கலங்களை அயல்நாட்டு வாணிகத்திற்குப் பயன்படுத்தினர். மிகப் பெரிய வங்கம் ஒன்று ஆழ்கடலில் செல்லும் காட்சியானது உலகமே புடை பெயர்ந்து செல்வது போலிருந்ததாகக் குறிப்பிடுவதிலிருந்து அயல்நாட்டு வாணிகத்திற்குப் பயன்பட்ட கலங்கள் அகலமாகவும், பெரியனவாகவும் கட்டப்பட்டிருந்தன எனலாம். பரதவர்கள் பழுதானப் படகுகளைப் புன்னை மரங்களில் கட்டி வைத்தார்கள்.

பரதவர்கள் மீன்பிடிப் படகுகளில் கடலுக்குச் சென்று வலைகளை வீசி மீன்களைப் பிடிப்பார்கள். வரிவலை, நுண்வலை, பெருவலை, குறுங்கண் வலைகளைக் கொண்டு மீன் பிடித்தனர். தூண்டில், விசைத்தூண்டில், எறியுளி போன்ற மீன்பிடிக் கருவிகளையும் பயன்படுத்தினர். பரதவர்கள் தங்களது வலைகளைப் பருத்தி நூலாலும், சணல் நாரினாலும் உருவாக்கினர். மீன்பிடிக்கும்போது அறுந்து போன வலைகளை, கடற்கரை மணல் மேட்டில் வைத்துச் செம்மைப் படுத்தினர். மீன்பிடித்துத் திரும்பும் பரதவர்கள் வலைகளைத் தங்களது வீட்டு வாசலில் உள்ள வெண்மணற் பரப்பில் உலர வைப்பர். கருநிற வலைகள் வெண்மணற் பரப்பிலிருக்கும் காட்சியானது நிலவை மறைத்துக் கொண்டு பரவும் இருளைப் போல இருக்கும்.

சுறாமீன்கள் பரதவர்களுக்கு மிகப்பெரிய துன்பத்தைக் கொடுப்பனவாக இருந்தன. சுறா மீன்களை வலை கொண்டும், சாட்டுளி என்ற எறிஈட்டியைக் கொண்டும் பிடித்தனர். சில நேரங்களில் சுறா மீன்கள் வலையை அறுத்துக் கொண்டு பரதவர்களைக் காயப்படுத்துவதும் உண்டு. அப்படிச் சுறாவால் புண்படும் பரதவர்கள் அந்தப் புண் ஆறும் வரை மீன்பிடிக்கக் கடலுக்குள் செல்ல மாட்டார்கள். அறுந்த வலையினைத் தங்களது மனை முற்றத்திலிருக்கும் தாழை மரத்தின் அடியில் போட்டுச்

சரிசெய்வர். பின்னர், மறுபடியும் அச்சுறாமீனைப் பிடிப்பர். இதனால் பரதவர்கள் தங்களது தொழிலில் விடாமுயற்சியை உடையவர்கள் என்பதும் புலப்படுகிறது. பரதவர்கள் இளைஞர்களை மீன்வேட்டைக்கு அழைத்துச் சென்று கடலில் மீன்கள் நிறைந்திருக்கும் இடங்களையும், அதனைப் பிடிக்கும் முறைகளையும் கற்றுத்தந்து அவர்களைத் தங்களது குலத்தொழிலுக்கு நன்கு பழக்கினர். இவ்வாறு இளையவரும், முதியவருமான பரதவர்கள் கடலில் ஏராளமான மீன்களைப் பிடித்துக் கொண்டு கரையை அடைவர். பின்னர் தம் பாக்கத்தே அம்மீன்களைக் கொட்டிப்பங்கிட்டுக் கொள்வர்.

பரதவர்கள் இரவு நேரத்தில் மீன் பிடிக்கச் செல்லும் போது தீப்பந்தங்களையும், கிளிஞ்சல் விளக்குகளையும் கொண்டு செல்வர். படகில் ஒளிரும் அவ்விளக்குகள் விண்மீன்கள் போலிருக்கும். கிளிஞ்சல் விளக்குகளை எரிப்பதற்கு மீன் கொழுப்பை உருக்கி செய்த எண்ணெய்யைப் பயன்படுத்தினர்.

பரதவ ஆடவர்கள் கடலில் பிடித்த மீன்களைத் தம் பாக்கத்தே கொண்டு வந்து குவிப்பர். அம்மீன்களைப் பரதவ மகளிர் பிற நிலங்களுக்குச் சென்று பண்டமாற்றுக்கு விற்பனை செய்தனர். விற்பனையான மீன்கள்போக எஞ்சிய மீன்களை அறுத்துக் கடற்கரைப் பகுதியில் உப்பிட்டு உலர வைத்தனர். உப்பிட்டுக்கண்டமாகக் காய வைத்த கருவாட்டு மீன் துண்டங்களுக்கு உப்புக் கண்டம் என்று பெயர். வெண்மணல் பரப்பில் அவற்றைப் பரப்பி வெயிலில் உலர்த்தி புள்ளினங்கள் அவற்றைக் கவராமல் பரதவ மகளிர் காவல் காப்பர். இவ்வாறு பரதவ மகளிர் மீன்விற்றல், மீன் உணக்கல், புள்ளோப்பல் ஆகிய தொழில்கள் புரிந்ததை உணரமுடிகின்றது.

பரதவர்களின் மற்றொரு தொழில் உப்பு விளைவித்தலாகும். சங்ககாலத்தில் கடற்கரையைச் சார்ந்த சில இடங்களில் பாத்திகளை அமைத்து அதில் கடல் நீரைப் பாய்ச்சி உப்பு உண்டாக்கினர். வெயிலில் பாத்திகளிலுள்ள கடல் நீர் ஆவியாகிப் போய் உப்புப்பூக்கும். பரதவர்கள் மழை பெய்தாலும், பொய்த்தாலும் கவலை கொள்ளாது உப்பினை உண்டாக்கினர். இந்த வெண்கல் அமிழ்தமான உப்பு அக்காலத்தில் எல்லா நிலத்தவர்க்கும் பயன்பட்டது. மழை பெய்யாத வேனிற்காலத்திலும் உப்பங்கழிகளில் நீர்வற்றி அங்கு இயற்கையாக உப்பு உண்டாகுவதும் உண்டு. ஆனால் அவ்உப்பு சுத்தமாக இல்லாததால் உணவிற்குப் பயன்படுத்துவது கிடையாது.

பரதவர்கள் உப்புப் பாத்திகளில் விளைவித்த உப்பைக் குவியல், குவியலாகக் குவித்து வைத்து, உப்பு வாணிகர் வரவை எதிர்பார்த்துக் காத்திருப்பார்கள். உப்பை

வாங்கிக் கொண்டு போய் ஊர் ஊராக விற்பதற்கு உமணர் என்னும் உப்பு வாணிகர் மாட்டு வண்டிகளில் வருவர். சங்ககாலத்தில் பண்டமாற்று வாணிகம் நிகழ்ந்ததால் உமணர் மருத நிலத்தில் விளைந்த நெல்லை உப்பிற்குப் பண்டமாற்றுச் செய்தனர். உமணர்கள் உப்பினை வாங்கிக் கொண்டு எருதுகள் பூட்டிய வண்டிகளில் ஏற்றிச் சென்று வெளியூர்களில் விற்பனை புரிந்தனர்.

உப்பு மூட்டைகளை ஏற்றிச்செல்லும்போது எருதுகள் பூட்டிய மாட்டு வண்டியானது பள்ளத்தில் இறங்கி, ஏறிச் செல்லும்போது வண்டியின் அச்சு முறிந்து விடுவதும் உண்டு. அதன் பொருட்டு உமணர் சேம அச்சும் கொண்டு போனார்கள். உமணர்கள் வழியில் தங்கி, சமைத்து உண்டு பிறகு மீண்டும் பயணம் செய்தனர். சில இடங்களில் உமணர்களுக்குச் சமைக்கவும், உண்ணவும் நீர் கிடைக்காது. அவ்விடங்களில் மண்ணை அகழ்ந்து குழி உண்டாக்கி அதிலிருந்து சுரந்த நீரை உண்டனர். உமணர்கள் தீக்கடை கோலினால் தீயுண்டாக்கிச் சோறு சமைத்து உண்டனர். பொதுவாக உமண ஆடவர்கள் உப்பினை ஊருக்குள் கொண்டு சென்று விற்பதில்லை. உமணப் பெண்டிர்தான் உப்பினை ஊருக்குள் கொண்டு சென்று விற்று அதற்குப் பண்டமாற்றாக நெல்லினைப் பெற்றனர். இவ்வாறு உமண மகளிர் உப்பு விற்கும் தொழிலையும் மேற்கொண்டிருந்தனர் எனலாம்.

சங்ககாலத்தில் தமிழ்ப் பரதவர்கள் எவ்வித அறிவியல் சாதனமும் இன்றி மூச்சினை அடக்கியபடியே கடலின் அடியிலிருந்து பவளம், முத்தினையும், சங்கினையும் எடுத்தனர். அக்காலத்தில் பாண்டிய நாட்டுக் கொற்கை முத்துக் குளித்தலுக்குப் பெயர் பெற்ற துறைமுகமாக விளங்கியது. பாண்டிய நாட்டுக் கொற்கையில் கொடிய தண்டனை பெற்ற குற்றவாளிகள் முத்துக் குளித்தல் தொழிலில் ஈடுபடுத்தப் பட்டிருந்ததை வெளிநாட்டார் பயணக் குறிப்பும் தெரிவிக்கிறது.

சங்கு, முத்தினால் பலவகை அணிகலன்கள் செய்யப்பட்டன. சங்குகளை வாளினால் அறுத்து, அரத்தினால் அராவி வளையல்கள் செய்யப்பட்டன. சங்கு அறுக்கும் தொழிலில் ஈடுபட்டவர் வேளாப்பார்ப்பார் என்றழைக்கப்பட்டார். சங்கு, முத்து ஆகியவற்றால் பலவகையான அணிகலன்கள் செய்யப்பட்டன. அதனை நெய்தல் நில மகளிரும், பிற நில செல்வ வளமிக்க மகளிரும், அரசியரும் அணிந்தனர்.

தொடக்க காலத்தில், தனித்தனியாக வாழ்ந்த மனிதன் பின்பு கூட்டங்கூட்டமாக வாழ ஆரம்பித்த நிலையே சமுதாயத்தின் தோற்றமாக அமைகிறது. சமுதாயம் என்பது மனித இனத்தின் சமூக, பொருளாதார, அரசியல் ஈடுபாடுகளினால், தொடர்புகளினால்

இயங்கி வரும் ஓர் அமைப்பாகும். இவ்வமைப்பு ஒரு குறிப்பிட்ட நாகரிக அமைப்புக்குள் இயங்கி வருகிறது என்று சமூகவியலார் குறிப்பிடுகின்றனர்.

சங்ககாலத்தில் நிலத்தின் அடிப்படையில் வாழ்க்கையை மேற்கொண்டிருந்த மக்களிடம் உயர்ந்தவன், தாழ்ந்தவன் என்று அடையாளப்படுத்தும் நோக்குடன் இனப்பகுப்பு இல்லை என்றாலும், நிலத்தின் அடிப்படையில், அந்நிலங்களில் மேற்கொண்ட தொழிலின் அடிப்படையிலும் பாகுபாடுகள் இருந்திருக்கின்றன. தனித்தனி நிலங்களாகப் பிரிந்திருந்த சங்ககாலச் சமுதாய அமைப்பானது காலங்கள் மாறிக்கொண்டே வருகையில் நில அடிப்படையான சமுதாய முறையில் மாற்றம் ஏற்பட்டுப் பொதுவுடைமைச் சமூகமாக மாறுகின்றது. இவ்வாறு ஒன்றுபட்ட சமூகமாக மாறுகின்ற பொழுது தனித்தனி நிலங்களாகப் பிரிந்திருந்தவர்கள் தனித்தனி இனங்களாக வளர்ச்சியுற்றிருக்கின்றனர். அதற்குப் பிற நாடுகளிலிருந்து வந்த வாணிகர்களின் பங்கும் குறிப்பிடத்தக்கதாகும்.

நெய்தல் நிலப் பகுதியில் வாழ்ந்த பரதவ மக்கள் மீன் பிடித்தலை முதன்மையான தொழிலாகக் கொண்டிருந்ததால் அவர்களது உணவில் பலவகையான மீன்கள் இடம்பெற்றன. பரதவர்கள் புரிந்த தொழிலுக்கேற்றவாறு அவர்களது உணவுப்பழக்கமும் அமைந்திருந்தது. பரதவர்கள் ஆழ்கடலுக்குள் சென்று மீன் பிடிக்கும் கடின உழைப்பாளிகள். ஆகவே உடல் களைப்பு நீங்க கள்ளினைப் பருகினர். நெய்தல் நிலத்தில் வாழ்ந்த பரதவ மக்கள் தங்கள் இல்லம் நாடிவரும் விருந்தினரை அன்புடன் வரவேற்று விருந்தோம்பும் பண்பாட்டினைக் கொண்டிருந்தனர். வெண்சோறு, பழையகள், சுட்ட குழல் மீன், கொழியல் அரிசிக் கூழ், நறும்பிழிக்கள், சுட்டமீன் போன்றவற்றைத் தங்கள் இல்லம் நாடிவந்த விருந்தினருக்கு நெய்தல் நிலத்தார் அளித்தனர்.

பழங்கால மனிதன் முதன்முதலில் ஆடையின்றி விலங்குகளோடு விலங்காக வாழ்ந்தான். பின்னர் காலப்போக்கில் தழைகளையும், மரப்பட்டைகளையும், விலங்குத் தோள்களையும் உடுத்தத் தொடங்கினார்கள். நாகரிகம் வளர்ந்த நிலையில் மக்கள் ஆடைகளை அணியப்பழகிக் கொண்டனர். நிலம் சார்ந்து மக்கள் ஆடைகளை அணிந்தனர். இதனடிப்படையில் நெய்தல் நில மக்கள் தழையாடை அணிந்த செய்தி தெரியவருகின்றது. கடல் வாணிகத்தின் செல்வச் செழிப்பாலும், நாகரிக வளர்ச்சியின் காரணமாகவும் பட்டினத்துச் செல்வ மகளிர் பட்டு, துகில் போன்ற ஆடைகளை அணிந்தனர். நெய்தல் நிலப் பரதவர்கள் அணிந்திருந்த ஆடைகள் பற்றியக்

குறிப்புக்கள் சங்க இலக்கியத்தில் இல்லையென்றாலும் அவர்கள் மீன்பிடித் தொழிலுக்கு ஏற்ப ஆடைகளை அணிந்திருந்தனர்.

நெய்தல் நில மகளிர் இழை, வளை, தொடி ஆகிய அணிகலன்களை அணிந்திருந்தனர். நெய்தல் நில ஆடவரை விடப் பெண்டிரே தங்களை ஒப்பனை செய்துகொள்வதில் அதிகக் கவனம் செலுத்தினர். நெய்தல் நிலப் பெண்கள் தங்களது கூந்தலை ஐந்து வகையாக முடித்துக் கெண்டனர். முண்டக மலர், அடும்புமலர், ஞாழல் மலர், தாழம்பூ, செருந்தி மலர், புன்னை மலர் ஆகிய மலர்களை ஒப்பனையின் போது பயன்படுத்தினர்.

சங்ககாலத்தில் கடலும் கடல் சார்ந்த நிலப்பகுதியில் வாழ்ந்த பரதவரது வாழிடங்கள் குடம்பை, சேரி, பாக்கம், பட்டினம், சிறுகுடி, சீறூர், மூதூர் எனப் பலவாறு அழைக்கப்பட்டன. பரதவ மக்களது இல்லங்கள் கடலையடுத்த வெண்மணற் பரப்பிலே பனை ஓலையாலும், புல்லாலும் எளிமையாகக் கட்டப்பட்டிருந்தன. கடல் வாணிகத்தில் ஈடுபட்டுப் பொருளீட்டி அரசர்க்கு நிகராக வாழ்ந்த செல்வமும், செல்வாக்கும் படைத்த பரதவர்கள் மாடமாளிகையில் வசித்தனர். இவர்களின் திருமண நிகழ்வானது பரிசங் கொடுத்து மணத்தல், சேவை மணம், மடலூர்ந்து மணம் புரிதல் என்ற வகையில் அமைந்துள்ளதை அறியமுடிகின்றது.

பரதவர்களிடம் இறை வழிபாட்டு முறை காணப்படுகின்றது. மீன் வளத்தை விரும்பிய பரதவர் பௌர்ணமி நாளன்று மீன் பிடிக்கச் செல்லாமல் தங்களது குடியிருப்பின் முற்றத்தில் சினையையுடைய சுறாமீன் கொம்பை நட்டு வழிபட்டார்கள். பரதவர்கள் கொற்கையில் மழை வேண்டியும், காவிரிப்பூம்பட்டினத்தில் மீன்வளம் வேண்டியும் பௌர்ணமி நாளன்று சடங்குகள் செய்தனர். பரதவர்கள் மிகுந்த தெய்வ நம்பிக்கை உடையவர்கள். அவர்கள் தங்கள் பாக்கத்தின் பொது இடமான ஊர் மன்றத்தின் நடுவிலிருக்கும் பனை, புன்னை மரத்தில் ஊர்த்தெய்வம் உறைந்திருக்கும் என்ற நம்பிக்கையினையும் கொண்டு அத்தெய்வத்திற்கு வழிபாடு செய்தனர். வலையினையும், கட்டு மரத்தினையும் நல்ல நாள் பார்த்தே கடலில் விட்டனர். பரதவ மகளிர் செல்வம் கொழிக்கும் தம்சீர்மிகு மனையில் வெண்சோறு சமைத்து முதலில் காக்கைக்கு வயிறாரப் படைத்துப் பின்னர் வரும் விருந்தினரை மகிழ்வுடன் உண்பிக்கும் வழக்கம் உடையவராக இருந்திருக்கின்றனர்.

மக்களிடையே ஒற்றுமை உணர்வு மேலோங்க விழாக்கள் முக்கியப் பங்கு வகித்தன. மக்கள் திரளாகக் கூடிப் பழக வேண்டும் என்ற உணர்வினைத்

தோற்றுவிப்பவை விழாக்கள் ஆகும். விழாவின் போது மகளிர் சிறந்த அணிகலன்கள் அணிந்து கூத்தாடுவர். நெய்தல் நில விழாக்கள் கொடியேற்றத்துடன் தொடங்கி இசை, கூத்து, சிறப்பு உணவுகள் என்று சிறப்பாகக் கொண்டாடப்பட்டன. நெய்தல் நிலத்தில் முந்நீர் விழா, கடலாடு விழா, புதுப்புனல் விழா, இந்திர விழா போன்ற பல விழாக்கள் கொண்டாடப்பட்டன.

விளையாட்டுக்கள் உடல் திறனையும், அறிவுத் திறனையும் வளர்க்க உதவுகின்றன. பெருமணல் நிலப்பகுதியான நெய்தலில் கடற்கரைச் சூழலிலே ஆடவர்களாலும், பெண்களாலும் பலவிதமான விளையாட்டுக்கள் விளையாடப்பட்டன. அலவன் ஆட்டம், எண்ணி விளையாடல், ஊசல் விளையாட்டு இவற்றோடு இன்ன பிற விளையாட்டுக்களையும் நெய்தல் நில மகளிர் விளையாடினர் என்ற செய்தியினை அறியமுடிகின்றது.

சங்ககாலத் தமிழ்ச் சமுதாய அமைப்பில் அந்தணரும், வாணிகரும், வேளாளரும் மிக உயரிய நிலையில் இருந்திருக்கின்றனர். வாணிகர்கள் சமூகப் பிரிவில் மூன்றாம் நிலையில் இருந்தனர். தங்களது உள்நாட்டு வாணிபத்தால் தமிழகத்தின் அனைத்துப் பகுதிகளிலும் வாழும் மக்களுக்குத் தேவையான பொருள்களைக் கொடுத்து வந்தனர். வெளிநாட்டு வாணிபத்தால் தமிழகத்தின் மேன்மையை உலக நாடுகளுக்கு உணர்த்திவந்தனர். வாணிபத்தால் தமிழகத்தின் பொருளாதாரத்தை உயர்த்திக் காட்டியவர்கள், வெளிநாட்டு வாணிபத்தால் அந்நிய செலவணியை மிகுதியும் ஈட்டிக் கொணர்ந்தனர்.

சங்கத் தமிழ் வாணிகர்கள் இந்தியாவின் உள்நாட்டுப் பகுதிகளான நெல்லூர், கலிங்கப்பட்டினம், தம்ரலிப்தி, பாடலிபுத்திரம், காசி, வாரணாசி ஆகியவற்றுடன் கடல் வாணிகம் புரிந்துள்ளனர். கி.மு. 3ஆம் நூற்றாண்டிலேயே தமிழகம், வட இந்தியக் கடல் வாணிகம் நடைபெற்றது. பாண்டிய நாட்டு முத்துக்களை மெகஸ்தனிஸ் தனது நூலான இண்டிகாவில் குறிப்பிட்டுள்ளார். மதுரையில் நெய்யப்பட்ட பருத்தியாடை, பாண்டிய நாட்டு முத்துக்கள் பற்றிய குறிப்புக்கள் சாணக்கியரின் அர்த்த சாஸ்திரத்தில் உள்ளன. இக்குறிப்புக்களிலிருந்து அக்காலத்திய வாணிகத் தொடர்புகளை அறிந்து கொள்ளலாம்.

உள்நாட்டு வாணிகம் பெரும்பாலும் தரை வழியே நடைபெற்றது. உள்நாட்டு வாணிகத்தில் பண்டமாற்று முறையே பின்பற்றப்பட்டு வந்தது. வெளிநாட்டு வாணிகம் கடல் வழியாக நடைபெற்றது. வாணிகக் குழுக்கள் வாணிகச்சாத்துக்கள் என்றழைக்கப் பட்டன. சங்ககாலத்தில் தரை வழியாக வாணிகம் செய்த பெருவாணிகருக்கு

மாசாத்துவான் என்று பெயர். நாவாயில் ஏற்றி மிகப் பெருமளவில் வாணிகம் செய்த வாணிருக்கு மாநாய்கன் என்று பெயர். உள்நாட்டு, வெளிநாட்டு வாணிகத்தில் பெருஞ்செல்வம் ஈட்டின மாசத்துவர்களுக்கும், மாநாய்க்கர்களுக்கும் தமிழக அரசர்கள் எட்டிப் பூவும், எட்டிப்பட்டமும் அளித்துச் சிறப்புச்செய்தனர்.

திரைகடலோடித் திரவியம் தேட முற்பட்டத் தமிழர் சங்ககாலத்தில் எகிப்து, பாலஸ்தீனம், சுமேரியா, அசிரியா, கிரேக்கம், உரோம், கிரீஸ், அரேபியா, மடகாஸ்கர் போன்ற மேற்காசிய நாடுகளுடன் இலங்கை, சீனம், காழகம், சாவகம், சுமத்திரா, சீயம், கடாரம், வட போர்னியா ஆகிய கீழ்த்திசை நாடுகளுடனும் மிக வளமானதொரு கடல் வாணிகம் புரிந்துள்ளனர்.

தமிழர் புரிந்த கடல் வாணிகத்தை இரு வகைப்படுத்தலாம். ஒன்று கரையோர வாணிகம், மற்றொன்று நடுக்கடல் வாணிகமாகும். பழந்தமிழர் கிறிஸ்து பிறப்பதற்குப் பல நூற்றாண்டுகளுக்கு முன்பே சிறிய தோணிகளையும், நாவாய், வங்கம் போன்ற பெரிய மரக்கலங்களையும் நடுக்கடலில் செலுத்தும் திறனைப் பெற்றிருந்தனர். மேற்குக்கரை சேரநாட்டு துறைமுகங்கள் வாயிலாகக் கிரேக்கம், ரோம், எகிப்து, பாபிலோனியா, சுமேரியா, மெசபடோமியா ஆகிய நாடுகளுடன் கடல் வாணிகத் தொடர்பு கொண்டிருந்தனர். பண்டைய மேற்காசிய நாடுகளில் ஏலம், இலவங்கம், இஞ்சி, மிளகு போன்ற தமிழகத்துப் பொருள்களுக்கு நல்ல வரவேற்பு இருந்தது. யூதர்களின் சமயத் தலைவரான மோசஸ் தாம் நடத்திய வழிபாட்டில் தமிழகத்து ஏலக்காயைப் பயன்படுத்தியுள்ளார். தென் அரேபிய நாட்டு அரசி ஷேபா இஸ்ரேலிய மன்னர்க்கு வாசனைப் பொருள்களை அன்பளிப்பாக அளித்தாள். சாலமன் அரசனது காலத்தில் (கி.மு.1000) டயர் நாட்டு மன்னர் ஹீராம் ஆணைப்படி மூன்றாண்டுகளுக்கு ஒருமுறை அவனுக்குரிய மரக்கலங்கள் கீழை நாடுகளுக்குச் சென்று பொன், வெள்ளி, யானைத்தந்தம், அகில்கட்டை, மயில் இறகு, ஆட்டு மயிர், தேக்கு மரம், குரங்கு போன்ற தமிழக வாணிகப் பொருள்கள் பலவற்றை ஏற்றி வந்தன.

அயல்நாடுகளுக்கு அகில், ஆரம், மிளகு, முத்து, மணிகள், உறையூர் பூந்துகில் போன்றவை தமிழகத்திலிருந்து ஏற்றுமதி செய்யப்பட்டன. கிராம்பு (இலவங்கம்), சாதிக்காய், குங்குமப்பூ, தக்கோலம், கற்பூரம் போன்ற வாசனைப் பொருள்கள் சாவகத்திலிருந்து தமிழகத்திற்கு இறக்குமதி செய்யப்பட்ட பொருள்களாகும். குதிரை, பாரசீகம், சிந்து போன்ற நாடுகளிலிருந்து இறக்குமதி செய்யப்பட்டது. யவன

தேசத்திலிருந்து யவனத்தேறல், ஓதிமவிளக்கு, யவனப் பொறிகள் போன்றவை இறக்குமதி செய்யப்பட்டுள்ளன.

ரோமானியப் பேரரசின் அகஸ்டஸ் காலத்தவரான ஸ்டிராபோ எழுதிய பூகோள நூல், டபிள்யூ.எச். ஸ்காஃப் தொகுத்த எரித்திரியக் கடலின் பெரிப்ளூசு (செங்கடல் பயண நூல்), பிளினி (கி.மு.70) எழுதிய உயிரியல் நூல், தாலமி எழுதிய பூகோள நூல் ஆகிய நூல்களில் தமிழகத் துறைமுகங்கள் பற்றியும், தமிழக வாணிகப் பொருள்கள் பற்றியும் குறிப்புக்கள் பல உள்ளன. வெளிநாட்டார் பண்டையத் தமிழகத் துறைமுகங்களின் பெயர்களைத் தம்மொழி உச்சரிப்பிலே குறிப்பிட்டுள்ளனர். பெரிப்ளூஸ் நூலில் இந்தியாவிற்கும், ரோமிற்கும் நடந்த கடல் வாணிகத்தைப் பற்றிய பல முக்கியமான குறிப்புக்கள் உள்ளன. இந்நூலில் நவுரா(கண்ணனூர்), திண்டிஸ் (சேரன் தொண்டி), முசிரிஸ்(முசிறி), நெல்கிந்தா(நெற்குன்றம்) ஆகியவை மேற்கரையிலுள்ள முக்கிய துறைமுகங்களாகும்.

சங்க காலத்தில் கலங்கள் இரவு நேரத்தில் திசை தவறிச் செல்லாமல் இருப்பதற்காகக் கடற்கரைப் பகுதிகளிலும், துறைமுகங்களிலும் கலங்கரை விளக்குகள் உலகெங்கும் அமைக்கப்பட்டிருந்தன. கடலில் செல்லும் மரக்கலங்களுக்குக் கரை இருக்கின்ற இடத்தையோ அல்லது துறைமுகம் இருக்கின்ற இடத்தையோ ஒளி வழியாக உணர்த்துவது தான் கலங்கரை விளக்கமாகும். காவிரிப்பூம்பட்டினம், அலைவாய், தொண்டை நாட்டு எயிற்பட்டினம் ஆகிய ஊர்களில் கலங்கரை விளக்கம் அமைக்கப் பட்டிருந்ததை அறிந்து கொள்ள முடிகிறது.

தொண்டை நாட்டு எயிற்பட்டினத்தில் அமைக்கப்பட்டிருந்த கலங்கரை விளக்கமானது மிக உயரமான கட்டிடமாகவும், சாந்து பூசப்பட்டு பல தளவரிசைகளை உடையதாகவும் இருந்தது. அதன் உச்சிப் பகுதிக்குச் செல்ல ஏணிப் படிகள் இருந்தன. இரவு நேரத்தில் அதன் உச்சியில் தீயிட்டு எரித்து, கடலில் செல்லும் மரக் கலங்களுக்கு வழிகாட்டப்பட்டதாகப் பெரும்பாணாற்றுப்படை தெரிவிக்கிறது.

சங்க காலத்தில் துறைமுகங்களில் பண்டங்கள் யாவும் பெரிய பண்டக சாலைகளில் வைக்கப்பட்டிருந்தன. கடலில் வந்த பொருள்களை உள் நாட்டிற்குச் செலுத்தும் முன்பும், உள்நாட்டில் விளைந்த பொருள்களைக் கடலின் மேல் செலுத்தும் முன்பும் பண்டக சாலையில் சேர்த்து வைத்தனர். அவ்வாறு பண்டக சாலைகளில் குவிந்து கிடக்கும் பொருள்களின் மேல் மன்னனது முத்திரைகளை இடுவர்.

வாணிகப் பொருள்கள் சுங்கவரிக்கு உட்படுத்தப்பெற்று அந்நாட்டரசனின் இலச்சினை பொறித்து அடையாளப்படுத்தப்பட்டுள்ளன. இதன் காரணமாக சேர, சோழ, பாண்டிய நாடுகளுக்கு மிகுந்த சுங்க வருவாய் கிடைத்தது. சோழநாட்டு காவிரிப்பூம்பட்டினத்தில் சுங்கம் வசூலிக்கப்பட்டதற்கு அடையாளமாகப் புலி முத்திரை இடப்பட்டது. தற்காலத்திலும் துறைமுகங்களில் சுங்கம் வசூலித்ததற்கு அடையாளமாக முத்திரையிடப்படுகின்றது.

தமிழகத்தில் வேற்றுநாட்டு வாணிகர்களும், வாணிகத்தின் பெருமையை நன்குணர்ந்த வாணிகப் புலவர்களும் வாழ்ந்தனர் என்று சங்க இலக்கியங்கள் கூறுகின்றன. சான்றாக அறுவை வாணிகன் இளவேட்டனார், மதுரைப் பண்ட வாணிகன் இளந்ததனார், மதுரைப் பெருங்கொல்லனார், உறையூர் இளம்பொன் வாணிகன், சாத்தன், கொற்றனார் போன்ற புலவர்களைக் கூறலாம்.

சங்க அக இலக்கியம் இனிமையானது. கற்பாரைக் கற்பனையில் ஆழ்த்துவது. விரிந்த இலக்கியப் பரப்பில் குறுகிய அடிகளைக் கொண்டு மிக உயர்ந்த கோட்பாட்டை நயமாக விரித்துரைக்கிறது. மலைகளைத் தழுவிய மரநிழல்களிலும், மாற்றாரின் தொல்லையேதும் இல்லாத முல்லை நிலங்களிலும், சேற்றுமணல் வீசுகின்ற ஆற்றங்கரை ஓரத்திலும், கடலோர மணல் வெளிகளிலும், காலையரும்பி மாலை வரை வெயில் நீளும் பாலைவனங்களிலும் நிகழ்ந்திருந்த காதல் சங்கக்காதல். அக்காதல் நிறைந்திருக்கும் அக இலக்கியங்களில் இடம்பெறும் நெய்தல் நில மாந்தர்கள் பற்றி எடுத்துக் கூறப்பட்டுள்ளன.

அகவாழ்வின் சிறப்பைத் தமிழர்கள் உணர்ந்ததால் இலக்கியத்திலும், வாழ்க்கையிலும் அகத்தையே முதன்மைப்படுத்தினர். ஆணும், பெண்ணும் உடலாலும், உள்ளத்தாலும் கூடி இன்பமடையும் வாழ்க்கையே அகம் எனப்படுகிறது. இது

